# அருணகிரிநாதர் அருளிச்செய்த

# திருப்புகழ்




B. இரத்தின நாயகர் ஸன்ஸ்

திருமகள் விலாச அச்சி யந்திர சாலை.

சென்னை.

செங்கிலாண்டவன் திருவடிதுணை.

அருணகிரிநாதர் அருளிச்செய்த

# திருப்புகழ்

மூலமும்,

திரிசிரபுரம் வித்துவான்

அமிர்தம். சுந்தரநாதம்பிள்ளை

அவர்களால் இயற்றப்பட்ட

மெய்ஞ்ஞான விருத்தியுரையும்.

---

அ. மஹாதேவயோகி அவர்களால்

பார்வையிடப்பெற்றது.

---

B. இரத்தின நாயகர் ஸன்ஸ்,

திருமகள்விலாச அச்சியந்திரசாலை,

சென்னை.

---

1927.



**Registered Block.**

திருவண்ணாமலையில் சுப்பிரமணியக்கடவுள்
அருணகிரிநாதருக்கு உபதேசித்தல்.

# அருணகிரி நாதர் சரித்திரம்






திருவண்ணமலையி லிருந்த ஒருருத்திர கணிகைக்குப் புதல்வரா யுதித்த அருணகிரிநாதரென்பவர், தமது இளமைப் பருவத்திலேயே தாயிறந்தமையின் தமது சகோதரியிடம் வளர்ந்து குமாரக் கடவுளின்றிருவருட் பிரசாத பலத்தாற் றம்மி லொப்பாருமிக்காரு மின்றிச் சந்தக்கவி பாடுதலில் வல்லுநராய் அருணைசலத்தி லெழுந்தருளி யிருக்கையில் ஸ்ரீ வில்லிபுத்தூராழ்வா ராங்குற்று இவர் சந்தம் பாடுதலில் வல்லவரென் றுணர்ந்து பிரபுட தேவராஜனது விருப்பின்படி இவரோடு வாது செய்ய வருகையில் கந்தரந்தாதி கூறிவர ஆழ்வார் பொருள் சொல்லிக் கொண்டு வந்து,

> "திதத்தத்தத் தித்தத் திதிதாதை தாததுத் தித்தித்திதா
> திதத்தத்தத் தித்த திதித்தித்த தேதுத் துதித்தித்தா
> திதத்தத்தத் தித்தத்தை தாததீ தேதுதை தாததத்து
> திதத்தத்தத் தித்தித்தி தீதீ திதிதுதி தீதொத்ததே."

எனுந் தகரவிகற்பச் செய்யுளொன்றுக்குப் பொருள் கூற மயங்கித் தோல்வியுற்று, தம்மிடந் தோற்றவர் காதுகளைத் தாம் அரிந்து கொண்டுவந்தது போலத் தமது காதையரிந்து கொடுக்க விழைய, "இனி யொருவர் காதினையும் அறியாத

வர மெனக்குத் தருக!" என்று அவரைக் காதுகளோடு செல்ல விடுத்தனர்.

அதன் பின்னர், சம்பந்தாண்டா னென்னுஞ் சத்தி யுபாசக ரொருவரும் அருணகிரி நாதரும் பிரபுட தேவராஜ னுக்கு மிக நெருங்கியவர்களாக விருந்தமையின், அரசன் சம் பந்தாண்டானைச் சத்தி தரிசனஞ் செய்விக்க வேண்டும், என் றும், அருணகிரியாரைச் சுப்பிரமணிய தரிசனஞ் செய்விக்க வேண்டும, என்றும் பன்னாள் பிரார்த்தித்து வந்தானாக, சம் பந்தாண்டான் குறித்த வொரு தினத்திற் 'சத்தியைக் காட்டு வல்' எனச் சபதங் கூறித் தேவியை வேண்ட, சத்தி "நீ யெமதன்பனாகலின் தரிசனந் தந்தாம்; அரசன் முன்னர் வரோம்" என மறுப்ப "அங்ஙனமாயின், அருணகிரி நாதர் விருப்பின்படி முருகக் கடவுள் அங்கெய்தாது காத்து என் னைக் கனப்படுத்துக," என்று வேண்டிக் கொண்டமையின் மகா தேவி முருகக் கடவுளைக் குழந்தையாகச் செய்து தம் மடிமீதிருத்தி விளையாடிக்கொண் டிருந்தமையின், அருண கிரி நாதர் நியமனப்படி அருணாசல வடபுரத் தம்பத்தில் வரு வித்துக் காட்டவியலாது தடைபட, அருணகிரியார் சீர்பாத வகுப்பு முதலிய வொவ்வொன்றனால் துதித்தும் அறுமுகப் பெருமான் ஆங்கடையாமை கண்டு மயில் வகுப்பினையோதி அதனை யனுப்ப அது ஆங்குற்று நிருத்தஞ் செய்துகொண் டிருக்கையில் இறைவர் அதன்மீ தாரோகணித்து அருணகிரி யார் விருப்பின்படி பிரபுட தேவராஜனுக்குக் காட்சி தந் தருளினர்.

அதலசேட னாராட வகிலமேரு மீதாட
வபினகாளி தானாட வவளோடன்
றதிரவீசி வாதாடும் விடையிலேறு வாராட
வருகுபூத வேதாள மவையாட

மதுரவாணி தானொடே மலரில்வேத னாரொடே
மருவுவாணு ளோரொடே மதியாடே
வனசமாமி தானொடே நெடியமாம னாரொடே
மநுவுமாதி நீயாடே வரைவேனும்
கதைவிடாத தோள்வெம னெதிர்கொள்வாளி யால்நீடு
கருதலார்கள் மாசேனை பொடியாகக்
கதறுகாலி போய்மீள விசயனேறு தேர்மீது
கனகவேதி கோடூதி யலைமோது
முதலிமீதி லேசாயு முலகமூடு சீர்பாத
வடிவமூர்த்தி மாமாயன் மருகோனே
யுதயதாம மார்பான ப்ரபுடதேவ மாராஜ
னுளமுமாட வாழ்தேவர் பெருமாளே.

அவ் ஆறுமுகனைக் கண்ட பிரபுடதேவன் கண்கள் ஒளியின்றி மாழ்க, அருணகிரியார் விபூதி பிரசாதித்துக் கண்ணொளியை விளக்கினர். இது முதற் சம்பந்தாண்டாருக்கு இவரிடம் பகைமை யதிகரித்து எவ்வாற்றானும் இவரை முடிக்க வேண்டுமென்னுங் கருத்து மனத்துள்ளே யுண்டாயிருந்தது.

பின்னொரு காலத்தில் மன்னவன அவ்விருவரையும் நோக்கிக் "கற்பக மலரைக் கொண்டு வர வல்லீர், யாவர்?" என, சம்பந்தாண்டார் "அருணகிரியாரே அதற்கேற்றவர்" என்று கூறி அதனை இயற்ற வற்புறுத்தினமையின் அவ் வேண்டுகோளுக் கிரங்கி அருணை நெடுங் கோபுரத்தில் தமது பூத உடலை விட்டு அங்கிறந்து கிடந்த ஒரு கிள்ளை யுடலிற் பிரவேசஞ்செய்து, தேவருலகடைந்து ஒரு கல்லை (சோலை)யில் சிறிது மலர்களைக் கொண்டு திரும்பினர். அதனுள் சில தினங்களாயினமையின் சம்பந்தாண்டார் அருணகிரியாரது விர்த்தாந்தங்களை யுணராது "அவ ரெங்ஙன மெய்தினர்?" எனத் தேடிக் கோபுரத்து விட்ட உட-

லைக் கண்டு அரசனிடத்தெய்தி "அருணகிரியார் கற்பக மலர் கொண்டுவர முடியாது உயிர் விட்டனர். அவர் பெரியராதலின் அவர் தேகத்திற்கு உடனே சமஸ்காராதிகள் செய்து முடிப்பது தகுதி" என்று கூறி அங்ஙனமே செய்வித்தனர். கிளியுருக் கொண்டு மலர்க் கல்லையை வாயிலேந்தி வந்த முருகக் குழவி கோபுரத்தில் விட்ட உடலைக் காணப்பெறாது மன்னவன் சபையை நோக்கி வந்தனர்.

அவர் அந்நகரை யடையுமுன்னரே தெய்வமணம் நகர் முழுவதும் கமழ, யாவரும் "இஃதென்னை?" என வியக்கையில் கிளியுருவோடு அம்மலரை அரசன் முன் வைத்து, மன்னன் முதலியோர் தாம்செய்த அபசாரத்தைப் பொறுக்கவென வேண்ட அங்ஙனமே யங்கீகரித்து, கந்தரநுபூதி, கந்தரலங்காரம், பலதிருப்புகழ் முதலியன அருளிச்செய்து, சிலகாலம் அருணகிரியில் மலர்க்குவ வாஸித்திருந்து, இறுதியில் பரமேசுவரியார் திருக்கரத்திற் கிளியுருமாகவே விளங்கி யிருக்கும்படி மகேசுவரியாரால் அநுக்கிரகிக்கப் பெற்றனர் சமயங்கண்டாரும் சிலகாலஞ் சென்ற பின்னர் அம்பிகையின் அடிமலர்கட்கு அணுக்கராயினர். [அருணகிரியார் குமாரக்கடவுள் திருக்கரத்திற் கிள்ளைவடிவாக விருப்பதாகக் கூறுவாருமுண்டு. அங்ஙனமாயினும் இழுக்காது, கணபதி ஸ்கந்தர் என்னும் இரு குமாரர்களில் மூத்த பிள்ளையாருக்குச் சிவாம்ச மிகுதியென்றும், இளையபிள்ளையாருக்குச் சக்தியம்சம் மிகுதியெனறும் பலர்க்கும் பிரசித்தமாமென்க.]

———

# திருப்புகழ் முதற்குறிப்பு அகராதி

உ

திருமுருகன் திருத்தாள் துணை

# சிறப்புப்பாயிரம்

## நூற்சிறப்பு

### நேரிசை வெண்பா

தந்திமுக னைக்குருவைத் தம்பிரானைத் தொழுவோம்
சிந்தைதனி லஞ்செழுத்தைச் செப்புவோம்—கந்தனிடை
பேரைக்கொண் டாடிப்ர தாபிப்போம் பின்னைநமக்
காரைக்கொண் டென்கா ரியம். (1)

வேதம்வேண் டாஞ்சகல வித்தைவேண் டாங்கீத
நாதம்வேண் டாம்ஞான நூல்வேண்டாம்—ஆதி
குருபுகழை மேவுகின்ற கொற்றவன்றான் பெற்றுந்
திருப்புகழைக் கேளீர் தினம். (2)

## நூல் பயன்

ஞானம் பெறலாம் நலம்பெறலாம் எந்நாளும்
வானம் அரசாள் வரம்பெறலாம்—மோனவீ
டேறலாம் யானைக் கிளையான திருப்புகழைக்
கூறினர்க் காமேயிக் கூறு. (3)

ஆறுமுகன் தோன்றும் அழகியவேல் தோன்றுமவன்
ஏறுமயில் தோன்று மெழில்தோன்றும்—சீறிவரு
சூரன் முடியைத் துணித்தோன் திருப்புகழைப்
பாரில் வழுத்தினோர் பால். (4)

## கலி விருத்தம்

பொருப்பது பொடிப்பட விடுத்திடு கைவேலா
இருப்பிட முனக்கெது எனக்கரு ளியம்பாய்
உருக்கநல் விழுக்குல மொழுக்கமில ரேனும்
திருப்புகழ் படிப்பவர் மனத்தினி லிருப்பாம். (5)

திருப்புகழ் படிக்குமவர் சிந்தைகல ஙு வாவே
ஒருத்தரை மதிப்பதிலை யுன்றனரு ளாலே
பொருப்பரை மிகப்பொருது வென்றமயில் மீதே
தரித்தொரு திருத்தணியில் நின்றபெரு மாளே. (6)

## வெண்பா

ஓராறு மாமுகனும் உச்சிதமெய்ஞ் ஞானகுகன்
பேரா லருணகிரி பேருலகில்—சீராரும்
தோத்திரம தாகத் துதிக்குந் திருப்புகழை
எத்தினவ ரீடேறு வார். (7)

அருணகிரி நாதர்பதி னாறு பிரமென்
றுரைசெய் திருப்புகழை யோதீர்—பரகதிக்கு
தேணி யருட்கடலுக் கேற்ற மனத்தளர்ச்சிக்
காணிப் பிறவிக் கரம். (8)

திருப்புகழைக் கற்கத் திருப்புகழை கேட்கத்
திருப்புகழை நித்தஞ் செபிக்கத்—திருப்புகழை
அர்ச்சிக்க முத்தியெளி தாகுமே கூற்றைவென்று
கர்ச்சிக்க லாமே கெடு. (9)

---

உ

முருகன் மெய்மலர்த்தாள் துணை

# திருப்புகழ்

## மெய்ஞ்ஞான விருத்தியுரை

---

### சிறப்புப் பாயிரம்

#### நேரிசை வெண்பா

1. எல்லாரு ஞானத் தெளிஞரே கேளீர்சொல்
கல்லெல்லாம் மாணிக்கக் கல்லாமோ—பொல்லாக்
கருப்புகழைக் கேட்குமோ கான மயில்வீரன்
திருப்புகழைக் கேட்குஞ் செவி.

#### இதன் பொருள்

ஞானத் தெளிஞரே - உண்மை யறிவின் தெளிவை உடையவர்களே! எல்லாரும் கேளீர் - இங்குக் கூறப்படுவதை நீங்கள் எல்லாருங் கேளுங்கள்!, சொல் - சொல்லப்பெறும், கல் - கற்கள், எல்லாம் - எல்லாம், மாணிக்கக் கல் ஆமோ - (கல் என்னும் பெயரினது அளவில் ஒத்திருந்தாலும்) மாணிக்கக் கல்லுக்குச் சமானமாகுமோ? (ஆகாது); (அதுபோல) கானம் - அடவியில் வாழும். மயில் - மயிலை வாகனமாக வுடைய, வீரன் - வீரத்தன்மையைக் கொண்டுள்ள குமரக் கடவுளது, திரு - அழகிய, புகழை-சிறப்பை, (அதாவது, முருகப் பெருமானின் இசையைக் கூறும் வண்ணப் பாட்டாகிய திருப்புகழ் என்னும் இசச்சீரிய நூலை), கேட்கும் - கேட்கின்ற, செவி - காதுகள், பொல்லாத - பிறப்பினுக்குக்

காரணமாக விருக்கும்) கொடிய, கருப்புகழை - கொடுந் துன்பங்களுக்கு ஏதுவாகிய இழிந்த பிறப்புடைய மனிதர் புகழை, கேட்குமோ - கேட்கச் செய்யுமோ? (கேட்கமாட்டாது).

### விருத்தி யுரை

ஞானத்து = ஞானம் + அத்து எனப் பிரியும்; அத்து: சாரியை: சாரியையின் அகரம்,

"அத்தி னகரம் அகரமுனை இல்லை".

என்ற தொல்காப்பியச் சூத்திரப்படி கெட்டது. தெளிஞர்: இதில் ஞகரம் பெயர் இடைநிலை. 'எல்லாம்' என்பது முழுமை உணர்த்த வந்த உரிச்சொல். பொல்லாத என்பது 'பொல்லா' என ஈறு கெட்டு நின்றது. கேளீர்: முன்னிலைப் பன்மை ஏவல்; ஈர்-விகுதி. சொற்கள் - 'சொல்லளவில் ஒத்து நுண் பொருளளவில் ஒவ்வாதிருக்கும் பல்லாயிரம் வகைப்பட்டு நிற்கும் சொற்கள் எல்லாம்' எனப் பொருள் தந்து நின்றது.

"வெற்றிரும்பும் பொன்னும் தமனியப்பேர் மேவியபோல்"
என்ற சான்றோர் வாக்கும் ஈண்டுக் கவனிக்கற்பாற்று.

'மாணிக்கம்' என்றது ஈண்டு நவமணிகளிற் சிறந்து விளங்கும் செம்மணியை (ரத்தினத்தை), 'பொல்லாக் கருப்புகழ்' பிறப்பு இறப்புக்குக் காரணமாகிய காமமாதிகளை உண்டாக்கி வைத்தலின் 'பொல்லா' என்றும், கொலையாதிய கொடுமைகளைச் செய்து பெற்ற புகழ் ஆதலின் 'கருப்புகழ்' என்றுங் கூறிய நயம் கருதற்பாலது. மாநிலத்துப் பிறந்திறந்த மக்கள் குறித்து நிற்கும் புகழ் எல்லாம் கேட்பாரை அவாவுக்கு உள்ளாக்கிப் பிறப்புத் தருந் தன்மையவாயும், எமது முருகப்பிரான் திருப்புகழ் அவாவைப் போக்கிப் பிறப்பறுத்து முத்திப்பதந் தருந் தன்மையவாயும் இருத்தல்

பற்றி முறையே 'பொல்லாக் கருப்புகழ்' 'திருப்புகழ்' என்ற சிறப்பு உற்று நோக்கத் தக்கது.

இதனாலன்றோ பிரபுலிங்கலீலை நூலுடையாரும்,

"கன்றிய வைரிகள் காதுங் காதையும்
வன்றயர் மதனநோய் வளர்க்கு மாற்றமும்
புன்றொழி லினர்வறும் பொழுது போக்கவும்
அன்றரு ளல்லமன் அமல லீலையே."

என்றருளினார்.

வீரன்: ஆயிரத்தெட்டண்டங்களை நூற்றெட்டு யுகம் ஆண்ட சூரனைக் கொன்றதனால் என்பர். இன்னும் முருகப்பிரான் ஞான வீரனும் ஆம்; வேதனைக் குட்டிச் சிறையிட்டதோடு போத மூர்த்தியாகிய இறைவர்க்கும் குருவாய் நின்றமை பற்றி ஞான வீரன் என்பர்.

கடல் சுவறவும், மலை பிளக்கவும் வல்ல சத்திவேலைத் தாங்கி அசுரரை ஒழித்து அமரரைக் காத்தருளியவர் ஆகலின் 'வீரன்' என்றார்.

'ஞானம்' என்றது ஈண்டுப் பதிஞானத்தை, 'கேட்குஞ் செவி' என்றதனால் செப்பும் வாய், கருதும் உள்ளம் என்பனவுங் கொள்ளக் கிடக்கின்றது.

"ஒருமொழி யொழிதன் னினங்கொளற் குறித்தே."

என்பது கட்டளை.

இச் செய்யுளில் திருப்புகழைக் கேட்குஞ் செவி எனப் பொல்லாக் கருப்புகழைக் கேட்கா என்றமையால், ஞானமிலார்க்கும் எமது முருகப்பிரான் பெருமையைக் கூறும் திருப்புகழ் ஞானத்தை உண்டாக்கி, புத்தி - பத்தி - சித்தி - முத்திகளை

எய்துவிக்கும் என்பதும், சாரமற்ற மற்றவற்றிலும், சாவும் பிறப்பும் சாரச் செய்யும் தீய நூலிலும் சிந்தை செல்லாது என்பதும் பெறப் படும்.

இது அருணகிரியார் காலத்திற்குப் பிற்பட்ட ஒரு பெரியார் கூற்று.

---

## கலி விருத்தம்

2. திருப்புகழ் படிக்குமவர் சிந்தை வலுவாலே
ஒருத்தரை மதிப்பதிலை யுன்றனரு ளாலே
பொருப்பரை மிகப்பொருது வென்றுமயில் மீதே
தரித்தொரு திருத்தணிகை நின்றபெரு மாளே.

(இ - ள்.) பொருப்பரை - (வள்ளியம்மையாரைத் தன்னோடு கொண்டு போம்பொருட்டு) மலை நாட்டில் வாழும் வேடருடன், மிக பொருது - மிகவும் போர் செய்து, வென்று - அவர்களை வெற்றி கொண்டு, மயில்மீது - மயிலாகிய ஊர்தியின் மேலே, தரித்து - அமர்ந்து பொருந்தி, ஒரு - ஒப்பற்ற, திருத்தணிகை - திருத் தணிகை என்னுந் திருப்பதியின்கண், நின்ற - நிலைபெற்ற, பெரு மாளே - முருகப் பெருமானே!; திருப்புகழ் - திருப்புகழ் என்னும் நூலினை, படிக்கும் அவர் - (அன்புடன்) படிக்கின்ற அவர்கள், உன்றன் அருளால் - தேவரீருடைய கிருபையினால், சிந்தை வலு வால் - (தங்கட்கு உண்டாகும்) மனோபலத்தினால், ஒருத்தரை - ஒருவரையும், மதிப்பது இல்லை - மதிக்க மாட்டார்கள்.

(வி - ரை.) படிப்போர் எனற்பாலது 'படிக்குமவர்' என்று சுட்டொடு மருவியது வலியுறுத்தற்கு என்க. ஒருத்தர்: ஒன்று + அத்து + அர் எனப் பிரியும். ஒன்று என்பது 'ஒரு' என ஆயிற்று. ஒன்று என்பது

"ஈறே ழல்லவற்றின்
ஈற்றுயிர் மெய்யும் எழ னுயிரும்
ஏகும் எற்புழி என்மனார் புலவர்."

என்ற விதிப்படி 'ஒன்' என நின்று,

"முதலீ ரெண்ணி னொற்று ரகரம் ஆகும்
உகரம் வருதல் ஆவயி னான."

என்ற தொல்காப்பியச் சூத்திரப்படி 'ஒரு' என நின்றது; இடை நின்ற அத்துச்சாரியையின் அகரங் கெட்டது; அர்: பலர்பால் விகுதி; 'அர்' என்னும் பலர்பால் விகுதி உயர்வு பற்றி வந்தது. போலும் - 'பிற காரணங்களால் உயர்வு பற்றிய ஒருத்தனை' என்க. பிற காரணங்களாவன - கல்வி, செல்வம், வீரம், இளமை, அழகு, திடம், வன்மை, ஈகை முதலியன. 'மதிப்பதில்லை' என்றது 'பொருட் படுத்துவது இல்லை' என்பதாம்.

கல்வி முதலியவற்றுற் சிறந்த எவரையும் மதியாததற்குக் காரணம், உனதருளும், நின் திருப்புகழ் படித்து மனத்து ஞானம் பெருகிய திடத்தாலும் என்க. இனி 'ஒருத்தரை' என்பதற்கு 'முருகப் பிரானே! உன்னை யன்றிப் பிற தெய்வங்களுட் சிறந்தவருள் எவரேனும் ஒருத்தரை' எனப் பொருளுரைப்பாரும் உண்டு. இங்கு,

"நாமார்க்குங் குடியல்லோம் நமனை யஞ்சோம்"
என்னும் திருநாவுக்கரசர் திருவாக்குக் கருதத் தக்கது.

'பொருப்பரை மிகப்பொருது வென்று' என்றது முருகவேள் வள்ளியம்மையாரைக் களவாகக் கவர்ந்து செல்லுங்கால் எதிர்த்த வேடர் தம்மை வென்றதை யாம்.

திருத்தணிகை - இது தொண்டை நாட்டிலுள்ள சுப்பிரமணியர் தலம்.

"அவனரு ளற்றார் அனைவரும் அற்றார்
அவனரு ளுற்றார் அனைத்தும் பெற்றார்."

ஆதலின், முருகப்பிரான் பெருமை கூறும் திருப்புகழ் படிப்பார்க்கு அப் பெருமானின் திருவருள் முறுகி வளரும். அவ் வருளால் எவரையும் மதியார். வேண்டுவ எல்லாம் பெற்று இன்புற்று வாழ்ந்து களித்திருப்பர்.

இதுவும் திருப்புகழைப் பற்றி இந்நூல் இயற்றியார் காலத்திற்குப் பின்னிருந்த ஒரு பெரியார் கூறி யருளிய கூற்றாகும்.

ஆசிரியச் சந்த விருத்தம்

| | |
|---|---|
| 3. ஏறுமயி லேறிவிளை யாடுமுக | மொன்றே |
| ஈசனுடன் ஞானமொழி பேசுமுக | மொன்றே |
| கூறுமடி யார்கள்வினை தீர்க்குமுக | மொன்றே |
| குன்றுருவ வேல்வாங்கி நின்றமுக | மொன்றே |
| மாறுபடு சூரரை வதைத்தமுக | மொன்றே |
| வள்ளியை மணம்புணர வந்தமுக | மொன்றே |
| ஆறுமுக மானபொருள் நீயருளல் | வேண்டும் |
| ஆதியரு ணாசல மமர்ந்தபெரு | மாளே. |

(இ - ள்.) ஆதி - பழம் பதியாகிய, அருணாசலம் - திருவண்ணாமலையின்கண், அமர்ந்த - எழுந்தருளி யிராநின்ற, பெருமாளே - முருகக் கடவுளே!, ஏறு மயில் - ஆண் மயிலின்மீது, ஏறி - ஏறிக்கொண்டு, விளையாடும் - குன்றுகள்தோறும் விளையாடுகின்ற, முகம் - திருமுகம்; ஒன்று - ஒன்றும்; ஈசனுடன் - சிவபெருமானுடன், ஞானம் மொழி - பிரணவ மொழியை, பேசும் முகம் - திருவாய் மலர்ந்தருளும் திருமுகம், ஒன்று - ஒன்றும்; கூறும் - தன் கீர்த்தியை எடுத்துச் சொல்லும், அடியார்கள்

வினை - அடியவர்களுடைய தீய வினைகளை, தீர்க்கும் - நீக்கி யருளுகின்ற, முகம் - திருமுகம், ஒன்று - ஒன்றும்; குன்று உருவ - கிரௌஞ்சமலை பிளவுபடும்படி (ஊடுருவிச் செல்லும்படி), வேல் வாங்கி - வேலாயுதத்தைச் செலுத்தி, நின்ற முகம் - யாவருங் கண்டு களிக்க நிலை பெற்று நின்ற திருமுகம், ஒன்று - ஒன்றும்; மாறுபடு - தன்னைப் பகை கொண்ட, சூரரை - சூரபதுமன் முதலிய சூரர்களை, வதைத்த - கொன்ற, முகம் - திருமுகம், ஒன்று - ஒன்றும்; வள்ளியை - வள்ளி நாயகியாரை, மணம் புணர - திருமணஞ் செய்து கொள்ளும்படி, வந்த - ஏற்பட்டு வந்தருளிய, முகம் - திருமுகம், ஒன்று - ஒன்றும், ஆக - ஆக, ஆறுமுகம் ஆன - ஆறு திருமுகங்களைக் கொண்டவராக, பொருள் - மெய்ப் பொருளாகிய தேவரீர், அருள்வேண்டும் - அடியேனுக்குத் திருவருள் செய்தருள வேண்டும்.

(வி - ரை) ஏறுமயில் - ஆண்மயில்; இதனை,

“ஏறும் ஏற்றையும் ஒருத்தலுங் களிறும்
...........................................
யாத்த ஆண்பாற் பெயரென மொழிப.”

என்னும் தொல்காப்பியம் - மரபியல் - 558 - ஆம் சூத்திரத்தா னறிக. சுப்பிரமணியர் தோகைமயில் வாகனர். ஆண் மயிற்கே தோகை உண்டு ஆதலின் ‘ஏறுமயில்’ என்றார். ‘ஏறுமயில்’ என்பதனை வினைத் தொகையாக்கியும் பொருளுரைப்பர் ஒரு சாரார்.

‘விளையாடல்’ இங்கு ஐந்தொழிலாகிய படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் என்பனவற்றை விளையாட்டென்றமையால் முருகப்பிரான் இவ் ஐந்தொழிலையும் ஆயாசம் இன்றி அனுயாசமாகச் செய்தலைக் குறிப்பித்தார்.

"அலகிலா விளையாட் டுடையார்"

என்ற கம்பர் வாக்கு ஈண்டுக் கருதற்பாலது. 'ஈசன்' என்றது 'எல்லா ஐசுவரியத்தையும் உடையவனாகி நின்று அடியார்க்கு வேண்டிய வேண்டியாங்கு தந்தருள் செய்யும் தலைவன்' என்பது பொருள்; இதனை வடமொழிச் சொல்' என்பர்.

'ஞான மொழி' என்றது பிரணவப்பொருளை. முருகப் பெருமான் தன்னை இளையன் என்று எண்ணிய பிரமன் செருக்கை அடக்கப் பிரணவப் பொருளைக் கேட்டபோது, வாய் திறக்கும் வன்மை இன்றி வாளாவிருந்த பிரமனைக் குட்டிச் சிறையிலிட்டார். பிரமனுக்காகப் பரிந்து வந்த தந்தையாகிய சிவபெருமான், பிரணவப் பொருள் கேட்க, இறைவர்க்குக் குருவாக இருந்து அவர் நின்று செவி சாய்த்துக் கேட்க உபதேசித்தருளிய திறம் விளங்க 'ஈசனுடன் ஞானமொழி பேசுமுகம்' என்றார்.

"உழன்மதில் சுட்ட தழனகைப் பெருமான்
வணங்கினின் றேத்தக் குருமொழி வைத்தோய்"

என்ற கல்லாட அடிகளாலும் இதனை யறியலாம்.

முருகக்கடவுள்: அகத்தியர், நக்கீரர், ஔவை, பொய்யாமொழி முதலியவர்கள் துதி கூற அவர்க் கருளிய பாங்கருளைத் தடங்கடலாதலின் 'கூறும் அடியார்கள் வினை தீர்க்கும்' என்றார். குன்றுருவ' என்றதில் குறித்தது கிரௌஞ்ச மலையை. இது அகத்தியர் சாபத்தால் முருகப்பிரான் வேலாற் பிளவுண்டது. இதை,

"குருகு பெயரின் குன்றம் பிளக்கப்
பெருவேன் விட்ட பேராண் சீயம்."

என்ற பெரியார் வாக்கு இதனுடன் ஒப்பிடத்தக்கது.

மாறுபடு சூரர் - 'தேவர்க்குப் பகையாய் இருந்த சூரர்' என்பது பொருள். முருகப்பிரான் தேவர்களுக்குச் சேனாபதியாகிச் சென்றாராதலின் இவர்க்கும் மாறுபடு சூரரே யாயினர். அறத்துக்கு மாறுபட்டு மறத்தைத் தழுவி நின்றதனாலும், 'மாறுபடு சூரர்' என்றார். தேவர்களுக்குச் சேனாதிபதி யானமையை,

"கோமேவிக் காக்குஞ் சரவணத்தான்"

என்ற வெண்பாவின் அடி பண்பாக உணர்த்தும்.

'வள்ளியை மணம் புணர வந்த முகம்' என்றது போக நிலையை. வள்ளியை மணந்து போக நிலையில் நின்றது உலகுய்தற் பொருட்டாதலின் இது கூறினார். இப் பெருமானுக்கு யோக நிலையும் உண்டு என்பது,

"பரமனே பரமயோகி"

எனப் புகழப்படின் சிவபெருமானுக்குமே ஞான குருவாகிப் பரதேசிகன், சாமிநாதன், குருநாதன், ஐயாச்சாமி, அப்பாசாமி என்பனவாகித் திருநாமங்கள் பூண்டிருப்பதே நன்கு விளங்கும்.

இறைவன் போகியாய் இருந்து உலகிற்குப் போகத்தையும், யோகியாய் இருந்து யோக முத்தியையும் அருளுவன் என மறைகள் முழங்கும். இதனை,

"போகியா யிருந்து யிர்க்குப் போகத்தை அளித்த லோரார்
யோகியாய் யோக முத்தி யுதவுத லதுவு மோரார்."

என்ற சிவஞான சித்தியார் வாக்காலும் அறியலாம்.

இவ் வள்ளி யம்மையார் எம் முருகக்கடவுளுக்கு இச்சா சத்தி ஆவர். தேவயானையார் கிரியாசத்தி. சத்திவேல் ஞானசத்தி என்பர். இறைவரும் அவர் திருக்குமாரராகிய முருகக் கடவுளும் அபேதம். சிவபரஞ் சுடரே தனது ஈசானம், தற்புருஷம், வாம

ணம், அகோரம், சத்தியோசாதம் என்னும் ஐந்து திருமுகங்க ளோடு அதோ முகமாகிய ஆறு திருமுகமுந் தோன்ற 'ஆறு முக மாக' அவதரித்தருளியவதனால் 'ஆறுமுக மான பொருள்நீ' என் றார். 'பொருள்' என்றது செம்பொருளை; இதனையே 'மெய்ப் பொருள், உண்மைப் பொருள், பதிப்பொருள்'' எனப் பல படக் கூறுவர் பெரியார். இவ் ஆறுமுகப் பெருமான் திருமுக விலாசச் சிறப்பையும் பன்னிரண்டு திருக்கரங்களின் வளப்பத்தையும் நக்கீரர் தமது திருமுருகாற்றுப்படையில்,

''மாயிருண் ஞாலம் மறுவின்றி விளங்க

.............................................

பன்னிரு கையும் பாற்பட வியற்றி''

என்ற அழகிய அடிகளால் கண்டறியலாம்.

---

விநாயகர் துதி

1. தத்தன தனதன தத்தன தனதன
தத்தன தனதன தனதான.

கைத்தல நிறைகனி அப்பமொ டவல்பொரி
கப்பிய கரிமுகன் அடிபேணிக்
கற்றிடும் அடியவர் புத்தியி லுறைபவ
கற்பக எனவினை கடிதேகும்
மத்தமு மதியமும் வைத்திடும் அரன்மகன்
மற்பொரு திரள்புய மதயானை
மத்தள வயிறனை உத்தமி புதல்வனை
மட்டவிழ் மலர்கொடு பணிவேனே
முத்தமி ழடைவினை முற்படு கிரிதனில்
முற்பட எழுதிய முதல்வோனே

முப்புரம் எரிசெய்த அச்சிவ னுறைரதம்
அச்சது பொடிசெய்த அதிதீரா
அத்துயர் அதுகொடு சுப்பிர மணிபடும்
அப்புனம் அதனிடை இபமாகி
அக்குற மகளுடன் அச்சிறு முருகனை
அக்கண மணமருள் பெருமாளே.

(இ - ள்.) கைத்தலம் - திருக் கரத்திலே, நிறை - நிறைந்துள்ள, கனி - பழங்களையும், அவல் - அவலையும், பொரி - பொரியையும், அப்பமொடு - அப்பத்துடன், கப்பிய - உண்கிற, கரி முகன் - யானை முகத்தையுடைய விநாயகப் பெருமானின், அடி - திருவடிகளை, பேணி - துதித்து, கற்றிடும் அடியவர் - தனது உண்மையைத் தேர்ந்து தெளிய அறிந்து கொண்ட தொண்டர்களின், புத்தியில் - மனத்தில், உறைபவ - வீற்றிருந் தருள் செய்பவரே! கற்பக - தன்னைச் சார்ந்தார்க்குக் கற்பக விருக்ஷம் போல அருள்பவரே!, என - என்று துதிக்க, வினை - கருமங்கள், கடிது ஏகும் - விரைவில் நீங்கும்; முத்தமிழ் அடைவினை - மூன்றாகிய தமிழின் நூலை, முற்படு கிரிதனில் - மலைகளுக்கெல்லாம் முதன்மையாகிய மேருமலையின் மேல், முற்பட - முன்னாளில், எழுதிய - (தன் கொம்பால்) எழுதிய, முதல்வோனே - முதன்மையான கடவுளே!, முப்புரம் - திரிபுரங்களை, எரிசெய்த - எரித்து அருளிய, அச்சிவன் - அந்தப் பெருமையை யுடைய சிவபெருமான், உறை ரதம் - எழுந்தருளி இருக்கும் தேரினுடைய, அச்சு அது - அச்சை, பொடி செய்த - முரிந்து தூளாகும்படி செய்த, அதி தீரா - மிகவும் தைரிய முடையவரே!, அத்துயர் அதுகொடு - (வள்ளியம்மையாரை மணந்தருள வந்தபோழ்து எவ்வாறு வலிந்து வந்து அவளை அணையச் செய்வது என்னும்) அம் மனத் துன்பத்துடன் சுப்பிர

மணியப் பெருமான் சென்றிருந்த, அ புனம் அதன் இடை-(வள்ளி யம்மையா ரிருந்த) அந்தத் தினைப்புனத்தின்கண், இபம் ஆகி - பெரிய யானையாகி, அ குற மகளுடன் - அந்தக் குறக் கன்னி யாகிய வள்ளி யம்மையோடு, அ சிறு முருகனை - அந்தத் தன் தம்பி யாகிய முருக வேளை, அ கணம் - அந்த நேரத்திலேயே, மணம் அருள் - மணந்து கொள்ளுமாறு திரு அருளைச் செய்த, பெரு மானே - பெருமானே! (எனத் துதிசெய்து), மத்தமும் மதியமும் - உன்மத்த மலரையும் பிறைச்சந்திரனையும், வைத்திடும் - ஜடாமகு டத்தில் சூடிக்கொள்ளுகின்ற, அரன் மகன் - சிவபெருமான் திருக் குமாரராகிய, மல் பொரு - மல் யுத்தஞ் செய்கின்ற, திரள் புயம் - திரண்ட தோள்களை யுடைய, மதம் யானை - மதங்கள் ஒழுகும் யானை முகத்தை யுடையவனை, மத்தளம் வயிறனை - மத்தளம் போன்றுள்ள திரு வயிற்றை உடையவனை, உத்தமி புதல்வனை - உமா தேவியாரின் திருப்புதல்வனை, மட்டு அவிழ் - தேன் விரியும் மலர் கொடு - பூக்களைக் கொண்டு, பணிவேன் - வணங்குவேன், எ - ஈற்றசை.

(வி - ரை.) 'கைத்தலம்' என்பது 'கையாகிய இடம்' என விரிந்து இரு பெயரிட்டுப் பண்புத்தொகை ஆயிற்று. நிறைகனி - இது 'கை நிறம்பிய பல்வகைக் கனி' எனவும், 'கை நிறம்பும் அள வினதாய பருத்த கனிகள்' எனவும் பொருள் தராநின்றது. கப்பு தல் - வாய் நிறம்ப வைத்துக் குதட்டி உண்ணுதல்; கரிமுகன் - யானைமுகன்; கரி - யானை; கரத்தோடுங் கூடியது கரி; ஏனைய மிருகங்களுக்கு இல்லாததாகிய தும்பிக்கை யானைக் குண்மையின் 'கரி' எனப் பேர் போந்தது. இன்னும் "கைம்மா, கைம்மலை" என யானைக்குப் போமைந் துள்ளவாறுங் கருதற்பாலது. 'கருத்த நிறத்தை யுடையது ஆதலின் கரி எனப் பெயராயிற்று" எனின், அது பொருந்தாது; இதனினும் கரிய மிருகங்கள் பல உள வென

அறிக. இன்னும் வெள்ளை நிற யானைகளும் உள்ளனவாதலின் பொருந்தா தென்பர்.

அடி பேணி; இஃது ஒருமைப்பன்மை மயக்கம்; 'திருவடிகளைத் துதித்து' என்றாயிற்று; இனி 'திருவடியைத் துதித்து' எனவும் ஒருமையாற் பொருளுரைப்பர். நடக்க, நடிக்க வலத்தாளை ஊன்றி இடத்தாளை எடுக்கப்பெறுதலின் இடத்தாள் அருள் புரி தாள் என்பர். இதுபற்றி நடராஜ முகூர்த்தத்தில்,

> "எடுத்த தாளின் அருள் வயங்க
> இருமுனிவர் பணிந்து போற்ற"

என்றார் பெரியாரும். திருவடி ஒன்றையே குறிப்பின் அருள்புரி தாளாகிய இடத்தாளை என்க. இனி இருதாளையுங் குறிப்பின் திரோபவ அநுக்கிரகஞ் செய்யும் வலத்தாளையும் திருவருள் அநுக்கிரகஞ் செய்யும் இடத்தாளையும் எனக் கொள்க; 'கிரியை, ஞானம் எனும் இரண்டும் இறைவனுக்கு இரு தாள்களாம். ஆதலின் கிரியாசத்தி, ஞானசத்திகளை வணங்கி என்பாரும் உண்டு. இங்கும் ஒருமையாற் கூறின் ஞானசத்தியை அல்லது ஞான பாதத்தை வணங்கி என்க.

'கற்றிடும் அடியவர்' என்றது பதி நூல் கற்று ஞானம் பெற்றுள்ள அடியவர்களை.

"கற்றவர் உள்ளத்து இறைவன் விருப்பொடு இருப்பன்" என்பது வேத முழக்கம்.

"கற்றவர் விழுங்குங் கற்பகக் கனி" என்றும்

"கல்லார் நெஞ்சில் நில்லான் ஈசன்" என்றும்

பெரியார் கூறினவை ஈண்டு ஒப்பிடத்தக்கன.

அருள்பவர்க்கு, எல்லா அழகையும் உணரும் அறிவாக விளங்கும் இறைவர்க்கு அழகு செய்ய ஒன்றையும் அணிய வேண்டுவதில்லை என்பதையும் அறிய வேண்டும்.

அரன் - 'அடியார் பாவங்களை அழிப்பவன்' என்பது பொருள் மகன் - இளமைத்தன்மை உடையவன்.

மத்தள வயிறனை - 'மத்தளம்போன்ற வயிறு உடையவனை' என்பதாம். விநாயகர்க்குத் தலை மிருக உருவமும், வயிறுவரை தேவ ரூபமும், மார்புக்குக் கீழிருந்து பூத உடலும் ஆக மூன்றுரு வோடு வந்த பெருமானாதலால் வயிறு பூத உருவப் பங்காதலின் பெரு வயிறாகி மத்தளம்போன் றிருக்கின்ற தென்றார். இது உரு உவமை.

'உத்தமி' என்றது உமாதேவியாரை. அருள் ஞானம் முத லியவற்றின் வடிவாகி, முப்பத்திரண்டு அறம் வளர்த்து அரனை விட்டு நீங்காப் பாகத்தளாகி, எல்லா அண்டங்களையும் திரு வயிற் றில் வைத்துக் காத்துப் பெற்று அருளும் இறைவி ஆதலின், 'உத் தமி' என்றார்; எல்லா உத்தம குணங்களுமாக விளங்குபவள் என் பது குறித்து எனினும் ஆம்.

'மட்டவிழ் மலர்' என்றது புதுப்பூவை (நாண்மலரை). நாண் மலரில் தான் மது விரியும் என்பதறிக. முத்தமிழ் நூல் ஒன்றை முன்னர் விநாயகர் மேருமலைமேல் எழுதினர் என்பது,

'முத்தமி ழடைவினை முற்படு கிரிதனில்
முற்பட எழுதிய முதல்வோனே!'

என்றதனால் அறியக்கிடக்கின்றது.

'முத்தமிழிலும் அடைந்து வினைசெய வலதாகிய பாரதக் கதையை வியாசர்கூற, கொம்பொடித்து மேருமலையில் முன்னாளில்

எழுதிய முதல்வனே!' எனப் பொருள் கூறுவர். இன்னும் பிற கதை கூறுவாரும் உளர். விரிக்கிற் பெருகும்.

'முதல்வோனே!' என்றது ஈசனும் விநாயகரும் அபேதம் ஆதலின் என்க. இனி, 'முதல்வோனே!' என்றதற்கு 'எல்லோரும் எக் காரியஞ் செய்யத் தொடங்கினாலும் முதன் முதல் நினைத்துப் பூசிக்கும் முதன்மை யுடையோனே!' என்பதும் பொருளாம். சிவபெருமானுக்கு முதற்பேறான புத்திரனாதலால் இவரை 'முதல்வோனே' என்றார்.

முப்புரம் - திரிபுரம், 'அச்சது', 'துயரது' என்பவற்றிலுள்ள 'அது' என்னும் விகுதிகள் பகுதிப்பொருள் விகுதிகள். இறைவர் குறிப்பின் ஒழுகி விளையாடும் பிள்ளையார் இறைவர் தேரின் அச்சையே முறித்ததனால் 'அதிதீரா!' என்றார். "எவரும் எக்காரியஞ் செய்யினும் உன்னை முதலிற் பூசிப்பாராக. அவ்வாறு பூசியாதிருப்பின் அவர்க்கு விக்கினம் ஆகுக" எனக் கட்டளையிட்ட தந்தையே தன்னை நினையாது முப்புரத்தார்மேற் போருக்குச் சென்றாராதலின் இறைவர் தேரின் அச்சை முறித்தார். அவர் தன்னை நினைத்த பின்னே—பூசித்த பின்னே அவர்க்குத் துணையாயினார் என்பது புராண கதை. இறைவர் குறிப்பின் ஒழுகி விளையாடுபவர் விநாயகர் என்பதனை,

"மார னெடுத்து வளைக்குமொரு கரும்பையொடித்து மலர்சிதறி
நாரி யடுத்த அளிமாலை குலையத் துரந்து நயந்தோடி
வீர மனத்து வினைப்பாகர் குறிப்பின் ஒழுகி விளையாடும்
ஈர மதிச்செஞ் சடைக்களிறல் யானை இணைத்தா ளேத்துவாம்."

என்ற பிரபுலிங்கலீலைச் செய்யுளாலும் அறியக் கிடக்கும்.

"இன்பம் வேண்டுவோன் துன்பந் தண்டான்."

என்றபடி, இன்புற நிற்பான் துன்புற வேண்டுதலின் வள்ளி யம்மையாரைக் கூடி இன்புற நின்றார். துன்பிற நாடகம் புரிந்தார். இத் உலகின் ஆன்மாக்களுக்காகச் செய்யும் அருள் விளையாட்டு. இதனை "அத்துய ரதுகொடு சப்பிர மணிபடும் அப்புனந் தனிலிடை" என்றார்.

'அத்துயர்' என்றதில் உள்ள அகரச்சுட்டுப் பண்டறி சுட்டாம். இபம் - பெரும் யானை.

முருகப்பிரான் விருப்பிற் கிணங்கி, வள்ளியம்மையார் முன், பெரும் யானையாக விநாயகர் சென்று, அவளை மருட்டி முருகனை வலிந் திருகத் தழுவிக் கொள்ளச் செய்தார். இதனை,

"முருகோட்டந் தரப்பாயும் மும்மதமும்
   ஊற்றெடுப்ப முறிவிற் கோட்டு
ஒருகோட்டு மழகளிற்றை இருகோட்டு
   முதுகளிரு உலவக் காட்டிப்
பருகோட்ட நறைவேட்டுப் பைங்கோட்டுத்
   தினைப்புனத்துப் பரண்மேற் கொண்டு
குருகோட்டும் பெடைமணந்த குமரகோட்
   டத்தடிகள் குலத்தாள் போற்றி."

என்னும் மாதவச் சிவஞானயோகிகள் வாக்காலும் அறியலாம்.

இது விநாயக வணக்கம். இது வழிபடு கடவுள் வணக்கமாகும். இளைய பிள்ளையின் புகழைப் பாடுபவர் முன்னம் மூத்த பிள்ளையை வணக்கஞ் செய்தார். முருகர் துன்ப நீங்கி இன்புற என்று யானையாக வந்து வள்ளியை முருகருக்கு மண முடித்து வைத்த முதல்வன் இளையருக்கு இன்பந் தரும் இத் திருப்புகழ் முட்டின்றி முடிவுற அருள் செய்வான் என்பது கருதி, இளையோ

னுக் கருள் செய்த அருட்டிற மெடுத்தோதித் துதித்தார். விரி வஞ்சி இம்மட்டே எழுத்தினும். இன்னும் இதனுள் பொதிந்துள பொருள் பல. வல்லார்வாய்க் கேட்டறிக.

---

## சுப்பிரமணியர் துதி

2. தத்தத்தன தத்தத் தனதன
தத்தத்தன தத்தத் தனதன
தத்தத்தன தத்தத் தனதன தனதான.

முத்தைத்தரு பத்தித் திருநகை
அத்திக்கிறை சத்திச் சரவண
முத்திக்கொரு வித்துக் குருபர எனவோதும்

முக்கட்பர மற்குச் சுருதியின்
முற்பட்டது கற்பித் திருவரும்
முப்பத்துமு வர்க்கத் தமரரும் அடிபேணப்

பத்துத்தலை தத்தக் கணைதொடு
ஒற்றைக்கிரி மத்தைப் பொருதொரு
பட்டப்பகல் வட்டத் திகிரியில் இரவாகப்

பத்தற்கிர தத்தைக் கடவிய
பச்சைப்புயல் மெச்சத் தகுபொருள்
பட்சத்துடன் ரட்சித் தருளுவ தொருநாளே

தித்தித்தெய ஒத்தப் பரிபுர
நிர்த்தப்பதம் வைத்துப் பயிரவி
திக்கொக்கந டிக்கக் கழுகொடு கழுதாட

திக்குப்பரி அட்டப் பயிரவர்
தொக்குத்தொகு தொக்குத் தொகுதொகு
சித்ரப்பவு ரிக்குத்திரிகடக எனவோதக்

கொத்துப்பறை கொட்டக் களமிசை
குக்குக்குகு குக்குக் குகுகுகு
குத்திப்புதை புக்குப் பிடியென முதுகூகை

கொட்புற்றெழ நட்பற் றவுணரை
வெட்டிப்பலி யிட்டுக் குலகிரி
குத்துப்பட ஒத்துப் பொரவல பெருமாளே.

(இ - ள்) முத்தை தரு - முத்தை நிகர்த்த, பத்தி திருநகை - அழகிய தந்த பங்க்திகளையுடைய, அத்திக்கு - தேவகுஞ்சரி அம்மையாருக்கு, இறை - கணவனே!, சத்தி - சத்தி வேலாயுதத்தைத் தாங்கிய, சரவண - கந்தக் கடவுளே!, முத்திக்கு - வீட்டிற்கு, ஒரு வித்து - ஒப்பு இல்லாத விதையைப் போன்றவனே!, குருபர - தந்தைக்கும் குருவாக இருந்தவனே!. என ஓதும் - என்று துதிக்கின்ற, முக்கண் பரமற்கு - மூன்று திருக்கண்களை யுடைய சிவ பெருமானுக்கு, சுருதியின் - மறையின், முற்பட்டது - முதன்மையாய்ச் சொல்லப் பெறுவதாகிய குடிலை மந்திரத்தை, கற்பித்து - உபதேசித்து, இருவரும் - மாலும் அயனும் ஆகிய இருவரும், முப்பத்து மூவர்க்கத்து அமரரும் - முப்பத்து முக்கோடி தேவர்களும், அடிபேண - பாதங்களை வணங்கவும், தித்தி தெய ஒத்த - தித்தித்தெய என்னும் இசைத்தாள ஒலிக்குச் சரியாக இசைந்த, பரிபுரம் - ஒத்து ஒலிக்கும் பாதச் சிலம்புகளை அணிந்திருக்கின்ற, நிர்த்த பதம் - நடனஞ் செய்யும் அழகிய பாதங்களை, வைத்து - அடியிட்டு. பயிரவி - பயிரவி என்னும் ராசத்தை, திக்கு ஒக்க -

திசைகளிற் பொருந்த, நடிக்க - திருநடனஞ் செய்யவும், கழு கொடு கழுது ஆட - கழுகுகளோடு பேய்களுங் கூடி நின்றாடவும், திக்கு - எட்டுத் திசைகளிலுள்ள, பரி அட்டப் பயிரவர் - உலகத்தைக் காக்கின்ற எட்டுப் பயிரவர்களும், சித்ரப்பவுரிக்கு - அழகிய நடனத்துக்கு, தொக்குத்தொகு தொக்குத்தொகு தொகு திரி கடக என ஓத - தொக்குத்தொகு தொக்குத்தொகு தொகு திரிகடக என்னும் இவ்விசை ஓசையைக் கூறவும், கொத்து பறை - கூட்டமாகிய பற்பலபறைகள், கொட்ட - அடித்து முழக்கவும், களம் மிசை - யுத்தகளத்தில், குக்குக்குகு குக்குக் குகுகுகு - குக்குக்குகு, குக்குக் குகுகுகு என்னும் ஒலியோடு, முது கூகை - முதிர்ந்த கோட்டான். குத்திப் புதை - குத்திப் புதை, புக்கு பிடி - புகுந்து பிடி (என்று குழறவும்). கொட்பு உற்று - சுழன்று, எழ - (மேலே தாக்கி) எழ, நட்பு அற்ற அவுணரை - சிநேகத்தன்மை இல்லாது பகை பாராட்டி வந்த அசுரர்களை, வெட்டி - வெட்டிக் கொன்று, பலி இட்டு - பலியாக இட்டு, குலம் கிரி - உயர்வையுடைய கிரௌஞ்ச வெற்பானது, குத்துபட - குத்துப்படும்படி, ஒத்து பொர வல - பொருத்தமாகச் சண்டை செய்யும் படியான வல்லமையைக் கொண்டுள்ள, பெருமாளே - பெருமானே!, பத்துத் தலை தத்த - பத்துச் சிரங்களும் சிதறிவிழ, கணைதொடு - அம்பைச் செலுத்தி, ஒற்றை கிரி - ஒப்பற்ற மந்தரமலையாகும், மத்தை பொருது - மத்தால் திருப்பாற் கடலைக் கடைந்து. ஒரு பட்டப்பகல் - ஒரு நல்ல பகற் காலத்தை, வட்டம் திகிரியால் - வட்ட வடிவமாகிய தன்னுடைய சக்கராயுதத்தினால், இரவு ஆக - இராக்காலம் ஆகும்படிச் செய்து, பத்தற்கு - தன்னிடம் பக்தியுள்ளவனாகிய அருச்சுனனுக்கு, இரதத்தை கடவிய - தேரைச் செலுத்திய, பச்சை புயல் - பசிய மேகத்தின் நிறத்தைக் கொண்டுள்ள மகா விஷ்ணு,

மெச்சத் தகு பொருள் - விரும்பிப் போற்றத்தக்க பொருளாக உள்ளவனே!, பட்சத்துடன் - அன்பொடு, ரட்சித்தருளுவது - எங்களைக் காத்தருள்வதாகிய, ஒருநாளே - ஒருநாளும் உண்டோ?

(வி - ரை) 'முத்தைத் தரு' இதில் 'தரு' உவமப் பொருளது. நகை - 'நகு' என்னும் பகுதி அடியாகப் பிறந்தது; இதற்கு 'விளக்க முடையது.' பிரகாசிப்பது' என்பது பொருள்; பற்கள் பிரகாசமுடைமை அறிக. 'அத்தி' என்றது ஈண்டு தேவகுஞ்சரியாரை. இறை - தலைவன், கணவன். சத்தி - வேல்; இது பராசத்தியாரால் அருளப்பெற்றதால் சத்தி எனப் பெற்றது. ஞானசத்தியே வடிவேல் என்பதறிக.

சரவண: அண்மை விளி. கங்கையிலுள்ள சரவண மடுவில் முருகப்பிரான் அவதாரஞ்செய்து விளையாடி இருந்தவர் ஆதலின் அவருக்குச் 'சரவணோற்பவன்' என்னுந் திருநாமம் ஏற்பட்டது; சரவணோற்பவன் என்றது 'சரவண' என விகாரப்பட்டு நின்றது. 'முத்திக் கொரு வித்து' என்றது முத்தியடைதல் எளிதென்பதை விளக்க. பரனுக்குங் குருவானமையால் 'குருபர' என்றார். பரமன் - உயர்ந்தவன். பரம் - உயர்ந்த இடங் குறிக்குஞ் சொல்.

சுருதி - 'ஒலி வடிவாக இருப்பது' என்பது பொருள். 'சுருதியின் முற்பட்டது' என்றது பிரணவமாகிய "ஓம்" என்பதனை.

"உம்பல் உறித்தாற் கோம்பொருள் தந்த
செம்பொரு ளாவான் செவ்வேள் என்னும்"

என்ற ஆன்றோர் வாக்கும் ஈண்டே கருதத்தக்கது. "ஓம்" அ, உ, ம் என்னும் மூன்றெழுத்தா லாயது; இவை முறையே தோற்றம், குவிவு, ஒடுக்கங்களை உணர்த்தும்.

கற்பித்தல் - கேட்பார் உணர ஐயம், திரிபு, விபரீதம் என்னும் முக்குற்றமும் அற உணர்த்தல். பேணல் - வணங்கல்; இது

நச்சினார்க்கினியர் கொண்டது. தொடுதல் - கணையை எவுதல், விடுத்தல்; இறந்த காலத்தை எதிர் காலத்தாற் கூறினார்: இது இலக்கண மரபு. 'ஒற்றை' ஒப்பற்ற உயர்வு காட்டிற்று. 'தனி' என்பதும் இப்பொருளதே. 'கிரி மத்தை' 'கிரியாகிய மத்தை' என விரிந்து இருபெயரொட்டாயிற்று.

'பத்துத்தலை தத்த' என்றது திருமால் தசரத புத்திரராகி இராவணனின் பத்துத் தலைகளுந் தத்தி விழச் செய்த கதையை,

'பட்டப் பகல் வட்டத் திகிரியில் இரவாக' என்றது, பாரத யுத்தத்தில் அருச்சுனன் தானிட்ட சபதப்படி சயத்திரதனைப் பொழுது படுமுன் கொல்லுமாறு சூரியனைச் சக்கரத்தால் மறைத்து, **சுயோதனன்** அணி வகுப்புகள் கலையுமாறு செய்து, சக்கரத்தை மீண்டு வாங்கி "ஈண்டும் பொழுதுளது கொல்லுக" என அருச்சுனனுக்குக் கட்டளையிட்ட கதையைக் குறித்தது.

எமன், இந்திரன் முதலிய தேவர்களை வென்ற இராவணனைக் கொன்றதனையும், பட்டப்பகலை இரவாகச் செய்ததையும் இங்குக் காட்டியது திருமாலின் பேராற்றலையும் செயற்கரிய செய்பவன் என்பதனையுங் குறித்தற்கு, இவனே பின் அருச்சுனனுக்குத் தேர்ச் சாரதியாய் நின்றான் என்றது காக்குங் கடவுளாகிய மால் அடியார் பொருட்டு எளிய செயலுஞ் செய்வன் என்றது தோன்ற.

'பச்சை' இங்குப் பசுமையைக் குறித்தது. இனி 'பச்சை நிறம்' என்பாரும் உளர். இதனைன்றோ,

"பச்சை மேனியன் மரகத வண்ணன்."

என்றார் பிறரும். பச்சை: பண்புத்திரிபு. கடவிய - செலுத்திய; கடாவுதல் - செலுத்தல். மெச்சல் - புகழ்தல்; 'விரும்புதல்' என்பாரும் உண்டு; புகழத்தக்கது விரும்பத்தக்கதே யாதலின்.

'பொருள்' என்றது செம்பொருள், மெய்ப்பொருள், முழுமுதற் பொருள் என்பதாம். ஆறுமுக மானபொருள் என்ற கருத்தே. "தித்தித்தெய" என்பதை 'தித்தித்திசை' எனப் பாடம் ஓது வாரும் உண்டு; இதற்குச் 'செவிக் கினிக்க ஒலிக்கும் இசையை உடைய' என்பது பொருளாம். கிர்த்தம்—பதம்: வட சொற்கள்: இதற்கு 'நடனத்தாள்' என்பது பொருளாம். பயிரவி ஒருவகை இசை; இராகப்பெயர். பரி தாங்கல், காத்தல். கொத்துப்பறை: கொத்து - கூட்டம். பறவைகளின் கூட்டம் என்க. களமிசை - அசுரப்போர் செய்த உயுத்த களத்தினிடத்து. குக்குக்குகு...... கோட்டான் ஒலிக்குறிப்பு. கொட்பு - சுழற்சி.

"கொட்பே சுழற்சி."

என்றதாலும் அறிக. நட்பற் றவுணரை - 'சிநேகத்தன்மை இல்லா அசுரரை' என்பது பொருள். 'நட்பற்ற வவுணரை' என்றபாலது சந்தம் பற்றி 'நட்பற்றவுணரை' என விகாரப்பட்டு நின்றது; இனி 'சிநேகத்தன்மை இல்லாது பகைத்து அசுரர்களை வெட்டி' எனப் பொருளுரைத்தலும் ஆம். அறத்தை இகழ்ந்து மறத்திற் புகுந்த அசுரரை வெறுத்தமை தோன்ற நட்பு அற்று அவுணரை வெட்டி னர் என்பார்.

இராவணன் பத்துத்தலை தத்தத் திருமால் கணை தொட்டதும், அசுரரை முருகப்பிரான் வெட்டிப் பலியிட்டதும் கருணையேயாம்; இவை மறக்கருணை எனப் பெறும். மறக்கருணை தப்புச் செய்த பிள்ளையைத் தாய் அடித்துத் திருத்துவதுபோன்ற கருணை. இனி, தப்புச்செய்த பிள்ளையை இன்மொழி கூறி, தின்பொருள் தந்து, "அத் தீவழி செல்லாதே" எனத் தாய் தடுத்துக் கூறுவது போன் றது அறக்கருணை எனப்பெறும். இவ் விரு கருணையும் இறைவர்க்கு உண்டு. இதனை,

"அடித்துதன் சேயைத் தாய்தான் ஆம்வழி ஆக்கல் தானே
படித்தனில் வெம்மை காட்டும் பகர்மறக் கருணை யாமால்
பிடித்தவின் சொல்லைக் கூறிப் பிரியமே செய்து செம்மை
வடித்தெழு வழியி லாக்கல் வழுத்தறக் கருணை யாமே."

"அறமறம் என்னு மிந்த அருந்திறற் கருணை தம்மைத்
திறமுறக் கொண்டு பெம்மான் திகழுல கெல்லாங் காப்பன்
உறப்பிகு மீசன் செய்யும் உயர்புகழ்க் கருணை யாறு
பிறரெவ ணறிய வல்லார் பேணுவ னறிவ தொன்றே."

என்னும் தனிச் செய்யுள்களாலும் அறியலாம்.

முருகனுக் கன்புடையவர் முத்திவித்தைக் கைப்பெறுவர் என்பது பெற்றும். இறைவர்க்கும் 'முத்தர்' எனுநாமம் உண்டு. இதனை,

"வேயீன்ற முத்தர்தமை
வேட்டினு னேயிடையன்—தாயீன்ற
மேனி தயங்கவே."

என்ற இரட்டையர் வாக்கானும் அறியலாம். "முருகரோ முத்தீன்ற முத்து" இதனாலன்றோ முத்துக்குமாரசுவாமி எனும் திருநாமமும் வழங்கி வருகின்றது. முத்தர் என்ற சொல் 'முத்திக்கு உரியவர்' 'முத்தியைத் தருபவர்' என்னும் பொருள் தருதல் கவனிக்கத் தக்கதாம். முக்கண் பரமர் - சிவபெருமான்; சிவபெருமானினும் உயர்ந்தா ரின்மையானும், ஒப்பாரும் இல்லை யாதலானும் 'பரமர்' என்றார். பரமன் - உயர்ந்தோன். இறைவர்க்குச் சூரிய சந்திர அக்கினிகளே மூன்று கண்ணுகை இயைந்துளதென வேதங்கள் கூறும்.

"எம்மைக் காத்தருளும் நாளும் ஒருநா ளுண்டோ?" என 'ஒருநாளே' என்றதற்குப் பொரு ளுரைத்தாம்; பாவியேனைக் காவாது கைவிடவுஞ் செய்வையோ?" என ஐயுற்று வினவியதாகக் கூறலு முண்டு. கருணையே வுருவாய மூர்த்தியே! நீ நாயேனை எவ் விதத்தும் ஒருநாளிற் காத்தருள் செய்யாது போகாய்' எனப் பொரு ளுரைப்பாரும் உண்டு. 'என் பாவங்கள் என்னை உன் கருணைக்குப் புறம்பாக்கினும் சூரரை அழித்தருள் செய்து நிற்கும் முருகப்பெருமானே! நீ எந்தவிதத்தினும் ஒரு நாளில் என்னைக் கெடுக்கும் பாவங்களை அழித்து என்னை அருள் செய்து காப்பாய் என்பது என் மனவுறுதியே' எனவும் பொருள் பெற நின்றது.

---

## திருப்பரங்கிரி

3\. தனத்தனந்தன தனதன தனதன
தனத்தனந்தன தனதன தனதன
தனத்தனந்தன தனதன தனதன—தனதான.

அருக்கு மங்கையர் மலரடி வருடியுங்
கருத்த றிந்தபின் அரைதனி லுடைதனை
யவிழ்த்தும் அங்குள அரசிலை தடவியும் இருதோளுந்

றணைத்து மங்கையின் அடிதொறு நகமெழ
உதட்டை மென்றுப லிடுகுறி களுமிட
அடிக்க ளந்தனின் மயில்குயில் புறவென மிகவாய்விட்

டுருக்கு மங்கியின் மெழுகென வுருகிய
சிரத்தை மிஞ்சிடு மனுபவ முறுபலம்
உறக்கை யின்கனி நிகரென இலகிய முலைமேல்வீழ்ந்

துருக்க லங்கிமெ யுருகிட அமுதுகு
பெருத்த வுந்தியின் முழுகிமெ யுணர்வற
வுழைத்தி டுங்கன கலவியை மகிழ்வது தவிர்வேனோ

இருக்கு மந்திர மொழிவகை முனிபெற
உரைத்த சம்ப்ரம சரவண பவகுக
இதத்த இங்கித மிலகிய அறுமுக எழில்வேலென்

றிலக்க ணங்களு மியலிசை களுமிக
விரிக்கு மம்பல மதுரித கவிதனை
யியற்று செந்தமிழ் விதமொடு புயமிசை புனைவோனே

செருக்கு மம்பல மிசைதனி லசைவுற
நடித்த சங்கரர் வழிவழி அடியவர்
திருக்கு ருந்தடி அருள்பெற அருளிய குருநாதா

திருக்கு ழந்தையு மெனவவர் வழிபடு
குருக்க ளின்திற மெனவரு பெரியவ
திருப்ப ரங்கிரி யுறைபவ சரவண பெருமாளே.

(இ - ள்.) இருக்கு மந்திரம் - ருக்வேத மந்திரங்களின், மொழி வகை - சொல்லின் பாதபாதங்களை, முனி பெற - அகத்திய முனிவர் அடையுமாறு, உரைத்த - உபதேசித் தருள் செய்த, சம்ப்ரம - மேன்மையோனே!' சரவணபவ - சரவண மடுவில் உதித்தருளியவனே!, குக - குகன் என்னும் திருநாமம் பூண்டுள்ளவனே!' இதத்த - நன்மைகள் நிறைந்தவனே!, இங்கிதம் - இன்பம், இலகிய - விளங்குறும், அறுமுக - ஆறு திருமுகங்கள் உடையவனே!' எழில் வேள் என்று - அழகு மிக்க முருக வேளே! என்று, இலக்கணங்களும் இயல் இசைகளும் - இலக்க

ணங்களும் இயற்றமிழ் இசைத்தமிழ்களும், மிக விரிக்கும் - மிக விரித்துரைக்கும், அம் பல - அழகிய பலவாகிய, மதுரிதம் - (காதுக்கும் கருத்துக்கும்) இன்பமான, கவிதனை - பாட்டை, இயற்று செந்தமிழ் - பாடப்பெற்றுள்ள செந்தமிழ் நூல்களை, விதமொடு - விதம் விதமாக, புயம்மிசை - அழகிய தோள்களின்மேல், புனைவோனே - அணிந்து கொண்டிருப்பவனே!, செருக்கும் - மேம்பாடுடைய, அம்பலம் மிசை - பொன்னம்பலத்தி னிடத்து, அசைவுற - ஐந்தொழில் நடைபெற, நடித்த சங்கரர் - திருநடனஞ் செய்தருளிய நடராஜாவின், வழிவழி துடியவர் - பரம்பரையாக வந்த அடியவர்கள், திருக்குருந்தடி - அழகிய சிறந்த குருந்த மரத்தடியில், அருள் பெற - திருவருளைப் பெரும்பொருட்டு, அருளிய - அருளைச் செய்த, குரு - சிவபெருமானுக்கும், நாதா - சிறந்த குருவாக விளங்குவோனே!, திரு குழந்தையும் என - தனது அழகிய குழந்தையும் இவராம் என்று, அவர் வழிபடு - அந்தச் சிவபெருமான் வழிபடுகின்ற, குருசுகன்ன் திறம்என - ஆசிரியரின் தன்மை உடையவர் எனவும், வரு - வருகின்ற, பெரியவ - பெரியவனே!, திருப்பரங்கிரி என்னும் சிறந்த தலத்தில், உறைபவ - வாழ்ந்தருள்கின்றவனே!, சரவண பெருமாளே - குமரக் கடவுளே!, அருக்கும் - அருமையாக விளங்கும், மங்கையர் - பெண்களின், மலர் அடி - செந்தாமரையை ஒத்த செவந்த மெல்லிய பாதங்களை, வருடியும் - தடவிக் கொடுத்தும்; கருத்து அறிந்த பின் - அவர் கூடக் கொண்டுள்ள கருத்தை அறிந்து கொண்ட பிற்பாடு, அரைதனில் - இடையிற் (கட்டியுள்ள), உடைதனை அவிழ்த்தும் - சீலையை அவிழ்த்தும்; அங்கு உள - அங்கு இருக்கும், அரசுஇலை - அரசின் இலையை ஒத்து விளங்கும் அல்குலை, தடவியும் தடவிக் கொடுத்தும்; இரு தோள் உற்று - (இரு தோள்களோடும்) இரு தோள்கள் பொருந்தி, அணைத்தும் - அணைத்துக்கொண்டும்; அங்கையின் -

அழகிய கையினுல், அடிதொறும் - (நகக்குறி வைக்கும்) இடங்களி லெல்லாம், நகம் எழ - நகக்குறி தோன்றவும், உதட்டை மென்று - இதழைச் சுவைத்து, பல் இடு குறிகளும் இட - பல்லாற் செய்யப் படுவனவாகிய அடையாளங்களை இயற்ற, அடிக்களம் தன்னில் - கழுத்தின் அடிப்பக்கத்தில், மயில் குயில் புறவு என - மயில் குயில் புறு என்று சொல்லப் பெறும்படி, வாய்விட்டு ஒலி செய்ய - வாயி ஞல் அவைகளைப்போல் புள்ளொலி காட்ட, உருக்கும் அங்கியின் - இளகச் செய்யும் நெருப்பில் (வைத்த), மெழுகு என - மெழுகைப் போல மனம் இளகி, ஈரத்தை மிஞ்சிடும் - ஆதரம் மிகுந்த, அநு பவம் உறு பலம் - சுக நுகர்ச்சியின் மிக்க பலமானது, உற - அதி கரிக்கும்படி, கையின் - கையிலுள்ள, கனி நிகர் என - பழத்திற்கு ஒப்பானது என்று கூறுமாறு, இலகிய விளங்குகின்ற, முலைமேல் வீழ்ந்து - கொங்கைகளின்மேல படிய வீழ்ந்து, உரு கலங்கி - உருவம் மாறுபாடடைந்து, மெய் உருகிட - உடம்பும் உருக, அமுது உகு - அமிர்தம் சொரிகின்ற, பெருத்த உந்தியின் - பெரி தாகிய உந்திச் சுழியில், முழுகி - அழுந்தி, மெய்உணர்வு அற - மெய் அறிவு கெட (இன்பப் பரவசமாகி), உழைத்திடும் - வருந்தும், கன கலவியை - மிக்க புணர்ச்சி இன்பத்தினிடத்தில், மகிழ்வது - (அறி யாமையினுல் அதில்) விருப்பங்கொண்டு மகிழ்ந்திருப்பது, தவிர் வேனே - (உய்யும்வண்ணம் அதினின்றும்) நீங்கவுஞ் செய்வேனே.

(வி - ரை.) அருக்கு மங்கையர் - அருமையான பெண் கள். 'மங்கை' என்னும் பருவப் பெயர் அதனையுடைய பெண்கள் மேல் நின்றது. கருத்தறிதலாவது - அப் பெண்களின் கருத்தும் கனிந்து கூடல் விரும்பி நிற்குங் காலத்து. 'அரசிலை' அது போன் றுள்ள அவயவத்தைக் குறித்தது; இது உரு உவமம். 'கனி நிக ரென இலகிய முலை' என்றதற்கு; 'கூவிளங்கனி, மாதுளங்கனி நிகர்த்த முலை' எனினும் ஆம். ஈண்டு 'கையின் நிகரென இலகிய

மூலைமேல் வீழ்ந்து' என்பதற்கு 'ஒழுக்கத்தால் பலாக்கனிச் சுளையில் வீழ்ந்து ஒட்டி உருச்சிதைந் தழியும் ஈயைப்போல' என்பாரும் உண்டு. 'பெருத்த உந்தி' முழுகி என்பதற்குப் பொருந்தப் 'பெருத்த' என்றார். 'பெருத்த உந்தி' என்பதற்குப் 'பெரிய உந்தித்தடம்' எனலும் ஆம். பெருத்த உந்தி - பெரிய உந்திச்சுழி; என்னெனின், அதன்கண் அகப்பட்டாரைச் சுழித்து இழுத்து உள்ளுறவாக்கி அழிக்கும் இயல்புடைமையால், உயர்ந்த இடமாகிய மூலைமேல் வீழ்ந்தவன் உருண்டு மருண்டு துன்பப் படலையும், ஆழமாகிய சுழி நீரிற் பட்டவன் தன்னிலை கெட்டு முழுகி அழுந்தி ஒழிதலையும் குறிப்பிக்கும் நயம் இங்கு காணத்தக்கது. 'கனகலவி' பிருந்த இன்பமில்லை; பிறந்த துன்பத்திற் கிடமான இன்பமில்லை எனலும் ஆம். முத்திப்பேறு பெறுதபடி ஒருவனைத் தடுப்பனவாயது மூன்றாசை: அவையாவன: மண், பெண், பொன் என்பன. இவற்றுள் நடுநின்ற பெண் பற்றியே மண்ணினிடத்தும் பொன்னினிடத்தும் ஆசை பிறக்கும். பெண்ணாசை விட்டார்க்கு ஏனை இரண்டாசையும் தாமே நீங்கும்; நீங்க, உடனே வீடு கூடும். ஆதலின், 'கனகலவியை மகிழ்வது தவிர்வேனோ' என்றார். இதனை,

"காதென்று மூக்கென்று கண்ணென்று
காட்டியென் கண்ணெதிரே
மாதென்று சொல்லி வருமாயை
தன்னை மறலிவிட்ட
தூதென்றெண் ணாமற் சுகமென்று
நாடுமித் துர்ப்புத்தியை
ஏதென் றெடுத்துரைப் பேன்இறை
வாகச்சி எகம்பனே."

என்ற பட்டினத்தடிகள் வாக்காலும் அறியலாம்.

இருக்கு மந்திரம் - 'மந்திர வடிவாகிய இருக்கு வேதத்தை' என்பர்; 'இருக்கு வேதத்துள்ள மந்திர சுலோகங்களை' என்பர் ஒரு சாரார். 'முனி' என்றது ஈண்டு அகத்தியமுனியை. அடியார்களின் உள்ளக் குகைகளில் வசிப்பவன் ஆதலின் 'குகன்' என்னும் பெயர் முருகப்பிரானுக் காயிற்று. இனி, 'குறிஞ்சி நிலத்து மலைக் குகைகளில் வசிப்பவன்' எனினும் ஆம்; 'பிரணவமாகிய குகையினுள் இருப்பவன் ஆதலின் குகன் எனலாயிற்று' என்பாரும் உண்டு. 'செருக்கு மம்பல மிசைதனி லசைவுற நடித்த சங்கரர் வழிவழி அடியவர்' செருக்கு - பெருமை. அம்பலம் - ஞானசபை. அசைவுற ஐந்தொழில் நடைபெற இதனை,

"தோற்றமொரு கைத்துடியிற் றிதியபயந்
 தருகரத்திற் றொலைவோர் செங்கை
ஏற்றகனலைத் தொழுஞ்சுழலிற் றிரோபவமூன்
 றியதாளில் எடுத்த தாளில்
மாற்றரிய அருள்வயங்க இருமுனிவர்
 பணிந்துதுதி மகிழ்ந்து போற்ற
சாற்றரிய அம்பலத்துள் நடநவிலும்
 பெருமானைச் சார்ந்து வாழ்வாம்."

என்னும் உறந்தைப் புராணத்தானும் அறியலாம்.

'வழிவழி அடியவர்' என்றது மணிவாசகப் பெருமானை. சிவபெருமான் மணிவாசகர்க்குக் குருந்த மரத்தின் நிழலிலிருந்து உபதேசித் தருளினர் என்பது புராணம். இதனை,

"பெருந்துறையிற் சிவபெருமான் அருளுதலும்
பெருங்கருணைப் பெற்றி நோக்கி,"

என்ற சிவஞானமுனிவர் வாக்கானும்,

"சீரார் பெருந்துறையில்
எளிவந் திருந்திரங்கி எண்ணரிய இன்னருளால்
ஒளிவந்தென் னுள்ளத்தின் உள்ளே ஒளிதிகழ்
அளிவந்த அந்தணனை,"

என்ற மணிவாசகத்தாலும் அறியலாம்.

'குரு' என்ற வடசொல் 'அஞ்ஞானமாகிய இருட்டைப் போக்குபவன்' என்னும் பொருளது. வழிபடல் - வணங்கல், திருப் பரங்கிரி' என்றது திருப்பரங் குன்றத்தை.

'வழிவழி' என்பதற்கு 'உமாதேவியார்க்கும், நந்தியம் பெரு மானுக்கும், சனகாதி முனிவர்களுக்கும் வழிவழியாக உபதேசித் தருளியபடி' என்பாரும் உண்டு.

குருந்த மரத்தடியிற் குருவாக நின்ற பரமர்க்கும் குருவான வன் நீயாகையால் நாயேனால் நீங்கற்கரிய கொடிய கேட்டைத் தரும் பெண்ணாசையை நீக்கி நின் திருவடிக்கே ஆசை வைக்கும் வழி யைக் காட்டி யருள் செய்வாயாக என்பது குறிப்பித்ததாகும்

---

4. தனத்தனந்தன தனதன தனதன
தனத்தனந்தன தனதன தனதன
தனத்தனந்தன தனதன தனதன தனதான.

கறுக்கு மஞ்சன விழியிணை அயில்கொடு
நெருக்கி நெஞ்சுற எறிதரு பொழுதொரு
கனிக்கு ளின்சுவை அமுதுகு மொருசிறு நகையாலே
களக்கொ டுங்கலி வலைகொடு விசிறியெம்
மனைக்கெ ழுந்திரு மெனமன முருகவொர்
கவற்சி கொண்டிட மனைதனி லழைகொடு கொடுபோகி

நறைத்த பஞ்சணை மிசைதனின் மனமுறை
வளைத்த னந்தலி னிணைமுலை யெதிர்பொர
நகத்த ழுந்திட வமுதிதழ் பருகிய மிடறோடே

நடிக்கெ ழுந்தரால் குழுகுழு குழுவென
இசைத்து நன்றொடு மனமது மருகிட
நழுப்பு நஞ்சன சிறுமிகள் துயரற அருள்வாயே;

நிறைத்த தெண்டிரை மொகுமொகு மொகுவென
உரத்த கஞ்சுகி முடிநெறு நெறுவென
நிரைத்த அண்டமு கிடுகிடு கிடுவென வரைபோலும்

நிவத்த திண்கழ னிசிசர ருரமொடு
சிரத்தொ டங்குலை மலைபுரை தரவிரு
நிணக்கு ழம்பொடு குருதிகள் சொரிதர அடுதீரா!

திறற்க ருங்குழ லுமைபவ ளருளுறு
புழைக்கை யும்மத கயமுக மிகவுள
சிவக்கொ ழுந்தென கணபதி யுடன்வரும் இளையோனே!

சினத்தொ டஞ்சம னுதைபட நிறுவிய
பரற்கு என்புரு புதல்வ! நன் மணியுகு
திருப்ப ரங்கிரி தனிலுறை சரவண பெருமாளே!

(இ - ள்.) நிறைத்த தெண் திரை - கடலை நிறம்பச் செய்து எழும் தெள்ளிய அலைகள், மொகு மொகு மொகு என - மொகு மொகு மொகு என்னும் ஒலியைக் கிளப்பவும், உரத்த கஞ்சுகி - மார்பா லூர்ந்து செல்லும் தன்மையை உடையதாகிய பாம்பாகிய ஆதிசேஷனது, முடி - தலையானது, நெறு நெறு என - நெறு நெறு என்ற ஓசையோடு முரியவும், நிரைத்த அண்டமும் - வரிசை

வரிசையாகிய உலகங்களும், டிடு டிடு டிடு என - டிடு டிடு டிடு என்று நடுங்கிடவும், வரைபோலும் - மலையைப் போன்று, சிவந்த - உயர்ந்தோங்கிய, திண் கழல் - உறுதியாகிய வீரக்கழலை அணிந்த, நிசிசரர் - அரசர்களுடைய, உரமொடு - மார்போடு, சிரம் கொடும் குவை - தலைகளினுடைய கொடிய குவியல்களும், மலை புரைதர - மலைபோலக் குவியலாக விளங்கி நிற்க, இரு நிணம் குழம்பொடு - பெரிய கொழுப்பின் குழம்புடனே, குருதிகள் - பெருகிய இரத்தங்கள், சொரிதர-வழியவும், அடு போர - போரைச் செய்யுந் தைரியத்தை உடையவனே! திறல் - வல்லமையையுடைய, கரு குழல் உமையவள் - கருமை நிறம் வாய்ந்த கேசத்தை உடைய உமாதேவியாரின், அருள் உற - கருணையைப் பெற்றுள்ள, புழை கை - துவாரத்தோடுள்ள தும்பிக்கையையும், மும்மதம் - மூன்று மதங்களையுமுடைய, கயம் முகம் - யானையின் முகம், திகழ் உளா - சிறக்க உண்டாகிய, கணபதியுடன் - விநாயகக் கடவுளோடு, சிவக்கொழுந்து என - சிவக்கொழுந்தென்று கூறும்படி, வரும் இளமையானே - தோன்றி வரும்படியான இளமைக் கோலம் உடையவனே!' சினத்தோடும் - கோபத்தோடும், சமன் உதை பட - யமனானவன் உதைபடுமாறு, சிறுவிய பரற்கு - சிறுவனைத் தாக்கியருளிய சிவபெருமானுக்கு, உள் அன்பு உற - உள்ளத்து அன்பு தங்கிய, புதல்வ - புத்திரனே!, நல் மணி உகு - நல்ல முத்துக்களைச் சொரிதரச் செய்யும், திருப்பரங்கிரிதனில் - திருப்பரங்கிரி என்னும் சிறந்த திருத்தலத்தில், உறை - வசித்திருக்கும், சரவண பெருமாளே - சரவணம் என்னும் மடுவில் தோன்றியருளிய பெருமானே!, கறுக்கும் அஞ்சனம் - கறுமையாகிய மைதீட்டப் பெற்ற, விழி இணை - இரண்டு கண்களாகிய, அயில்கொடு - வேலாயுதத்தைக் கொண்டு, நெருக்கி நெஞ்சு உற - கிட்டிச் சென்று மனத்திற்பட, எறிதரு பொழுது - வீசுகின்ற காலத்தில், ஒரு கனிக்குள் - ஒப்புச் சொல்லற் கரிய கொவ்வைக் கனியை ஒத்த இதழில், இன்சுவை - மதுரச்

சுவை பொருந்திய, அமுது உகு - இதழமுதைச் சொரிகின்ற, ஒரு சிறு நகையால் - ஒப்பற்ற புன் சிரிப்பினால், கொடும் களம் கலி - வளைந்த கழுத்தின் கண்ணே உண்டாவதாகிய ஓசை என்னும், வலை கொடு - வலையைக் கொண்டு, விசிறி - வீசி, எம் மனைக்கு எழுந்திரும் - எமது கிருகத்திற்கு எழுந்து வருவீராக!, என - என்று, மனம் உருக - மனது இளகும்படிக்கும், ஓர் கவற்சி கொண்டிட - ஒரு கவலையைக் கொள்ளும்படிக்கும், மனைதனில் - கிருகத்தில், அழகொடு - அழகாக, கொடு போகி - இட்டுக்கொண்டு சென்று, நறைத்த - வாசனையையுடைய, பஞ்சு அணை மிசைதனில் - பஞ்சணைகளாலாகிய அமளியின்மேல், மனம் உற - ஆவல் உண்டாகும்படி, வளைத்து - கழுத்தைத் தழுவி வளைத்து, அனந்தலில் - இன்ப லீலைச் செருக்கில், இணை முலை - (மார்பின்) இரண்டு தனங்களும், எதிர் பொர - காளையர்களின் மார்பத்து நேரிலே பொருந்த, நகத்து அழுந்திட - நகத்தால் அழுந்த, இதழ் அமுது பருகிய - இதழ் அமிர்தத்தைச் சுவைத்து அருந்திய, மிடறு ஊடு - கழுத்தின் மத்தி இடத்தில், நடித்து எழும் குரல் - பாவனையாகக் கிளம்புகின்ற ஒலி, குமு குமு குமு என - குமு குமு குமு என்னும் ஓசையோடு, இசைத்து - ஒலியை உண்டாக்கிட, நன்கொடு - நன்றாக, மனம் அது மறுகிட - மனமானது சுழன்றிட, நழுப்பு - வஞ்சிக்கும், நஞ்சு அன - விஷத்தை ஒத்த, சிறுமிகள் துயர் அற - இளைய பெண்களால் வரும் துன்பமானது என்னை விட்டு நீங்க, அருள்வாய் - தொண்டனாகிய எனக்குக் கிருபையைச் செய்வாயாக, எ - று

(வி - ரை) 'கறுக்கும் அஞ்சன விழி இணை': கறுக்கும் விழி - கோபிக்கும் விழி; எனக் கறுக்கும் என்பதனை விழிக்கு அடைமொழியாக்குக; இனி ஒரு சாரார் அஞ்சனத்துக்கு அடைமொழியாக்குவர்; 'கறுக்கும்' என்பதற்குக் 'கருப்ப நிறங் கொள்ளும்' எனப் பொருள் கோடலும் ஒன்று.

"கறுப்புஞ் சிவப்பும் வெகுளிப் பொருள."

"நிறத்துரு வுணர்த்தற்கு முரிய வென்ப."

என்பன சூத்திரம் ஆதலின் இவ்வாறெல்லாம் பொருள் கொள்ள அமையும்.

'களக்கொடுங்கலி' கொடுங் களக்கலி என மொழி மாற்றிப் பொருளுரைத்தாம்: இனி 'கழுத்தினின்றும் உண்டாகும், கொடும் கலி - ஆடவர் மனத்தை வலிந்திழுக்குங் கொடுமை உடையதாகிய ஓசை' எனினும் பொருந்தும். அவர் கண்டத்திருந்து வரும் ஒலி ஆடவர் மனத்தைப் பிணிக்குந் தன்மையது என்பது தோன்ற "களக்கொடுங்கலி கொடு விசிறி" என்றார்.

எமது வீடு, நாங்கள் பதியிலாராகையால் நீங்கள் பயமின்றி வரலாம் என்றும் பொருள்பட 'எம்மனை' என்றார். இதனாலன்றோ,

"மைவிழியார் மனையகல்."

என்றார் ஔவைப் பிராட்டியாரும். முன்னர் 'வலைகொடு விசிறி' என்றதற்கேற்ப 'மன்முற வளைத்து' என்ற நயம் கருதற்பாலது. 'மனமுற': இது 'மயக்கம் ஆடவர் மனத்துற' என்றும், 'தமது மனது பொருந்த' என்றும் பொருள் தந்து நின்றது. 'கழுப்பு நஞ்சன சிறுமிகள்': கழுப்புதல் - வஞ்சித்தல். நஞ்சு + அன்ன - நஞ்சன என ஆயிற்று; னகரக்கேடு தொகுத்தல் விகாரம்.

நிறைத்த தெண்டறை - 'நீரை நிறைத்துக்கொண்டுள்ள அலை' என்பாரும் உண்டு. "திரை எனற்பாலது 'தறை' என விகாரப் பட்டு வந்தது," என்பாரும் உண்டு. இவர்க்கு:

"அறையு மாடரங் கும்மடப் பிள்ளைகள்
தரையிற் கீறிடிற் றச்சருங் காய்வரோ."

என்றதில் 'தரை, என்ற இடத்து 'தறை' என்றதே பேராதாரமாயிற்று.

"மகனறிவு தந்தை அறிவு"

என்பதற் கேற்பச் சிலக்கொழுந்தாக விளங்குவதாலும் என்னைத் தொடரும் அடரும் இன்னல் தரும் மாயா காரியங்களை எல்லாம் நீக்கிநின் அருட்கு இலக்காகிக் கொள்ளுவாயாக என்பதாம். 'மணியுகு' என்பதற்கு 'முத்துக்கள்' என்றும். மூங்கில் முத்து, யானைத் தந்தத்தில் விளைந்த முத்து, பன்றியின் பல்லில் விளைந்த முத்துக்கள் முதலியன சொரிதரப் பெறுதலின்; இனி, 'மணி' என்பதற்கு 'ரத்தினங்கள்' என உரைப்பாரும் உண்டு; நாகமணிகளும் முத்துக்களும் மலை சொரிதலின்.

---

5. தனதந்தன தந்தன தந்தன
தனதந்தன தந்தன தந்தன
தனதந்தன தந்தன தந்தன—தனதான.

சருவும்படி வந்தன னிங்கித
மதனின்றிட அம்புலி யுஞ்சுடு
தழல்கொண்டிட மங்கையர் கண்களில் வசமாகி
சயிலங்கொளு மன்றல்பொ ருந்திய
பொழிலின்பயில் தென்றலு மொன்றிய
தடவஞ்சுனை துன்றியெ ழுந்திடு திறமான
இரவும்பக லந்தியு நின்றிட
குயில்வந்திசை தந்தன வென்றிட
விருகண்கள் துயின்றிட லின்றியும் மயலான
விவனெஞ்சு பதன்பத னென்றிடு
உடல்கொண்டு வருந்திய வஞ்சக
னினியுன்றன் மலர்ந்தில குப்பத மடைவேனோ

திருவொன் றி விளங்கிய அண்டர்கள்
மனையின் தயி ருண்டவ னெண்டிசை
திகழும்புகழ் கொண்டவன் வண்டமிழ் பயில்வோர்பின்

திரிகின் றவன் மஞ்சுநி றம்புனை
பவன்மிஞ்சுதி றங்கொள வென்றடல்
செயதுங்க முகுந்தன் மகிழ்ந்தருள் மருகோனே!

மருவுங்கட றுந்துமி யுங்குட
முழவங்கள்கு மின்குமி னென்றிட
வயலொன்றிய செந்திலில் வந்தருள் முருகோனே!

மதியுங்க திரும்புய லுந்தின
மறுகும்படி யண்டமி லங்கிட
வளர்கின்ற பரங்கிரி வந்தருள் பெருமாளே!

(இ - ள்.) திரு ஒன்றிய - செல்வம் அமைந்த, அண்டர்கள் - ஆயர்களது, மனையின் தயிர் உண்டவன் - வீடுகளிலே யுள்ள தயிரை உண்டவனும், எண் திசை - எட்டுத் திக்குகளிலும், திகழும் புகழ் கொண்டவன் - விளக்கமுறும் புகழைக் கொண்டுள்ளவனும், வண் தமிழ் - வளப்பம் பொருந்திய தமிழை, பயில்வோர் பின் - கற்பவர்களின் பின், திரிகின்றவன் - திரிகின்றவனும், மஞ்சு நிறம் புனைபவன் - கொண்டலின் நிறத்தைப் பொருந்தி யுள்ளவனும், மிஞ்சு திறம் கொள - மிகுதியாகிய வெற்றிவன்மை தனக்கடைய, அடல் வென்று - யுத்தத்தில் சத்துருக்களைக் கொன்று, செய துங்க முகுந்தன் - வெற்றியின் உயர்வைக் கொண்டுள்ளவனுமாகிய மஹாவிஷ்ணு, மகிழ்ந்தருள் மருகோனே - மகிழ்ச்சி கூர்ந்து கொண்டாடும் மருகனே!, மருவும் கடல் - நிலத்தைத் தோய்ந்து நிற்கும் கடலைப்போல, துந்துமியும் - பேரிகையும், குடம் முழவங்

கள் - குடத்தைப்போன்ற உருவத்தையுடைய மத்தளங்களும், குமின் குமின் என்றிட - குமின் குமின் என்ற ஒலியைச் செய்ய, வளம் ஒன்றிய - வளப்பம் பொருந்திய, செந்திலில் - திருச்செந்தூர் என்னும் சிறந்த தலத்தில், வந்து அருள் முருகோனே-வந்து வசித்து அடியார்க்கு அருளைச் செய்கின்ற முருகக்கடவுளே!, மதியும் - திங்களும், கதிரும் - ஞாயிறும், புயலும் - மேகமும், தினம் மறுகும்படி - தினந்தினம் மயங்கும்படி, அண்டம் இலங்கிட விண்ணளவும் விளங்கும்படி, வளர்கின்ற - ஓங்கி யுயர்ந்துள்ள, பரங்கிரி - திருப்பரங்குன்றம் என்னும் அழகிய பதியில், வந்து அருள் பெருமானே - வந்து வாழ்ந்திருந்து அருளைச் செய்கின்ற பெருமானே!, சருவும்படி - அணைதற்கு, வந்தனன் - வந்தவனாகி, இங்கிதம் மதன் நின்றிட - மனக்குறிப்பை உணர்த்தும் மதவேள் மததியில் நிற்க, அம்புலியும் - சந்திரனும், சுடு தழல் கொண்டிட - சுடுகின்ற நெருப்பைப்போலும் வெப்பத்தைக் கொள்ள, மங்கையர் - பெண்களது, கண்களின் வசமாகி - விழிகளின் வயப்பட்டு, சயிலம் கொளும் - பொதிய மலையிலுள்ள, மன்றல் பொருந்திய - வாசனையோடு கூடிய, பொழிலின் பயில் - சோலைகளிலே சஞ்சரிப்பதாகிய, தென்றலும் - தென்றற் காற்றும், ஒன்றிய - (குளிர்ச்சி) பொருந்திய, தடம் சுனை தனை - விசாலமாகிய அழகிய சுனைகளிலே, துன்றி எழுந்திட - நெருங்கிவர, திறம் ஆன - பிரிவினையுடைய, இரவு பகல் அந்தியும் - இராத்திரியிலும் பகலிலும் மாலைப் பொழுதிலும், நின்றிடு குயில் - (காமத்தை மிகுக்கவே) நிற்கும் குயில், வந்து இசை - வந்து தனது இசையை, தந்தன என்றிட - தந்தன என்று சொல்ல, இரு கண்கள் - இருவிழிகளும், துயின்றிடல் இன்றியும் - நித்திரை செய்வதில்லாமலும், மயல் ஆன இவன் - காம மயக்கத்தைக் கொண்டு என்னுடைய, நெஞ்ச - மனது, பதன்பதன் என்றிட - பதைபதைப்படைய, உடல்கொண்டு வருந்திய வஞ்சகன் - இத்தேகத்தைப் பெற்று வருந்துகின்ற

கபடம் மிகுந்த செயலை உடையனாகிய நான், இனி உன்றன் - இனி மேல் கடவுளே உம்முடைய, மலர்ந்து இலகும் - தாமரைப் பூவைப் போல் மலர்ந்து **விளங்குகின்ற**, பதம் அடைவேனோ - திருப்பாதங்களைப் பெற்றிடுவேனோ? எ - று.

(வி - ரை.) 'சருவும்படி வந்தனன் இங்கித மதனன்': இங்கித மதனன் சருவும்படி வந்தனன் எனக் கூட்டிப் பொருள் கொள்க; சருவுதல் - அணைதல்; 'மலர்க்கணை எய்ய மதனன் அணைந்தனன்' என்பாருமுளர். 'அம்புலியும், தென்றலும்' என்றவற்றின் உம்மைகள் எண் உம்மைகள். காமிகளை மதன், அம்புலி, தென்றல் குயில், இரவு, முதலியன துன்பு செயும் என்பர்:

"வாரி பொன்று பாயிரண்டு மாலைமூன்று நாலுவேய்
மதியம்ஐந்து கங்குலாறு மாரனேழு வாடையெட்
டாரமொன்ப தன்றில்பத் தடங்கலும் ஒருக்குமால்
அத்தனைக் கொழிலக் கென்னுயி ரொன்று காணுமே"

என்ற தனிப்பாடல் அடிகள் நோக்கத் தக்கன.

"சயிலம் தென்றல்' என்ற குறிப்பால் பொதியத்தைக் குறித்தது. அண்டர் - 'திருமாலின் அருளுக்கு அண்மையானவர்' என்பது பொருள். பத்தவதாரத்தால் புவியில் அவதரித்து, துஷ்டரை நிக்ரகித்து இஷ்டரை ரக்ஷித்து உலகைப் போற்றியதால் 'எண்டிசை திகழும் புகழ் கொண்டவன்' என்று திருமாலைக் கூறினார். கச்சிக் கணிகண்ணர் என்பார் பாடலைக் கேட்டு அவரைப் பின் தொடர்ந்து சென்றதால் 'வண்டமிழ் பயில்வோர்பின் திரிகின்றவன்' என்றார். இதனைப்,

"பணிகொண்ட துத்திப் படப்பாய்ச்
சுருட்டுப் பணைத்தோ ளெருத்தலைப்பப்
பழமறைகள் முறையிடப் பைந்தமிழ்ப்
பின்சென்ற பச்சைப்பசுங் கொண்டலே!"

என்ற குமரகுருபரர் வாக்கானும் அறியலாம். நாளைக்கும் தமிழ் வேதமாகிய நாலாயிரப் பிரபந்தம் முன்னர் படித்தேக அதனைப் பின்பற்றிப் பெருமாள் செல்ல, அப் பெருமாளைப் பின்பற்றிக் கதறிக்கொண்டு வேதஞ் செல்வதையுங் கண்கூடாகக் காணலாம். மதியும், கதிரும். புயலும் திருப்பரங்குன்றை ‘மகாமேருவோ’ என மயங்கும்படி எனவும், மதியும், கதிரும், புயலும் ஆகாய வீதியில் தாம் செலற்கு வழியின்றித் திருப்பரங் குன்றம் அண்ட முகட்டுக்கு அப்பாலும் ஓங்கி வளர்ந்திருத்தல் கண்டு ‘எவ்வாறு செல்வோம்?’ என மயங்கும் எனவும் பொருள் கொள்ளலாம்.

மாயையில் வல்லவனாகிய திருமால் எளியனாகி ஆயரின் மனைகளிற் புகுந்து தயிருண்டு அவர்களை அண்டராக்கியவன், தமிழ் மாட்டு அன்பு பூண்டு தமிழ்ப்பாவலர் பின்னே சென்றவன். உலகைக் காத்தருளத் துட்டராகிய அரக்கரை அழித்துக் குற்றமற்ற புகழாலோங்கியவன் மருகன் ஆதலினால் தாய் மாமன் குணம் பூண்டிருப்பவனே ஆவன்.

என் மாயாகாரிய மாதர் ஆசையை நீத்து, எளியனாகிய எனக்கு இரங்கி, என் தமிழை ஏற்று இன்புற்று, துட்டவினைகளை அழித்து, முத்தி இன்பளித்துக் காத்தருள்வன் என்பது கருத்தாம்.

---

6. தனத்தனந் தந்ததான
தனத்தனந் தந்ததான
தனத்தனந் தந்ததான—தனதான.

வரைத்தடங் கொங்கையாலும்
வளைப்படுஞ் செங்கையாலு
மதர்த்திடுங் கெண்டையாலும் அனைவோருந்

வடுப்படுந் தொண்டையாலும்
விரைத்திடுங் கொண்டையாலு
மருட்டிடுஞ் சிந்தைமாதர் வசமாகி

எரிப்படும் பஞ்சுபோல
மிகக்கெடுந் தொண்டனேனு
மினற்படுந் தொந்தவாரி கரையேற

இசைத்திடுஞ் சந்தபேத
மொலித்திடுந் தண்டைசூழும்
இணைப்பதம் புண்டரீகம் அருள்வாயே;

சுரர்க்குவஞ் சஞ்செய்சூரன்
இளக்கிரௌஞ் சஞ்சென்றடு
துளக்கெழுந் தண்டகோளம் அளவாகத்

துரத்தியன் றிந்த்ரலோகம்
அழித்தவன் சம்ப்ரதாயம்
சுடப்பிர சண்டவேலை விடுவோனே!

செருக்கெழுந் தும்பர்சேனை
துளக்கவென் றண்டமூடுந்
தொனித்திடுஞ் சங்கபாணி மருகோனே!

தினைப்புனஞ் சென்றுலாவு
குறத்தியின் னன்பராகுந்
திருப்பரங் குன்றமேவு பெருமாளே.!

(இ - ள்.) சுரர்க்கு - தேவர்களுக்கு, வஞ்சம் செய் - வஞ்சனையாகக் (கொடுமையைச்) செய்கின்ற, சூரன் இளக்கிரௌஞ்

சன் தன்னோடு - சூரபதுமன் தம்பியாகிய கிரௌஞ்சன் என்பவனோடு, துளக்க எழுந்து - அசுரர்கள் நடுங்கும்படி எழுந்து, அண்டகோளம் அளவு ஆக - ஆகாய மண்டலம் வரையிலும், துரத்தி அன்று - துரத்திக்கொண்டு சென்ற அந்நாளிலே, இந்த்ர லோகம் அழித்தவன் - தேவேந்திரனின் நாட்டை அழித்தவனாகிய அவ்வசுரனின், சம்பிரதாயம் - வழிவந்த அசுரர்களை, சுட - எரித்திட, பிரசண்ட வேலை - மிகப் பெரிய வலிய வேலாயுதத்தை, விடுவோனே - செலுத்தியவனே!, உம்பர் சேனை - அமரர்களுடைய படையானது, செருக்கு எழுந்து - மகிழ்ச்சி கொண்டு, துளக்க என்று - (சத்துருக்களின் சேனை வெள்ளத்தை) நடுங்கி அஞ்சுமாறு செய்யும் ஊக்கங் கொள்ளும்படி. அண்டம் ஊடு - ஆகாய மண்டலத்துள்ளும் புகுந்தோங்கிச் செல்லுமாறு, தொனித்திடும் - முழக்கஞ் செய்யும், சங்க பாணி - பாஞ்சசன்னியம் என்னும் சங்கத்தைக் கையிலே தரித்திருக்கின்ற மஹாவிஷ்ணுவுக்கு, மருகோனே - மருகனே!, தினை புனம் - தினை விளையுஞ் சாரற் கொல்லையிலே, சென்று உலாவு - போய் உலாவுகின்ற, குறத்தியின் - வள்ளி அம்மையாரின், அன்பர் ஆகும் - காதலர் ஆகவுள்ள, திருப்பரம் குன்றம் - திருப்பரங்குன்றத்தில், மேவும் - வசிக்கும், பெருமாளே - பெருமானே!, வரை - மலைபோன்ற, தடம் கொங்கையாலும் - பெருத்த தனங்களாலும், வளைபடும் - வளையல்களைப் பூண்டுள்ள, செம் கையாலும் - செவ்விய கைகளாலும், மதர்த்திடும் கெண்டையாலும் - செழித்திருக்கும் கயல்மீனை ஒத்த விழிகளாலும், அனைவோரும் - எல்லோரும், வடுப்படும் - வடுவைச் செய்கின்ற, தொண்டையாலும் - கோவைப்பழத்தை நிகர்த்துள்ள உதடுகளாலும், விரைத்திடும் கொண்டையாலும் - நறுமணங் கமழுகின்ற கொண்டையினாலும், மருட்டிடும் - மயக்கச் செய்கின்ற, சிந்தைமாதர் - (வஞ்சனை) எண்ணத்தையுடைய பெண்களின், வசம் ஆகி - அவர் வசப்பட்டு, எரிப்படும் பஞ்சுபோல - அக்கினியிற் பட்ட பஞ்சைப்போன்று;

மிக கெடும் தொண்டனேனும் - மிகவும் கெட்டழிகின்ற அடிய னேனும், இன்னல் படும் தொந்த வாரி - துன்பத்தோடு கூடிய ஆசைக்கடலி லிருந்தும், கரை ஏற - முத்திக்கரை ஏற, இசைத்தி டும் சந்த பேதம் - சிறப்பாகக் கூறப்பெறும் சந்த வேறுபாடுகளை, ஒலித்திடும் - சப்திக்கின்ற, தண்டைசூழும் - தண்டைகளாற் சூழப் பெற்ற, இணை பதம் - இரண்டு திருப்பாதங்களாகிய, புண்டரீகம் - செந்தாமரை மலர்களை, அருள்வாய் - அடியேனுக்குத் தந்தருள் வாயாக, எ - று.

(வி - ரை) வரைத்தடங் கொங்கை - மலைபோலுந் தோற் றத்தையுடைய இடமகன்ற தனம். வரை - இருமடி யாகுபெயர்; வரை கோட்டிற்கு ஆகி, அதனையுடைய மூங்கிலுக்காகி, அது விளையும் மலைக்காயிற்று. வளைப்படுஞ் செங்கை - வளையல் பூண்ட செவ்விய கை. வளை - 'வளையை யுடையது'; 'வளைத்துச் செய்யப்பட்டது' என்பது பொருள். 'செங்கை' : செவ்விய கை: அழகிய கை; உருண்டு திரண்டு நீண்டு செவந்து அழ குறப் பொலிந்து நிற்குங்கை; 'செவந்தகை' என்பாரும் உண்டு. மதர்ப்ப-களிப்பும் ஆம்; மதர்த்தல் - செவ்வரி பரந்து கடை செவ ந்து செழித்திருத்தல், வடுப்படுந் தொண்டை: வடுவைச் செய்யும் என்றும்; பல்லால் பற்குறி வைத்து வடுச் செய்யப் படுத லின்: இனி, 'காளையர் மனத்தை வடுப்படுத்தும்' என்றும், 'இரு பிளவாகப் பிளந்து வடுச் செய்யப்பட்ட கொவ்வைக் கனி போன்ற இதழ்.' எனினும் ஆம். 'கெண்டை' என்றது கெண்டை மீனை ஒத்த வடிவம் பிறழ்ச்சி உடைய கண்ணை. 'தொண்டை' என்றது நிறத்தால் கொவ்வைக் கனியை ஒத்த இதழை. இவை யிரண்டும் உருவகம். விரைத்திடுங் கொண்டை - நறுமணம் வீசும் கொண்டை. கூந்தற்கு நறுமணம் மலர்களாலும் வாசனைத் தைலங் களாலும் அமைந்த தென்க.

ஆடவரை மருட்டுவது கொங்கை, கண், இதழ், குழலாதலினை அவைகளை முறையே கூறினார். சிந்தைமாதர் - 'ஆழமாகிய சிந்தையை உடைய மாதர்', 'பல்வகைப் பட்ட சிந்தையை உடைய மாதர்' என்பனவும் ஆம்.

'எரிப்படும் பஞ்சு' என்றது ஒரு பயனும் பெறாது அழிந்தொழிதலைக் குறித்தது. இனற்படுந் தொந்தவாரி - 'துன்பத்திற்கிடமாகிய ஆசாபாசத்தா லுண்டாகிய பிறவிக்கடல்' என்பது பொருளாம். பிறவிக் கடலிற் பட்டு ஆசாபாசத்தால் இன்னல் அடையாதிருக்க இறைவன் திருவடிக் கமலமாகிய கலனைத் துணைக் கொண்டால் பிறவிக்கடல் கடந்து முத்திக்கரை ஏறுவர் இதனாலன்றோ,

"பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார்
இறைவனடி சேரா தார்."

என்றார் திருக்குறளுடையாரும்.

"சீறும் வினையது பெண்ணுருவாகித் திரண்டுருண்டு
கூறு முலையு மிறைச்சியு மாகிக் கொடுமையினாற்
பீறு மலமு முதிரமுஞ் சாயும் பெருங்குழிவிட்
டேறுங் கரைகண்டி லேனிறை வா! கச்சி ஏகம்பனே!"

என்ற பட்டினத்தார் வாக்கும்,

"மாதர்யம னுமவர்தம் மைவிழியே வன்பாசம்
பீதிதரு மல்குல் பெருநரகம் - ஓதிலதில்
வீழ்ந்தோர்க்கும் ஏற விதியில்லை பேருரைத்
தாழ்ந்தோர்க்கும் இல்லை தவறு."

என்ற திருப்போரூர்ச் சந்நிதிமுறைப் பாட்டும் ஒப்பிடத்தக்கது.

இசைத்திடுஞ் சந்தபேத மொலிந்திடுந் தண்டை சூழும் - 'புகழும் சந்தபேதங்களோடு கூடிய வேதத்தை இசைக்கும் சிலம்பணிந்துள்ள உபயபாதம்' எனப் பொருளுரைப்பினும் ஆம்.

தேவர்க்கு இடுக்கண் செய்சூரரை அழிக்க ஞானசத்தியாகிய வேலைச் செலுத்திய முருகேசா! தேவர் துயர் நீங்கி அயர் நீங்கித் தமக்கு இடுக்கண் செய் அசுரரை வெல்ல உள்ளக் கிலி நீங்க, சங்க ஒலி செய் திருமால் மருகா! இச்சா சத்தியாகிய குறமான் கணவா! மாயா சம்பந்தத்தால் துன்பேதரும் அவாவால் வந்திடும் இந்தப் பிறவிக் கடலைத் தாண்டி முத்திக்கரை ஏற நின் திருமலர்த் தாளிணைத் தந்தருள் என்றது நுட்பம்.

சங்க ஒலியாற் கிலி போக்கியாண்ட மாயன் மருமகன் நீயும் வேலாற் சூரர் கோலாகலம் அடக்கி அமரரைக் காத்தவன் உலகிற்கா இச்சா சத்தியாகிய வள்ளியாரை மணந்த ஆறுமுகன், ஆகையால்; என் துயர் போக்கி இன்பருளால் உனக்கொரு பாரமன்று இலேசா என்பது உள்ளக்கிடை.

---

7. தனனதந்த தத்தத்த தந்த
தனனனதந்த தத்தத்த தந்த
தனனதந்த தத்தத்த தந்த தனதான.

கருவடைந்து பத்துற்ற திங்கள்
வயிறிருந்து முற்றிப் பயின்று
கடையில்வந்து தித்துக்கு ழந்தை வடிவாகி

கழுவியங்கெ டுத்துச் சுரந்த
முலையருந்து விக்கக் கிடந்து
கதறியங்கை கொட்டித் தவழ்ந்து நடமாடி

அரைவடங்கள் கட்டிச்ச தங்கை
யிடுகுதம்பை பொற்சுட்டி தண்டை
யவையணிந்து முற்றிக்கி ளர்ந்து வயதேறி

அரியபெண்கள் நட்பைப்பு ணர்ந்து
பிணியுழன்று சுற்றித்தி ரிந்த
தமையமுன்க்ரு பைச்சித்த மென்று பெறுவேனோ;

இரவிஇந்த்ரன் வெற்றிக்கு ரங்கின்
அரசரென்று மொப்பற்ற வுந்தி
யிறைவனெண்கி னக்கர்த்த னென்றும் நெடுநீலன்

எரியதென்றும் ருத்ரற்சி றந்த
அநுமனென்றும் ஒப்பற்ற அண்டர்
எவருமிந்த வர்க்கத்தில் வந்து புனமேவ

அரியதன்ப டைக்கர்த்த ரென்று
அசுரர்தங்கி ளைக்கட்டை வென்ற
அரிமுகுந்தன் மெய்ச்சுற்ற பண்பின் மருகோனே

அயனையும்பு டைத்துச்சி னந்து
உலகமும்ப டைத்துப் பரிந்துள்
அருள்பரங்கி ரிக்குட்சி றந்த பெருமாளே!

(இ - ள்.) இரவி இந்திரன் - சூரியனும் இந்திரனும், வெற்றி குரங்கின் - வெற்றியோடு கூடிய குரங்குகளுக்கு, அரசர் என்றும் - அரசர்களாகிய சுக்கிரீவன் வாலியென்றும், ஒப்பு அற்ற - உவமை யில்லாத, உந்தி இறைவன் - விண்டுவின் உந்தியினின்றும் பிறந்த வேதன், எண்கு இனம் கர்த்தன் என்றும் - கரடியின் கூட்டங்

களுக்குத் தலைவன் ஆகிய சாம்பவன் என்றும், எரி அது - அக்கினி பகவான், நெடு நீலன் என்றும் - புகழ் மிகுந்த நீலன் என்னும் சேனைத்தலைவன் என்றும், உருத்திரன் - உருத்திரக் கடவுள், சிறந்த அநுமன் என்றும் - மேன்மை வாய்ந்த அநுமான் என்றும், ஒப்பற்ற அண்டர் எவரும் - இணை கூறுதற்கரிய தேவர்கள் எல்லோரும், இந்த வர்க்கத்தில் வந்து - இந்த வானரக் கூட்டத்திலே தோன்றி, புனம் மேவ - புவியில் அடைய, அரியதன்படை - அவர்களைத் தனது மிகச் சிறந்த சேனைகளுக்கு, கர்த்தர் என்று - படைத் தலைவர்களாகக் கொண்டு, அசுரர்தம் - அரக்கர்களுடைய, கிளை கட்டை வென்ற - சுற்றத்தார்களின் கூட்டத்தைக் கொன்று அழித்து வென்ற, அரிமுகுந்தன் - மஹாவிஷ்ணுவின், மெச்சுற்ற - புகழ்ந்து கொண்டாடப் பெறும், பண்பின் - சிறப்பினைக் கொண்டுள்ள, மருகோனே - மருகனே!, அயனையும் - பிரமனையும், புடைத்து - தலையிற் குட்டி, சினந்து - கோபித்து, உலகமும் படைத்து - உலகத்தையும் உண்டாக்கி, பரிந்து - அதனை ஆதரவோடு காத்து. அருள் பரங்கிரிக்குள் - அருள் மிகுந்த திருப்பரங்கிரி என்னும் திருத்தலத்தில், சிறந்த - சிறப்போடு எழுந்தருளி இருக்கும், பெருமாளே - பெருமானே!, கரு அடைந்து - தாயாரின் கருப்பத்திற் பொருந்தி, பத்து உற்ற திங்கள் - பத்துமாதம் அளவும், வயிறு இருந்து - தாயாரின் வயிற்றில் தங்கி யிருந்து, முற்றி பயின்று - அங்கேயே முதிர்ந்து வளர்ந்து, கடையில் வந்து உதித்து - (பத்து மாதமும் முடிந்தபின்) கடைசியாகத் தாயார் வயிற்றினின்றும் வெளிப்பட்டுப் பிறந்து, குழந்தை வடிவு ஆகி - குழந்தை உருவத்தைப் பெற்று, கழுவி அங்கு எடுத்து - அந்தக் குழந்தை உருவத்தைக் கழுவி அங்கேயே கையில் தாங்கி, சுரந்த முலை - பாலானது சுரந்துகொண்டிருக்குந் தனங்களை, அருந்துவிக்க - ஊட்டுவிக்க, கிடந்து - பூமியிலே படுத்துக் கிடந்து, கதறி - வாய்விட்டுக் கதறி அழுது, அங்கை கொட்டி - உள்ளங்கையால்

தட்டி, தவழ்ந்து நடமாடி - தவழ்ந்து தவழ்ந்து நடந்து, அரை
வடங்கள் - இடுப்பிற் கட்டும் கயிறுகளை, கட்டி - கட்டிக்கொண்டு,
சதங்கை இடு குதம்பை - சதங்கைகளோடு இன்னும் இடக் கூடிய
தாகிய குதம்பைகளும், பொன் சுட்டி - பொன்னாற் செய்த சுட்டி
யும், தண்டை அவை அணிந்து - தண்டை முதலியவைகளையும்
பூண்டு, முற்றி இளர்ந்து - முதிர்ந்து மேலாக வளர்ந்து, வயது
ஏறி - வாலிப வயதைப் பெற்று, அரிய பெண்கள் - விட்டு நீங்கு
தற்கு அருமையாகிய மாதர்களுடைய, நட்பை புணர்ந்து - நேயத்
திலே கூடி, பிணி உழன்று - காதல் நோயினால் வருந்தி, சுற்றித்
திரிந்தது - மனம் ஒருநிலை நில்லாது சுழன்று திரிந்தது, அமையும்-
அடியேனுக்கு இனி போதும்: உன் கிருபைச் சித்தம் - (முருகக்
கடவுளே!) தேவரீருடைய திரு உள்ளக் கருணையினை, என்று
பெறுவேனோ - அடியேன் எந்நாளிற் கிடைக்கப் பெறுவேனோ,
(அறியேன்), எ - று.

(வி - ரை.) முற்றிப் பயின்று - வளர்ந்து பழகி தாய் வயிற்றி
லிருந்தே இன்ப துன்பங்களை அனுபவிக்கப் பழகி; 'முதிர்ந்து வசி
த்து' என்னலும் ஆம். 'கழுவியங்கெடுத்து': குழந்தை தரையில்
விழுந்ததும் நீரிட்டுக் கழுவியே பிறர் கையிற் கொடுப்பர் மருத்து
வச்சிகள், நீரிட்டுக் கழுவுவது சுத்தத்திற்கு மாத்திரமன்று; குழந்
தையின் சுவாசத்தையும் சுகத்தையும் உத்தேசித்தே. 'சுரந்த முலை':
குழந்தை பிறந்ததும் தாய்க்குப் பால் சுரத்தல் கடவுளின் திரு
வருட் செயல்; இது உலக இயற்கை.

தாய் வயிற்றுக் கருப்பாசயத்தில் வந்ததுமுதல் இவ்வுலகை
விட்டு நீங்கும்வரை துன்பு தருவது ஆதலின், இப் பிறவித் துன்பி
னின்று நீங்கி முத்தி இன்ப அடைதற்கு உன் கிருபைச் சித்தம் எப்
பொழுது பெறுவேனோ? என்றார். இதனை,

"கருப்பையிற் பல்நாள் கட்டிக் கிடந்து
நெருப்பில் வெந்து நீரில் நனைந்து
தாய்படு துயரெலாந் தானும் பெற்று
நோய்படு மண்டம் நுவலப் பயின்று
காற்று மொத்தக் கால்சிறு வழியால்
ஆற்ற அரிய அல்லலின் வந்து
குழவி பாலன் குமரன் விருத்தனென்
பழகுறு பருவப் படரெலாம் பட்டே
ஏமன் கைக்கே இரையாம் எற்குச்
சேமநின் கழலிணை சீரிதி னருளி
உய்வித் திடுவது முண்டோ
மெய்ப்பொருள் பரற்கருள் மேதகு நகனே."

என்னப் பின்னர் வந்த பெரியார் ஒருவர் பாடிய பாட்டானும் அறியலாம்.

தேவர்களெல்லாம் வானரத் தலைவர்களாகத் திருமால் தசரத புத்திரராகி வந்து இராவணனை வென்றார் என்பது இராமாயணக் கதை. இதனை,

"வானுளோ ரனைவரும் வானரங்க ளாகக்
கானினும் வரையினுங் கடித டத்தினும்
சேனையோ டவதரித் திடுமின் என்னவே
ஆனன மலர்ந்தனன் அருளின் ஆழியான்."

"மசரத முனையவர் வரமும் வாழ்வுமோர்
நிசரத கணைகளால் நீறுசெய்யயாம்
கசரத மாக்கடல் சூழுங் காவலன்
தசரதன் மதலையா வருதுந் தாரணி."

என்ற கம்பர் கவிகளாலும் அறியலாம்.

'அரிமுகுந்தன்': இருபெயரொட்டு; அரி - 'அடியவர் பாவங்களை அழிப்பவன்' என்பது பொருள்; முகுந்தன் - 'முத்திப் பதந் தருவோன்' என்பது பொருள். 'அயனையும்' என்றதில் உள்ள உம்மை உயர்வு சிறப்பு உம்மை.

படைத்தற் கடவுளைத் தண்டிக்கும் ஆற்றலோடு அத் தொழில் தடைபடாதபடிப் படைத்தற் றொழிலையுஞ் செய்த கருணையுடையோனாதலின், "பிறவி போதும்; பிறவாப் பேறாகிய முத்திப்பேறு எப்போது தந்தருள்வாய்" என்று வினவினார். என்றுங் கிருபையே செய்பவன் ஆதலின் 'கிருபைச் சித்தம்' என்றார்.

'என்று பெறுவேனோ' என்றதால் நின் கருணையாற் சீக்கிரம் பெறமாட்டேனோ என்பது பெற்றாம்.

---

8. தந்தனந் தந்ததன
தந்தனந் தந்ததன
தந்தனந் தந்ததன தனதான.

மன்றலங் கொந்துமிசை
தெந்தனந் தெந்ததென
வண்டினங் கண்டுதொடர் குழல்மாதர்

மண்டிடுந் தொண்டையமு
துண்டுகொண் டன்புமிக
வம்பிடுங் கும்பகன தனமார்பில்

ஒன்றஅம் பொன்றுவிழி
கன்றஅங் கங்குழைய
உந்தியென் கின்றமடு விழுவேனை

உன்சிலம் புங்கனக
　　தண்டையும் கிண்கிணியும்
　　ஒண்கடம் பும்புனைவும் 　　　　அடிசேராய்;

பன்றியங் கொம்புகம
　　டம்புயங் கஞ்சுரர்கள்
　　பண்டையென் பங்கமணி 　　　　பவர்சேயே!

பஞ்சரங் கொஞ்சுகிளி
　　வந்துவந் தைந்துகர
　　பண்டிதன் தம்பியெனும் 　　　　வயலூரா!

சென்றுமுன் குன்றவர்கள்
　　தந்தபெண் கொண்டுவளர்
　　செண்பகம் பைம்பொன்மலர் 　　　　செறிசோலை

திங்களுஞ் செங்கதிரு
　　மங்குலுந் தங்குமுயர்
　　தென்பரங் குன்றிலுறை 　　　　பெருமானே!

(இ - ள்.) பன்றி - பன்றியினது, அம் - அழகிய, கொம்பு - பல்லையும், கமடம் - ஆமை ஓட்டையும், புயங்கம் - சர்ப்பத்தையும், சுரர்கள் - தேவர்களின், பண்டை என்பு - பழமை பட்டதாகிய எலும்புகளையும், அங்கம் அணிபவர் - தன்னுடைய திருமேனியில் அணிந்து கொள்பவராகிய சிவபெருமானுக்கு, சேயே - திருப் புத்திரனே!, பஞ்சரம் - கூட்டில், கொஞ்சு கிளி - கொஞ்சிப் பேசுகின்ற கிளிகள், வந்து வந்து - பல்காலும் வந்து, ஐந்து கர பண்டிதன் - ஐந்து கைகளையுடைய விநாயகக் கடவுளின், தம்பி என்னும் - தம்பி என்னும் முறையால் அழைக்கப்பெறும், வய

லூரா - வயலூர் என்னும் அழகிய திருத்தலத்தை யுடையவனே!, சென்று - தினைவிளையும் புனத்திற்குப்போய், முன் குன்றவர்கள் - முற்பட்ட குறிஞ்சி நிலத்தவராகிய குறவர்கள், தந்த பெண்-(தவத்தாற் பெற்றுக்) கொடுத்த வள்ளி யம்மையாராகிய பெண்ணை, கொண்டு - மனைவியாகும்படி கல்யாணஞ் செய்துகொண்டு, வளர் - உயர்ந்து வளர்கின்ற, செண்பகம் - சண்பக மரங்களில், பைம்பொன் - பசுமையாகிய பொன்போல் மலர்கள் மலரும்படியான, செறிசோலை - சண்பக மலர்கள் அடர்ந்த சோலையோடு விளங்குவதும், திங்களும் - சந்திரனும், செங்கதிரும் - சூரியனும், மங்குலும் - மேகமும், தங்கும் - தங்குகின்ற, உயர் - உயர்ந்த, தென்பரங்குன்றில் - தென்பாண்டி நாட்டிலுள்ள திருப்பரங்குன்றம் என்னும் திருத்தலத்தில், உறை பெருமாளே - வீற்றிருக்கின்ற பெருமாளே!, மன்றல் - வாசனையையுடைய, அம் கொந்துமிசை - அழகிய பூக்கொத்தின் மேலே, தெந்தனத் தெந்தனதென - தெந்தனத் தெந்தனதென என்னும் இசையோடு, வண்டு இனம் - மதுகரங்களின் கூட்டங்கள், கண்டு தொடர் - தேனின் மணத்தைக் கண்டு தொடர்கின்ற, குழல் மாதர் - கேசத்தையுடைய பெண்களின், மண்டிடும் - நெருங்கியுள்ள, தொண்டை அமுது உண்டு - கோவைக் கனிபோலும் இதழ் அமிர்தத்தை உண்டு, அன்பு மிக - காதல் பரவ, வம்பு இடும் - இரவிக்கையை அணிந்துள்ள, கும்பம் - யானைத் தலையை ஒத்த, கனதன மார்பில் - பாரமாகிய கொங்கைகளைச் சுமந்தொளிரும் மார்பிலே, ஒன்ற - படியவும், அம்பு ஒன்று விழி - கணையை ஒத்த கண்கள், கன்ற - சோர, அங்கம் குழைய - உடல் உருக, உந்தி என்கிற மடு விழுவேனை - உந்தியாகிய மடுவில் விழுகின்றவனாகிய அடியேனை, உன் - தேவரீருடைய, சிலம்பும் - பாதச் சிலம்புகளையும், கனக தண்டையும் - பொன்னாற் செய்துள்ள தண்டைகளையும், கிண்கிணி - கிண்கிணி என்கிற ஆபரணத்தையும், ஒள் கடம்பும் - பிரகாசத்தோடு விளங்கும் கடப்ப

மாலையும், புனையும் - அழகுற அணிந்து கொள்ளும், உன் அடி சேராய்-கந்தக்கடவுளே! உமது அழகிய பாதங்களிற் சேர்த்தருள் செய்வாயாக! எ - று.

(வி - ரை) மன்றல் அம் கொந்து - வாசனையையும் அழகையும் கொண்டுள்ள பூங்கொத்து, 'கொத்து' என்பது 'கொந்து' என்றானது மெலித்தல் விகாரம்; இது சந்த நோக்கி வந்தது 'அம்' சாரியை என ஒதுக்குவாரும் உண்டு. வண்டினம் - வண்டின் வகை' எனினும் ஆம். கும்ப கனதன மார்பு - 'யானை மத்தகத்தை ஒத்த பருத்த தனத்தை யுடைய மார்பு; குடத்தை ஒத்த கொங்கை' என்பாரும் உண்டு. உந்தி என்கின்ற மடு - 'தேர்த்தட்டை ஒத்த அல்குற்றடம்' என்பாரும் உண்டு.

நாராயணன் வராகாவதாரத்தில் செருக்குண்டிருந்ததாகவும், அவர் செருக்கை யடக்கி அவர் பல்லாகிய கொம்பைப் பிடுங்கி மார்பில் அணிந்துகொண்டதாகவும் கூறும் புராணம்.

அவ்வாறே நாராயணன் கூர்மாவதாரத்தில் செருக்குற்ற காலத்து அவரைக் கொன்று அவர் ஓட்டைத் தான் ஈறிலான் என்பதை ஆன்மாக்கள் அறிந்து உய்தற்பொருட்டு அணிந்து கொண்டார் என்பதுவும் புராணக் கதை,

'சுரர்கள் பண்டை என்பு' என்றது பிரம்ம விஷ்ணுக்களின் என்புகளை. இவ் எலும்புகளை அரன் அணிவதும், தன் ஈறில்லாமையை ஆன்மாக்கள் அறிந்து தன்னை வந்து அடையவேண்டும் என்னுங் கருணையினாலேயாம். இதனை,

"கண்டவிடம் நித்தியத்தைக் காட்டவுங்கங் காளமுதல்
அண்டவிடம் வைத்தனையே அம்புயஞ்செய் குற்றமெவன்."

என்ற வாட்போக்கிக் கலம்பகத்தாலும் அறியலாம்.

விநாயகர்: ஔவை முதலியவர்களின் செந்தமிழ்ப் பாக்களைக் கேட்டு அருள்செய்பவர் ஆதலினாலும், ஒவ்வொருவர் நூலிலும் முதலிற் பாடப் பெறும் பாடல் சான்றவர் ஆதலினாலும் 'ஐந்துகர பண்டிதன்' என விநாயகரைக் கூறினமை காண்க.

உந்தித்தடத்து வீழ்ந்து முழுகி அழிவேற்கு நின் திருவடிகளாகிய புணை தந்து முத்திக் கரை சேர்த்தருள் என்றதாம்

---

## திருச்செந்தில்

9. தனன தானன தந்தன தந்தன
தனன தானன தந்தன தந்தன
தனன தானன தந்தன தந்தன தனதான

கமல மாதுடன் இந்திரை யுஞ்சரி
சொலவொணாதமட டந்தையர் சந்தன
களப சீதள கொங்கையில் அங்கையில் இருபோதேய்

களவு நூலதெரி வஞ்சனை யஞ்சன
விழியில் மோகித கந்தசு கந்தரு
கரிய வோதியில் இந்துமு கந்தனில் மருளாதே

அமல மாகிய சிந்தைய டைந்தகல்
தொலைவி லாதஅ றம்பொரு ளின்பமும்
அடைய வோதியு ணர்ந்து தணந்தபின் அருள்தானே

அறியு மாறுபெ றும்படி யன்பினின்
இனிய நாதசி லம்பு புலம்பிடும்
அருண ஆடக கிண்கிணி தங்கிய அடிதாராய்;

குமரி காளிப யங்கரி சங்கரி
கவுரி நீலிப ரம்பரை யம்பிகை
குடிலை மோகினி சண்டினி குண்டலி எமதாயி

குறைவி லாளுமை மந்தரி யந்தரி
வெகுவி தாகம சுந்தரி தந்தருள்
குமர மூஷிக முந்திய ஐங்கர கணராயன்

மமவி நாயகன் நஞ்சுமிழ் கஞ்சுகி
யணிக சானன விம்பனி ரம்புலி
மவுலி யானுறு சிந்தையு கந்தருள் இளையோனே!

வளரும் வாழையு மஞ்சளும் இஞ்சியும்
இடைவி டாதுநெ ருங்கிய மங்கல
மகிமை மாநகர் செந்திலில் வந்துறை பெருமாளே!

(இ - ள்.) குமரி - கெடாததாகிய கன்னிப் பருவத்தை உடையவளும், காளி - கருப்புநிற முடைமையாற் காளி என்னுந் திருநாமத்தை உடையவளும், பயங்கரி - பாவிகளுக்கு அச்சத்தைத் தருகின்றவளும், சங்கரி - சர்வ ஆன்ம கோடிகளுக்கும் இன்பத்தைச் செய்தருள்பவளும், கவுரி - பச்சை நிறத்தாற் கவுரி என்னுந் திருநாமம் பூண்டிருப்பவளும், நீலி - நீல நிறத்தோடு விளங்கி துர்க்கை எனப் பெயர் பூண்டிருப்பவளும், பரம்பரை - தனக்கு மேல் உயர்வின்றித் தானேயாய் உயர்ந் திருப்பவளும், அம்பிகை - சர்வ உலகங்களுக்கும் தாயாய் விளங்குபவளும், குடிலை - மூல மந்திரமாகிய குண்டலி சத்தியாய் விளங்குபவளும், மோகினி - மாயாரூபியும், சண்டினி - சண்டன் என்பவனை வதைத்தவளும், எமது ஆயி - கடைப்பட்ட எம்மனோர்க்கும் அன்னையாய் இருப்பவளும், குறைவு இலாள் -

எந்தவிதமான குறைவும் இல்லாது பரிபூரணமாக நிற்பவ ளும், உமை - உமாதேவி என்னும் திருநாமம் பூண்டுள்ளவ ளும், மந்திரி - மந்திர ரூபமாக விளங்குபவளும், அந்தரி - ஆகாயத்தில் வசிப்பவளும், வெகுவித ஆகம சுந்தரி - பற்பல வகைப் பட்டதாகிய ஆகமங்களிலேயும் புகழ்ந்து கூறப்பெறும் அழகை யுடையவளுமாகிய பார்வதா தேவி, தந்து அருள் - பெற்றருளிய, குமர - அழகிய புத்திரனே!, மூஷிகம் - பெருச் சாளியை, உந்திய - வாகனமாக ஏறிச் செலுத்திய, ஐங்கரம் - ஐந்து கைகளைக் கொண்டுள்ள, கணராயன் - கணாதிபதியும், மம விநாயகன் - நம்முடைய விநாயகக் கடவுளும், கஜானன விம்பன் - அழகிய களிற்றின் முகத்தை உடையவரும் ஆன கணேசப் பெரு மானுக்கும், நஞ்சு உமிழ் கஞ்சுகி அணி - விடத்தைக் கக்குகின்ற சர்ப்பத்தை அணிந்தருள் பவனுமாகிய, ஓர் அம்புலி மவுலியான் - சந்திரனைச் சூடியுள்ள ஜடா பாரத்தையுடைய சிவபெருமானும், உறு சிந்தை உகந்து அருள் - மேலான தம்முடைய உள்ளத்தில் விரும்பியருளிய, இளையோனே - முருகக்கடவுளே!, வளரும் வாழையும் - வளரும் இயல்புடையதாகிய வாழை மரமும், மஞ்ச ளும் - மஞ்சட் செடியும், இஞ்சி - இஞ்சிச் செடியும், இடைவிடாது நெருங்கிய - சிறிதும் வெற்றிடம் விடாது நெருங்கி விளைந்துள்ள, மங்கலம் - அழகிய விளக்கம் பெற்ற, மகிமை - பெருமையை யுடைய, மா நகர் - லட்சுமீகரம் பெற்ற சிறந்த நகரமாகிய, செந்தி லில் - திருச்செந்தூரில், வந்து உறை - வந்து வீற்றிருந்தருளும், பெருமாளே - முருகப் பெருமானே!. கமல மாதுடன் - செந்தா மரை மலரில் வசிக்கும் திருமகளோடு, இந்திரையும் - இந்திராணி யும், சரி சொல ஒணு - ஒப்புச் சொல்ல முடியாத, மடந்தையர் - பெண்காது, சந்தனம் களபம் - சந்தனத்தையும் கலவைச் சாந் தையும் பூசியுள்ள, சீதள கொங்கையில் - குளிர்ச்சியாகிய தனங்களி னுமேலே, அம் கையில் - அழகிய கைகளினுமேலே, இரு போது எய் -

இரண்டு நீலோற் பலங்களை ஒத்த, களவு நூல் தெரி - காமக் கலை வைப்பற்றிச் சொல்லும் சாத்திரத்தைத் தெரிந்த, வஞ்சனை - கபடம் பொலியும், அஞ்சன விழியில் - மைதீட்டிய கண்களினாலே, மோகித - காம மயக்கத்தைத் தரும்படியான, கந்த சுகம் தரு - நறுமணம் வீசி இன்பந்தருவ தாகிய, கரிய ஓதியில் - கருமை நிறம் பொருந்திய குழலினாலே, இந்து முகந்தனில் - சந்திரனை நிகரான முகத்தினாலே, மருளாது - மயங்காதபடி, அமலம் ஆகிய - பரிசுத்த மான, சிந்தை அடைந்து - மனத்தைப் பெற்று, அகல் - விரிந்த, தொலைவுஇலாத - அழிவு இல்லாத, அறம் பொருள் இன்பமும் - அறத்தையும் பொருளையும் இன்பத்தையும், அடைய - பெருதற்கு ஓதி உணர்ந்து-படித்துச் கற்றுத் தேர்ந்து அறிந்து, தணந்த பின் - கற்பன முற்றுப் பெற்றமையால் இனிக் (கற்பன இன்றி கற்றலி னின்றும்) நீங்கிய பிற்பாடு; அருள் - திருவருளை, அறியும் ஆறு - அறியும்படியான ஞான வழியை, பெறும்படி - அடியேன் அடையும் படி, அன்பினின் - அன்பினாலே, இனிய நாத - இன்புறச் செய்யும் ஓசையைக் கொண்டுள்ள, சிலம்பு புலம்பிடும் - சிலம்பணிகள் சப் திக்கும் படியாகிய, அருண ஆடக - செம்பொன்னாலாகிய, கிண் கிணி தங்கிய - கிண்கிணி பொருந்தியுள்ள, அடி தாராய் - முருகக் கடவுளே! தேவரீரது திருவடி மலர்களை அருள் செய்வீராக, எ-று.

(வி - ரை) அழகாலும் இன்பந்தரு விதத்தாலுஞ் சிறந்த மங் கையர் என்பது குறிக்க, 'கமல மாதுடன் இந்திரை யுஞ்சரி சொல ஒணு' என்றார். காம வெப்பத்தைத் தணித்து குளிர்ச்சி தருதலின், 'சீதள கொங்கை' என்றார். கரிய ஓதி - 'இருண்ட குழற்காடு' என்பதாம். அறம் பொருள் இன்பம், பெற்றார்க்கு வீடு சித்தித்தல் சாதக மாதலின், 'அறம் பொரு ளின்பமும் அடைய ஓதி' என்றார். வீடு குருமுகமாகப் பெறவேண்டலினாலும், ஞானமே வீடு தருவ தாதலினாலும், 'அருள் தானே அறியுமாறு பெறும்படி' என்றார்;

அதுவும் அரன் அருளாற் பெறவேண்டி யிருத்தலின் நின், 'அடி தாராய்' என்றார்.

"அவனருளாலே அவன்றாள்வணங்கி"

என்றதும் ஈண்டு கருதற்பாலது; "திருவடி பெறுதலே வீடு பேறாதலின் 'அடிதாராய்' என்றார்" என்பர். அருணம் - செவப்பு, ஆடகம் - உயர்ஜாதிப் பொன்; ஆடகம், கிளிச்சிறை, ஜம்பூநதம் முதலிய பொன்களின் வகை. 'குமரிகாளி........ஆகம சுந்தரி' அம்பிகையாரின் பிரபாவம். 'உமை' சிறுபிராயத்தில் தவஞ்செய்யச் சென்ற மகளை மலையரையன் "நின் இளமைப் பருவத்திற்கு இது பாரம் ஆகையால் வேண்டாம் அம்மா" என்று பொருள்பட "உ+மா" என்றமையால் அம்மையார்க்கு 'உமை' என்னும் திருநாமம் வந்தது.

மோகினி - மாயா ரூபியும் இறைவனையும் மயக்குபவள் ஆதலின் 'மோகினி' என்றார். சண்டினி - 'சண்டன் என்பவனை வதைத்தவள்' என்பது பொருள், மந்திரி - 'இனிய மந்த சாந்த குரலை உடையவள்' எனப் பொருள் உரைத்தலும் ஆம். ஆகம சுந்தரி - ஆகம வடிவையும், சுந்தர வடிவையும் உடையவள்' எனப் பொருள் கோடலும் உண்டு. விநாயகரைத் தேவி பெற்றதனால் 'சுந்தரி தந்தருள்' என்றார். முருகப் பிரான் உமையாரின் நோக்கால் சிவபெருமான் நுதல்விழி வந்தவராதலின் 'இறைவர் சேய்' என்பர். இளையான் - என்றும் முதிராத இளமைத் திருக்கோலம் உடையவர். செல்வம் மிகுந்து மங்கலப் பெருமையுடையதாதலின் 'மங்கல மகிமை மாநகர்' என்றார்.

வாழை, இஞ்சி, மஞ்சள் இடைவிடாது வளரும் என்றதால் நிலவளங் கூறியதாயிற்று. சிவன் அணியும் பாம்பு, தலை முதலியன கணேசர்க்கும் உண்டாதலின் 'நஞ்சுமிழ் கஞ்

முழுமதிபு ரிந்த சிந்துர
அரிவைய ருடன்க லந்திடும்
அறிவிலன்ற லம்பி றந்திட அருள்வாயே;

எரிவிடநி மிர்ந்த குஞ்சியின்
நிலவொடுமெ ழுந்த கங்கையும்
இதழியொட ணிந்த சங்கரர் களிகூரும்

இமவரைத ருங்க ருங்குயில்
மரகதநி றந்த ருங்கிளி
யெனதுயிரெ னுந்த்ரி யம்பிகை பெருவாழ்வே!

அரைவடம லம்பு கிண்கிணி
பரிபுரமெ ருங்கு தண்டைகள்
அணிமணிச தங்கை கொஞ்சிட மயில்மீதே

அகமகிழ்வு கொண்டு சந்ததம்
வருகுமர! முன்றி லின்புறம்
அலைபொருத செந்தில் தங்கிய பெருமாளே!

(இ - ள்.) எரி விட - நெருப்பைப்போல் பிரகாசித்திட, நிமிர்ந்த குஞ்சியின் - ஓங்கி வளர்ந்திருக்கின்ற ஜடையில், நிலவொடும் - மூன்றாம்பிறைச் சந்திரனுடனே, எழும் - ஆரவாரத்துடன் வந்த, கங்கையும் - கங்காநதியையும், இதழியொடு அணிந்த சங்கரர் - கொன்றை மாலையுடனே அணிந்துகொண்டிருக்கின்ற சிவபெருமான், களிகூரும் - மகிழ்ச்சியை மிகக் கொள்ளும், இமவரை தரும் கரும் குயில் - இமோற்பருவத அரசன் மகளாகப் பெற்ற கரிய குயிலைப் போன்றவரும், மரகத நிறம் தரும் கிளி - பசுமை நிறத்தை உடைய கிள்ளையைப் போன்றவரும், எனது

உயிர் எனும் திரியம்பிகை - எனது உயிரே என்று கூறப்படும் முக் கண்களை உடையவளுமாகிய உமாதேவியாரது, பெரு வாழ்வே - பெரிய வாழ்வை ஒத்த திருப்புத்திரனே!, அரைவடம் - இடையில் அணியும் மாலையும், அலம்பு கிண்கிணி - சப்தத்தைச் செய்கின்ற கிண்கிணி மணியும், பரிபுரம் - சிலம்பும், நெருங்கு தண்டைகள் - நெருங்கியுள்ள தண்டைகளும், அணிமணிசதங்கை - அழகிய மணி களால் ஆகிய சதங்கையும், கொஞ்சிட - பேசுகின்றபடி, மயில்மீது - மயிலின்மேல், அகம் மகிழ்வு கொண்டு - உள்ளக் களிப்போடு, சந்ததம் - எப்பொழுதும், வருகுமர - வருகின்ற குமரக்கடவுளே!, முன்றிலின் புறம் - திரு ஆலயத்தின் முன் வாயிலிலே, அலை பொருத - அலைகள் மோதுகின்ற, செந்தில் தங்கிய - திருச் செந் தூர் என்னும் அழகிய பதியில் வீற்றிருந் தருளுகின்ற, பெரு மாளே - பெருமானே!, இரு குழை - காதணிகளாகிய இரண்டு குண்டலங்களையும், எறிந்த கெண்டைகள் - தாக்கி மோதும் கெண்டை மீன்போலும் கண்கள், ஒரு குமிழ் அடர்ந்து வந்திட - ஒப்பற்ற குமிழமலரை ஒத்த நாசியை நெருங்கி வரவும், இணைசிலை - இரண்டு வில்லையொத்த புருவங்களும், நெரிந்து எழுந்திட - நெரிப் புக் கொண்டு உயர்ந்து தோன்றவும், அணைமீது - பஞ்சணையின் மேலே, இருள் அளகபந்தி - கருத்த இருளை ஒத்த கூந்தலின் வரிசை, வஞ்சியின் - வஞ்சிக் கொடியைப் போன்ற அரையிலே, இருகலையுடன் - தரித்திருக்கும் பெரிய ஆடையுடனே, குலைந்திட - அவிழ்ந்து சோரவும், இதழ் அமுது - அதரபானத்தை, அருந்து சிங்குவின் - பருகி ருசிக்கின்ற நாக்கினால், மனம் மாய - நெஞ்சு அவசமாகவும், முருகொடு - வாசனையோடு, கலந்த சந்தனம் - சேர்த்த சந்தனக்குழம்பும், அளறுபடு - சேறாகவுள்ள, குங்குமம் கமழ் - குங்குமம் பரிமளிக்கின்ற, முலை முகடு கொண்டு - தனங் களின் உச்சியைப்பற்றி, எழும்தொறும் - எழும்போதெல்லாம்,

முருகு ஆர - நறுமணத்தை நுகருமாறு, முழு மதி - உவாமதியை ஒத்த அழகிய முகத்திலே, சிந்துரம் புரிந்த - (நல்ல மணமிகு) சிந் தூரத் திலகத்தை விரும்பி அணிந்துள்ள, அரிவையருடன் - மாதர் களுடன், கலந்திடும் - கூடி வாழும், அறிவிலன் - மூடனாகிய அடி யேனுக்கு, நலம் பிறந்திட - ஞான நன்மை உண்டாகும்படி, அருள் வாய் - திரு அருளைச் செய்வாயாக, எ - று.

(வி - ரை.) குழை - காதணி, காதளவு நீண்டு பரந்த கண் ணார் ஆதலின் 'இருகுழை யெறிந்த கெண்டைகள்' என்றார். இதனை,

"கெண்டைவிழி"

"நுத்தக்குத் தச்சலித்துக் கொப்புக்கட் டித்தாளப்
பத்திப்பொற் றேடணிந்த பைங்குழையாள்"

என்ற சித்திர மடலாலும் அறியலாம்.

"காதள வோடிய கலகக் கண்ணார்"

என்றார் பிறரும். நாசி குமிழமலரை ஒத்திருத்தலின் 'ஒரு குமி ழடர்ந்து வந்திட' என்றார்.

இணை சிலை - இரட்டைவில் போலும் புருவங்கள்; சிலைபோ லிருத்தலின் புருவத்தைச் 'சிலை' என்றார்; இது உருவகம். இதழமு தருந்து சிங்கி - அதரபானம் செய்யும் நாக்கு. 'சிங்குவை' என் றது 'சிங்கினை' என மருவி நின்றது. மாதரின் இதழமுது காளைய ரால் விரும்பப் பெறுவ தொன்றாம் என்பது.

"பருகோட்ட நறைவேட்டுப் பைங்கோட்டுத்
தினைப்புனத்திற் பரண்மேற்கொண்ட
குருகோட்டும் பெடைமணந்த குமரகோட்
டத்தடிகள் குலத்தாள் போற்றி."

என்ற காஞ்சிப் புராண அடிகளா லறியலாம். மூலை முகடு - 'மூலை யாகிய உச்சி' என்றும் பொருள் கூறுவர். 'அரிவை': பருவப் பெயர் அதனை உடைய பெண்களுக் காயிற்று.

'அருந்தினைப் போதே அவரின்பம்,'

என்றதையும்,

"சின்னீரவின்பம் பிறப்பயக்கும் பீழை பெரிதுபுறம்,"

என்பதை அறிந்து அழியாத உயர்ந்த பேரின்பம் எய்த முயலாமை யால் 'அறிவிலன்' என்றார். அடியேன் அடியாமை நீங்கவும் ஞான நலம் பெறவும் நின் திருவருள் வேண்டுமாதலின் 'அருள்வாயே' என்றுங் கூறினார்.

எரிவிட நிமிர்ந்த குஞ்சி 'எரிகின்ற விஷம் ஓங்கிய ஜடை' என்பாரும் உண்டு; ஈண்டு 'விடம்' என்றது விடத்தை யுடைய அரவு பூண்டமையாற் போலும்; (எரி+விட) எனப் பிரித்து, 'நெருப்பைப்போற் பிரகாசத்தை விட்டுக் கொண்டிருக்குமாறு ஓங் கிய ஜடை' என்றும்.

"மின்னார் செஞ்சடை,"

"எரிநிகர் செஞ்சடை,"

"பொன்னார் செஞ்சடை,"

எனப் பிறருங் கூறியமை காண்க. கங்கையைச் சடையில் அணிந் தது பகீரதன் தவத்திற்கு உவந்து கங்கையின் வீறு அடங்க என் பது புராண கதை.

இதழி பிரணவ வடிவமாக இருத்தலினால், தாம் பிரணவப் பொருள் என்பதை ஆன்மாக்கள் அறிந்து தம்மை வழிபட்டு உய்ய வேண்டும் என்னும் கருணை பற்றியே. இதழி - கொன்றை. சிவ பெருமான் ஆன்மாக்களுக்கு இன்பம் அருளுவோன் ஆதலின் 'சங் கரன்' என்னும் திருநாமம் உண்டாயிற்று, இதனை,

"இன்பஞ் செய்தலிற் சங்கரன்,"

என்றதானும் அறியலாம்.

இமவரை - பனி மலை; இமம் - பனி. பார்வதி பனிமலை பயந்த பாவை யாதலின் 'இமவரை தருங் கருங்குயில்' என்றார். குரல் இனிமையாலும் நிறத்தாலும் குயில் அம்பிகைக்கு உவமம் ஆயிற்று. தேவியார் பசுமை நிற முடைமையானும் அழகுடைமை யானும், ஆன்மாக்கட்கு இன்பம் பயக்கும் இதந்தரு சொற்களை மிழற்றி ஆன்மாக்களை உய்வித்தலானும், 'மரகத நிறந்தருங் கிளி' என்றார். நாதப் பிரமமாக விளங்கும் இறைவரும் இன்புற இசைக்கும் மிழற்றும் பெற்றியள் ஆதலின் உமாதேவியாரைக் 'குயில்' என்றும், 'கிள்ளை' என்றுங் கூறினர் எனினும் பொருந்தும். எல்லா உயிர்களுக்கும் உயிராக இருந்து இயக்குபவள் ஆதலின் 'எனது உயிர்' என்றார்.

இறைவனைப் போலவே இறைவிக்கும் மூக்கண் உடைமை யால் 'திரியம்பிகை' என்றார்; அம்பகம் - கண். 'பெருவாழ்வு' என்றது பெருஞ் செல்வத்தை. செல்வம் இன்றேல் வாழ்வு இல்லை யாதலின்,

"அருளில்லார்க் கவ்வுலக மில்லை பொருளில்லார்க்
கிவ்வுலக மில்லா கியாங்கு."

என்ற திருக்குறளாலும் அறியலாம். மக்களே செல்வம் எனப்படுவர்; மக்கள் செல்வத்திலுஞ் சிறந்தவ ராவர். இதனான் அன்றே,

"தம்பொரு ளென்ப தம்மக்கள்,"

எனவும்,

"பெறுமவற்றுள் யாமறிவ தில்லை யறிவறிந்த
மக்கட்பே றல்ல பிற."

எனவும் திருக்குறளாரும்,

"பொன்னுடைய ரேனும் புகழுடைய ரேனுமற்
றென்னுடைய ரேனும் உடையரோ - இன்னடிசில்
புக்களையுந் தாமரைக்கை பூநாறுஞ் செய்யவாய்
மக்களையிங் கில்லா தவர்."

எனப் புகழேந்தியாரும் புகன்றனர்.

இச் செய்யுளால் பராசத்தியார்க்குப் புத்திரச் செல்வமாகி அவர்க்கு மகிழ்ச்சி தரும் முருகக்கடவுளே! அறியாமையால் உலகில் மயங்கிக் கிடக்கும் என்னை மீட்டு உன் தாட்டுணை சேரும் நன் ஞானம் தந்தருள் என வேண்டினராயிற்று.

---

11. தந்த தானன தானன தந்த தானன தானன
தந்த தானன தானன தனதான.

வெஞ்ச ரோருக மோகடு நஞ்ச மோசய லோகடு
வின்பசாகர மோவடு வகிரோமுன்
வெந்துபோனபு ராதன சமபராரிபு ராரியை
வென்ற சாயக மோகரு விளையோகண்

கஞ்ச மோயம தூதுவர் கெஞ்ச மோவெனு மாமத
சங்க மாதர்ப யோதர மிகவழுந்தி
சங்கையோவிரு கூதள கந்த மாலிகை தோய்தரு
தண்ணடை சேர்கழ லீவது மொருநாளே;

பஞ்ச பாதக தாருக தண்ட னீறெழ வானவர்
பண்டு போலம ராபதி குடியேறப்
பங்க யாசனர் கேசவ ரஞ்ச லேலெயன மால்வரை
பங்க நீறெழ வேல்விடும் இளையோனே!

செஞ்ச டாடவி மீமிசை கங்கை மாமதி தாதகி
திங்கள் சூடிய நாயகர் பெருவாழ்வே!
செண்ப காடவி நீடிய துங்க மாமதில் சூழ்தரு
செந்தில் மாநகர் மேவிய பெருமாளே!

(இ - ள்.) பஞ்ச பாதக - பஞ்சமகா பாதகங்களைச் செய்து வந்தவனாகிய, தாருக தண்டன் நீறு எழ - தாருகாசுரன் அழி வெய்தவும், வானவர் - தேவர்கள், பண்டுபோல் - முன்போலவே, அமராவதி குடி ஏற - பொன்னுலகத்திற் குடி புகுதவும், பங்க யாசனர் - பிரமன், கேசவர் - மகா விஷ்ணுவும், அஞ்சல் என - தஞ்சமென்று சொல்லி குறை யிரந்து வேண்டவும், மால்வரை - பெரிதாகிய கிரௌஞ்ச மலையை, பங்கம் நீறு எழ - சிதைந்து கெட்டுச் சாம்பராகவும், வேல் விடும் - வேலாயுதத்தைச் செலுத்தும், இளையோனே - இளமைக் கோலம் வாய்ந்த முருகப்பெருமானே!, செம் சடாடவி மீமிசை - செவந்த சடையாகிய காட்டின் மேலே, கங்கை - கங்கை நீரையும், மா மதி - சிறியதாக மதிக்கப் பெறும், தாதகி - ஆத்தி மாலையையும், திங்கள் - பிறைச் சந்திரனை யும், சூடிய - அணிந்துள்ள, நாயகர் - இறைவரது, பெருவாழ்வே - பெரிய செல்வமே!, செண்பக அடவி - சண்பகக்காடு, நீடிய - சிறந்து மிகுந்து விளங்கும், துங்கம் மா மதில் - உயர்ந்த பெரிய மதில்கள், சூழ்தரு - நெருங்கியுள்ள, செந்தில் மா நகர் - திருச் செந்தூர் என்னும் பெரிய திருத்தலத்தில், மேவிய - எழுந்தருளி யுள்ள, பெருமாளே - பெருமானே!, வெம் சரோருகமோ - விரும் பத்தக்க தாமரை மலரோ, சடு நஞ்சமோ - மிகக் கொடிய ஆல கால விடமோ, கயலோ - கயல் மச்சமோ, நெடு இன்ப சாகரமோ - நீண்ட இன்பச் சமுத்திரமோ, வடு வகிரோ - மாம்பிஞ்சின் பிளவோ, முன் வெந்துபோன - முன்னொருகால் வெந்தழிந்த. புராதன - பழைய, சம்பராரியை - மன்மதனை, புராரி - திரி

புரத்தை நகைத்தெரித்த சிவபெருமான், வென்ற - வெற்றி கொண்ட, சாயகமோ - அம்போ, கருவிளையோ - கருவிளை மலரோ, கண் - கண்கள், தஞ்சமோ - தஞ்சமோ, யமதூதுவர் நெஞ்சமோ - எம தூதுவர்களுடைய மனமோ, எனும் - என்று சொல்லும், மா மத - மிக்க மதம் பொருந்திய, சங்கமாதர் - சங்கு வளையல்களை அணிந்துள்ள பெண்களின், பயோதரம் மிக - தனங்களில் மிகவும், மூழ்கு - முழுதுகின்ற, சங்கை - பயம், ஒவ - கெட, இரு கூதள கந்த மாலிகை - பெரிய கூதளத்தாலாகிய வாசனை பொருந்திய மாலை, தோய்தரு - பொருந்தியுள்ள, தண்டை சேர் - தண்டை யணிந்துள்ள, கழல் ஈவதும் - தேவரீரது அழகிய பாதங்களைத் தந்தருள்வதும், ஒரு நாளே - எந்த நாளோ? எ - று.

(வி - ரை) 'வெஞ்சரோருகம்': வெம்மை+சரோருகம்;

"வெம்மை வேண்டல்,"

என்ற தொல்காப்பியத்தால் 'விரும்பத்தக்க தாமரை என்று பொருள் உரைத்தாம். சரோருகம் - தாமரை; இது வடசொல். 'வடு' என்றது மாவடுவை, வகிர் - வகிர்க்கப்பட்டது; வகிர்தல் - பிளத்தல். சம்பராரி - மன்மதன்; சம்புவினால் - (சிவபிரானால்) அழிக்கப்பட்டவன் என்பது பொருளாம். சாயகம் - 'வடசொல்' என்பர் வடநூலார்; தமிழ் மொழியாகக் கொண்டு 'உடல் உள்ளே புகுந்து உயிரைப் போக்கி உடலை அழிப்பது' என்பது பொருள். 'சம்பராரியை புராரி வென்ற சாயகம்' என்றதில் சிவபெருமான் நெற்றிக் கண்ணால் மதனை எரித்திருக்க சாயகத்தால் வென்றது என்றது கவி மரபு. நெற்றிக்கண்ணாகிய அம்போ எனினும் ஆம்; 'சத்துருக்களின் ஆணவத்தை அடக்குவது' என்பதும் பொருளாம். கருவிளை - கண்ணுக்கு உவமையாக எடுத்தோதப்பெறும் ஒருவகை மலர்,

"கட்டலைக் கறுவிக் கயலைச் செருவிப்
படபொற் பிணையைப் படவித்—தடமற்
குவளைக் ககலக் குலமூற் றமுதைத்
திவளச் சிதறிச் செறுவிக்—கவலைச்
சுரும்பைப் பழிப்பித்துச் சுத்தவே லொத்துப்
பெரும்பொற் குழையைப் பிடித்துத்—திரும்பிக்
கொலைபழகிச் செம்பொற் குமிழ்சிகரக் காமன்
கலையனைத்து மந்நிலையே கற்று—நிலையிற்
கருகிநெருநத் துச்சிவந்து கற்றோ ருளத்தைப்
பருகியமு தங்கனிவும் பாய்ந்து—திருகிக்
குளிர்ந்து வடிவகிரை வென்று கிளர்ந்துசெயங்
கொண்டுபெருங் கூற்றின் குருபீட மாயுலகிற்
றண்டவரைச் சண்டையிடுங் கண்ணினாள்."

என்ற காளமேகத்தின் வாக்குக் கவனிக்கற்பாலது.

'தஞ்சமோ' என்பதை 'நஞ்சமோ' எனப் பாடம் ஓதுவர்; அப்போழ்து மோனை அழகு சிந்துதல் அறிக. தஞ்சமோ - 'துன்பம் நீங்கி இன்பம் பெறுதற்குத் தஞ்சமாகக் கருதப்படுவதொன்றோ' என்பது பொருளாம், 'பயோதரமிக மூழ்கி' என்பதை, 'பயோதர முகமூழ்கி' எனப் பாடம் ஓதுவாரும் உண்டு.

'மாதர்' என்பது பெண்கள்; 'காதலை உண்டாக்குபவர்' என்னுங் காரணத்தது;

"மாதர் காதல்"

என்னும் தொல்காப்பியத்தாலும் அறியலாம். பஞ்சபாதகம் - ஐவகைக் குற்றம்; அவை: பொய், கொலை, களவு, கள், காமம் என்பனவாம். அமராவதி - தேவநகர். பங்கயாசனர் - பிரமன்; 'திருமாலின் உந்தியத் தாமரையில் உதித்தவன்' என்பது பொருள்.

கேசவர் - திருமால்; அழகிய கேசத்தை (கூந்தலை) உடையவர்' என்பது பொருள். 'சடாடவி' வடமொழிச் சந்தி; 'சடையாகிய காடு' என்பது பொருள். மீமிசை - 'மிக உயர்ந்த இடத்தில்' என்னும் பொருளது; இவை ஒரு பொருட் பன்மொழி. 'கங்கை மாமதி தாதகி,' என்பதை 'கங்கை மாதவி தாதகி' எனவும் பாடங் கூறுவர். 'மாமதி தாதகி' என்றபோழ்து மிகமதிக்குஞ் சிறப்புப் பொருந்திய ஆத்தி என்க. இதனானே "ஆத்தி சூடி அமர்ந்த தேவனை, ஏத்தி ஏத்தித் தொழுவோம் யாமே" என்றார். 'மாதவி தாதகி' என்பதற்கு 'மாட்சிமை பெற்ற சந்திரனையும் ஆத்திமாலையும்' எனப் பொருளுரைத்தார் சிலர். இது பொருந்தாது. ஏனெனின், பின்னால் பக்கத்தே 'திங்கள்சூடிய நாயகர்' என்கின்றாராதலின் அவ்வாறு கூறின் "கூறியது கூறல்" என்னுங் குற்றமும் ஆம். முன்னைப் பாட்டில் 'சிரியம்பிகை பெரு வாழ்வே.' என்றார்; இந்தப் பாட்டில் 'திங்கள் சூடிய நாயகர் பெரு வாழ்வே,' என்றார். பெற்றோர்க்குப் பிள்ளைகளே பெருஞ் செல்வம் என்பதாம்.

"மங்கல மென்ப மனைமாட்சி மற்றதன்
நன்கல நன்மக்கட் பேறு."

என்றார் நாயனாரும். கடலலைக்கு அசையாது ஓங்கி நிற்றலின் 'துங்கமாமதில்,' என்றார். மேவல் - விரும்பி அமர்தல்.

"பெண்கள் மாயையில் மூழ்கிக் கெட்டழியாது நின் திருமலர்த்தாள் தந்து ஆண்டருள்வது எந்த நாளோ" என்பது கருத்தாம்.

———

12. *தனன தனதன தனதன தனதன*
*தனன தனதன தனதன தனதன*
*தனன தனதன தனதன தனதன—தனதான.*

களப மொழுகிய புளகித முலையினர்
கடுவு மமிர்தமும் விரவிய விழியினர்
கழுவு சரிபுழு கொழுகிய குழலினர் எவரோடும்
கலக மிடுகய லெறிதழை விரகியர்
பொருளி லிளைஞரை வழிகொடு மொழிகொடு
தளர விடுபவர் தெருவினி லெவரையும் நகையாடி
பிளவு பெறிலதி லளவள வொழுகியர்
நடையி லுடையினி லழகொடு திரிபவர் [டே
பெருகு பொருள்பெறி லமளியி லிதமொடு குழைவோ
பிணமு மணைபவர் வெறிதரு புனலுணும்
அவச வனிதையர் முடுகொடு மணைபவர்
பெருமை யுடையவர் உறவினை விட வருள்புரிவாயே;
அளையி லுறைபுலி பெறுமக வயிறரு
பசுவி னிரைமுலை யமுதுண நிரைமகள்
வசவ னெடுபுலி முலைபுண மலையுடன் உருகாநீள்
அடவி தனிலுள உலவைகள் தளிவிட
மருள மதமொடு களிறுகள் பிடியுடன்
அகல வெளியுயர் பறவைக ணிலம்வர விரல்சேரேழ்
தொளைகள் விடுகழை விரல்முறை தடவிய
இசைகள் பலபல தொனிதரு கருமுகில்
சுருதி யுடையவ னெடியவன் மனமகிழ் மருகோனே!

துணைவ! குணதர! சரவண பவ!நம
முருக! குருபர! வளரறு முக!குக!
துறையி லலையெறி திருநக ருறைதரு பெருமாளே!

(இ - ள்.) அணையில் - குகையில், உறை புலி பெறு மகவு - வசித்துக் கொண்டிருக்கும் புலி பெற்ற குட்டி, அயில் தரு பசுவின் - புல்லையும் நீரையும் உண்ணும் பசுவினது, முலை அமுது உண - முலைகளினின்றும் வழிந்தொழுகும் பாலைக் குடிக்க, நிரை மகள் - பசுவின் பெண் கன்று, வசவனொடு - ஆண் கன்றுடன், புலி முலை உண - புலியினுடைய முலையிலுள்ள பாலை ஊட்டிக் குடிக்க, மலையுடன் உருகா - மலையோடு உருகுகின்ற, நீள் அடவி தனில் - நீளமாகிய காட்டினிடத்தே, உள உலவைகள் - உள்ளனவாகிய மரங்கள், தளிர் விட - தளிர்த்து இருக்க, களிறுகள் - ஆண் யானைகள், பிடியுடன் - பெட்டை யானைகளோடு, மதமொடு மருள - மதம் பெருகி மயங்க, அகல வெளி - அகன்று பரவிய ஆகாயத்தின் கண், உயர் பறவைகள் - உயரப் பறக்கின்ற பறவைகள், நிலம் வர - பூமியிலே வர, விரல் சேர் - விரலைச் சேர்க்கின்ற, எழ் தொளைகள் விடு கழை - எழு துவாரங்கள் செய்துள்ள புல்லாங்குழலை, விரல் முறை தடவிய - விரலால் முறையாகத் தடவப் பெற்ற, இசைகள் பல பல - பல் வகையாகிய ராகங்கள், தொனி தரு - இசைத்துச் சப்திக்கின்ற, கரு முகில் - கருத்த மேகம் போலும் திருமேனியை உடையவனும், சுருதி உடையவன் - வேதங்களால் துதிக்கப் பெறுபவனும், நெடியவன் - உலகை முகடு அளாவ நீண்டவனும் ஆகிய திருமால், மனம் மகிழ் மருகோனே - மன மகிழ்ச்சி அடைதற்கு உரிய மருமகனே!, துணைவ - எல்லார்க்குஞ் சகாயஞ் செய்து துணையாய் இருப்பவனே! குணதர - கல்யாண குணங்களை உடையவனே!, சரவணபவ - சரவணப் பொய்கையில் உதித்தவனே!, நம முருக - யாவரும் வணங்கத்

தகுந்த முருகக் கடவுளே!, குருபர - மேன்மை பொருந்திய குரு வாக இருப்பவனே!, வளர் அறுமுக - ஊழி ஊழிதோறும் அழ கொடு வளர்கின்ற ஆறு திருமுகங்களை யுடையவனே!, குக - குகன் என்னும் திருநாமம் பூண்டவனே! துறையில் அலை எறி - துறையிலே திரை வீசி எறியப் பெற்ற, திருநகர் உறைதரு பெருமாளே - அழகிய திருச்செந்தூர் என்னும் திருத் தலத்தில் வீற்றிருந் தருளும் பெருமானே!, களபம் ஒழுகிய புளகித முலையினர் - களப கத்தூரிச் சாந்து பூசி வழியும் பூரித்த பாரித்த முலைகளை உடையவரும், கடுவும் அமிர்தமும் விரவிய விழியினர் - நஞ்சும் அமிர்தமும் கலந்த கண்களை யுடையவரும், கழுவு சரி புழுகு ஒழுகிய குழலினர் - நீர் தயிலம் முதலிய இட்டுக் கழுவி நல்ல மயிர்ச் சாந்து முதலிய தடவி அவை வழி தரு கூந்தலை யுடையவரும், எவரோடும் - எப்படிப் பட்டவர்களோடும், கலகம் இடும் - காமக் கலகத்தைச் செய்யும், கயல் எறி குழை விரகியர் - கயல் மச்சத்தை ஒத்த கண்களால் எறியப்படும் குழை என்னும் காதணி களை யுடைய தந்திரக்காரரும், பொருள் இல் இளைஞரை - கைப் பொருள் இல்லாத வாலிபர்களை, வழி கொடு - தந்திர வழியைக் கொண்டு (நடத்தும்), மொழி கொடு - பலவித மாகிய சொற்களைக் கொண்டு (பேசியும்) தளர விடுபவர் - தம்மை விட்டுப் பிரிந்து போகும்படி விடுகின்றவரும், தெருவினில் எவரையும் நகையாடி - தெருவழிகளிலேயே எப்படிப் பட்டவர்க ளிடத்தும் புன்னகை செய்து, பிளவு பெறில் - அதனால் அவர்கள் மனம் பிளவு பட்டால், அதில் அளவு அளவு ஒழுகியர் - அதைக் கொண்டு, அவர்கள் ஆசைக்கும் அவர்கள் தரும் பொருளுக்கும் தக்கதாக நடந்து கொள்பவரும், நடையில் உடையினில் - நடையினாலும் உடையி னாலும், அழகொடு திரிபவர் - அழகுடனே உலாவித் திரிகின் றவரும், பெருகு பொருள் பெறில் - அதிகப் பொருளைத் தாம் பெற்றால்: அமளியில் - பஞ்சணைப் படுக்கையில், இதமொடு குழை

வோடு - நயமாகவும் இனக்கமாகவும், பிணமும் அணைபவர் - பிணத்தையுந் தழுவுகின்றவரும், எறிதரும் புனல் - உமிழும் எச்சிலையும், உணும் அவச வனிதையர் - உண்ணும்படியான தன் வசமற்றவருமாகிய விலைமாதரை, மூக்கொடும் அணைபவர் - ஆத்திரத்தோடு சென்று புணர்கின்றவர்களாகிய. பெருமை உடையவர் - இகழ்ச்சியை உடையவர்களின். உறவினை - சிநேகத்தை, விட அருள் புரிவாய் - விட்டு நீங்குமாறு அருள் செய்வாயாக, (எ-று.)

(வி - ரை) புளகித முலை - பூரித்துப் பாரிக்கும் முலை; இது இதன் இயற்கை.

"வார்கட்டு விம்மிப் புடைத்திறுகி விளகிமணி
மார்பிட மெலாங் கவர்ந்து
வட்டமிட் டடியிட்டு நாளுக்கு நாண்மேல்
வளர்ந்து பூரித்து * * * தான்
சிரட்டு நின்றுதந் தலைவணங் காமற்
றிரண்பூண் முலைகள்,"

என்ற சுப்பிரமணியப் புலவர் வாக்கானும் அறிக.

'கடும் அமிர்தமும் விரவிய விழியினர்" என்றது காளையர்க்குத் துன்பஞ் செய்யும் நோக்கும் இன்பஞ் செய்யும் நோக்கும் உடையவர் ஆதலின் இதனை,

"பிணியும் அதற்கு மருந்தும் பிறழப் பிறழ மின்னும்
பணியும் புரைமருங் குற்பெருந் தோளி படைக்கண்களே,"

என்ற திருக்கோவையாரானும் உணரலாம். பொருளுடையவர் எத்தகைய இழிந்தோர் ஆயினும் அவரோடு கூடி அவர் பொருளைக் கவர்ந் தொழிப்பர்; பொருளில்லார் எவ்வளவு உயர் புடையோராயினும் அவர்களை விட்டு அகல்வர். இதுவே விலைமாதர் இயற்கை அதனாற்றான்,

'விரகியர் பொருளி லிளைஞரை வழிபடு
மொழிகொடு தளர விடுபவர்'
'பெருகு பொருள் பெறில் * * * * பிண
மும் அணைபவர்'

என்றுங் கூறினர். இதனை,

"ஊணமில் நெஞ்சத் தணிநலக் கண்ணார்க்குக்
காண மில்லாதார் கடுவனையர் - காணவே
செக்கூர்ந்து கொண்டாருஞ் செய்த பொருளுடையார்
அக்கார மன்னா ரவர்க்கு."

என்னும் நாலடியாரினானும் உணரலாம். 'பிணமும் அணைபவர்,' என்றதில் உள்ள உம்மை இழிவு சிறப்பும்மை. 'பெருமை யுடையவர்,' என்பது பிறிது நவிற்சி.

"தீயாரைக் காண்பதுவுந் தீதே
திருவற்ற * * * * * * அவரோ
டிணங்கி இருப்பதுவுந் தீது."

என்றதனால் 'பெருமை யுடையவர் உறவினை விட அருள் புரிவாயே,' என்றார்.

புலிக்குட்டி பசுமுலை யுண்ணவும், பசுங் கன்றுகள் புலி முலை யுண்ணவும், மலை உருகவும், பட்டமரந் தளிக்கவும், மதயானையும் பிடியும் மதங்கொண்டு மழுங்கவும், விண்ணிற் பறக்கும் பறவை களும் மண்ணில் இரங்கி வரவும் குழல்வாய் வைத்தூதும் திருமால் மருகனே என்றார். இதில் குழல் இசையின் சிறப்புக் கூறினர்.

'கல்லும் உருகக் கனலும் புனலாக,' எனவும்,
"பட்டமரந் தழைய," எனவும்,
"சித்திரமுங் கூடச் சிரமசைக்க," எனவும்,

பிறர் கூறியமையுங் காண்க.

கருமுகில் – 'கருத்த மேகம்' எனவும், 'கருக்கொண்ட மேகம்,' எனவும் பொருள் பெறும். இது திருமாலுக்கு உவமை.

'நெடியவன்' என்றது வாமனவதாரத்தில் திருமால் நீண்ட உருவம் பூண்டதை உணர்த்துகிறது. துணைவ – சர்வ ஆன்மாக்களுக்கும் முத்திப் பேறடைவதற்குத் துணையாக நிற்பவன். குணதர – கல்யாண குணங்களைப் பூண்டுள்ளவன்; எண்குணங்களைப் பூண்டுள்ளோன் எனினும் பொருந்தும். சரவணபவ – 'கங்கையின்கண் உள்ள நாணல் மடுவில் அவதரித்தவன்' என்பது பொருள். நம – 'எல்லோராலும் வணங்கப் பெறும் பெருமையை உடையவனே!' என்பதாம். முருக 'அழகை உடையவனே!' என்பது பொருள். குருபர – 'உயர்ந்த குருவாக விளங்குபவனே!' என்றும், 'பரனுக்கும் குருவாக விளங்கி நின்றவனே!' என்றும் பொருள் தரும். வளர் அறுமுக – 'அழகும் அருளும் வளரும் ஆறு திருமுகங்களை உடையவனே!' என்பது பொருள். குக – 'மலைக்குகைகளில் எழுந்தருளி இருப்பவனே! அடியார் உள்ளக் குகையில் உறைபவனே!; வேதக் குகையில் கூடிக் குலவுபவனே!' என்பன பொருளாம். இவை அனைத்தும் அண்மை விளிகள்.

'துறையில் அலை எறி திருநகர் உறைதரு பெருமாளே.' என்றதில் "தன்னிடத்தே சார்ந்தார்க்குப் பிறப்பாகிய அலைச்சலைக் கழித்தெறியும் அழகிய நகராகிய திருச்செந்தூர் எனவும் பொருள்படநின்றது," என்பர் ஒரு சாரார்.

குழலோசையாலேயே செயற்கு அரியன செய்பவனும், வேதங்களால் புகழப்படுபவனும், நீண்டோனுமாகிய திருமாலின் மருகனாகிய எவ்வுயிர்க்குந் துணைவனே! குணதர! சரவணபவ! நம! முருக! குருபர! வளர் அறுமுக! குக! தீயார் தொடர்பை நீக்கி விடுவாயாக என்பது குறித்தது.

பிணி நீங்கச் சுகம் வருவது போலத், தீயார் தொடர்பு நீங்க நல்லார் தொடர்பு எய்தும்; அதனால் ஞானம் பெருகி வானவர் வழுத்தும் வீடு பெறுவேன்; இது செய்தற்கு நீயே வல்லவன்; நீயே தக்கவன்; நீயே துணையாவோன் என்றனர்.

---

13. தந்ததன தான தந்ததன தான
தந்ததன தான—தனதான.

கன்றிவரு நீல குங்கும படீர
கஞ்சமர் மேவு முலைகாட்டிக்
கந்துல்செறி கேச மின்றுகுலை யாமை
கண்கள்கடை காட்டி விலைகாட்டி
நன்றுபொரு ளீதி லென்றுவிலை பேசி
நம்பிவிடு மாத ருடனாட்ட
நஞ்சுபுரி மேதை யங்கமது வாக
நைந்துவிடு மெற்கொன் றருள்வாயேய்
குன்றிமணி போலச் செங்கண்வரி நாகங்
கொண்டபடம் வீசு மணிகூர்வாய்
கொண்டமயி லேறிக் குன்றிடிய மோதிச்
சென்றவடி வேலைக் கொடுபோர்செய்
மன்றல்கமழ் பூகந் தெங்குதிரள் சோலை
வண்டுபடு வாவி புடைசூழு
மந்திநட மாடுஞ் செந்தில்நகர் மேவு
மந்தசுர காலப் பெருமாளே!

(இ - ள்.) குன்றி மணிபோல - குன்றி மணியினது நிறத்தை நிகர்த்ததாயுள்ள, செம் கண் வரி நாகம் - செவந்த கண்களையும் கோடுகளையும் உடைய சர்ப்பம், கொண்ட படம் வீசும் - தான் பெற்றிருக்கும் படத்தை ஆட்டும், மணி கூர்வாய் - அழகிய கூர்மையான வாயை. கொண்ட மயில் ஏறி - கொண்டுள்ள மஞ்ஞையின் மேல் ஏறிக்கொண்டு, குன்று இடிய மோதி - வரைகளெல்லாம் நகர்ந்து சரியும்படி தாக்கி, சென்ற வடிவேலை - குற்றமகன்ற வடித்தெடுக்கப்பட்ட வேலாயுதத்தை, தொடுபோர் செய் - கையிற் கொண்டு யுத்தத்தைச் செய்கின்ற, மன்றல் கமழ் - நறுமணம் வீசுகின்ற, பூகம் தெங்கு திரள் சோலை - பாக்கு மரங்களும் தென்னை மரங்களும் நெருங்கியுள்ள சோலைகளும், வண்டு படு வாவி - தேன் வண்டுகள் பொருந்தியுள்ள பொய்கைகளும், புடைசூழ - நான்கு பக்கங்களிலும் சூழ்ந்திருக்க, மந்தி நடமாடும் - குரங்குகள் கூத்தாடிக் கொண்டிருக்கப் பெற்ற, செந்தில் நகர் - திருச்செந்தூர் என்னுந் திவ்விய தலத்தில் வீற்றிருக்கும், அந்த அசுர கால பெருமானே - சூரன் முதலாய அந்த அசுரர்களுக்கு எமன் போன்ற பெருமானே!, கன்றி வரும் நீலம் - மிகுந்த நீல நிறத்தை யுடைய, குங்கும படீரம் - குங்குமமும் சந்தனமுந் திமிர்ந்த, கஞ்சமலர் மேவும் - கமலமலரை ஒத்த, முலைகாட்டி - ஸ்தனங்களைக் காட்டி, கந்துல் செறி கேசம் - இருளை ஒத்த குழல், நின்று குலையாமை - நிலைத்து நின்று முடித்தகுழல் குலையாதபடி, கண்கள் கடைகாட்டி - கடைக் கண்களாற் காட்டி, விலை காட்டி - முலை விலையைத் தோன்ற எடுத்துக்காட்டி, பொருள் நன்று தீது என்று விலை பேசி - இந்தப் பொருள் நல்லது இந்தப் பொருள் தீயது என்று கூறி விலையைப் பேசி, நம்பி விடும் மாதர் - இயைந்த ஆடவர்களுக்கு அவர்களை நம்பித் தன் தேகத்தைப் பொருள் விரும்பி விடுகின்ற பெண்கள், உடன் - அவர்களுடனே, நாட்டம் நஞ்சு புரி - அவர் கண்களிலுள்ள கடுநிகர்த்த காமத்தை விரும்பி, தேரை அங்கம்

அது ஆக - தேரையின் உடம்புபோல தேகம் மெலிவடைய, நைந்து விடும் ஏற்கு - வருந்திக் கெட்டு விடுகின்றவனாகிய அடியேனுக்கு, அருள்வாய் - நின் திரு வருளைச் செய்வாயாக, எ - று.

(வி - ரை.) கன்றி வரு நீலம் - 'ஆடவர் மனங் கன்றுமாறு வந்துள்ள நீலமலர்போலுங் கண்' என்பது பொருள்; கன்றுதல் - வருந்துதல்; இனி, 'துன்புறுத்தி உயிர்வாங்க வரும் மன்மதனின் நீலமலர்போலுங் கண்' எனலும் ஆம். மன்மதன் கணைகளில் ஐந் தாவதாகிய நீலமலர் உயிர் வாங்குந் தன்மையது என்பர். இதனை லன்றோ,

"சூலக் கரத்தர் திருவெங்கை வாணர்முன் சுட்டமதன்
நீலக் கணையிற் கைவைத்தான் இனிச்சற்று நேரமிற்பில்
காலர்க் கிரையிடும் என்று வியையந்தக் காரிகையார்
கோலக் களபக்குன் றன்றோ மருவக் குறுகியதே."

என்ன வெங்கைக் கோவையாருங் கூறினர்.

இனி 'கன்றின் வரு நீலம்' எனக் கொண்டு 'மான் கன்று போன்று வரும் நீலமலர்க் கண்கள்' எனப் பொருள் கொள்வாரும் உண்டு.

கன்றின் வரு - 'கன்றிவரு' என ஆனது விகாரம். கண் காட்டி முலைகாட்டி மயலூட்டி விலைகாட்டும் வேசையர் மயக்கில் வீழ்ந்து தேரைபோல் தேய்ந்து நைந்து அழிவேற்கு அருள்வா யாக என்றார். இதனை,

"காதென்று மூக்கென்று கண்ணென்ற காட்டியென்
கண்ணெதிரே
மாதென்று சொல்லி வருமாயை தன்னை
மறலிவிட்ட

ஞாதென் றெண்ணுமற் சுகமென்று நாடுமித்
துர்ப்புத்தியை
ஏதென் றெடுத்துரைப் பேன்! இறைவா! கச்சி
ஏகம்பனே!”

என்ற பட்டினத்தடிகள் வாக்கொடு ஒப்பிட்டறிக.

இன்னும் மாதர் கட்கடை வேகமுடையது. போக காம மூட்டுவது.

“ஏடுதரு மலர்க்குழலார் முலைத்தலைக்கே இடைக்கே
எறிவிழியின் படுகடைக்கே,”

என்னும் அருணந்தி சிவனார் திருவாக்கும் ஈங்கே எண்ணத் தக்கது. இதனாலன்றோ,

“விண்டு மொழிகுளறி வேட்கைமது மொண்டுதரும்
தொண்டியர்கள் கட்கடையில் சற்றொழிவ தென்னாளோ.”

என்றார் தாயுமானவரும்.

தேவர்களை வருத்திய சூரனை அழித்து அருளிய நினக்கு, என்னை நைவிக்கும் மாதர் மயக்கத்தைப் போக்கல் அசாத்தியமானதன்று என்பது குறிப்பாம்.

பிறரை வருத்தும் நஞ்சு குடிகொண்ட படத்தை யுடைய பாம்பைத் தன் வாயில் வைத்து ஆட்டும் ஆற்றல் நின் ஊர்தியாகிய மயிலுக்கே அமைந்திருக்கும் பொழுது, என்னை வாட்டும் அரவகல் அல்குல் மாதர் மாயைப் பாம்பு என்னைக் கௌவாது செய்ய உன்னால் முடியா தெனவும் நினைப்பனோ என்பது குறிப்பித்ததுங் காண்க. இக் கருத்தை,

“வெய்யவிட வேக நாக மேவுகொடு வாயி னின்று
தய்யதய வென்ன ஆட தரணிமிசை வந்த மஞ்ஞை

செய்யபரி ஏறு வேல சினவுவேற் கண்ண ராசைப்
பையரவு பற்றி என்னைப் படுத்திடா வகையிற் காவே.”

என்ற தனிச் செய்யுளாலும் அறியலாம்.

---

14. தனத்தனந் தானன தானன தானன
தனத்தனந் தானன தானன தானன
தனத்தனந் தானன தானன தானன—தனதான.

அளிச்சங் கார்முகம் வீசிட மாசறு
துவட்பஞ் சானத டாகம்வி டாமட
அனத்தின் தூவிகு லாவிய சீறடி மடமாதர்

அருக்கன் போலொளி வீசிய மாமர
கதப்பைம் பூணணி வார்முலை மேல்முகம்
அழுந்தும் பாவியை ஆவியி டேறிட நெறிபாரா

வினைச்சண் டாளனை வீணனை நீணிதி
தனைக்கசண் டாணவ மானதிர் மூடனை
விடக்கன் பாய்நுகர் பாழனை யோர்மொழி பகராதே

விசற்பங் கூறிடு மோக விகாரனை
அறத்தின் பாலொழு காதமு தேவியை
விளித்துன் பாதுகை நீதப நானருள் பெறுவேனோ;

முனைச்சங் கோலிடு நீல மகோததி
அடைத்தஞ் சாத இராவண னீள்பல
முடிக்கன் றேர்கணை யேவுமி ராகவன் மருகோனே!

முளைக்குஞ் சீதநி லாவொட ராவிரி
திரைக்கங் காநதி தாதகி கூவிள
முடிக்குஞ் சேகரர் பேரரு ளால்வரு முருகோனே!

தினைச்செங் கானக வேடுவ ரானவர்
திகைத்தந் தோவென வேகணி யாகிய
திறற்கந் தா!வளி நாயகி காமுறும் எழில்வேலா!

சிறக்குந் தாமரை யோடையின் மேடையில்
நிறக்குஞ் சூல்வளை பால்மணி வீசிய
திருச்செந் தூர்வரு சேவக னே!சுரர் பெருமாளே!

(இ - ள்.) முனை சங்கு ஒலிடும் - கூரிய முகத்தைக் கொண்டுள்ள சங்கங்கள் சப்திக்கும், வேலம் மகோததி அடைத்து - நீல நிறங் கொண்ட பெரிய கடலைத் திரு அணை கட்டி, அஞ்சாத இராவணன் - யாருக்கும் பயப்படாத இராவணனுடைய நீள் பலம் முடிக்கு - அழியாத நீண்ட வர வன்மையை யுடைய தலைக்கு, ஒரு கணை ஏவும் - அதனைக் கொய்யுமாறு இணையற்ற ஒரு கணையைச் செலுத்திய, இராகவன் மருகோனே - இராமபிரானுடைய மருமகனே!' முளைக்கும் சீத நிலவொடு - பிறக்கும் இயல்புடைய குளிர்ந்த சந்திரனோடு, அரா விரி - படத்தை விரிக்கும் பாம்பையும், விரி திரை கங்காநதி - பரந்த அலைகளையுடைய கங்காநதியையும், தாதகி கூவிளம் - ஆத்திமலரையும் வில்வத்தையும், முடிக்கும் சேகரர் - திருமுடியில் அணிந்து கொள்ளும் சிவபெருமானது, பேர் அருளால் வரு முருகோனே - மிக்க கிருபையாற் றோன்றி யருளிய முருகக் கடவுளே!, தினை செம் கானகம் - தினை விளைகின்ற செவ்விய குறிஞ்சி நிலத்தினைப் புனத்தில் வாழும், வேடுவர் ஆனவர் - வேடர்கள் ஆனவர்கள், திகைத்து அந்தோ என - மருண்டு ஐயோ! என்று வியந்து கூற, கணி ஆகிய திறல் கந்தா -

வேங்கைமரமாக நின்ற கந்தவேளே!, வள்ளிநாயகி காமுறும் எழில் வேலா - வள்ளியம்மையார் ஆசை கொள்ளும்படியான அழகைக் கொண்ட வேலாயுதக் கடவுளே!, சிறக்கும் தாமரை ஓடையில் - பூக்களினால் விளக்கங் கொண்டிருக்கின்ற தாமரை பூத்துள்ள ஓடைகளிலும், மேடையில் - மேட்டுப்பாங்கான நிலங்களிலும், நிறக்கும் சூல் வளை - அழகான நிறத்தோடு விளங்குகின்ற கருப்பங் கொண்ட சங்குகள், பால் மணி வீசிய - பால்போலும் வெண்மை நிறத்தை யுடைய முத்துக்களை வீசும், திருச்செந்தூர் வரு சேவகனே!—திருச்செந்தூர் என்னும் திவ்விய தலத்தில் வந்தருளி வீற்றிருக்கும் வீரனே!, சுரர் பெருமாளே - தேவர்களுக்கெல்லாம் தலைவனே!' அனிச்சம் - அனிச்சப்பூவின் மேலும், கார்முகம் வீசிட - வில்லால் அடித்ததனால், மாசு அறு துகள் பஞ்சு - குற்றமற்ற நுண்ணிய பொடியாகிய பஞ்சின் மேலும், ஆன தடாகம் விடா - குளிர்ச்சி யுடையதான வாவியை விட்டு நீங்காத, மட அன்னத்தின் தூவி - இளமை பொருந்திய அன்னப்பட்சியின் இறகின் மேலும், உலாவிய சிறு அடி - சிறந்து விளங்குகின்ற சிறிய பாதங்களைக் கொண்டுள்ள, மடம் மானார் - இளமை பொருந்திய மங்கையர்களின், அருக்கன் போல் ஒளி வீசிய - சூரியனைப் போலப் பிரகாசிக்கின்ற, மா மரகதம் பைம்பூண் அணி-சிறந்த மரகத மணிகளினால் ஆகிய பசுமையான ஆபரணங்கள் விளங்குகின்ற, வார் முலைமேல் - கச்சணிந்த தனங்களின்மேல், முகம் அழுத்தும் பாவியை - முகத்தை அழுத்தி அணைகின்ற பாபச் செய லுடையவனும், ஆவி ஈடேறிட நெறி பாரா - உயிரானது கடைத்தேறும்படியான நல்வழியைக் கவனியாத, வினை சண்டாளனை - தீவினைகளை உடையவனாகிய சண்டாளனும், வீணனை - பயனற்றவனும், நீள் நிதிதனை கண்டு - மிக்க திரவியத்தைப் பார்த்து, ஆணவம் ஆன நிர்மூடனை- அகங்காரம் கொண்ட அறிவற்ற மூடனும், மிடக்கு அன்பாய் நுகர்

பாழனை - பிற ஜீவன்களின் தசையைப் பிரியத்தோடு உண்ணும் பாழானவனும், ஓர் மொழி பகராது - ஓர் சொல்லும் எதிர் கூறாது, விகற்பம் கூறிடும் மோக விகாரனை - மன மாறுபாட்டைக் கூறும் காம விகாரனும், அறத்தின் பால் ஒழுகாத மூதேவியை - தருமத்தின் நெறியில் செல்லாத மூதேவியும் ஆகிய அடியேனை, நீ விளித்து - ஓ முருகக்கடவுளே! நீர் அழைத்து, உன் பாதுகை தா - தேவரீரது திருவடியில் அணியும் பாதுகையைக் கொடுத்தருளும், அருள் பெறுவேனோ - நான் அந்தப் பெருங் கருணைக்கு இலக்காகுவனோ? எ - று.

(வி - ரை.) அனிச்சம் - இது ஒருவகை மலர்; மிக மென்மையை யுடையது; மோந்த மாத்திரத்தில் குழைந்துபடுந் தன்மையது.

"மோப்பக் குழையும் அனிச்சம் முகந்திரிந்து
நோக்கக் குழையும் விருந்து."

என்னும் திருக்குறளா லறியலாம். கார்முகம் - வில்; இங்கு பஞ்சு கொட்டும் வில்லைக் குறித்தது. பஞ்சின் கோதுகளை நீக்கி நுண்மைப் படுத்துவதற்கு வில்லா லடிப்பது வழக்கு. துவட்பஞ்சு - தூளாகிய பஞ்சு, 'துகட்பஞ்சு' என்றது 'துவட்பஞ்சு' என மருவியது; இனி 'துவண்ட பஞ்சு' எனினும் ஆம். 'தடாகம் விடா அனம்': அன்னம் 'அனம்' என்றானது தொகுத்தல் விகாரம். அன்னத்தின் இயல்பு தடாகத்தில் வசிப்பதாதலின் 'தடாகம் விடா' என்றார். தூவி - இறகு. அன்னத்தின் மெல்லிய இறகுகளை அணையாக்குதல் நம் நாட்டுப் பண்டைக்கால வழக்கு. இன்று மேலை நாட்டினர் பறவைகளின் இறகுகளை அணையாக்கி உபயோகிக்கின்றனர். மாதர்கள் பாதம் மென்மைய தாதலின் துவட் பஞ்சினும் அன்னத்தின் தூவியினுந் துவாவிய சீறடி என்றார். சீறடி - சிறிய

பாதம். சிறுமை+அடி, 'சீறடி' என்றாயிற்று; சிறுமை என்ற பண்பின் ஈற்று மை கெட்டு இடை உகரம் இகரமாகி, ஆதி நீண்டது. இதற்கு,

"ஈறுபோதல் இடை உகரம் இயாதல்,
ஆதி நீடல் அடி அகரம் ஐயாதல்,
தன்னொற்று இரட்டல் முன்னின்ற மெய் திரிதல்,
இன மிகல் இனையவும் பண்பிற் கியல்பே."

என்றது நன்னூல் சூத்திரவிதி.

அருக்கன் - சூரியன். மாதர்கள் பாத மென்மையை,

"அனிச்சமும் அன்னத்தின் தூவியும் மாதர்
அடிக்கு நெருஞ்சிப் பழம்."

என்ற குறளும்,

"கைத்தாயர்
பஞ்சிப்போ தையூட்டிப் பார்த்தாலோ வென்றுரைக்கும்
செஞ்சொற்கேட் டேசிவக்குஞ் சீறடியாள்."

என்ற சித்திரமடலும் இவ்வாறு உணர்த்தினமை காண்க.

மடமாதர் - இளமையுடைய பெண்கள். 'ஆர்' பலர் பால் விகுதி. பெண்களை 'மானார்' என்றது உருவகம். பெண்கள் கொங்கை ஆடவரை மயக்கி மனத்தை வலிக்கும் தன்மையுடையது. ஆதலின் அதனைக் கூறினர். இதனா னன்றோ,

"பூணிற் பொலி கொங்கை யாவியை யோவியப் பொற்கொழுந்தை"

என மணிவாசகரும்,

"கோலக் களபக் குன்றன்றோ மருவக் - குறுகியதே."

எனச் சிவப்பிரகாசரும் தம் கோவைகளுள் கூறியருளினர்.

தாயுமானவரும் இதனானன்றோ,

"கச்சிருக்குங் கொங்கை கரும்பிருக்கு மின்மாற்றம்
வச்சிருக்கும் மாதர் மயக்கொழிவ தெந்நாளோ."

என்றார். "மூலை மேல் முகம் அழுத்தும் பாவியை" மூலைமேன் முயங்கி மயங்கி வழியறியாது நெறி விடலின் 'பாவி' என்றார். 'நெறி' என்றது நன்னெறியை, ஞான நெறியை, முத்தி நெறி

"முத்திநெறி யறியாத மூர்க்கரொடும் முயல்வேனை,"

என்ற தேவாரமும் கண்டு கருதத் தக்கது. வினைச் சண்டாளனை - 'பிறப்பினாலின்றி வினையினால் சண்டாளத்துவத்தைக் கொண்டேனை' என்பது பொருள். தனக்கும் உலகுக்கும் பயனில்லா வீண் காரியங்களைச் செய்து பாவத்தைச் சுமந்து அழிய நிற்றலின் 'வீணனை' என்றார். இதனாலன்றோ திருவள்ளுவரும்,

"தவஞ்செய்வார் தங்கருமஞ் செய்வார் மற்றல்லாதார்
அவஞ்செய்வார் ஆசையுட் பட்டு."

என்றனர்.

செல்வம் வந்த ஞான்று அறிவை மயக்கி ஆணவத்தை ஓங்குவிக்கும். இதுபற்றியே 'நினைக்கண் டாணவமான நிர்மூட என்றார். இதனை."

"—யாரும்,
பொருளாகக் கொள்ளாத புல்லியரைச் சார்ந்து
மருளா லவரை மடிப்பாள்."

எனவும்,

"தேனு ரிதழ்செறிந்த செந்தா மரைக்கோலின்
மானு ரிணைவிழிப்பொன் மாதியைந்தால்—ஆனதை
வாப்பெருகும் பொய்யோ டழுக்காறு மல்குமேற்
காப்பில் சினம்பகைவன் கண்மைமிகும்—யாப்பின்றித்
தன்னை யுயர்த்து மதித்தல் பிறரிகழ்தல்

சொன்னயஞ்சேர் வின்மையன்புதோய்வின்மை—முன்னுக்
கொலைகளவு கட்காம மின்னகூடாத
தலைசிறந்து தம்மிடத்தைத் தாக்கும்—நிலனமைந்த
வாழ்க்கையெந் நாளும் வலியதுய ராம்பின்னர்
வீழ்க்கை கொடுநிரய வெவ்வாயிற்—காழ்க்கு
அறிவிலதா வெல்லாந்தீங் காமேற் பொருளின்
செறிவினு லென்னநலஞ் சேரும்.''

எனவும் கூறிய தமிழ்விடு தூதானும் அறியலாம்.

விடக்கு - ஊன். ஜீவகாருண்ய மின்றி உயிர்களைக்கொன்று அதன் ஊனை உண்பார் பாழாதல் திண்ணமாதலின், 'விடக்கன் பாய்நுகர் பாழனே,' என்றார்.

"ஊனைத்தின் றூனைப் பெருக்காமை முன்னினிதே"

என்றார் இனியவை நாற்பதினும்.

"உண்ணாமை யுள்ள துயிர்நிலை யூனுண்ண
அண்ணாத்தல் செய்யாது அளறு."

என்ற திருவள்ளுவர் திருவாக்கும்

"கொல்லாமற் கொன்றதைத் தின்னமற் குத்திரங் கோள்களவு
கல்லாமற் கைதவ ரோடிணங் காமற் கனவினும் பொய்
சொல்லாமற் சொற்களைக் கேளாமற் றோகையர் மாயையிலே
செல்லாமற் செல்வந் தருவாய் சிதம்பரதேசிகனே.''

என்ற பட்டினத்தடிகள் திருவாக்கும் கருதத்தக்கன.

மூதேவி என்ற சொல் சந்தம் பற்றி 'மூதேவி' என நீறுக்கல் விகாரம் பெற்றது. 'மகோததி': மகா + உததி - 'பெருஞ் சமுத்திரம்' என்பது பொருள்; இது வடமொழிப் புணர்ச்சி. கடல் ஆழத்தால் நீல நிறமாகக் காணும்; ஆகாய நீலநிறம் பிரதி பலிப்பதாலும் நீல நிறமாகக் காணும்; ஆதலின், 'நீலமகோததி' என்றார்.

"ஆழமுடைய கருங்கடல்."

என்பதும் இது. 'மகோததி அடைத்தது' என்றது வானரங்கள் திருவணை கட்டியதை 'அஞ்சாத ராவணன்' உயிர்களை அஞ்சுவிக்கும் யமனுக்கும் அஞ்சாதவன் ஆதலின், இராவணன் யமனையுந் தோற்றோடச் செய்தவன். இதனை,

"ஆர்த்தானைக் கரசுந்தி அமரர்கணத் தொடுமடர்த்த
போர்த்தானை இந்திரனைப் பொருதவனைப் போர் தொலைத்து
வேர்த்தானை உயிருண்டு மீண்டானை வெரின்பண்டு
பார்த்தானே யான்பட்ட பழிவந்து பாராயோ."

என்ற கம்பர் வாக்கானும் அறியலாம்.

முடிக்கன்றோர் கணை — 'பத்துத் தலைகளுக்கும் அவை தத்தி விழ ஒப்பற்ற ஒருகணை விட்டோன்' எனப் பொருளுரைத்தலும் ஆம். இராமர் கணை குறி பிழையாது செல்லும் ஆற்றலுடையது. இது மராமரம் ஏழுக்கும் ஒரு கணை விட்டதனா லறியலாம். இதனா லன்றே,

"வைதவைவின் மராமர மேழ் தொளைஎய்த வெய்தவர்"

எனவும்,

"சொல்லொக்கும் கடிய வேகச் சுடுசரம் கரிய செம்மல்
அல்லொக்கும் நிறத்தி னாண்மேல் விடுதலும் வயிரக்குன்றக்
கல்லொக்கும் நெஞ்சிற் றங்கா தப்புறங் கழன்று கல்லாப்
புல்லர்க்கு நல்லோர் சொன்னபொருளெனப் போயிற்றன்றே."

என்ற வாக்குகளாலும் அறியலாம்.

'இரகு' என்னும் சூரிய குலத்துச் சிறந்த அரசன் வழியில் வந்தமையால் இராமருக்கு இராகவன் எனப் பெயராயிற்று. சந்திரன் பூரணனாகி நாளு நாளுங் குறைந்து வந்து, ஒருநாள் இல்லாதே இருந்து, பின் தோன்றுகின்றான்; ஆதலின் 'முளைக்குஞ் சீத நிலா

என்றார். இது பற்றியே 'பிறை' என்ற பேரும் பிறைச் சந்திரனுக்கு ஏற்பட்டது; இதற்குப் 'பிற' என்பது பகுதி; பிற- 'உதி, தோன்று, முளை' என்பது பொருளாம். 'அந்தோ' - அச்சங் காட்டும் வியப்புரை. கணி-வேங்கை மரம்; வள்ளியம்மையார் பொருட்டுவேங்கை மரமாக நின்றது கந்தபுராணக் கதை. வள்ளி நாயகி, என்பது சந்தம் பற்றி 'வளிநாயகி' எனத் தொகுத்தல் விகாரம் பெற்றது.

சுரர் பயந் தீர்த்து அருள் செய்த பெருமானே! அஞ்சாது தேவரையும் வென்று வெற்றிக் கொடி நாட்டிய பத்துத்தலை ராவணன் தலை பத்துந் தத்த ஒரு கணை விட்டுக் கொன்றருளி உலகைக் காத்த பெருமாளின் மருகா! முருகா! அன்பு பூண்ட வள்ளி நாயகிக்காக வேடர் அந்தோ என்று அஞ்சி மயங்க வேங் கையான வேலாயுதனே! கடைபட்ட அடியேனைக் காப்பதுன் கடன் என வேண்டிக்கொள்ளும் இவ் வேண்டுகோளில் பல நுணித் தறியத்தக்கன உள. முருகனருளால் உன்னிக் கற்பார்க்குத் தோன்றாது போகா.

———

திருப்பழமலை (திருவாலிநன்குடி)

15. தனனதன தான தந்த தனனதன தான தந்த
தனனதன தான தந்த—தனதான.

கருவினுரு வாகி வந்து வயதளவி லேவ ளர்ந்து
கலைகள்பல வேதெ ரிந்து மதனாலே
கரியகுழல் மாதர் தங்கள் அடிசுவடு மார்பு தைந்து
கவலைபெரி தாகி நொந்து மிகவாடி
அரகரசி வாய வென்று தினமுநினை யாம லின்று
அறுசமய நீதி யொன்றும் அறியாமல்

அசனமிடு வார்க டங்கண் மனைகடலை வாசல்நின்று
அனுதினமு நாண மின்றி யழிவேனோ;
உரகபட மேல்வ ளர்ந்த பெரியபெரு மாள ரங்கர்
உலகளவு மால்ம கிழ்ந்த மருகோனே!
உபயகுல தீப வங்க விருதுகவி ராஜ சிங்க
உறைபுகலி யூரி என்று வருவோனே!
பரவைமனை மீதி லன்று இருபொழுது தூது சென்ற
பரமனரு ளால்வ ளர்ந்த குமரேசா!
பகையசுரர் சேனை கொன்று அமரர்சிறை மீளவென்று
பழநிமலை மீதி னின்ற பெருமாளே!

(இ - ள்.) உரக படமேல் - ஆதி சேடனது படத்தின் மேலே, வளர்ந்த - அறிதுயில் கொண்ட, பெரிய பெருமாள் அரங்கர் - பெரிய பெருமாள் என அடியார்களால் அழைக்கப் பெறும் ஸ்ரீரங்கப் பெருமானும், உலகு அளவு மால் - பூவலகத்தைத் தன் ஓரடியால் அளந்தருளிய வருமாகிய திருமால், மகிழ்ந்த - மகிழும்படியான, மருகோனே - மருகனே!, உபயகுல தீப - இரண்டு குலங்களுக்கும் தீபம் போன்றவனே!, அங்கவிருது கவிராஜ சிங்க வெற்றிக்கு அடையாளமாகிய விருதுகளைப் பெற்ற கவிராஜசிங்கமாக, உறை புகலி ஊரில் அன்று வருவோனே - வசிக்கத் தகுந்த சீகாழியில் முன்னாளில் திருஞான சம்பந்த மூர்த்தியாக அவதரித்தருளி வந்தவனே!, பரவை மனைமீதில் அன்று - (திருவாரூரில்) பரவை நாச்சியாருடைய திருமனைக்கு அக்காலத்தில், இரு பொழுது - இரண்டு முறை, தூது சென்ற - சுந்தர மூர்த்திகளுக்காகத் தூதுபோன, பரமன் அருளால் - சிவ பெருமான் திரு அருளினால், வளர்ந்த குமரேசா - வளர்ந்தருளிய குமரேசனே!, பகை அசுரர் - சத்துருக்களாகிய

அசுரர்களின், சேனை கொன்று - சைனியங்களைத் தலைவர்களோடு கொன்றழித்து, அமரர் சிறை மீள - தேவர்கள் சிறையினின்றும் மீளும்படிக்கு, வென்ற - வெற்றியைக் கொண்டு, பழநிமலை மீதில் - பழநிமலையின் மேலே, நின்ற பெருமானே - நிலைபெறத்தங்கி நின்றருளும் பெருமானே!, கருவின் உருவாகி வந்து - தாய் வயிற்றுக் கருப்பையில் உருவடைந்து பின் வெளிப்பட்டு வந்து, வயது அளவிலே வளர்ந்து - வயசு ஏறும்படியான அளவுகளுக்குத் தக்கபடி (உடல்) வளர்ச்சி அடைந்து, கலைகள் பல தெரிந்து - கலைஞானங்கள் பலவற்றை உணர்ந்து, மதனாலே - மன்மதனாலே, கரிய குழல் மாதர் - கருத்த நிறத்தை யுடைய கூந்தலைக் கொண்டுள்ள பெண்கள், தங்கள் அடி சுவடு - அந்தப் பெண்களின் அடியின் குறி, மார்பு உதைந்து - மார்பிலே அழுந்தப் பதியப்பெற்று, கவலை பெரிது ஆகி - மன வியாகூலம் அதிகரித்து, நொந்து - மன தழிந்து, மிக வாடி அதிகமான வாட்டத்தை யடைந்து, அரகர சிவாய என்று - அரகர சிவாய என வாயினாற் கூறி, தினமும் நினையாமல் நின்றும் - ஒரு நாளும் நினையாது இருந்தும், அறு சமய நீதி - ஆறு சமயங்களின் ஒழுங்குகளை, ஒன்றும் அறியாமல் - யாதொன்றையும் தெரிந்து கொள்ளாமல், அசனம் இடுவார்கள் தங்கள் - சோறு கொடுப்போருடைய, மனைகள் - வீடுகளின், தலைவாசல் நின்று - தலைவாசலிலே நின்று, அனுதினமும் - ஒவ்வொரு நாளும், நாணம் இன்றி - வெட்கம் இல்லாதபடி, அழிவேனோ - அழிந்து கெட்டுப் போவேனோ, எ - று.

(வி - ரை) சேர்த்தன்மையவாய சுக்கில சரோணிதம் கூடிக் கருப்பையிலே உருவடைதலின் 'கருவின் உருவாகி' என்றார். வயதுக் கேற்றபடி உடல் வளரும் ஆதலின் 'வயதளவிலே வளர்ந்து' என்றார். நின்னருள் இல்லாமையால் பல கலைகளைக் கற்றும் பெண்கள் மாயையிற் சிக்கினேன் என்பார் 'கலைகள் பலவே தெரிந்து மதனாலே * * * * மிக வாடி' என்றார்.

'மாதர் தங்கள் அடிசுவடு மார்பிற் பதைதல்' ஊடற் காலத்து நிகழ்வது. ஆறு சமயங்களாவன: சைவம், பாசுபதம், மாவிரதம், காளாமுகம், வாமமுகம், வைரவம் என்னும் அகச் சமயங்களே. இனி புறச் சமயம் ஆறவை. அவை:- உலோகாதயம், பௌத்தம், ஆருகதம், மீமாஞ்சம், மாயாவாதம், பஞ்சராத்திரம் என்பனவாம்.

அரங்கர் - 'ஸ்ரீரங்கத்தில் இருப்பவர்' என்பது பொருள். அரங்கம் - ஆற்றிடைக் குறை. உலகளவு மால் - 'உலகளாவ வளர்ந்த மால்' எனினும் ஆம். திருமாலின் திரு விக்கிரமாவதாரத்தை. 'உபய குல தீப' என்றது தாய் வழியையும் தந்தை வழியையும். முருகர்க்குத் தாய்வழி: நாரணனின் கூட்டம்; தந்தை வழி: சிவபெருமானின் கூட்டம்.

'அங்க' என்பதனை 'வங்க' எனக் கொண்டு; 'பிறவிக் கடலைக் கடப்பதற்கு மரக்கலம் போன்ற' எனப் பொருள் கூறலும் ஆம். "திருஞானசம்பந்தராக முருகக் கடவுளே அவதரித்தார்" என்னுங் கொள்கையுடையவ ராதலின் 'உறைபுகலி யூரிலன்று வருவோனே' என்றார். 'புகலி' என்றது ஸ்ரீகாழியை.

'இருபொழுது தூது சென்ற' என்பதனை 'ஒரு பொழுது தூது சென்ற' எனப் பாடமோதி, ஒரு பொழுது - ஒரு சமயம் எனவும், 'தனித்த இராக்காலம்' எனவும் பொருள் கூறுவர். சிவபெருமான் இரவில் பரவையார் மனைக்குத் தூது சென்றதைக் காளமேகமும்,

"ஆனா ரிலையே அயனுந் திருமாலும்
காணா ரடிமுடிமுன் காண்பதற்கு—மேனாள்
இரவுதிரு வாரூரி லெந்தைபிரான் சென்ற
பரவை திரு வாயிற் படி." என்றார்.

'குமரன்' - 'மன்மதனையும் அழகில்லாதவன் என்று சொல்லும்படி மிகுந்த அழகு உடையவன்' எனவும், 'என்றும் கௌமார

பருவத்தை (வாலிப கோலத்தை) உடையவன்' எனவும் பொருள் செய்வர். கு+மாரன்: கு - குச்சிதப் படுத்தல். மாரன் (மன்மதன்) மன்மதனையும் குச்சிதப் படுத்துவோன், பகை,: 'பகு' என்னும் பகுதியடியாகப் பிறந்த பெயர்; மனம் ஒட்டாது பிளவுபட்டிருப்போர்; இதே பொருளில் ஒன்னார், ஒட்டார், மாற்றார் எனவுந் துளவற்றைக் காண்க. திருவாவி நன்குடியில் உள்ள பழநி மலையில் முருகர் கனிபெறாது தந்தையிடம் மனத்தாபங் கொண்டு தவ வேடத்தோடு வந்திருந்தபொழுது இறைவர் வந்து "பழம் நீ" (நீயே ஞானப்பழம் என்பது பொருள்) என்றதனால் இத் திருக்குன்றிற் தலத்திற்கும் 'பழநி' என்றாயிற்று 'நீ' என்றது 'னி' என நின்றது குறுக்கல் விகாரம்.

"அடியார் பொருட்டு நீண்டு வளர்ந்து ஓரடியால் உலகை அளந்த மாத்தவன் மருகனே! சுந்தர மூர்த்திகள் பொருட்டுப் பரவையார் திருமனைக்கு இருமுறை நடு நிசியில் தூது சென்ற கருணை யுடையவர் அருளாற் பிறந்து வளர்ந்த குமரனே! துட்ட அசுரரை வேல்விட் டழித்துத் தேவர் சிறை மீட்ட கருணையை உடைய பெருமானே! என்னை நினையாது மாதரை நினைந்து உருகி நைந்து அழிவேனைக் காக்காயோ" என்பது இவர் இச் செய்யுளிற் குறித்ததாம்.

---

16. தனதன தத்த தானன
தனதன தத்த தானன
தனதன தத்த தானன — தனதான.

கதிரையவி லக்கு மாதர்கள்
புதியவி ரத்ன பூஷண
கனதன வெற்பு மேன்மிகு மயலான

கவலைம னத்த னாகினு
முனதுப்ர சித்த மாகிய
கனதன மொத்த மேனியு முகமாறும்

அதிபல வஜ்ர வாகுவும்
அயினுனை வெற்றி வேலதும்
அரவுபி டித்த தோகையு முலகேழும்

அதிரவ ரற்று கோழியு
மடியர்வ ழுத்தி வாழ்வுறும்
அபிநவ பத்ம பாதமும் மறவேனே!

இரவிகு லத்தி ராசத
மருவியெ திர்த்து வீழ்கடு
ரணமுக சுதத வீரிய குணமான

இளையவ னுக்கு நீண்முடி
அரசது பெற்று வாழ்வுற
இதமொ டளித்த ராகவன் மருகோனே!

பதினொரு ருத்தி ராதிகள்
தபனம்வி ளங்கு மாளிகை
பரிவொடு நிற்கு மீசுர! சுரலோக

பரிமள கற்ப காடவி
வரியளி சுற்று பூவுதிர்
பழநிம லைக்குள் மேவிய பெருமாளே!

(இ - ள்.) இரவி குலத்து - சூரிய வம்சத்துக்கு உரிய, இராசதம் மருவி - இராசத குணத்தைப் பொருந்தி, எதிர்த்து

வீழ் கடு இரணமுக - சத்துருக்களை எதிர்த்து விரும்பத் தகுந்த கடுமையான போர் முனையில், சுத்த வீரிய குணம் ஆன - சுத்த வீர குணத்தைக் கொண்ட, இளையவனுக்கு - தம்பியாகிய பரதாழ்வானுக்கு, நீண் முடி - புகழ் மிகுந்த கிரீடத்தையும், அரசு அது - அரசாட்சியையும், பெற்று வாழ்வு உற - பெற்று வாழும் பொருட்டு, இதமொடு அளித்த - பிரியத்தோடு தந்த, ராகவன் - ஸ்ரீராமருடைய, மருகோனே - மருகனே! பதினொரு உருத்திராதிகள் - பதினொரு உருத்திரர்களது, தபனம் விளங்கு மாளிகை - ஒளி விளங்கும் கோவிலில், பரிவொடு நிற்கும் ஈசுர - பிரியத்தோடும் நின்றருளிச் செய்யும் ஈச்சுரனே!, சுரர் லோகம் - தேவரின் உலகத்தில், பரிமள கற்பக அடவி - மிகுந்த நறுமணங் கொண்ட கற்பகச் சோலையிலுள்ள, அரி அளி - ரேகைகள் பொருந்திய வண்டுகள், சுற்று பூஉதிர் - சூழ்கின்ற மலர்கள் உதிர்ந்துள்ள, பழநி மலைக்குள் மேவிய பெருமாளே - பழநிமலை என்னும் திருக் குன்றில வீற்றிருந்தருளும் பெருமானே!' கதியை விலக்கும் - (உயர்ந்த) மோக்ஷ கதியைத் தடுக்கும், மாதர்கள் - பெண்களின், புதிய - புதுமையான, இரத்ந பூஷண - மணியணிகள் பூண்ட, கனதன வெற்புமேல் - மிகப் பெரிய தனங்களாகிய மலைகளின்மேல், மிகு மயலான - மிகவுங் காதல் மயக்கங் கொண்டுள்ள; கவலை மனத்தன் ஆகிலும் - கவலைப் படுகின்ற மனதை உடையவனானாலும், உனது ப்ரசித்தம் ஆகிய - முருகக் கடவுளே! உன்னுடைய கீர்த்திவாய்ந்த; கனதனம் - சிறந்த மாற்றுயர்ந்த பொன்னை, ஒத்த மேனியும் - நிகர்க்கும் அழகிய மேனியும், முகம் ஆறும் - ஆறு அழகிய முகங்களும், அதி பலம் - மிகுந்த வல்லமை வாய்ந்த, வஜ்ர வாகுவும் - வயிரமணி போலும் புயங்களையும், அயில் நுனை - கூரிய முனையைக் கொண்டுள்ள; வெற்றி வேலும் - வெற்றி பொருந்திய வேலாயுதத்தையும்,

அரவு பிடித்த - அரவைப் பற்றிக் கொண்டிருக்கின்ற, தோகை யும் - மயிலையும், உலகு எழும் - எழாகிய உலகங்களும், அதிர - நடுங்கும்படி, அரற்று கோழியும் - கூவுஞ் சேவலையும், அடியார் வழுத்தி - தொண்டர்கள் துதித்து, வாழ்வுறும் - தங்கள் வாழ் வைப் பெறுகின்ற, அபிநவம் பத்ம பாதமும் - புதிதாகிய தாமரைப் பூவை நிகர்த்த திருத்தாள்களையும், மறவேன் - ஒரு காலத்தும் நான் மறக்க மாட்டேன், எ - று.

(வி - ரை) விலைப் பெண்கள் உயர்ந்த பரகதியைக் கெடுத்து நரகத்தி லிடர்பட விடுவோர்கள் ஆதல்பற்றி 'கதியை விலக்கும் மாதர்கள்' என்றார்.

"பரகதியைப் போக்கு பொதுப் பாவையரை விட்டொழியின்
நரககதிக் காளாகேன் நான்."

என்றதும் மெய்ப்பிக்கும். 'மாதர்: காதலை உண்டாக்குவோர்' என்னுங் காரணம் பற்றிவந்த பெயர். வெற்ப தனத்துக்குவமை ஆதலின் 'கனதன வெற்பு' என்றார்.

வஞ்ஜிரம் உறுதி குறித்து உவமை ஆக்கப் பட்டது.
"வயிரக்கல் லொக்கு நெஞ்சு"

என்றார் கம்பரும். பாகு என்னும் வடமொழி 'வாகு' எனத் தமி ழில் வந்தது. அயில் - கூர்மை. வெற்றி - வென்றதன்மேல் ஆகிய புகழ். வேல் - 'வெல்வது' என்னும் பொருளது. 'தோகை': தோகையையுடைய மயிலைக் குறித்தது. இது சினையாகு பெயர். மயிலும் கோழியும் மாவாக நின்ற அசுரன், வேலாற் பிளவு பெற்ற போது மாறிய உருவங்கள். அவை முறையே முன்னைத் தவத்தால் முருகர்க்கு ஊர்தியுங் கொடியும் ஆயின.

திருமால் தாமத குணன் ஆதலினாலும், இராமாவ தாரத்தில் இராசத குணங் காட்டினமையாலும், 'இரவி குலத்து இராசத

மருவி' என்றார். 'இளையவன்' என்றது பரதனை. தபனன் - அக்கினி; 'பொருள்களைத் தபிப்பவன்' என்பது பொருள்; தபித்தல் - அழித்தல், வாட்டல். ஈசான் - 'அடியார் வேண்டும் ஐசுவரியங்களை எல்லாந் தருவோன்' என்றும், 'மோட்சமாகிய ஐசுவரியத்திற்குத் தலைவன்' என்றும் பொருளாம். கற்பக + அடவி - கற்பகாடவி என வடமொழித் தீர்க்க சந்தி பெற்றது.

---

"அன்புடைத் தம்பிக்கு அரசு தந்த இராமரின் மருகா! ஈசுரனே! நான் மாதர் மயலால் கவலை மனத்தை உடையவன். ஆனாலும், உன்னை மறந்திலன்; எனக்கு அருள் செய்" என்றதாம்.

17. தானனந் தனனத் தானனந் தனனத்
தானனந் தனனத் தனதான.

காரணிந் தவரைப் பாரடைந் துவினைக்
காதலினெஞ் சயரத் தடுமாறி
காணரம் புதிரத் தோல்வழும் புறுபொய்க்
காயமொன் றபொருட் டடியேனுந்
தாரிணங் குகுழுஞ் கூரணிந் தவிழிச்
சாபமொன் றநுதற் கொடியார்தம்
தாள்பணிந் தவர்பொற் றோள்விரும் பிமிகத்
தான்மெலிந் துவிடத் தருமோதான்
சூர்துண் டுபடப் போர்கடந் துதொழத்
தோயமுஞ் சுவறப் பொருவேலா!
தூய்மைகொண் டகுறத் தோகைநின் றபுனச்
சூழ்பெருங் கிரியிற் றிரிவோனே!
ஆரணன் கருடத் தாரணன் புகழ்தற்
காலமுண் டவருக் குரியோனே!

ஆலயம் பழனச் சோலையின் புடைசுற்
றாவிநன் குடியிற் பெருமாளே.

(இ - ள்.) சூரர் துண்டுபட - அசுரர்கள் துண்டு பட்டழிய, போர் கடந்து - அசுர யுத்தத்தில் வென்று, தொழ - எல்லோரும் வணங்கும்படி, தோயமும் சுவற - கடல் நீரும் வற்ற, பொரு வேலா - போரைச் செய்த வேலாயுதத்தை யுடையவனே!, தூய்மை கொண்ட - பரிசுத்தத்தை உடைய, குறத்தோகை - மயில்போலும் வள்ளி யம்மையார், நின்ற புனம் - வசித்துக்கொண்டிருந்த தினைப் புனமானது, சூழ் பெருங்கிரியில் - சூழ்ந்துள்ளதாகிய பெரிய மலையினிடத்து, திரிவோனே - வள்ளி யம்மையார் பொருட்டு உலாவினவனே!, ஆரணன் - பிரம்மாவும், கருடத் தாரணன் - கருடனைத் துவஜமாகக் கொண்டுள்ள திருமாலும், புகழ்தர - தன்னைப் புகழும்படி, ஆலம் உண்டவருக்கு - (திருப்பாற்கடலிற் றோன்றிய) ஆலகால விடத்தை அமுது செய்த சிவபெருமானுக்கு, உரியோனே - அன்பிற்கு உரிய புத்திரனே!, ஆலயம் - கோயில்களும், பழனம் - வயல்களும், சோலை - சோலைகளும், இன் புடை - இனிய பக்கங்களில், சுற்று - சூழ்ந்திருக்கப் பெற்ற, ஆவிநன்குடியின் பெருமாளே - திருவாவி நன்குடி என்னுந் திருத்தலத்தில் எழுந்தருளி யிருக்கும் பெருமானே!, கார் அணிந்த - மேகத்தைப் பூண்ட, வரை - மலைகளையுடைய, பார் அடைந்து - பூமியிலே பிறந்து, வினை காதல் - முன்னை வினைகளினாலே (இப் பிறப்பிலே) எற்பட்டுள்ள காம மயக்கத்தால், நெஞ்சு அயர தடுமாறி - மனம் மெலிந்து அறிவு கலங்கி, கால் நரம்பு - காலையும் நரம்பையும், உதிரம் தோல் - இரத்தத்தையும் தோலையும், வழும்பு உற - நிணத்தையும் பெற்றுள்ள, பொய் காயம் ஒன்று - பொய்யான தேகமாகிய இந்த ஒன்றை, பொறுத்து - சுமந்து கொண்டு, அடியேன் - தொண்டனாகிய நான், தார் இணங்கு

குழல் - மலர் மாலை சூடிய கூந்தலையும், கூர் அணிந்த விழி - மையை அழகமையப் பெற்ற கண்களையும், சாபம் ஒன்று நுதல் - வில்லை நிகர்த்த நெற்றியையும் பெற்றுள்ள, கொடியார் - வஞ்சிக் கொடியை ஒத்த மாதர்களின், தாள் பணிந்து - பாதங்களை வணங்கி, பொன் தோள் விரும்பி - அழகிய தோள்களை விரும்பி, மிகமெலிந்துவிட - மிகவும் மெலிவடைந்து விட, தகுமோ - தகுதியுடைய தாகுமோ, எ - று. 'தான்': அசை.

(வி - ரை) கார் - மேகம்; (ஆகுபெயர்). வரை - மலை; 'மூங்கில் விளைவது' என்னும் பொருளது; இதுவும் ஆகு பெயர் (இது இருமடி.) பார் - பூமி; 'பருமை உடையது' என்னும் பொருளது; இனி, "பார்வைக்கு உள்ளதுபோல இருந்து பின் இல்லாதொழிவது" என்னும் பொருள் எனவுங் கூறுவர்.

தேகம - என்பு, தசை, நரம்பு முதலிய பலவகைத் தாதுக்களால் ஏற்பட்டதாதலின் 'சாலம்' பதிரத் + + காயமொன்று' என்றார் இதனை,

"துடருங் கொழுவுங் குருதியு மென்பும்
தொடரு நரம்பொடு தோலும்—இடையிடையே
வைத்த தடியும் வழும்புமா மற்றிவற்றுள்
எத்திறத்த ளீர்ங்கோதை யாள்."

என்னும் நாலடியாரானும் அறியலாம்.

இதனாலன்றோ தாயுமானவரும்,

'மும்மலச் சேறான முழுக்கும்பி பாகமெனும்
இம்மலக் காயத்துள் இகழ்ச்சிவைப்ப தெந்நாளோ?"

என்றார்.

கூரணிந்த விழி - 'மை மிகத் தீட்டப் பெற்ற கண்', 'அம்பின் கூர்மையைக் கொண்ட விழி' என்பாரும் உண்டு. கொடியார் -

'மின்னற் கொடியை ஒத்தவர்' 'பூங்கொடியை ஒத்தவர்' எனினும் அமையும்; 'கொடிமையை உடையவர்' என்னும் பொருளுந் தொனித்தல் காண்க. 'தாள் பணிதல்' - புலவியில் மாதர் தாளை வணங்குவர் என்பது கவி மரபு. இதனைத் துறவியாகிய சிவப்பிரகாசரும் "இறைவனை புலவியில் உமைதாள் பணிந்தார்" என்றார். இதனை,

"ஆதி பகவன் தனது ஊடல்
தணிப்பான் பணிய அவ்விறைவன்
பாத மிறைஞ்சு மதற்கும்நெற்றிப்
பகையும் அல்குற் பகையுமாம்
சீத மதியும் அரவும்விழுஞ்
செயற்கு முவகை செயாமலலை
மாது பணியும் அதற்குமனம்
மகிழுமை தாளை வணங்குவாம்."

என்றதனுனும் அறிக.

'தோயம் சுவற' என்றது சடல் சுவற வேல் விட்டதைக் குறிக்கும். இதனை,

"சுறங்குதிரைப் பெருங்கடலும் காரவுணப்
பெருங்கடலுங் கலங்கக் கார்வந்
துறங்குசிகைப பொருப்புஞ்சூர் உரப்பொருப்பும்
பிளப்பமறை உணர்ந்தோர் ஆற்றும்
அறங்கு வும் மகத்தழலும் அவுணமட
வார்வயிற்றின் அழலுமூள
மறங்குலவு வேலெடுத்த குமரவேள்
அடிக்கமலம் வணக்கஞ் செய்வாம்."

என்ற பரஞ்சோதியார் வாக்கானும் அறிக.

தூய்மை - மனச் சுத்தம். 'தோகை': வள்ளியம்மையாரைக் குறித்தது; 'தோகைபோலுஞ் சாயலை உடையவள்' என்பது பொருள்; இதில் தோகை என்னும் இறக்கையைக் குறிக்கும்சொல் மயிலைக் குறிக்கும்போழ்து சினை ஆகுபெயர்; 'மயில்' என்றது வள்ளியம்மையாரைக் குறிக்கும்போது உவமை ஆகுபெயர். 'ஆலயம் பழனச் சோலை' என்பதை 'ஆலையும் பழனச் சோலை' எனவும் பாடம் ஓதுவர். ஆலையும் - சர்க்கரை ஆலைகளும் என்பது பொருளாம். திரு - லட்சுமி தேவியும், ஆ - காமதேனுவும், இனன் - சூரியனும் (பூசித்து அமர்ந்த) குடி - ஊர். இந்தத் திருவாவிநன்குடி என்ற தலத்தில் திருமகளும் காமதேனுவும் சூரியனும் வந்து முருகப்பிரானைப் பூசித்துப் பேறுபெற்றனர்; ஆதலால், "திருவாவிநன்குடி" என ஊர் பெயர் ஆயிற்று என்பது பழநிதலப் புராணம்.

"அரியும் பிரமனும் தொழ ஆலால முண்ட சிவபெருமான் புத்திரனே! அசுரரைத் தேவர் துயர் தீர அழித்த பெருமையையும் வேலாயுதத்தையும் உடைய பெருமானே! உலகில் தேகத்தைச் சுமந்து மாதர் மயலில் மெலிந்தழிதல் நின் பாதத்தைத் துதிக்கும் எனக்குத் தகுதி யுடையதாகுமோ? நீ அருள் செய்யாயோ என்பது குறிப்பித்ததாம்.

---

## திருவேரகம் [சுவாமி மலை]

18. தனனதன தனனதன தனனு தனத்ததன
தனனதன தனனதன தனனு தனத்ததன
தனனதன தனனதன தனனு தனத்ததன
—தனதானு.

குமர! குருபர! முருக குகனே! குறச்சிறுமி
கணவ! சரவண! நிருதர் கலகா! பிறைச்சடையர்
குருவெனநி லுரையுதவு மயிலா வெனத்தினமு முருகாதே

குயின்மொழிநன் மடவியர்கள் விழியா லுருக்குபவர்
தெருவிலனை வரதமனை மெனவே நடப்பர்கலை [ருக்
கொளுமவர்க ளுடைமைமன முடனே பறிப்பவர்க ளனைவோ

தமதுவச முறவசிய முகமே மினுக்கியர்கள்
முலையிலுறு துகில்சரிய நடுவீதி நிற்பவர்கள்
தனமிலியர் மனமுறிய நழுவா வுழப்பியர்கண் வலையாலே

சதிசெய்தவ ரவர்மகிழ அணைமீது ருக்கியர்கள்
வசமொழுகி யவரடிமை யெனமாக ரிட்டதொழில்
தனிலுழலு மசடனையு னடியேவ ழுத்தவரு டருவாயே!

சமரமொடு மசுரர்படை களமீ தெதிர்த்தபொழு
தொருநொடியி லவர்கள்படை கெடவே யெடுத்தவனி
தனினிருதர் சிரமுருள ரணதூள்படுத்திவிடு செருமீதே

தவனமொடு மலைகைநட மிடவீ ரபுத்திரர்கள்
அதிரநின மொடுகுருதி குடிகா ளிகொக்கரிசெய [டி
தசையுணவு தனின்மகிழ விடுபேய் நிரைதிரைகள் பலகோ

திமிதமிட நரிகொடிகள் கழுகா டரத்தவெறி
வயிரவர்கள் சுழலவொரு தனியா யுதத்தைவிடு
திமிரதன காவமரர் பதிவாழ்வு பெற்றுலவு முருகோனே;

திருமருவு புயனயனொ டயிரா வதக்குரிசில்
அடிபரவு பழநிமலை கதிர்கா மமுற்றுவளர்
சிவசமய ! அறுமுகவ ! திருவேர கத்திலுறை பெருமாளே!

(வி - ரை) அசுரர் படை - (சூரபதுமன் முதலிய) அசுரர்களின் சேனையானது, சமரமொடு - போர்த்தொழிலோடு, களமீது எதிர்த்த பொழுது-போர்க்களத்தில் எதிர்த்துப் போர் செய்ய வந்தபோது, ஒரு நொடியில் - ஒரு நிமைப்பொழுதில், அவர்கள்

படை கெட - அவர்களின் சைனியங்கள் அழிந்தொழிய, வேல் எடுத்து - வேலாயுதத்தை எடுத்து, அவனிதனில் - பூமியில் நிருதர் சிரம் உருள - அசுரர்களின் தலைகள் உருண்டு விழவும், ரணதூள் படுத்தி விடு செருமீது - யுத்தகளத்தில் பொடி படுத்தி அழிக்கும் யுத்தத்தில், தவனமொடு - தாகத்தோடு, அலகை நடமிட - பேய்கள் கூத்தாடவும், வீர புத்திரர்கள் அதிர - வழி வழி வந்த வீரர்கள் நடுங்க, கொக்கரி செய் - கொக்கரிக்கின்ற; நிணமொடு குருதி குடி காளி - கொழுப்புடனே இரத்தத்தைக் குடிக்கின்ற காளிகள்; தசை உணவுதனில் மகிழ - மாமிசமாகிய ஆகாரத்தில் களிப்பு அடைய, விடுபேய் நிரை திரள்கள் - விடுகின்ற பேயின் கூட்டங்கள், பலகோடி - பல கோடிகள், திமிதமிட - கூத்தாட, நரி காக கள் கழுகு ஆட - நரிகளும் காகங்களும் கழுகுகளும் திளைக்கின்ற களிப்பினால் ஆட, ரத்தவெறி வயிரவர்கள் சுழல - ரத்த வெறியைக் கொண்டுள்ள வயிரவர்கள் சுற்றிச் சுற்றிவர, ஒரு தனி ஆயுதத்தை விடும் - ஒரு இணை சொல்லற்கில்லாத படையைப் பிரயோகித்த, திமிரம் தினகர - (ஆன்ம கோடிகளின் அஞ்ஞானமாகிய) இருட்டை அகற்றும் சூரியனே!, அமரர் பதி - தேவலோகத்தவர்க்கு அரசனாகிய இந்திரன், வாழ்வு பெற்று உலவும் முருகோனே - வாழ்வு பெற்று உய்யுமாறு உலாவிய முருகக் கடவுளே!, திருமருவு புயன் - லட்சுமி தேவியை அணையும் தோள்களை யுடைய மாலும், அயனொடு - பிரமனுடன், அயிராவதம் குரிசில் - ஐராவதம் என்னும் வெள்ளை யானையையுடைய தேவேந்திரனும், அடிபரவு - திருவடிகளைத் துதித்து வணங்குகின்ற, பழநிமலை கதிர்காமம் உற்று - பழநி மலையிலும் கதிர்காமத்திலும் பொருந்தி, வளர் சிவசமய - உயர்வடைந்து கொண்டே இருக்கும் சைவ சமயத்திற்கு நாயகனே!, அறுமுகவ - ஆறு திருமுகங்களை உடையவனே!, திருவேரகத்தில் உறை பெருமாளே - திருவேரகம் என்ற திருத்தலத்தில்

தங்கி யருளும் பெருமானே!, குமர - குமரக் கடவுளே!, குருபர - குருபரனே!, குகனே - குகக் கடவுளே!, குறச் சிறுமி கணவா - இளம் பருவத்தை யுடையவளும் குறவர் குலத்தில் வளர்ந்தவளும் ஆகிய வள்ளியம்மையாரின் கணவனே!, சரவண - சரவணேற்பவனே! நிருதர் கலகா - அசுரர்களுக்குத் துன்பத்தை உண்டாக்கியவனே!, பிறை சடையர் - பிறைச் சந்திரனைச் சடா பாரத்தில் அணிந்தருளிய சிவபெருமான், குரு என - குருவே என்று, நல் உரை உதவும் மயிலா - நல்ல புகழ்ச்சிச் சொற்களைச் சொல்லும் பெருமை வாய்ந்த - மயில் வாகனக் கடவுளே!, என - என்று கூறி, தினமும் உருகாது - ஒவ்வோர் நாளும் மனம் உருகாமல், குயில் மொழி நல் மடவியர்கள் - குயிலை ஒத்த இனிய குரலோடு கூடிய சொற்களைச் சொல்லும் நல்ல இளம் பருவப் பெண்களும், விழியால் உருக்குபவர் - கண்களால் நெஞ்சைக் கரைப்பவர்களும், தெருவில் அனவரதம் அனம் என நடப்பர் - தெருக்களிலே எப்பொழுதும் அன்னப் பறவையைப் போல நடப்பவர்களும், நகை கொளும் அவர்கள் உடைமை - (தம்மிடத்து ஆசை கொண்டு) சிரிக்கின்ற காளையர்கள் தம் செல்வத்தை, உடனே பறிப்பவர்கள் - உடனே அபகரிப்பவர்களும், அனைவோரும் - எப்படிப் பட்டவரும், தமது வசம் உற - தம் வசப்படும்படி, வசிய முகம் மினுக்கியர்கள் - கண்டாரைத் தன் வயப்படுத்தும்படி முகத்தை அழகு செய்து கொள்ளுபவர்களும், முலையில் உறு துகில் சரிய - தமது தனங்களின்மேல் பொருந்தி யிருக்கும் ஆடையை நழுவ விட்டு, நடு வீதி நிற்பவர்கள் - நடுத் தெருவில் நிற்பவர்களும், தனம் இலியர் - செல்வப் பொருள் அற்றவர்களுடைய, மனம் முறிய - மனம் முறியும்படி, நழுவா உழப்பியர் - நழுவவிட்டு உழப்பி விடுகின்றவர்களும், கண் வலையால் - கண்ணாகிய வலையினால், சதி செய்து - வஞ்சனை செய்து, அவர் அவர் மகிழ - (தன்னிடம் வந்த) ஒவ்வொருவரும் மகிழும்படி, அணை மீது - பஞ்சணை

யின்மேல், உருக்கியர்கள் - மனதை உருகச் செய்பவர்களும் ஆகிய விலைமாதர்களின், வசம் ஒழுகி - அவர் வசத்தில் சஞ்சரித்து, அவர் அடிமை என - அவர்களுடைய அடிமைகள் என்று சொல்லும்படி, மாதர் இட்ட தொழில்தனில் உழலும் - பெண்கள் ஏவிய தொழிலிலேயே திரிகின்ற, அசடனை - பயனற்றவனாகிய என்னை, உன் அடி வழுத்த அருள் தருவாய் - உன் திருவடிகளைத் துதிக்கும்படி நின் அருளைச் செய்வாயாக, எ - று.

(வி - ரை) குமர குருபர - 'என்னும் இளமைக் கோலத்தை உடையவனே!' 'பரனுக்குங் குருவாக விளங்கினவனே!' என்பது பொருள். நிருதர் கலகா - 'தேவர்களுக்கு இன்பஞ் செய்யும் பொருட்டுத் தருமந் தவறிய அசுரர்களுக்குத் துன்பத்தை உண்டாக்கியவனே!' என்பது பொருளாம். பிறைச்சடையர் குரு என நல்லுறை உதயம் - 'அறிய பிக்கவர்களைத் தலைமேற் கொண்டு தாங்கும் தூய அறிவுடைய தனி முதற் கடவுளாகிய இறைவருந் தனக்குக் குரு என்று புகழும் மயில் வாகனத்தவனே!' என்பது பொருள் "தான் மாமதியுடையவன் என்பதை ஆன்மாக்கள் உணர்ந்து தன்னையடைந்து உய்வெய்த வேண்டும் என்னுங் கருணையாலும் மதியைச் சடையிற் சூடினர்" என்பாரும் உண்டு. இதனை,

"தூமதிச் சடைமிசைச் சூடுதல் தூநெறி
ஆமதி யானென வமைத்த வாறே."

என்னும் பட்டினத்தடிகள் வாக்கானும் அறியலாம்.

விலை மாதர்கள் தம்மை அழகு செய்வது காளையர்கள் மயங்கித் தம் வயமாகவே. இதனாலன்றோ,

"மேனி மினுக்குதல் வேசையர்க் கழகு."

என்றார் ஔவையாரும். குலமகளிர்க்குக் கூச்சம் வேண்டும்; விலைமகளிருக்குக் கூச்சங் கூடாது. முலைமேல் விருந்த கலை சோர

காளையர் கண்டு கருத்தழிந்து காமமீளவே தெருவில் நிற்பார் என்பதனைக் காட்ட 'முலையிறுக துகில் சரிய நடுவீதி நிற்பவர்கள்' என்றார். இதனாலன்றோ,

"கூசி நிலையில்லாக் குலக்கொடியும் கூசிய
வேசையுங் கெட்டு விடும்."

என்றனர் பெரியார்.

'கண்வலையாலே சதி செய்து' மான் போலும் தம் மருண்ட பார்வை என்னும் வலையால் காமுகராகிய பட்சியைப் பிடிப்பவர் என்பது தோன்றக் கிடப்பது காண்க. இதனானன்றோ முன் ஓரிடத்து 'மையிட்டு மருட்டிகள்' என்றார் இவரே. 'தாயுமானரும்'

"காமனைவா வென்றிருண்ட கணைவலையை வீசுமின்னார்
நாம மறந் தருளை நண்ணுநா ளெந்நாளோ?"

என்றருளிச் செய்தனர். பரகுருவுக்கும் குருவானவர், அகத்தியர் முதலியருக்கும் உபதேசஞ் செய்தருளியவர் ஆதலினாலும் அன்பர் கோடிகளின் அறிவை மயக்கும் அல்லல்களை நீக்குவர் ஆதலினாலும் 'திமிர தினகர' என்றார். அயிராவதக் குரிசில் - இந்திரன்; குரிசில் சிறந்த ஆண் மகனைக் குறிக்கும் ஆண்பாற் பெயர். கதிர்காமம் - கொழும்பத் தீவத்துள்ள கந்தக் கடவுள் திருத்தலம். 'திருவேரகம்' என்றது குடந்தைக்கு மூன்று மயிலிலுள்ள சுவாமிமலையை.

கொடுமையே செய்யும் அசுரர்களைத் தேவர் பொருட்டு அழித்துக் காத்த முருகக் கடவுளே! மருட்டும் மாதர் வலையிற் சிக்கி மயங்கி மடியும் அசடனாகிய எனக்கு உன் திருவடி வழுத்தும் பேறு எய்தும் அருளைச் செய்வாயாக என்பது குறிப்பித்ததாயிற்று.

---

19. தனனு தனத்த தனனு தனத்த
தனனு தனத்த தனதான.

மருவே செறித்த குழலார் மயக்கி
மதனு கமத்தின் விரகாலே
மயலே யெழுப்பி யிதமே யருத்த
மலைநேர் முலைக்கு ளுறவாகிப்
பெருகாத லுற்ற தமியேனை நித்தல்
பிரியாத பட்ச முடனேயென்
பிழைபொ றுத்து னிருதாளி லுற்ற
பெருவாழ்வு பற்ற அருள்வாயே;
குருவா யரற்கு முபதேசம் வைத்த
குகனே! குறத்தி மணவாளா!
குளிர்கா மிகுந்த வளர்பூக மெத்து
குடகா விரிக்கு வடபால்வாழ்
திருமால் தனக்கு மருகா! உமைக்கொர்
சிறுவா! கரிக்கும் இளையோனே!
திருவே ரகத்தி லுறைவா யரக்கர்
சிரமே துணித்த பெருமாளே!

(இ-ள்) குருவாய் - தேசிகர் உருவாய், அரற்கும்-சிவ பெருமானுக்கும், உபதேசம் வைத்த குகனே - திருப்பிர ணவ மந்திரோபதேசஞ் செய்தருளிய திருக்குமரனே!, குறத்தி மணவாளா - வள்ளி தேவியாரை மணந்தருள் செய்த திருக்கல் யாண கோலத்தை உடையவனே!, குடகாவிரிக்கு - மேற்கே இருந்து வரும்படியான திருக்காவிரி யாற்றிற்கு, வடபால் வாழ் - வடக்குத் திக்கில் வாழ்கின்ற, திருமால் தனக்கு மருகா - மகா

விஷ்ணுவுக்கு மருமகனே!, உமைக்கு ஓர் சிறுவா - உமாதேவி யாருக்கு ஒரு புத்திரனே!, கரிக்கும் இளையோனே - யானை முகக்கடவுளாகிய விநாயகருக்குத் தம்பியே!, திருவேரகத்தில் உறைவாய் - திருவேரகம் என்னும் திருப்பதியில் எழுந்தருளி இருப்பவனே!, அரக்கர் சிரம் துணித்த - அசுரர்களின் சிரங்களை எல்லாம் வெட்டி வீழ்த்திய, பெருமாளே - பெருமானே!, மருவே செறித்த - வாசனையையே மிகவுங் கொண்டுள்ள, குழலார் - கூந்தலையுடைய பெண்கள், மயக்கின் - ஆசை மயக்கத்தினால், மதன் ஆகமத்தின் - மன்மதன் நூலாகிய கலவி சாஸ்திரத்தின், விர காலே - தந்திரங்களினாலே, மயல் எழுப்பி - காமத்தை மூட்டி, இதழே அருத்த - அதர பானத்தை ஊட்ட, மலை நேர் - வெற்பை ஒத்த, முலைக்குள் - தனங்களுக்குள், உறவு ஆகி - கலந்து கூடி, பெரு காதல் உற்ற - மிக்க காதலைக் கொண்டுள்ள, தமியேனை - பற்றுக்கோடு அற்றவனாகிய அடியேனை, நித்தல் - தினந்தினம், பிரி யாத பட்சமுடனே - அகலாத அவாவோடு, என் பிழை பொறுத்து - என்னுடைய குற்றங்களைப் பொறுத்தருளி, இரு தாளின் உற்ற - இரண்டு திருவடிகளிலும் பொருந்திய, பெரு வாழ்வு பற்ற - பெரிய முத்தி இன்ப வாழ்வை அடியேன் கைக்கொள்ள, அருள்வாய் - அருளைச் செய்வாயாக, எ - று.

(வி - ரை.) 'மருவே' ஏகாரம் இசை ஏகாரமும் ஆம். மத னாகமம் - இன்பநூல்; 'கொக்கோகம்' என்பாரும் உண்டு. விரகு - தந்திரம். முலைக்கு ளுறவாகி: முலைக்கு + உள் + உறவு ஆகி எனப் பிரித்துத் 'தனங்களிடத்து உள்ளம் மிகவும் ஆசை கொண்டவ னாகி' எனப் பொரு ளுரைத்தலும் ஆம். 'தமி' தனிமைப் பொரு ளுணர்த்தும் ஆதரவு அற்றவன்; உதவி செய்யச் சகாயம் இன்றி யிருப்பவன் என்பது பொருளாம். 'குருவாய் அரற்கும்' என்றதில் உள்ள உம்மை உயர்வு சிறப்பு உம்மை. 'திருமால் மருகா' என்றது

திருமாலுக்குத் தங்கை மகன் முருகக் கடவுளாதலினால் திருமாவின் புத்திரிகளாகிய சுந்தரி, அமுத வல்லிகளாகிய இருவருமே தவத்தால் வள்ளி தேவானைகளாக வந்து முருகக்கடவுளை மணந்ததனாலும் மருகன் என்றார். உமைக்கு "மாயவன் சகோதரி" என்னும் உண்மையும் அறிக.

---

20. தானன தந்தன தத்தன தத்தன
தானன தந்தன தத்தன தத்தன
தானன தந்தன தத்தன தத்தன தனதான.

கோமள வெற்பினை யொத்த தனத்தியர்
காமனை யொப்பவர் சித்தமு ருக்கிகள்
கோவைப ழுத்தவி தழ்த்தமும் விற்பவர் மயில்காடை
கோகில நற்புற வக்கொடு குக்குட
ஆரணி யப்புள்வ கைக்குரல கற்றவர்
கோலவி ழிக்கடை யிட்டும ருட்டியர் விரகாலே
தூமமலர்ப்பளி மெத்தைப டுப்பவர்
யாரையு மெத்தி மனைக்கு ளழைப்பவர்
சோலைவ னக்கிளி யொத்தமொ ழிச்சியர் நெறிகூடா
தூசுநெ கிழ்த்தரை சுற்றியு டுப்பவர்
காசுப றிக்கம றித்துமு யக்கியர்
சோதக வித்தைப டித்துந டிப்பவ ருறவாமோ;
மாமர மொத்துவ ரிக்கு ணெருக்கிய
சூரனை வெட்டிநி ணக்குட லைக்கொடி
வாரண மெச்சவ ளிக்கு அயிற்குக கதிர்காம!

மாமலை யிற்பழ நிப்பதி யிற்றனி
மாகிரி யிற்றணி கைக்கிரி யிற்பர
மாகிரி யிற்றிரை சுற்றிவ ளைத்திடு மலைவாயில்
ஏமமெ யிற்பல வெற்பினி னற்பதி
னாலுல கத்தினி லுற்றுறு பத்தர்கள்
ஏத்துநி னைக்கது மெய்த்தவ ளித்தரு ளிளையோனே!
ஏரக வெற்பெனு மற்புத மிக்கசு
வாமிம லைப்பதி மெச்சிய சித்த!இ
ராசத லட்சனை வுத்தமி பெற்றருள் பெருமாளே!

(இ-ள்) மாமரம் ஒத்து - மாமரத்தை ஒத்த உருவத்தைக் கொண்டு, உவரிக்குள் - சமுத்திரத்துக்குள் ஒளித்துக் கொண்டு, நெருக்கிய சூரனை - துன்பங்களையுண்டாக்கிய சூரபதுமனை, வெட்டி அணம் குடலை - சங்கரித்துக் கொழுப்பையும் குடலையும், கொடு வாரணம் மெச்சும் - துவஜமாகிய கோழி புகழ்ந்து கொள்ளும்படி, அளித்த அயில் குக - ஈந்தருளிய வேலாயுதத்தையுடைய குகப்பெருமானே!, கதிர்காம மா மலையில் - கதிர் காமம் என்னும் ஊரில் உள்ள சிறந்த மலையிலும், பழநி பதியில் - பழநித் தலத்தின்கணுள்ள, தனி மா கிரியில் - இணை சொல்லுதற்கரிய சிறப்பு வாய்ந்த மலையிலும், தணிகை கிரியில் - திருத்தணிகை மலையின்மேலும், பரமா கிரியில் - திருப்பரங் குன்றத்திலும், திரை சுற்றி வளைத்திடும் அலைவாயில் - அலைகள் சுற்றிச் சூழ்ந்திருக்கும்படியான திருச்செந்தூர் என்னும் தலத்திலும், ஏமம் எயில் பல வெற்பினில் - பாதுகாவலைக் கொண்டுள்ள மதில்கள் பல சூழ்ந்த மலைகளின் மேலும், நல் பதினால் உலகத்தினில் - நல்ல பதினான்கு உலகங்களிலும், உற்று உறு பத்தர்கள் - மேவியமைந்து வாழ்கின்ற அடியார்கள், நினைத்

தரு எதும் - எண்ணியவைகள் எல்லாவற்றையும், மெத்த அளித்தருள் இளையோனே - அதிகமாகத் தந்தருளும் குமாரக் கடவுளே!, ஏரகம் வெற்பு எனும் - திருவேரகமலை என்று எல்லாராலுஞ் சிறப்பித்துக் கூறப்பெறும், அற்புத மிக்க சுவாமிமலை பதி - ஆச்சரிய மிகுக்கும் சுவாமி மலை என்னும் திருத்தலத்தையும், மெச்சிய - விரும்பிய, சித்த - திரு உள்ளம் உடையவனே!, இராசத லட்சண உத்தமி பெற்றருள் பெருமாளே - இராசத லட்சணங்களைக் கொண்டுள்ள, சிறந்த உமாதேவியார் பெற்றளித்த பெருமானே!, கோமளம் வெற்பினை ஒத்த தனத்தியர் - இளமை வாய்ந்த தன்மை நிகர்த்த தனங்களை உடையவரும், காமனை ஒப்பவர் சித்தம் உருக்கிகள் - மாரனை நிகர்த்த அழகையுடைய காளையர்களின் மனத்தை உருக்குகிறவர்களும், கோவை இதழ் கனி நித்தமும் விற்பவர் - கோவைக்கனியை நிகர்த்த இதழைத் தினமுந் தினமும் விற்பவர்களும், கோகிலம் - குயிலும், நல் புறவத்தொடு - நல்ல புறாவும், குக்குடம் - கோழியும், ஆரணியப்புள் - காட்டின் கணுள்ள பட்சிகளும் ஆகிய இவற்றின், வகை தூரல் - பலவகையாகிய சப்தங்களை, கற்றவர் - கற்றவர்களும், கோலம் விழி கடை இட்டு - அழகிய கண்களின் கடை நோக்கினாலே, மருட்டியர் - மயக்குகின்றவர்களும், விரகால் - பெரிய தந்திரச் செயல்களால், தூமம் மலர் பள்ளி மெத்தை படுப்பவர் - நறுமணங் கமழும் புகைகள் ஊட்டப்பெற்ற புட்பங்கள் விரித்த படுக்கையாகிய மெத்தையில் படுப்பவரும், யாரையும் எத்தி மனைக்குள் அழைப்பவர் - எத்தகையவர்களையும் ஏமாற்றித் தங்கள் வீட்டிற்கு அழைப்பவர்களும், சோலைவனம் கிளி ஒத்த மொழிச்சியர் - காவினிடத்தே வாழும் அழகு வாய்ந்த கிள்ளையை நிகர்த்த சொல்லை யுடையவர்களும், நெறி கூடா தூசு நெகிழ்த்து - ஒழுங்காகக் கட்டப்பெறாத வஸ்திரத்தைத் தளர்த்தி, அரை சுற்றி உடுப்பவர் - இடுப்பைச் சுற்றிக் கட்டிக்

கொள்பவரும், காசு பறிக்க மறித்து முயக்கிகள் - கைப்பொருளைப் பிடுங்கிக் கொள்ளத் திரும்பத் திரும்ப அணைத்து கொள்பவர்களும், சோதகம் வித்தை படித்து - வஞ்சக வித்தையைக் கற்றுப் பழகி, நடிப்பவர் உறவு - அதற்கு ஏற்ப நடிக்கின்றவர்களும் ஆகிய வேசையர்களின் கூட்டுறவு, ஆகுமோ - ஏற்றதாகுமோ (ஆகாது,) எ - று.

(வி - ரை.) கோமளம் - 'இளமை' என்னும் பொருளது; இது வடமொழி என்பர். காமனை ஒப்பவர் - கண்டார் மனத்தை வயப்படுத்தும் எழில் வாய்ந்த மன்மதன். 'காமன்னை' ஒப்பவர் என்பது தொகுத்தல் விகாரம் பெற்ற 'காமனை' என்றாயது; இதற்குப் பொருள்: 'கற்பகச் சோலைக்கு இறைவனாகிய இந்திரனை ஒத்த சுகபோகத்தை விரும்புவோர்களை' என்றும் பொருள் கூறுவர். கோவை இதழ் கனி - கொவ்வைக்கனி போலும் இதழ். கோவை இதழ்க்கனி சித்தமும் விற்பவர் - ஏனையர் வியாபாரத்தில் விற்கும் பண்டம் விற்றுப் பொருள் வாங்கிய பின் வர்த்தகரை விட்டுப் போம். இவ் வேசையர் வியாபாரத்திலோ இவர் விற்பன அவர் தரும் பொருளை வாங்கிய பின்னும் இவரிடமே இருக்கும். வாங்கியவர்கள் பெற்றிடும் பயனிலும் இவர் அதிகம் பயன் பெறுவர். அவர் கைப்பொருளும் இவர் கைப்பொருள் ஆகும். இவர் விற்றன இவரிடம் விட்டகலா. ஆதலின், 'சித்தமும் விற்பவர்' என்றார். இதனை,

"தம்மவை ஈந்து பின்னும் தருபொருள் கொள்ளும் கொள்கை
அம்மநல் வணிக மன்றே அடைதம தம்ம தாகச்
செம்மிய நலங்கள் சேர்த்தோர் பெற்றதிற் சிறக்கப் பெற்றே
அம்பொருள் வாய்த்துஞ் செல்லா அணிவணி கத்தா னன்றே"

என்றதனால் அறியலாம். இன்னும்,

"என்னையே யுணருவோர்கள் எனக்குமோர் இன்ப நல்கிப்
பொன்னையுங் கொடுத்துப் பாழ்ப் போதினில் வீழ்வதேனோ"

என்ற அடிகளாலும் அறியலாம்.

நிறத்தாலும் வடிவத்தாலும் கொவ்வைக்கனி இதழுக்கு உவமம் ஆயிற்று. 'நற்புறவத்திடு' என்பதனை 'நட்புருவத்திடு' எனக் கொண்டு, 'யாரும் நேசிக்கும் புருவத்திடு' எனப் பொருளுரைப்பர். குக்குடம் - கோழி. ஆரணியப்புள் - காடுகளில் வசிக்கும் பறவைகள். கற்றவர் - காளையர் மனம் அவசமாகி இன்புறப் புட்குறல் காட்டக் கற்றவர்கள். புட்குறல் இன்ப மிகுதியால் தாமே இயல்பாய் மாதர்களின் கண்டத்தில் இயல்பாய் எழும் என்பாரும் உண்டு. கோலம் விழி - அழகிய விழி; கோல்+அம்+விழி - 'பாணம் போலும் அழகிய விழி' என்பர். தாமம் மலர் பளி - 'பஞ்சின் அசைத்தனவாக்கிய அணை கொண்ட மலர் பரப்பிய படுக்கை' என்பதும் ஆம்; யாவரையும் - 'பொருள் தரின் எத்தகைய இழிந்தோரையும்' என்பது பொருளாம்; 'எத்தகைய விரக்தியுடையவரையும் தம் வயமாக்கி' எனினும் ஆம்.

"நல்லசிவ யோகரையும் போகியாக ஆக்கவல
நஞ்சக் கண்ணின்
வல்லனைய சொல்லுமுலை வஞ்சியரின்
மிஞ்சுபடு வலையிற் சிக்கி"

என்ற அடிகளும் காண்க. 'காசு பறிக்க மறித்து முயக்கியர்' என்றது 'கண் காட்டிப் பல் காட்டிக் காசுபறி வேசையரை. இதனை,

"ஆமாபோ னக்கி யவர்கைப் பொருள்கொண்டு
சேமாபோர் துப்புறாஉந் தில்லைக் கணன்பினை
ஏமாந் தெமதென் றிருந்தார் பெறுபவே
தாமாம் பலரா னகை."

என்ற நாலடியார் அடிகளோடு ஒப்பிடுக. தோதகம் - வஞ்சகம், உவரி - சமுத்திரம்; 'உப்பைத் தன்னிடத்து உடையது' என்பது பொருள். 'பரமாகிரி' - இதனைப் 'பரிமாகிரி' எனப் பாடம் ஓதுவாரும் உண்டு; அப்போழ்து 'யாவரும் விரும்பும்' என்பது பொருளாம், இனி, 'சாங்கவல்ல' எனலும் ஆம். கிரி சுற்ற - அலை சுற்ற; இதற்கு, 'மலைபோலும் அலைகள் சுற்ற' என்பாரும் உண்டு. சித்த இராசத லட்சண உத்தமி - அருட்சித்தம் கொண்ட இராஜ லட்சணங்கள் பொருந்திய சிறந்த உமாதேவி; இனி இதனை 'சற்சன இராசத லட்சண உத்தமி' எனப் பாடம் ஓதி 'நல்லவர்கள் பேசும் இராஜ லட்சணங்களைக் கொண்டுள்ளாள்' எனப் பொருள் உரைப்பர். 'இராசத லட்சண உத்தமி' என்பதற்கு 'இரஜோகுண வடிவு கொண்டுள்ள சத்தி' என்பதும் ஆம்.

உமையாள் புத்திரனே! அடியார் வேண்டுவன அருளும் குமாரக்கடவுளே! வஞ்ச மாதர் உறவு எனக்குத் தக்கதாமோ? தக்க தாகாது. ஆகலின், அதனை நீக்கி அடியேனுக்கு உன் திருவருளைச் செய்க என்றதாம்.

---

21. தந்தன தானதான தந்தன தானதான
தந்தன தானதான தனதான.

வஞ்சக லோபமூடர் தம்பொரு ளூர்கள்தேடி
மஞ்சரி கோவைதூது பலபாவின்
வண்புகழ் பாரிகாரி யென்றிசை வாதுகூறி
வந்தியர் போலவீணி லழியாதே
செஞ்சர ணாதகீத கிண்கிணி நீபமாலை
திண்டிறல் வேல்மயூர முகமாறும்
செந்தமிழ் நாளுமோதி யுய்ந்திட ஞானமூறு
செங்கனி வாயிலோர்சொ லருள்வாயே;

பஞ்சவ னீடுகூனு மொன்றிடு தாபமோட
 பைந்தமிழ் வாதுகூறு சமண்மூடர்
பண்பறு பீலியோடு வெங்கழு வேறவோது
 பண்டித! ஞானநீறு தருவோனே!
குஞ்சர சாலைமேவு பைம்புன மீதுலாவு
 குன்றவர் சாதிகூடி வெறியாடி
கும்பிடு நாடிவாழ்வு தந்தவ ரோடுவீறு
 குன்றுதொ றாடன்மேவு பெருமாளே!

(இ - ள்) பஞ்சவன் - பாண்டியனது, நீடு கூனும் - மிகுந்த முதுகு வளைவையும், ஒன்றிடு தாபம் - ஏற்பட்டு நீங்காதமைந்த ஜுரப் பிணியையும், ஓட - நீங்கவும், வாது கூறு - சமய வாதம் பேசிய, சமண் மூடர் - சமணர்களாகிய மடையர்கள், பண்பு அறு - நற்குணம் இல்லாத, பீலியோடு - மயில் இறகோடு, வெம் கழு ஏற - கொடிய கழுவிலே ஏறவும், பைந்தமிழ் - செழுமையான தமிழ்ப் பதிகங்களை, ஓது பண்டித - திருவாய்மலர்ந்து பாடிய பெரு மிய புலவனே!, ஞானநீறு தருவோனே - அழகிய திருநீற்றைத் தந்தருள்வோனே!, குஞ்சரம் சாலை மேவும் - யானைகள் வசிக்கும் சாலைகளையுடைய. பைம்புனம் மீது - பசுமையான தினைப்புனக் கொல்லைகளில். உலாவு குன்றவர் சாதி - திரிகின்ற வேடர் கூட்டங்கள், கூடி வெறி ஆடி - ஒன்று சேர்ந்து வெறி ஆட்டம் ஆடி, கும்பிடும் - கும்பிடப் பெற்றவனே!, நாடு வாழ்வு தந்து அவரோடு - (கும்பிட்ட அவர்களுக்கு) அவர் விரும்பும் உலக வாழ்வைத் தந்து அவர்களுடனே, வீறு - பெருமை மிக்குச் சிறந்த, குன்று தோறு ஆடல் மேவும் - மலைகளில் எல்லாம் திருவிளையாட்டைச் செய்யும், பெருமாளே-முருகப்பெருமானே!, வஞ்சகம் லோபம் மூடர்-வஞ்ச குணத்தையும் ஈயாமைத் தன்மையையும் கொண்டுள்ள மூடர்

கவின், பொருள் - பொருளுக்காக, ஊர்கள் தேடி - ஊர்களைத் தேடி, மஞ்சரி கோவை தூது - மஞ்சரி கோவை தூது என்னும் பிரபந்தங்களை, பல பாவின் - பலவகைப்பட்ட பாக்களினால். வண் புகழ் - வள்ளன்மையால் மிக்க புகழைக் கொண்ட, பாரி காரி என்று - பாரியே என்றும் காரியே என்றும், இசை வாது கூறி - புகழ்களை வாதித்துச் சொல்லி, வந்தியர் போல - புகழ்ந்து பாடுபவர்களைப் போல, வீணில் - வீணாக, அழியாது - அழிந்து கெடாது, செம் சரண் - செவ்விய திருப்பாதங்களையும், நாதக் கிண்கிணி - இன்னோசையை உடைய கிண்கிணியையும், நீல மாலை - நீலோற்பல மலரால் ஆகிய மாலையையும், திண் திறல் வேல் - உறுதியோடு கூடிய வலிய வேலாயுதத்தையும், மயூரம் - மயிலையும், முகம் ஆறும் - ஆறு திருமுகங்களையும், செம்மை தமிழ் - செம்மையான தமிழ்ப் பாட்டுக்களால், நாளும் - தினந்தோறும், ஓதி உய்ந்திட - பாடி உஜ்ஜீவிக்க, ஞானம் ஊறு - ஞானம் சுரக்கும், செங்கனி வாயில் - சிவந்த கோவைக் கனியை ஒத்த அழகிய வாயால், ஓர் சொல் - ஒரு திருமொழியை, அருள்வாய் - அருளிச் செய்வாயாக, எ - று.

(வி - ரை.) மஞ்சரி - பூங்கொத்து; அது போல்வதோர் மாலைக்கு உவமை ஆகுபெயராயிற்று. கோவை - துறைகள் ஒழுங்கு அமைத்துப் பாடப்படும் பிரபந்தம். இது அகப்பொருட் கோவை, புறப்பொருட் கோவை என இருபால; இங்கு அகப்பொருட் கோவையைக் குறித்தது. தூது - தூதிற்கு உரியனவாக எடுத்தோதப்பெறும் பத்துப் பொருள்களுள் ஒன்றைத் தூதுபோமாறு விடுவிப்பதாகிய ஒருவகைப் பிரபந்தம். பாரி, ஓரி - கடை எழு வள்ளல்களைச் சேர்ந்தவர். வண்புகழ் - 'வள்ளன்மையாற் புகழ் கொண்டவர்கள்' என்பது பொருள். வந்தியர் துதி பாடகர்; பண்டைக் காலத்துத் தமிழ்ப் பெருமக்களையும் மன்னரையும் துதி

பாடி அவர் வீரம், கொடை, புகழ் முதலியவற்றை இசைத்துப் பாடுபவர். நீலம் - குறிஞ்சி நில மலர். செந்தமிழ் - செழுமையான தமிழ்; 'குற்றமற்ற சீரிய தமிழ்' எனப் பொருளுரைப்பாரும் உண்டு. சொல் அருள் - 'திருவாக்கருள்' என்றதாம்.

புல்லரைப் பாடாது நின் திருவடி பாடத் திருவாக்கருள் என்றதாம். இதனை லன்றோ,

"தருக்காவ லாவென்று புல்லரைப் பாடித் தனவிலைமா
தருக்காவ லாய்மயி லேகுயி லேயென்று தாமதராய்
தருக்காவ லாநெறிக் கேதிரி வீர்"

என பிள்ளைப் பெருமாளாருங் கூறினர். பஞ்சவன் - பாண்டியன்; கூண்டுக் கூன் பாண்டியனைக் குறித்தது.

'பஞ்சவனீடு......நீறு தருவோனே' என்றது திருஞான சம்பந்தர் மங்கையர்க் கரசியார், குலச்சிறை நாயனார் இவர்கள் விருப்பப்படி மதுரை சென்று சமணரை வென்று பாண்டியன் கூனை நீக்கிய வரலாற்றை. முருகக்கடவுளே திருஞான சம்பந்தராக அவதரித்தார் என்னுங் கொள்கையுடையவராதலின் இவ்வாறு கூறினர். 'ஞான நீறு தருவோனே' என்றது சமணர்கள் ஞான சம்பந்தர் எழுந்தருளி யிருக்கும் மடத்தில் தீ வைத்தபோது சமணர் செய்தவென வறிந்து அத் தீ பாண்டியன் மேலதாக,

"செய்ய னேதிரு வாலவாய் மேவிய
ஐயனே அஞ்ச லென்றருள் செய்யெனைப்
பொய்ய ராமம ணர்கொளு வுஞ்சுடர்
பைய வேசென்று பாண்டியற் காகவே."

பாண்டியன் சுரங்கொண்டான்; அமணரால் அச் சுரம் தீர்க்க முடியவில்லை; திருஞான சம்பந்தர் நீறு பூசி சுரத்தை நீக்கிச் சைவத்தை நிறுத்தினராதலின். 'குஞ்சரம்' -வடசொல் என்பர். வெறி

யாட்டு - இது குறிஞ்சி நிலமாக்கள் வேலனைக் கொண்டு முருகனை வணங்கும் ஒரு வணக்கம்.

வேடர்க்கும் அருள் செய்யும் கருணையுடையை ஆதலின் நீ எனக்கு அருள் செய்யாதிராய் என்ற நோக்கத்ததாகும்.

---

22. தனனதன தந்தனந் தந்தனந் தந்தனந்
தனனதன தந்தனந் தந்தனந் தந்தனந்
தனனதன தந்தனந் தந்தனந் தனதான.

புணரியும னங்கனைப் புஞ்சரும் புங்கருங்
கயலிரண்டுங் கெண்டையுஞ் சண்டனுங் கஞ்சமும்
புதுநிலவ ருந்தியுந் துஞ்சுநஞ் சும்பொருப்
பெறிவேலும்

பொருவெனவி கன்றகன் றங்குழன் றுஞ்சுழன்
றிடர்த்துகளை சிவந்துவஞ் சம்பொதிந் திங்கிதம்
புவியிளைஞர் முன்பயின் றம்பொனின் கம்பிதக்
குழைமோதி

குணலையொடு மிந்த்ரியஞ் சஞ்சலங் கண்டிடும்
படியமர்பு ரிந்தருஞ் சங்கடஞ் சந்ததங்
கொடுமைசெய்து சங்கொடுஞ் சிங்கிதங் குங்கடைக்
கணிஞர்பால்

குலவுபல செந்தனங் கந்துதந் தின்புறுந்
த்ரிவிதகர ணங்களுங் கந்தநின் செப்பதங்
குறுகும்வகை யந்தியுஞ் சந்தியுந் தொந்தமற்
றமைவேனோ;

துணர்விரிக டம்பமென் றொங்கலும் பம்புறும்
புழுகுமச லம்பசுஞ் சந்தனங் குங்குமந்
தொகுகளப முந்துதைந் தென்றுநன் கொன்றுபத்
திருதோளுந்
தொலைவில்சண் முகங்களுந் தந்த்ரமந் த்ரங்களும்
பழநிமலை யும்பரங் குன்றமுஞ் செந்திலுந்
துதிசெயுமெ யன்பர்தஞ் சிந்தையும்சென் றுசெய்ப்
பதிவாழ்வாய்!
கனபணை பங்கமுங் கங்கையுந் திங்களுங்
குரவுமறு குங்குமுந் தும்பையுங் கொன்றையுங்
கமழ்சடிலச் சம்புவுந் தும்பியும் பண்புடைக் குருநாதா!
கனகுடகில் நின்றருள் தந்தருஞ் சங்கரன்
குறுமுனிக மண்டலங் கொண்டுமுன் கண்படுநங்
கதிசெய்நதி வந்துறுந் தென்கடம் பன்றுறைப் பெருமாளே!

(இ - ள்.) துணர் விரி - கொத்துக் கொத்தாக விரிந்த, கடம்பம் மென் தொங்கலும் - கடப்ப மலரினாலாய மென்மையான மாலையும், பம்பு உறும் புழுகும் - திமிர்ந்து நெருங்கும் புழுகும், அசலம் பசுமை சந்தனம் - பொதிய மலையில் விளைந்த சந்தனமும், குங்குமம் - குங்குமமும், தொகு களபமும் - வாசனைப் பொருள்கள் பலவற்றையும் கூட்டி அமைக்கப்பெற்ற கலவைச் சாந்தும், துதைந்து - செறிந்து, என்று நன்கு ஒன்று - எப்பொழுதும் நன்மை கொண்டுள்ள, பத்து இரு தோளும் - பன்னிரண்டு திருத்தோள்களையும், தொலைவு இல் சண் முகங்களும் - என்றும் அழியாது நிலைபேறுடைய ஆறு திருமுகங்களையும், தந்த்ரம் மந்த்ரங்களும் - தந்திர மந்திரங்களையும், பழநி மலையும் - பழநி மலையி

லும், பரங்குன்றமும் - திருப்பரங்கிரியையும், செந்திலும் - திருச் செந்தூரையும், துதி செயும் மெய் அன்பர் தம் சிந்தையும் சென்று - துதிக்கும் உண்மை அடியார்களின் கருத்துகளில் அவர்களுக்கு அருள் செய்தற்குக் காட்சி கொடுத்து, செய் பதி வாழ்வாய் - வய லூரில் எழுந்தருளி யிருப்பவனே!, சண பண புயங்கமும் - கூட்ட மாகிய படத்தையுடைய அரவங்களையும், கங்கையும் திங்களும் - கங்கா நதியையும் பிறைச் சந்திரனையும், தாவும் அறுகும் தும் பையும் கொன்றையும் - குரவ மலரும் அறுகம் புல்லும் சிறிய தும்பைப்பூவும் கொன்றை மலரும், கமழ் சடிலம் சம்புவும் - வாசனை வீசப் பெற்ற சடா பாரத்தையுடைய சிவபெருமானும், கும்பிடும் பண்பு உடை குருநாதா - தொழப் பெறும் சிறப்பைக் கொண் டுள்ள குருநாதனே!, கன குடகில் நின்ற - மேன்மையுடைய குடகு நாட்டில் நிலைபெற்ற, குன்றம் தரும் - குடகு மலை பெற்ற, சங்கரன் குறுமுனி - சிவபெருமானுக்குப் பிரிய முடையவரான அகத்திய முனிவர், கமண்டலம் கொண்டு முன் கவிழ்டும் - கெண்டிகை யாகிய கரகத்தில் முன்னர் கொண்டுவர்த்து விட்ட, நதி செய் நதி - வேகத்தையுடைய காவிரி நதி, வந்து உறும் தென் கடம்பந்துறை பெருமானே - வந்து பாயும் தென் கடம்பந்துறை என்ற திருத் தலத்தில் எழுந்தருளி யிருக்கும் பெருமானே!, புணரியும் - கடலும், அனங்கன் அம்பும் - மன் மதன் பாணமாகிய நீலோற் பலமும், சுரும்பம் - வண்டும், கரும் கயல் நெடு கெண்டையும் - கருத்த கயல் மச்சத்தோடு சேல் மச்சமும், சண்டனும் - இயமனும், கஞ்ச மும் - தாமரை மலரும், புது நிலவு அருந்தியும் - புதிய சக்கர வாகப் பறவையும், துஞ்சு நஞ்சம் - பொருந்திய கடுவும், பொருப்பு எறி வேலும் - கிரௌஞ்ச மலையைப் பிளந்த வேற் படையும், பொரு என - ஒப்பானது என்று சொல்லும்படி, இகன்று - அவைகளோடு போர் செய்து, அங்கும் இங்கும் சுழன்று - அங்கும் இங்கும்

பிறழ்ந்து, இடை கடை சிவந்து - மத்தியிலும் இருகடைப் புறங்களிலும் சிவப்பு நிறங்கொண்டு, வஞ்சம் பொதிந்து - வஞ்சகத் தன்மை நிறைந்து; இங்கிதம் புவி இளைஞர்முன் பயின்று - இன்பக் குறி பலவற்றைப் புவியில் உள்ள காளையரிடம் காட்டி, அம்பொனின் கம்பிதம் குழை மோதி - அழகிய பொன்னாற் செய்யப்பெற்ற அசைந்துகொண்டிருக்கும் குண்டலங்களிற் சென்று தாக்கி, குணலையொடும் - கூத்துடன், இந்திரியம் சஞ்சலம் கண்டிடும்படி - பஞ்சேந்திரியங்களும் சஞ்சலம் அடையும்படி, அமர் புரிந்து-போர் செய்து, அரும் சங்கடம் சந்ததம் கொடுமை செய்து - நீங்காத கஷ்டத்தையும் கொடுமைகளையும் எப்பொழுதும் உண்டாக்கி, சங்கொடும் சிங்கி தங்கும் - சங்கு போலும் வெண்மையையுடைய விஷம் தங்குகின்ற கடைக்கணினார் பால்-கடைக் கண்களைக் கொண்டுள்ள மாதர்களிடத்தில், குலவு பல செம் தனம் தந்து தந்து - விளங்கும் பல செம் பொன்னைக் கொடுத்துக் கொடுத்து, இன்பு உறும்-இன்பத்தை அடைகின்ற, திரிவித கரணங்களும் - மனம் வாய் மெய் என்னும் முக்கரணங்களும், கந்த - கந்தக் கடவுளே!, நின் செம்பதம் குறுகும் வகை - தேவரீரின் செம்மையைத் தரும் திருப்பாத மலர்களை அடையும் விதத்தை, அந்தியும் சந்தியும் - மாலையிலும் சந்தி வேளைகளிலும், தொந்தம் அற்று - உலக சங்கடம் நீங்கி, அமை வேனோ - (நின் பத்தியிலேயே) பொருந்தி இருப்பேனோ? எ - று.

(வி - ரை) புணரி - கடல்; 'தரையோடு சம்பந்தப் பட்டிருப்பது' என்பது பொருள்; 'நதி கூடுதற்கு (கலத்தற்கு) இடமாயிருப்பது' என்பாரும் உண்டு. அனங்கன் - மன்மதன்; இது ந+அங்கன் என்னும் வடமொழி; 'தேகம் இல்லாதவன்' என்பது பொருள்; உருவிலி, மெய்யிலான் என்பன தமிழ்; 'அனங்கன் அம்பு' ஈண்டு நீலோற்பலத்தைக் குறித்தது; அவன் மலர்ப் பாணங்களில் நீலோற்

பலமே மிகக் கொடுமை யுடையது ஆதல் பற்றி; இனி 'தாமரை என்பாரும் உண்டு; இது பின் தாமரை என்றதனாற் பொருந்தாது. கயல் - கெண்டைமீனின் வகைப் பேதம். கடல் குவளை, வண்டு, கருங்கயல், கெண்டை, யமன், தாமரை, சகோதரம், நஞ்சு, வேல் இவை யனைத்தும் கண்ணுக்குவமைப் பொருள்கள். கண்ணுங் காமுகரைப் படுக்கும் காரிகையார்க்குச் செம்பொன் தந்து தந்து இன் படையும் என் முக்காலமும் நின் திருவடி சேர்த்துவமோ. சேர்த் தாவிடில் நீ சேர்த்துமாறு அருள் புரியவேண்டும் என்பதாம்.

'செம்பொன் தந்து தந்து' மிகுதிப் பொருளில் அடுக்கியது. தோளில் மார்பில் தொங்குவதாகலின் மலர் மாலைக்குத் 'தொங்கல்' எனப் பெயராயிற்று. அசலம் பகர் சந்தனம் - பொதியமலையில் விளையும் பசுமையான சந்தனம்; பொதியமலைச் சந்தனம் விசேடமுடைய தென்பர்; பொதிய மலைக்கும் இதனாலே 'சந்தன வெற்பு' என்னும் பெயர் எய்திற்று. செய்ப்பதி வயலூர்; செய்-வயல். 'சம்புவும்' என்பதில் உள்ள உம்மை உயர்வு சிறப்பு. சம்பு - 'ஆன்மாக்களுக்குச் சுகத்தை உண்டாக்குபவன்' என்னும் பொருள்பற்றி வந்த சிவன் பெயர். 'சங்கரன் குறுமுனி - சிவபெருமானின் அருள் பெற்ற குறுமுனி' எனவும், 'சிவபெருமானை ஒத்த குறுமுனி' எனவும் பொருள் கூறுவர். காவிரியை அகத்தியர் தமது கமண்டலத்திற் கொண்டுவந்து தந்தார் என்பது புராணம். இதனை,

"கஞ்ச வேட்கையிற் காந்தமன் வேண்ட
அமர முனிவன் அகத்தியன் தனது
கரகங் கவிழ்த்த காவிரிப் பாவை"

என்னும் மணிமேகலை அடிகளாலும் அறியலாம்.

அகத்தியர் கொண்டு வந்த கமண்டல ஜலமாகிய காவிரியை விநாயகக் கடவுள் இந்திரன் வேண்டுகோளுக்காகக் கிருபை

கொண்டு காகமாக எறிக் கவிழ்த்து இந்திரன் புவியில் பூஜைக் கேற்படுத்திய நந்தவனத்தைச் செழிப்பித்தார் எனவும் கூறும் புராணம். இதனை,

"சூரர்கு லாதிபன் தூய்மலர் நந்தனம்
பெருக வார்கடற் பெய்த வயிற்றினோன்
கரக நீரைக் கவிழ்த்த மதகரி
சரண நாளுந் தலைக்கணி யாக்குவாம்."

என்ற பிரபுலிங்கலீலைக் காப்பாலும் அறியலாம்.

நதி செய் நதி - 'வைகைத்தோடு பாயும் நதி' என்பது பொருள்; இனி, தோய்ந்தார்க்கும் பாவத்தைப் போக்கி நற்கதியைத் தரும் எனப் பொருளுரைத்தலும் ஆம்.

---

திரிசிராமலை

23. தனன தானன தானன தானன
தனன தானன தானன தானன
தனன தானன தானன தானன தந்ததான.

தறையின் மானிட ராசையி னுண்மட
லெழுது மாலருண் மாதர்கள் தோதக
சரச மாமலை சோதியி னுவிரு கொங்கையா லுட்

தளர்மி னேரிடை யாலுடை யானடை
யழகி னன்மொழி யால்விழி யாலமருள
சவலை நாயடி யேன்மிக வாடிம யங்கலாமோ

பறவை யானமெய்ஞ் ஞானிகள் மோனிக
ளணுகொ ணாவகை நீடுமி ராசிய
பவன பூரக வேகிக மாகிய விந்துநாதம்

பகரொ ணாதது சேரவொ ணாதது
நினையொ ணாதது வானத யாபர
பதிய தானச மாதிம னோலயம் வந்துதாராய்;
சிறைவி டாதநி சாசரர் சேனைகண்
மடிய நீலக லாபம தேறிய
திறல்வி னோதச மேள! தயாபர! அம்புராசி
திரைகள் போலலை மோதிய சீதள
குடக காவிரி நீளலை சூடிய
திரிசி ராமலை மேலுறை வீர!கு றிஞ்சிவாழும்
மறவர் நாயக! ஆதிவி நாயகர்
இளைய நாயக! காவிரி நாயக!
வடிவி னாயக! ஆனைதன் நாயக எங்கண்மானின்
மகிழு நாயக! தேவர்க ணாயக
கவுரி நாயக னார்குரு நாயக!
வடிவ தாமலை யாவையு மேவிய தம்பிரானே.

(இ - ள்) சிறை விடாத - சிறைக்களத்தை விட்டு நீங்காத, நிசாசரர் சேனைகள் - அசுரர்களுடைய சயினியங்கள், மடிய - அழியும்படி, நீல கலாபம் அது ஏறிய - நீல வண்ணத்தை உடைய மயிலின்மேல் ஏறியருளிய, திறல் விநோத சமேள - வல்லமையும் அதிசயிக்கத் தக்க அலங்காரமும் பொருந்தி யுள்ளவரே!, தயாபர - கருணையை உடையவரே!, அம்புராசி - கடலினது, திரைகள் போல் - அலைகளைப் போன்ற, அலை மோதிய - அலைகள் மோதுகின்ற, சீதளகுடகாவிரி - குளிர்ச்சி வாய்ந்த குடகு மலையிலிருந்து வரும் காவேரியாற்றின், நீள் அலைசூடிய - பெரிய அலைகள் பொருந்தப்பெற்ற திரிசிராமலை மேல் உறைவீர - திரிசிரா

மலையின் மேலே வீற்றிருக்கின்ற வீரனே!, குறிஞ்சி வாழும்-மலைப் பக்கங்களில் வசிக்கின்ற. மறவர் நாயக - வேடர்கள் தலைவனே!, ஆதி விநாயகர் - முதன்மையாக நிற்கும் விநாயகக் கடவுளுக்கு, இளைய நாயக - தம்பியாக வந்த தலைவனே!, காவிரி நாயக-காவேரிக்குத் தலைவனே!, வடிவின் நாயக - இனிய அழகிய வடிவத்தையுடைய நாயகனே!, ஆனை தன் நாயக-தெய்வயானை அம்மைக்குத் தலைவனே!, எங்கள் மானின் மகிழும் நாயக - எங்களுடைய தேவியாகிய வள்ளியம்மையா ரிடத்தில் களிப்புக் கொண்டருளும் தலைவனே!, தேவர்கள் நாயக-தேவர்களுக்குத் தலைவனே!, கவுரி நாயகனார் - உமாதேவியாரின் கணவராகிய சிவபெருமானுக்கு, குரு நாயக - குருமூர்த்தியாய் நின்ற தலைவனே!, வடிவு அமைந்த - அழகு அமைந்த, மலையாவையும் மேவிய - மலைகள் எல்லாவற்றிலும் பொருந்தி யிருக்கின்ற, தம்பிரானே - தலைவனே!, தரையின் மானிடர் - பூமியில் வாழுகின்ற ஆடவர், ஆசையினால் மடல் எழுதும் - கொண்ட காதலினால் மடலேறுதற் பொருட்டு உருவத்தை எழுதுகின்ற, மால் அருள் மாதர்கள் - காம மயக்கத்தைத் தருகின்ற பெண்களாகிய, தோதக சாசர் - வஞ்சகமுள்ள காம விளையாட்டினர், மாமலர் - சிறந்த மலரணிந்த, ஓதியினால் - கூந்தலாலும், இரு கொங்கையாலும் - இரு தனங்களினாலும், தளர் மின் சேர் இடையால் - சோர்வு கொள்ளும் மின்னற் கொடியை ஒத்த இடுப்பினாலும், உடையால் - ஆடையினாலும், நடை அழகினால்-நடையின் அழகினாலும், மொழியால் - சொற்களினாலும், விழியால் - கண்களினாலும், மருள் சவலை நாய் அடியேன் - மயங்குகின்ற இளைத்த நாய் போலும் அடியனேன், மிக வாடி மயங்கல் ஆமோ - மிகவும் வாட்டமடைந்து மயக்கங் கொள்ளுதல் தகுமானதோ?, பறவையான மெய்ஞ்ஞானிகள் - ஓரிடத்தும் பற்றுவையாது பறவைபோல எங்குந் திரியும் உண்மை ஞானிகளும், மோனிகள் - மௌன விரதி

யரும், அணுக ஒணா வகை - சேர முடியாதபடி, நேம் - மிகுந்த, இராசியம் - இரகசியமானதும், பவன பூரக எகிசம்-ஜீவக் காற்றை ஒடுக்கிப் புரியும் யோகத்தில், ஆகிய விந்து நாதம் - சேர்ந்த விந்து நாதங்களால், பகர ஒணாதது - சொல்ல ஒணாததும், சேரமுடியாது- சேர முடியாததும் நினை ஒணாது ஆன - நினைக்க முடியாததும் ஆன, தயாபர பதி அது ஆன - அருளோடு கூடிய இடமான, சமாதி மனோலயம் - மனம் லயப்படுவதாகிய சமாதியை, வந்து தாராய் - எழுந்தருளிவந்து அடியேற்கு அளிப்பாயாக, எ - று.

(வி - ரை) 'தரையின்' என்றதை நோக்கி நகரம் வலிக்கப் பெற்றது. 'மாணிடர்' என்று ஆண்பாலைக் காட்டி நின்றது; என்னெனின், பெண்கள் மடலேறல் இன்மையின். 'மடல்' என்பது, களவியல் வழி யொழுகிப் பாங்கி மதியுடம்படுத்துத் தன்கருத்து அவட்கறிவித்த பின்பு தழையுங் கண்ணியுங் கொண்டு நின்ற தலைமகன், அவளான் முடிப்ப வெண்ணிய கருமம் முடியாமையுணர்ந்து, இனி மடலூர்ந்தேனும் இவளை எய்துவன் என்னுந் துறைக் கூற்றும். அது காமங் கைமிக்கவழி நிகழ்வது. இத்துறைச் செயலை இளி வந்த செய்தமென்பர் நக்கீரனார். இதனை,

"மாவென மடலு மூர்ப பூவெனக்
குவிமுகி ழெருக்கங் கண்ணியுஞ் சூடுப
மறுகி னார்க்கவும் படுப
பிறிது மாகுப காமங் காழ்க்கொளினே."

"காய்சின வேலன்ன மின்னியல் கண்ணின் வலைகலந்து
வீசின போதுள்ள மீனிழந் தார்வியன் தென்புலியூ
ரீசன சாந்து மெருக்கு மணிந்தோர் கிழிபிடித்துப்
பாய்சின மாவென வேறுவர் சீறூர்ப் பனைமடலே."

என்னுந் திருக்கோவையார் செய்யுளானும்,

"காம முழந்து வருந்தினர்க் கேம
மடலல்ல தில்லை வலி."

என்னும் திருக்குறளானும் அறியலாம்.

மால் அருள் மாதர்கள் - காம மயக்கந் தரும் பெண்கள்; 'திருமாலின் அருள் பெற்ற திருமகளை ஒத்த பெண்கள்' என்பர் ஒரு சிலர். ஓதியினல், இரு கொங்கையால், நூலிடையால், உடையால், நடையால், அழகினல், மொழியால், விழியால் 'மருள் சவலை நாயடியேன் நிகவாடி மயங்கலாமோ" என்பது; மயங்கல் கூடாது என்பது பொருளாம்.

நாய் அடிமைத்திறத்தில் சிறந்ததினலும், அன்பு மாருத தன்மையாலும் உவமம். இதனை,

"யானை யனையவர் நண்பொரீஇ நாயனையார்
கேண்மை தழீஇக் கொளல்வேண்டும்—யானை
யறிந்தறிந்தும் பாகனையே கொல்லு மெறிந்தவேன்
மெய்யதா வால்குழைக்கு நாய்."

என்ற நாலடியாராலும் காண்க. நாய், கக்கியதை உண்ணும் இழிவுத் தன்மை யுடையது; ஆதலின், வெறுத்ததை வெறுத்ததை விரும்பி விரும்பிக் கொள்ளுதலால் நாயை உவமங் கூறுவர்.

"தெட்டிலே வலியமட மாதர்வாய் வெட்டிலே
சிற்றிடையிலே நடையிலே
சேலொத்த விழியிலே பாலொத்த மொழியிலே
சிறுபிறை நுதற் கீற்றிலே
பொட்டிலே யவர்கட்டு பட்டிலே புனைகந்த
பொடியிலே யடியிலே மேற்
பூரித்த முலையிலே நிற்கின்ற நிலையிலே
புந்திதனை நுழையவிட்டு

நெட்டிலே யலையாம லறிவிலே பொறையிலே
நின்னடியர் கூட்டத்திலே
நிலைபெற்ற அன்பிலே மலைவற்ற மெய்ஞ்ஞான
ஞேயத்தி லேயுணிருதாண்
மட்டிலே மனதுசெல நினதருளு மருள்வையோ
வளமருவு தேவையரசே!
விரைராஜ னுக்கிருகண் மணியா யுதித்தமலை
வளர்காத லிப்பெ ணுமையே!."

என்ற **தாயுமானவர்** வாக்கு ஈண்டு ஒப்பிட்டுக் காணத்தக்கது.

ஒண்ணா எனற்பாலது 'ஒணா' எனவும், ஒண்ணாதது எனற்பாலது, 'ஒணாதது' எனவும் வந்தன தொகுத்தல் விகாரம். கலாபம் - தோகை; ஈண்டு தோகையை உடைய மயிலுக்காயின ஆகுபெயர். அம்புராசி - கடல்; இது வடமொழி என்பர். திரிசிரன் என்னும் அரக்கனது மலையாதலின் திரிசிராமலை என்றாயது; இனி, மாமேருவின் மூன்று சிகரங்களின் ஒன்று வாயுவினால் இங்குத் தள்ளப்பட்டதாதலின் திரிசிராமலை என்பர்.

'நாயக' என்னும் சொல் ஒரே பொருளிற் பன்முறை வந்தது சொற்பொருட் பிரிதிநிலையணி. வள்ளியம்மை இச்சா சத்தியாதலினாலும், உலகுத் தொழில் நடத்தற்கு வள்ளியம்மையாரை மணந்தனராதலினாலும், வள்ளியம்மையார் மானிடைச் சிறுமியாய் வேடர் குலத்தில் வளர்ந்தமையாலும், 'எங்கண் மானின் மகிழ்நாயக' என்றார். 'வடிவ தாமலை யாவையுமேவிய' என்றது 'மலை வடிவங் கொண்ட எல்லா இடத்தும்' என்பது பொருள் குறிஞ்சிக் கடவுள் ஆதலின். இதனை,

"சேயோன் மேய மைவரை உலகமும்"

என்று தொல்காப்பியத் தானும் அறியலாம். இதனானன்றே,

"குன்றுதோ றாடலி நின்றதன் பண்பே"
என்றார் திருமுருகாற்றுப்படையினும்.

எவர்க்கும் நாயக! தகாததாய மாதர் மயக்கிற் செல்லும் மாதர் மயக்கிற் கிடக்கும் என்னை ஆட்கொண்டு 'சமாதி மனோலயம்' என்னும் நின்னையே மனத்துப் பாவனை பண்ணி அடையும் பேரின்பப் பெருக்கை அடியேன் பெறும்படி அருள் புரிக என்பது வேண்டியதாம்.

---

திருப்போரூர்

24. தனத்தா தானதந்த
தனத்தா தானதந்த
தனத்தா தானதந்த— தனதான.

உருக்கார் வாளிகண்கள்
பொருப்பார் வார்தனங்க
ளுழைத்தேன் வாயலைந்த றுதஞானம்
உருச்சேர் நீண்மருங்குல்
பணைத்தோ ளோதிகொண்ட
ளுவப்பா மேல்விழுந்து திரிவோர்கள்
அருக்கா மாதர்தங்கள்
வரைக்கே யோடியின்ப
வலைக்கே பூணுநெஞ்சன் அதிபாவி
அசட்டால் மூடுகின்ற
மயக்கால மாயுமிந்த
அவத்தா லீனமின்றி அருள்வாயே;

எருக்கார் தாளி தும்பை
    மருச்சேர் போது கங்கை
    யினைச்சூ டாதிநம்பர் — புதல்வோனே!

இருக்கா லேநினைந்து
    துதிப்பார் நாவினெஞ்சி
    லிருப்பா யானை தங்கு — மணிமார்பா!

செருக்கா லேமிகுந்த
    கடற்சூர் மாளவென்ற
    திறற்சேர் வேல்கைகொண்ட — முருகோனே

தினைக்கோர் காவல்கொண்ட
    குறத்தேன் மாதுபங்க!
    திருப்போ ரூரமர்ந்த — பெருமாளே!

(இ - ள்) எருக்கு ஆர் தாளி தும்பை - எருக்கு ஆத்தி கூதாளி தும்பை என்னும் இவைகளின், மரு சேர் - நறுமணம் பொருந்திய, போது - மலர்களையும், கங்கையினை - கங்கா நதியையும், சூடு ஆதி நம்பர் - சூடியருளும் ஆதியாகி விளங்கும் சிவபெருமானுக்கு, புதல்வோனே - புத்திரனே!, இருக்காலே, இருக்கு வேதத்தாலே, நினைந்து துதிப்பார் - எண்ணித் துதிப்பவர்களினுடைய, நாவில் நெஞ்சில் இருப்பாய் - நாவிலும் மனத்திலும் வீற்றிருப்பவனே!, யானை தங்கும் மணி மார்பா - தெய்வயானை தங்கப் பெற்ற அழகிய மார்பை உடையவனே!, செருக்கால் மிகுந்த - அகங்காரம் அதிகரித்த, கடல் சூர் - கடலில் மாமர வடிவமாக நின்ற சூரபதுமனை, மாள வென்ற - உருவம் மாறி ஒழிய வென்ற, திறல் சேர் வேல் - வலிய வேலை, கைகொண்ட - திருக்கரத்திலே தாங்கியிருக்கிற, முருகோனே - முருகக் கடவுளே!, தினைக்கு ஓர் காவல்

கொண்ட - தினைப்புனத்தில் காவலாக இருந்த, குறத்தேன் - குறவர் பெண்ணாகிய, மாது பங்க - வள்ளி நாயகியாரை ஒரு பக்கத்தில் வைத்துக்கொண்டு விளங்குபவனே!, திருப்போரூர் அமர்ந்த பெருமாளே - திருப்போரூர் என்னும் திருத்தலத்தில் எழுந்தருளியிருக்கும் பெருமாளே!, உருக்கு ஆர் - உருக்கு இரும்பினாற் செய்வதாகிய, வாளி - கணையை ஒத்த, கண்கள் - விழிகளாலும், பொருப்பு ஆர் - மலையை நிகர்த்த, வார் தனங்கள் - கச்சை யணியப் பெற்ற தனங்களினாலும், உரை தேன் - சொல்லும் அமுது கொப்பளிக்கும், வால சந்திரன் - பிறைத்திங்களை ஒத்த, நுதல் - நெற்றியையும், நூல் ஆம் - நூலை ஒத்த, உரு சேர் - அழகு பெற்ற, நீள் மருங்குல் - அழகு மிகுந்த இடையையும், பணை தோள் - வேயை நிகர்த்த தோளையும், கொண்டல் ஓதி - மேகத்தை நிகர்த்த குழலையும் கொண்டு, உவப்பா - மகிழ்ச்சியாக, மேல் விழுந்து - முற்பட்டு மேலே விழுந்து, திரிவோர்கள் - திரிவோர்களாகிய, அருக்கு ஆம் - அருமையான, மாதர் தங்கள் - பெண்களுடைய, வரைக்கு - இடத்திற்கு, ஓடி இன்ப வலைக்கு - ஓடிச் சென்று இன்பமாகிய வலைக்கு, பூணும் நெஞ்சன் - சேருகின்ற மனத்தை உடையவனும், அதி பாவி - மிகுந்த பாவத்தைச் செய்பவனுமாகிய யான், அசட்டால் - குற்றத்தினாலும், மூடுகின்ற மயக்கால் - கவிகின்ற மயக்கத்தினாலும், மாயும் - அழிகின்ற, இந்த அவத்தால் - இந்தக் கேட்டால், ஈனம் இன்றி - குறைவில்லாமல், அருள்வாய் - கருணையைச் செய்வாயாக, எ - று.

(வி - ரை.) 'உரைத்தேன் வால சந்திரன்' என்பதனை 'உவப்பு ஆர் வால சந்திரன்' எனப் பாடம் ஓதுவாரும் உண்டு; இதற்கு 'உயர்வு பொருந்திய பால சந்திரன்' என்பது பொருளாம். நீண் மருங்குல் - அழகு மிகுந்த இடை; 'நீண்ட இடையை' எனப் பொருளுரைப்பாரும் உண்டு. கொண்டல் - 'மேகம் நீரைக்கொண்டு

இருப்பது' என்பது பொருள்; 'கொண்டல்' என்றமையால் நீர் கொண்ட கருமேகத்தைக் குறித்தது. அருக்காட மாதர்கள் - அழ காற் கிடைத்தற்கு அரிய பெண்கள்.

எருக்கார் தாளி தும்பை மருச்சேர் போது கங்கை - 'மண மிக இல்லாத எருக்கு மலர், தாளி, தும்பை இவைகளோடு வாசனை பொருந்திய தாமரை குவளை முதலிய கொண்ட கங்கை ஆகிய இவைகளை' எனப் பொருள் கூறுவர். இருக்கால் நினைப் பவர் நெஞ்சிலும், துதிப்பார் நாவிலும் இருப்பவனே என்பது நிரை நிரைப் பொருள் கோள். 'யானை' என்றது தேவயானை யம்மையாரை. மணி மார்ப - அழகிய மார்பை உடையவனே!, குறத்தேன் மாது பங்க - 'குறக்குலத்திற் றோன்றிய தேன் போலும் இனிய வள்ளி நாயகியாரை பக்கத்தே வைத்திருப் போனே!' என்பதாம். தேன், ஈக்கள் கட்டிய தேன் கூட்டி லிருந்து எடுக்கப் பெறினும் உயர்ந்த பூக்களினின்றும் பிறந்தது; மிக இனிமை உடையது; பித்தத்தைத் தணித்துச் சித்தத்தைத் தெளி விப்பது. அதுபோல, வள்ளி அம்மையார் குறவர் குலத்தில் வளர்ந்தாலும் அம்மான்மகள் (அழகிய மானின் மகள்) மாமனாகிய திருமால் மகள் என்பதும், ஆன்மாக்களுக்குப் பிறவி நோயைத் தரும் மாயா மயக்கப் பித்தகற்றி ஞானத் தெளிவு தருபவன் என் பதும், கந்தக் கடவுளுக்குக் காதற் பித்தகற்றி இன்பத் தெளி வடையச் செய்தவள் என்பன முதலிய கருத்து அமைந்து கிடத் தல் காண்க.

சந்திரன் போலப் பக்கபாதங் காட்டாது தேவயானையாரை மார்பிலும் வள்ளியம்மையாரைப் பக்கத்திலும் வைத்ததாகக் கூறி னர். தேவயானை கிரியாசத்தி ஆதலின் மார்பிற் கொண்டதாகக் கூறினர். வள்ளியம்மையார் இச்சாசத்தி ஆதலின் பக்கத்து

வைத்ததாகக் கூறினர். இச்சை எழக் கிரியை நிகழல் பற்றிப் போலும்.

புன் மலரையும் நன் மலரையும் அணிந்தருள் முதல்வர் புத்திரனே! நினைப்பார் துதிப்பார் நெஞ்சிலும் நாவிலும் இருக்கும் வள்ளி தேவானை நாயகனே!, அகந்தை கொண்ட சூரரை அழித்த வேலாயுதக் கடவுளே! பெண்கள் மயக்கால் அழியும் பாவியாகிய எனக்கு அருள் செய்து பிறவிக் கடலி னின்றும் எடுத்து முத்திக் கரை சேர்த்தருள் என்றதாம்.

---

25. தான தானன தானன
தான தானன தானன
தான தானன தானன தனதான.

சீரு லாவிய வேதிம
மான மாநடை மாமயில்
சேய சாயல்க லாமதி முகமானார்

தேனு லாவிய மாமொழி
மேரு நேரிள மாமுலை
சேலு லாவிய கூர்விழி குமிழ்நாசி

தாரு லாவிய நீள்குழல்
வேய ளாவிய தோளியர்
சார்பி லேதிரி வேனைநின் அருளாலே

சாம வேதியர் வானவ
ரோதி நாண்மலர் தூவிய
தாளில் வீழநி னைதருள் புரிவாயே;

காரு லாவிய நீள்புன
வேடர் மால்வரை மீதுறை
காவல மாதினொ டாவல்செய் தணைவோனே!

காண வாகம வேதபு
ராண நூல்பல வோதிய
கார ணாகரு ணாகர! முருகோனே!

போரு லாவிய சூரனை
வாரி சேறெழ வேல்விடு
பூப சேவக மாமயில் மிசையோனே!

போதன் மாதவன் மாதுமை
பாதி யாதியு மேதொழு
போரி மாநகர் மேவிய பெருமாளே!

(இ - ள்.) கார் உலாவிய - கொண்டல்கள் உலாவுகின்ற, மால் வரைமீது உறை - பெரிய மலைகளின் மேலே வாழ்கின்ற, வேடர் - வேடர்களது, நீள் புனம் - நீண்ட தினைப்புனத்திலே, காவல் மாதினோடு - காவல் செய்யும் வள்ளி நாயகியாரோடு, ஆவல் செய்து - ஆசை கொண்டு, அணைவோனே - தழுவிக் கொள்பவனே!, காண - ஆன்மாக்கள் உண்மை ஞானத்தை உணருமாறு, வேத புராண நூல் - வேத புராண நூற்களை, பல ஓதிய - பலவற்றைத் திருவாய் மலர்ந்தருளிய, காரண - எல்லாப் பொருளுக்கும் காரண வத்துவாய் இருப்பவனே!, கருணாகர - கருணையே வடிவாக அமைந்தவனே!, முருகோனே - முருகக் கடவுளே!, போர் உலாவிய - சண்டைமேற் சென்ற, சூரனை - சூரபதுமனை, வாரி சேறு எழ - கடலிலே சேறு உண்டாகும்படி, வேல்விடு - வேலை விடுகின்ற, பூப - தலைவனே!, சேவகம் மாமயில் - வீரத்

தனஞ் செய்யும் சிறந்த மஞ்ஞையின், மிசையோனே - மேலே எழுந்தருளி இருப்பவனே!, போதன் - பிரமனும், மாதவன் - திருமாலும், மாது உமை - அழகிய பார்வதி தேவியார், பாதி ஆகியும்- பாதிப்பாகத்தில் கொண்ட ஆதி முதற் பொருளாகிய சிவபெருமானும், தொழு - வணங்குகின்ற, போரி மா நகர் - திருப்போரூர் என்னும் திவ்விய தலத்தில், மேவிய-திருக்கோயில் கொண்டு வீற்றிருந்தருளி யிருக்கும் பெருமாளே - பெருமானே!, சீர் உலாவிய - சிறப்புமிகுந்து விளங்கும், ஓதிமம் ஆன - அன்னத்தை நிகர்ப்ப, மா நடை-சிறந்த நடையையும், மா மயில் - சிறந்த மயிலை, சேப - நிகர, சாயல் - சாயலையும், கலா மதி - கலைகள் நிறைந்த பூரணச் சந்திரனை ஒத்த, முகம் மானார் - முகத்தை யுடைய மான் போன்ற மருண்ட நோக்குடைய பெண்களின், தேன் உலாவிய - தேனை ஒத்த, மா மொழி - இன்ப மிகுந்த சொற்களையும், மேரு நேர் - மகா மேருமலையை ஒத்த, இள மா முலை - இளைய பெரிய தனங்களையும், சேல் உலாவிய கூர் விழி - சேல் மச்சத்தை நிகர்த்த கூரிய கண்களையும், குமிழ் நாசி - குமிழம்பூப் போன்ற நாசியையும், தார் உலாவிய-மலர்மாலை விளங்குகின்ற, நீள் குழல் - நீண்ட கூந்தலையும் உடைய, வெய் அளாவிய தோளியர் - மூங்கிலை ஒத்த தோள்களையுடைய மாதர்களின், சார்பில் - சார்பிலே, திரிவேனை - அலைந்து கொண்டிருப்பவனாகிய அடியேனை, நின் அருளாலே - தேவரீருடைய கருணைத் திருவருளினால், சாம வேதியர் - சாம வேதத்தை ஓதுபவர்களும், வானவர் - தேவர்களும், ஓதி - மந்திரங்களைச் சொல்லி, நாள் மலர் - அன்றலர்ந்த பூக்களை, தூவிய - அர்ச்சித்த, தாளில் - திருவடித்தாளில், வீழ - வணங்கும்படி, எனது அருள் புரிவாய் - தேவரீரது திருக்கருணையைச் செய்தருள்வீராக, எ - று.

(வி - ரை.) மானம் - சிறப்பு; 'மான' எனக் கொள்ளின் உவம உருபும் ஆகும்; இதனை,

"அன்ன எய்ப்ப உறழ ஒப்ப
என்ன மான என்றவை எனாஅ"

என்ற தொல்காப்பியச் சூத்திரத்தானும் அறிக. மயில் சாயலால் பெண்களுக்கு உவமம் ஆதலின் 'மாமயில் சேபசாயல்' என்றார். சாயல் - மென்மை; இதனை,

"சாயல் மென்மை"

என்ற தொல்காப்பியத்தால் அறியலாம்; சொற்றம் எனப் பொருள் கொள்வாரும் உண்டு. தேனுலாவிய மா மொழி - தேன் போலும் இனிய சிறந்த மொழி இள முலை - தளராத தனம். சேலுலாவிய கூர் விழி - சேல் மச்சத்தைப்போற் பிறழும் கூரான விழி. தாருலாவிய நீள் குழல் - மாலை அசையும் நீண்ட அழகிய கூந்தல். வேயளாவிய - மூங்கிலை ஒத்த;

"ஆரு றவையும் அன்ன பிறவும்
கூறுங் காலைப் பல்குறிப் பினவே."

என்ற தொல்காப்பியத்தால் அளாவிய என்றதை உவமைச் சொல்லாகக் கொண்டாம். நாண்மலர் - புதுப்பூ. கார்மேகம் - 'நீர் கொண்டு கருத்த நிறமுடையது' என்பது பொருள்; இது ஆகு பெயர். காவல் மாது - தினைப்புனங் காவல் செய்யும் வள்ளியம்மையார். கருணாகர முருகன் - கிருபையே உருவாய முருகக் கடவுள். வாரி - கடல்; 'நீண்ட நீர் நிலை' என்ற பொருளது; 'மிகுந்த நீரையுடையது' என்றும் பொருளாம்; 'வாரி' என்பது பின்னர் பெருவெள்ளத்திற்கும் ஆயிற்று; அசுரரின் இரத்தம் நிணம் மாமிசம் முதலிய சேர்ந்து கலக்குண்டமையால் சேறுணமையின் 'வாரி சேறெழ' என்றார். பூபன் - தலைவன்; அரசனும் ஆம். மாமரமாக நின்ற அசுரன் வேலாற் கூறாக்கப்பட ஒரு கூறு மயிலானமையின் 'சேவக மா மயில்' என்றார். 'பூப! சேவக! மா மயில் மிசை

யோனே!' என மூன்று விளியாகவுங் கூறுவர். போதன் - 'விண்டுவின் உந்தியந்தாமரையில் இருப்பவன்' என்பது பொருளாம். மாதவன் - 'விஷ்ணு; திருமகள் நாயகன்' எனப் பொருளது. ஆதி - முழுமுதற் கடவுள்; இதனாலன்றே திருவள்ளுவரும்,

"ஆதிபகன் முதற்றே உலகு" என்றார்

மும்மூர்த்திகளுமே வணங்கும் பெருமானே! தேவர்க்கு இடுக்கண் செய்த அசுரரை வதைத்தவனே! ஆன்மாக்கள் கற்றுய்ய வேதாகம புராண நூல் பல அருளியவனே! தினைப்புனம் காவல் செய்த குறமகளை விரும்பி மணந்தவனே! மாதர் மயக்கில் கெட்டு அலைவேனுக்குத் தேவரும் முனிவரும் துதிக்கும் நின் திருத்தாள் சேர அருள்வாயாக என்று வேண்டியதாம்.

---

## திருச்செங்கோடு

26. தந்தா தனந்த தந்தா தனந்த
தந்தா தனந்த—தன தான.

பந்தாடி யங்கை நொந்தார் பரிந்து
பைந்தார் புனைந்த குழன்மீதே
பண்பார் சுரும்பு பண்பா டுகின்ற
பங்கே ருகங்கொள் முகமீதே
மந்தார மன்றல் சந்தார மொன்றி
வன்பா தகஞ்செய் தனமீதே
மண்டாசை கொண்டு விண்டா விநைந்து
மங்கா மலுன்றன் அடிதாராய்;
கந்தா! அரன்றன் மைந்தா! விளங்கு
கன்றா முகுந்தன் மருகோனே!

கண்டோர் புகழ்ந்த நன்கார் மடந்தை
    கந்தா! வரம்பை மணவாளா!

செந்தா தடர்ந்த கொந்தார் கடம்பு
    திண்டோள் நிரம்ப அணிவோனே!

திண்கோ டரங்கள் எண்கோ டுறங்கு
    செங்கோ டமர்ந்த பெருமாளே!

(இ - ள்) கந்தா! அரன்தன் மைந்தா! - கந்தக் கடவுளே! சிவபெருமானுடைய திருப்புத்திரனே!, விளங்கு கன்று ஆமுகுந்தன் - விளங்குகின்ற கன்றை உடைய பசுக் கூட்டங்களை மேய்த்த திருமாலுக்கு, மருகோனே - மருமகனே!, கண்டோர் புகழ்ந்த - பார்த்தவர்கள் எல்லாம் புகழும், நன்கு ஆர் மடந்தை - அழகு நிறைந்த தேவயானை அம்மையாருக்கு, சந்தா - பற்றுக் கோடாக உள்ளவனே!, அரம்பை மணவாளா - அரம்பைபோலும் அழகு கொண்ட வள்ளியம்மையாரின் மணவாளனே!, செம் தாது அடர்ந்த - செவந்த மரகதப் பொடிகள்மிகப் பொருந்தியுள்ள, கொத்து ஆர் கடம்பு - கொத்துக் கொத்தாக உள்ள கடப்ப மாலையை, திண் தோள் நிரம்ப அணிவோனே - உறுதியுள்ள புயங்களில் மிகவும் அணிந்து கொள்பவனே!, திண் கோடரங்கள் - வலிய குரங்குகள், எண் கோடு உறங்கு - கரடிகளோடு நித்திரை செய்யும்படியான, செங்கோடு - திருச்செங்கோடு என்னும் திருப்பதியில், அமர்ந்த பெருமாளே - வீற்றிருந்தருளும் பெருமாளே!, பந்து ஆடி அங்கை நொந்தார் - பந்தாட்டம் ஆட அழகிய கை வருந்திய பெண்கள், பரிந்து - விரும்பி, பைந்தார் புனைந்த - பசிய பூமாலைகளைத் தரித்துள்ள, குழல்மீது - கூந்தலின்மேலும், பண்பு ஆர் - அழகுமிகுந்த; சுரும்பு பண்பாடுகின்ற - வண்டுகள் இராகத்தைப் பாடும்படியான, பங்கேருகம் கொள் முகம்மீது - தாமரையை ஒத்த முகத்தின்

மேலும், மந்தாரம் மன்றல்-செவ்வரத்தம் பூவின் நறுமணத்தோடு சந்து ஆரம் - சந்தனமும் மாலையும், ஒன்றிய - பொருந்தியுள்ள, வன் பாதகம் செய் தனமீது - கொடிய பாவங்களைச் செய்யும் தனங்களின் மேலும், மண்டு ஆசை கொண்டு - மிக்க காதலைப்பூண்டு, ஆவி விண்டு நைந்து - உயிரை விட்டு வருந்தி, மங்காமல் - அழியாமல், உன்றன் அடி - உன்னுடைய திருமலர்த்தாள்களை, தாராய் - தந்தருள் வாயாக எ - று.

(வி - ரை) பந்தாடி யங்கம் சொரந்தார்' எனவும் பாடம். அங்கம் - தேகம். பண்பாடுகின்ற - 'செவ்விளரி ராகத்தைப் பாடுகின்ற' என்றலுமாம். மன்றல் - வாசனை.' வன் பாதகம் செய் - கொடிய பாதகமாகிய காமத்தை உண்டாக்குகின்ற' என்பது பொருள்; காளையர்க்குக் காமத்தை உண்டாக்குதற்குத் தனம் முக்கிய கருவியாதலின் இவ்வாறு கூறினர். காமமே எல்லாப் பாதகங்களுக்கும் பெற்றதாய் ஆதலின் 'வன் பாதகம்' என்றார். இதனை,

"பொல்லாத காமப் புலைத்தொழிலி லென்னறிவு
செல்லாமல் நன்னெறியிற் சேருநாள் எந்நாளோ."

என்றார் தாயுமானவரும்.

'வன்பாதகஞ்செய் தனமீதே' எனப் பாடம் ஓதுவாரும் உண்டு. அனைமீது - 'மலரமளி மீது' என்பது பொருள். காமத்தால் ஆவி துடித்து வருந்தும் ஆதலின், 'மண்டாசை கொண்டு விண்டாவி நைந்து' என்றார்; இனி, விந்து தேகத்தை விட்டுக் கழியக் கழிய உயிர்ப்பலம் ஒடுங்குமாதலின் இவ்வாறு கூறினரெனினும் ஆம்.

"விந்து விட்டையோ நொந்து கெட்டையோ."

என்னும் முதுமொழியுங் காண்க.

ஆறு குழந்தை வடிவா யிருந்து பின் ஒன்றாக உமாதேவியார் தழுவி எடுத்தபொழுது கூடி விளங்கினவர் ஆதலின் ஒன்று சேர்த்

துக் கூட்டப் பெற்றவர் என்ற பொருளிற் 'கந்தன்' என்னும் திருநாமம் ஏற்பட்டது. தந்தைக்குப் பின் வலியுடன் நின்று குடியைத் தாங்குபவன் ஆதலின் புத்திரனை 'மைந்தன்' என்றார். மைந்து - வலிமை. கன்று முகுந்தன் - 'துன்ப மல்லாத் திருமால்' எனவுங் கூறுவர். கொத்து என்பது 'கொந்து' என்றாயது மெலித்தல் விகாரம். 'திண்கோ டடர்ந்த வெண்கோ டுறங்க,' எனப் பாடம் ஓதுவாரும் உண்டு. இதற்குத் 'திண்ணிய கொம்புகளில் அல்லது மரக் கிளைகளில் காடிகள் உறங்கும்' என்பது பொருளாம்.

"சிவபெருமான் மைந்தனே! திருமால் மருகனே!, தேவானை வள்ளி மணாளா! திருச்செங்கோட்டில் எழுந்தருளி யிருக்கும் கடம்பனே! பெண்ணாசை கொண்டு மயங்காதபடி நின் திருமலர்த்தாள் தந்தாள் என்று விரும்பி வேண்டியதாம்

---

## பழமுதிர் சோலை

27. தனதன தானதான தனதன தானதான
தனதன தானதான தனதான.

இலவிதழ் கோதி நீதி மதகலை பாரவார
இளநகை யாட ஆடி மிகவாதுற்
றெதிர்பொரு கோரபார ம்ருகமத கோலகால
இணைமுலை மார்பிலேறி மதராசன்
கலவியி லேயு நீடு வெகுவித தாக போக
கரணப்ர தாபபாப ட்டமாதர்
கலவியின் மூழ்கியாழு மிழிதொழி லேனு மீது
கருதிய ஞானபோத மடைவேனோ;

கொலைபுரி காளிசூலி பயிரவி நீலி மோடி
குலிசகு டாரியாயி மகமாயி
குமரிவ ராகியோகி பகவதி யாதிசோதி
குணவதி யாலவூணி யபிராமி
பலிகொள்க பாலியோகி பரமகல் யாணிலோல
பதிவ்ரதை வேதஞானி புதல்வோனே!
படையொடு சூரன்மாள முடுகிய சூரதீர
பழமுதிர் சோலைமேவு பெருமாளே!

(இ-ள்) கொலை புரி காளி - மகிடாசுரனைச் சங்கரித்த காளியும், சூலி - மூவிலைச் சூலத்தை உடையவளும், பயிரவி - பைரவி என்னும் திருநாமத்தை உடையவளும், நீலி - நீல நிறமுடையவளும், மோடி - துர்க்கையும், குலிச குடாரி - வச்சிராயுதத்தையும் கோடரியையும் உடையவளும், ஆயி மகமாயி - (சர்வலோக அண்டங்களுக்கும்) தாயாய் இருப்பவளும், மகமாயும், குமரி வராகி யோகி - இளமைத் திருக்கோலம் உடையவளும் வராகியும் யோகினியும், பகவதி - ஐஸ்வரியம் முதல் ஆறும் உடையவளும், ஆதி - எல்லாவற்றிற்கும் முதலாக உள்ளவளும், சோதி - ஜோதிப் பிரகாசமாக விளங்குபவளும், குணவதி - சித்துக் குணத்தை உற்றிருப்பவளும், ஆல வூணி - ஆலகால விடத்தை ஊணாகக் கொண்டவளும், அபிராமி - அழகு உடையவளும், பலி கொள் கபாலி - பிட்சை வாங்கும் பிரம கபாலத்தை உடையவளும், யோகி - யோக நிலையில் நிற்பவளும், பரம கல்யாணி - உயர்ந்த கல்யாண குணங்களை உடையவளும், லோல - விளையாட்டை உடையவளும், பதிவிரதை - கற்புடையவளும், வேத ஞானி - வேதத்தை அறிந்தவளும் ஆகிய பார்வதி தேவியார்க்கு, புதல்வோனே - திருப்புத்திரனே!, படையொடு - சேனை

களோடு, சூரன் மாள - பதுமாசூரன் அழியும்படி, மூங்கிய சூரதீர மேற் சென்று போர் செய்த சூரதீரனே!, பழமுதிர் சோலை மேவு - பழமுதிர்சோலை என்னும் திருத்தலத்தில் எழுந்தருளி யிருக்கும், பெருமாளே-பெருமானே!, இலவு இதழ் கோதி-இலவமலரை ஒத்த இதழ்களைக்கோதி, நேதிமதகலை-நியதியையுடைய மன்மதகலையை, ஆர ஆர-மிக மிக இள நகை ஆட ஆடி-புன்னகை செய்ய விளையாடி, மிக வாது உற்று - மிகவும் வாது செய்து, எதிர் பொரு - எதிரில் பொரும், கோரம் பாரம்-கொடிய பெருத்த, ம்ருகமத-கோலாகல-கத்தூரி அணிந்த திரண்ட ரூபத்தே தோன்றியதாகிய, இணை முலை - இரண்டு தனங்களும், மார்பில் எற - மார்பிடத்தே பொருந்த, மதராஜன் கலவியில் ஓடி-மன்மத ராஜனது கலவி விளையாட்டிற் சென்று, நீடு வெகுவித தாகபோக - மிகுந்த அநேக விதமான ஆசையைக் கொண்டு, காணம் பிரதாபம் - பற்பல செய்கை விகற்பங் கொண்டுள்ள மேன்மை பொருந்திய, பாபம் மடம் மாதர் - செயலை உடைய இளம் பருவப் பெண்களினுடைய, கலவியில் மூழ்கி - போக வலைக்குள் முழுகி, ஆழும் இழிதொழிலேனும் - அழுந்துகின்ற கீழான செயலையுடைய அடியேனும், மீது கருதிய ஞான போதம் அடைவேனோ-மேன்மையாகக் கருதப்படும் ஞான போதத்தைப் பெறுவேனோ, எ - று.

(வி - ரை) இலவு இதழ் - இலவம் பூவை ஒத்த இதழ்; இது உவமத்தொகை. கோதுதல் - ஈண்டு பல்லால் மெல்லக் கடித்தல். 'நீதிமதகலை' நேதி மதகலை எனவும் - பாடபேதம் உண்டு. 'நீதி' 'நேதி' இரண்டும் ஒன்றே; நீதியின் மருவே 'நேதி'. 'ஆர ஆர; மிகுதிப் பொருளில் இரட்டியது. இள நகை - புன் நகை, முறுவல். 'புன்னகை யாடும்படி விளையாடி' என்பார் 'இள நகையாட ஆடி' என்றார். 'கோர பாரம்' என்பதற்குப் 'பெருங்கிண்ணத்தை ஒத்த' எனப்பொருளுங்கூறுவர்;(கோரம்-கொடுமை,வட்டில்). 'கோலகல;

கோலம் - அழகு; காலம் - தோன்றும் பருவத்திற் றோன்றிய; இனி 'கோலகலம்' கோலகாலம் என மருவியது எனக் கொண்டு பொருளுரைப்பாரும் உண்டு. இணை முலை - இரண்டு தனங்கள்; இதனை 'தமக்குத்தாமே இணையாகிய தனங்கள்' எனினும் ஆம். தாகபோகம் - ஆசையாற் செய்யப்படும் கலவி விநோதங்கள்.

'பாவத்தால் பெண் பிறப்பு எய்துகின்றனர்' என்பது ஒரு சாரார் கொள்கை. ஆதலின் 'பாபமடமாதர்' என்றார்; 'பாபம் செய்யும் மடமாதர்' என்றலும் ஆம். மாதர் மயக்கிற் பட்டு முயக்கில் ஆழ்தல் பிறவிக்கு ஏதுவாதலினால் 'இழி தொழில்' என்றார்.

மடுவிற் கிடப்பவன் மலையுச்சி ஏறல் எவ்வாறு கூடும்? அதுபோல, மாதர் மயக்கிற் கிடக்கும் அடியேன் மேலாகக் கருதப்படும் ஞான போதம் அடையக் கூடுமோ? கூடாதே. உனது திருவருள் இருப்பின் கூடும் என்பது தோன்ற 'கலவியின் மூழ்கி யாழு மிழிதொழி லேனுமீது கருதிய ஞானபோத மடைவேனோ' என்றார்.

"ஆட்டுவித்தா லாரொருவர் ஆடாதாரே
அடக்குவித்தால் ஆரொருவர் அடங்காதாரே
ஓட்டுவித்தா லாரொருவர் ஓடாதாரே
உருகுவித்தா லாரொருவர் உருகாதாரே
பாட்டுவித்தா லாரொருவர் பாடாதாரே
பணிவித்தா லாரொருவர் பணியாதாரே
காட்டுவித்தா லாரொருவர் காணாதாரே
காண்பாரார் கண்ணுதலாய்க் காட்டாக்காலே."

என்னுந் திருநாவுக்கரசுகள் திருவாக்கு மெய்ப்பிக்கும்.

காளி - 'கருநிற முடையவள்' என்னும் காரணம் பற்றி வந் தது. சூலி - சூலத்தை உடையயவள். பயிரவி - பயிரவர் என்பதன் பெண்பால். இறைவி - இறைவன் பாதிப் பாகத்தளாதலினாலும், இறைவர்க்குச் சத்தியாய் விளங்குபவள் ஆதலினாலும், அவளின்றி அவனுக்கு ஒரு செயல் இல்லை ஆதலினாலும், இறைவனுக்குரிய குணங் குறிகளை நாமங்களை இறைவிக்குங் கூறுவது மரபு.

"சிவமெனும் பொருளும் ஆதி சத்தியுடன்
கூடின் எத்தொழிலும் வல்லதாம்"

லகிரியானும் உணரலாம்.

"பழமுதிர் சோலைப் பெருமானே! உமாதேவி புத்திரனே! கலவியில் மூழ்கி ஆழும் இழிதொழிலேன் உன் கருணையால் அதினின்றும் நீங்கி உன் திருவடி சேர அருள்வாய்" என்றது விண்ணப்பம்.

---

சோலைமலை

28. தானதன தந்ததந்த தானதன தந்ததந்த
தானதன தந்ததந்த—தன தான.

வாரணமு கங்கிழிந்து
விழவும ரும்ப லர்ந்து
மால்வரைய சைந்த னங்கன் முடிசாய

வாளகிரி யண்டரண்ட
கோளமுற நின்றெழுந்து
மாதவம றந்துறந்து நிலைபேரப்

பூரணகு டங்கடிந்து
சீதகள பம்புனைந்து
பூசலைவி ரும்புகொங்கை மடவார்தம்

போகசய னந்த விர்ந்து
னூடகப தம்பணிந்து
பூசனைசெய் தொண்டனென்ப தொருநாளே;
ஆரணமு ழங்குகின்ற
வாயிரம டந்தவங்க
ளாகுதியி டங்கள்பொங்கு நிறைவீதி
ஆயிரமு கங்கள்கொண்ட
நூபுரமி ரங்குகங்கை
யாறமர வந்தலம்பு துறைசேரத்
தோரணம லங்கு துலங்க
கோபுரநெ ருங்குகின்ற
சூழ்மணிபொன் மண்டபங்கள் ரவிபோலச்
சோதியின்மி குந்தசெம்பொன்
மாளிகைவி ளங்குகின்ற
சோலைமலை வந்துகந்த பெருமாளே!

(இ - ள்.) ஆரணம் முழங்குகின்ற - வேதங்கள் மிகவும் ஒலிக்கின்ற, ஆயிரம் மடம் தவங்கள் - ஆயிரக் கணக்காயுள்ள மடங்களும் தவஞ் செய்யும் இடங்களும், ஆகுதி இடங்கள் - வேள்வி செய்கின்ற இடங்களும், பொங்கும் நிறை வீதி - மிகுந்து நிறைந்துள்ள வீதிகளில், ஆயிரம் முகங்கள் கொண்ட - ஆயிரம் முகங்களோடுங் கூடிய, நூபுரம் இரங்கு - சிலம்பொலிமை ஒத்து ஒலிக்கின்ற, கங்கை ஆறு - கங்கா நதியானது, அமர வந்து அலம்பு - பொருந்துமாறு வந்து சப்திக்கின்ற, துறை சேர - துறைகளிலே அடைய, தோரணம் அலங்கு - (மகுட) தோரணங்கள் அசைந்து கொண்டிருக்கும்படியான, துங்கம் கோபுரம் - உயர்ந்த கோபுரங்

கள், நெருங்குகின்ற சூழ் மணி - அடர்ந்து இரத்தினங்கள் சுற்றிப் பதித்த, பொன் மண்டபங்கள் - பொன்னாலாகிய மண்டபங்கள், ரவி போல - சூரியனைப்போன்ற, சோதியில் மிகுத்த - பிரகாசத்தால் மேன்மையுற்ற, செம் பொன் மாளிகை விளங்குகின்ற - செவந்த பொன் மயமான மாளிகைகள் விளங்கும், சோலைமலை வந்து உகந்த பெருமாளே - சோலை மலை என்னும் திருப்பதியிலே வந்து விரும்பி வீற்றிருக்கின்ற பெருமானே!, வாரணம் முகம் கிழிந்து வீழவும் - யானையினது மத்தகமானது கிழிபட்டு வீழவும், அரும்பு அலர்ந்து - தாமரை யரும்பு மலரவும், மால் வரை அசைந்து - பெரிய மலைகள் அசையவும், அனங்கன் முடி சாய - மன்மதனது கிரீடமானது சாய்வைப் பெறவும், வாளகிரி - சக்கர வாளகிரி, அண்டரண்ட கோளம் - ஆகாய மண்டல வட்டத்தில், உற நின்று எழுந்து - அமைந்து நிலைபெற்ற உயரவும், மாதவம் அறம் துறந்து நிலைபெயர - சிறந்த தவமும் தருமமும் நீங்கிச் செல்லவும், பூரண குடம் கவிழ்ந்து - பூரண கும்பத்தை வென்று, சீதம் களபம் புனைந்து - குளிர்ச்சி பொருந்திய கலவைச் சாந்தை அணிந்து, பூசலை விரும்ப - காமச் சண்டையை விரும்பும், கொங்கை மடவார் தம் - தனங்களையுடைய மாதர்களின், போக சயனம் தவிர்ந்து - போகப் படுக்கையினின்றும் நீங்கி, உன் ஆடகம் பதம் பணிந்து - உன் பொன்போன்ற செவ்விய திருமலரடிகளை வணங்கி, பூசனை செய் தொண்டன் என்பது - அர்ச்சித்து வணங்கும் அடியேன் என்று சொல்வதாகிய, ஒரு நாள் உண்டோ - ஒரு நாள் ஏற்படுமோ? எ - று.

(வி - ரை.) தனம் போல் இல்லாமையால் யானை மத்தகம் தாழ்வடைந்தது என்றது குறித்தே 'வாரணமுகம் கிழிந்து வீழவும்' என்றார். தாமரை அரும்பு தனத்துக்கு ஒவ்வாமையால் மலர்ந்தது என்றார்; இது தற்குறிப்பேற்றம். யானைத்தலை, தாமரை

அரும்பு, மால்வரை, அனங்கன் முடி, வாளகிரி, பூரண கும்பம் முதலியன தனத்துக்கு உவமப் பொருள்கள்.

ஆயிரம் என்றதை மடத்தோடும் ஆயிரந் தலங்களிடங்கள் ஆயிரம் ஆகுதி யிடங்கள் என்று கூட்டிப் பொருள் உரைத்தலும் ஆம். ஆயிரம் பேரால் சப்தித்துக்கொண்டு செல்லுஞ் செலவை உடைய கங்கை நதி என்றது.

''அரங்கி னாடுவார் சிலம்பி னன்னநின்
றிரங்கு வார்புனற் சரயு வெய்தினார்''

என்ற இராமாயண கவியோ டொப்பிடலாம்.

'ஆயிர முகங்கள்' என்றது ஆயிரக்கணக்கான துறைகளை 'ஆயிரம்' [illegible] பொருளது. கங்கை பல துறைக ளுடைமையை,

''கயல்பாயக் கடுங்கலுழிக் கங்கை நங்கை
ஆயிரமா முகத்தினொடு வானிற் றோன்றும்''

என்ற தேவாரத்தாலும் அறியலாம்.

''அறத்தையும் தவத்தையும் சிதைக்கும் மாதர் போகத்தை விட்டு நின் பொற்பாதத்தைப் பணியுமாறு சோலைமலை மேவும் முருகக் கடவுளே!, நீ எனக்கருள்'' என்று வேண்டிக் கொண்ட தாயிற்று.

மாதர் போகத்திலும் நின் பாத சேவை இன்பந் தருவது மாதர் போகம் துன்பமும் நரகமும் பயக்கும்; நின் பாத சேவை இன்பமும் ஞானமும் முத்தியுந் தருவது என்ற தாயிற்று. இதனை,

''அருப்புப் போன்முலை யாரல்லல் வாழ்க்கைமேல்
விருப்புச் சேர்நிலை விட்டுநல் விட்டமாய்த்
திருப்புத் தூரனைச் சிந்தை செயச்செயக்
கருப்புச் சாற்றினு மண்ணிக்குங் காண்மினே.''

என்றதானும் அறியலாம்.

சீபுருடமங்கை (சோலைமலை)

23. தானதன தந்த தானதன தந்த
தானதன தந்த—தனதான.

வேனின்மத னைந்து பாணம்விட நொந்து
வீதிதொறு நின்று மடவார்பால்
வேளையென வந்து தாளினில்வி ழுந்து
வேடைகெட நண்பு பலபேசித்
தேனினும ணைந்த வாயமுத முண்டு
சீதளத னங்க ளினின்மூழ்கித்
தேடியத னங்கள் பாழ்படமு யன்று
சேர்கதிய தின்றி யுழல்வேனோ;
ஆனிரைது ரந்து மாநிலம ளந்தொ
ராலிலையி லன்று துயின்மாயன்
ஆயர்மனை சென்று பால்தயிர ருந்த
ஆணழகு குந்தன் மருகோனே!
வானவர்பு கழ்ந்த கானவர்ப யந்த
மானொடுவி ளங்கு மணிமார்பா!
மாமறைமு ழங்கு சீபுருட மங்கை
மாநகர மர்ந்த பெருமாளே!

(இ - ள்) ஆன் நிரை துரந்து - பசுக் கூட்டங்களினின்றும் நீங்கி, மாநிலம் அளந்து - இந்தப் பெரிய பூலோகத்தை ஓரடியால் அளந்து, ஓர் ஆல் இலையில் - ஒப்பற்ற ஒரு வட ஆல இலையில், அன்று துயில் மாயன் - அந்நாளில் கண் வளர்ந்த மாயா

விரோதனும், ஆயர் மனை சென்று - இடைச்சியர்கள் வீடு தோறுஞ் சென்று, பால்தயிர் அளைந்த - பாலையுந் தயிரையுங் குழைத்துண்ட, ஆரணம் முகுந்தன் - வேதங்களாலே புகழப் பெறுந் திருமாலுக்கு, மருகோனே - மருமகனே!, வானவர் புகழ்ந்த - தேவர்களாலே புகழப்பெற்ற, கானவர் பயந்த - வேடர்கள் பெற்ற, மாதொடு விளங்கும் - வள்ளி நாயகியாரோடு சிறப்புற விருக்கும், மணி மார்பா - அழகிய மார்பை உடையவனே!, மா மறை முழங்கு - மேலான வேதங்கள் மிகுதியாக இசைக்கப் பெற்ற, பெருட மங்கை மா நகர் - பெருட மங்கை என்னும் பெயரை யுடைய திவ்விய திருப்பதியில், அமர்ந்த பெருமானே - விரும்பி எழுந்தருளியிருக்கும் பெருமானே!, வேனில் மதன் - இளவேனிற் காலத்திற்கு உரியவனான மன்மதன், ஐந்து பாணம் விட நொந்து - ஐந்து மலர்க்கணைகளை விடுவதனால் வருத்த முற்று, வீதி தொறும் நின்று - தெருக்கள் தோறும் நின்று, மடவார் பால் - மாதர்களிடத்தில், வேளை என வந்து - (என்னைக் காக்கும்) வேளை இது என்று சொல்லி அணுகி, தாளினில் விழுந்து - அவர்களை இசையும்படி அவர்கள் பாதங்களில் விழுந்து, வேட்கை கெட - காம வெப்பம் நீங்க, நண்பு பல பேசி - நட்புக்கு உரியதான பல வார்த்தைகளைக் கூறி, தேனினு மினித்த - தேனைக் காட்டிலும் இனிமையாகிய பரிமளிக்கும், வாய் அமுது உண்டு - இதழமுதை உண்டு, சீதளம் தனங்களினின் மூழ்கி - குளிர்ச்சி பொருந்தியுள்ள தனங்களிலே முழுகி, தேடிய தனங்கள் பாழ்பட முயன்று - வருந்திச் சம்பாதித்த பொருளெல்லாம் வீணாக அழிந்து போம்படி இந்த வீண் முயற்சியைச் செய்து, சேர் கதி அது இன்றி - பெறத்தக்க நல்ல கதியைப் பெறாமல், உழல்வேனோ - இந்த விதமாகவும் துன்பப்படுவேனோ? எ - று.

(வி - ரை.) இளவேனிற் காலம் காம இன்பம் துய்ப்பார்க்கு மிகுந்த ஏற்ற காலம் ஆதலின் மன்மதனை 'வேனிலான்' என்றார். இதனாலன்றோ,

"ஆரமும் ஆரச் சேறும் அரும்பனி நீரும் பூவும்
ஈரவெண் மதிநி லாவும் இதம்புரி தென்றற் காலும்
ஓருயிர் இரண்டு மெய்யாய் உருகுவார் உருகும் வண்ணம்
மாரனை மகுடஞ் சூட்ட வந்தது வசந்த காலம்."

என்ற வில்லிபுத்தூரார் சொல்லிய வாக்கா லறியலாம்.

மன்மதன் ஐமலர்க்கணைகளாவன: முல்லை, அசோகு, குவளை, தாமரை, மாம்பூ என்பனவாம். தேனிலும் மணந்த - 'தேனிலும் இன் சுவையை உடைய' என்றும் பொருள் கூறுவர். இதனாலன்றோ திருவள்ளுவ நாயனாரும்

"பாலொடு தேன்கலந் தற்றே பணிமொழி
வாலெயி றூறிய நீர்."

என்று அருளிச் செய்தார்.

காமச் சுரங் கொண்டார்க்கு வேனிற் காலத்துச் சீதளமாக இருத்தலினாலும்; சந்தனம், முத்து மாலை, மலர் மாலைகளால் சீதளம் பெற்ற தனமாதலாலும் 'சீதள தனங்கள்' என்றார்.

தேடிய தனங்களைக் கடவுளுக்கும் அவர் அடியார்களுக்கும் செலவு செய்யும் அறவழி விட்டுப் பெரும் பிழைதரும் மாதர்க்குத் தந்து வம்பாக இழத்தலினால் 'தேடிய தனங்கள் பாழ்பட முயன்று' என்றார்.

பட்டினத்தடிகளும்,

"மதனசொரூப னிவனெனமோக மங்கையர்கண்டுமெ
ருண்டுதிரண்டு வரிவிழிகொண்டு சுழியவெறிந்து
மாமயில்போலவர் போவது கண்டு—

மனைதுபொருமல ளடர்பிறவிசாய மங்கலிசெங்கல
சந்திகழ்கொர்க்கை மருவமெங்கி யிதழுமுதாண்டு
தேடியமாமுதல் சேரவழங்கி—
ஒருமுதலாகி முதுபொருளாயி ருந்தனங்களும்
வம்பிலிழுந்து மதனைசர்ந்த விதனைபிறன்று
வாலிபகோலமும் வேறுபிரிந்து.”

எனக் கூறியருளினர்.

நோய்த் துன்பத்தும், வறுமைத் துன்பத்தும், நரகத் துன்பத்தும், பிறவித் துன்பத்தும் மாதாரானை வீழ்த்திடு மாதலின் ‘சேர்கதி இன்றி உழல்வேனை’ என்றார். இதனை,

“கூடுமொரு வீட்டைத்தும் கொண்டுபல நோயாசதும்
நீடுசிறப் பூட்கும் வறுமைத்தும்—வீவிக்கும்
அல்லற் பிறப்பளிக்கும் அத்தோபன் வேசையுற
வில்லையெனி நன்றாம் எனக்கு.”

என்ற வெண்பாவாலும் அறியலாம்.

“சிற்றம் பலமுஞ் சிவனும் அருகிருக்க
வெற்றம் பலந்தேடி விட்டோமே—நித்தம்
பிறந்திடத்தைத் தேடுதே பேதைமட நெஞ்சம்
கறந்திடத்தை நாடுதே கண்.”

என்ற பட்டினத்தடிகள் வாக்கும் பார்க்கத்தக்கது.

பசு மேய்த்தது கிருஷ்ணவதாரத்தில்.

பூமியை ஓரடியா லளந்தது திரிவிக்கிரமாவதாரத்தில் (வாமனராக வந்து மாபலியிடம் மூன்றடி மண் யாசித்த காலத்து),

ஆலிலைமேல் துயின்றது சர்வ சம்கார பிரளய காலத்தில். பிரளய வெள்ளத்தில் ஆலிலைமேல் துயின்றார் என்பது புராண கதை.

இடையர் வீட்டிற் சென்று வெண்ணெய் தயிர் திருடி உண்டது கிருஷ்ணாவதாரத்தில்.

மாடு மேய்த்து இடையர் வீட்டில் வெண்ணெய் திருடி யுண்டவ னாயினும் உலகையே ஓரடியா லளந்த பெரியோன் சர்வ லோகமும் அழியினும் தானழியாதவன். வேதங்களும் புகழும் பெருமை உடையவன் என்பது தோன்ற 'ஆனிரை புரந்து............... ஆரண முகுந்தன்' நன்கு புலப்படுத்தியது காண்க.

'காளவர் பயந்த வானவர் புகழ்ந்த மாமுருக' இயைத்துப் பொருள் கொள்க. மறை - 'இரகசியார்த்தத்தை உடையது' என்பது பொருளாம்.

"சேர்த்தி லன்றி மாதராசையில் உறலும் அடியேனை முருகா! தடுத்து ஆட்கொள்" என்றது கருத்து.

---

பழநி

30. தனன தந்தன தந்த னாதன
தனன தந்தன தந்த னாதன
தனன தந்தன தந்த னாதன — தந்ததான.

கனக கும்பமி ரண்டு நேர்மலை
யெனநெ ருங்குகு ரும்பை மாமணி
கதிர்சி றந்தவ டங்கு லாவிய முந்துசூதம்
கடையி னின்றுப ரந்து நாடொறு
மிளகி விஞ்சியெ ழுந்த கோமள
களப குங்கும கொங்கை யானையை யின்பமாக
யனைவ ருங்கொளு மென்று மேல்விலை
யிடும டந்தையர் தங்க டோதகம்
அதின்ம ருண்டுது வண்டவாசையில் ளைந்துபாயல்

அவச மங்கொளு மின்ப சாகர
　　முழுகும் வஞ்சக நெஞ்சை யேயொழி
　　தருப தங்கதி யெம்பி ரானருள் 　　　　தந்திடாயோ;
தனன தந்தன தந்த னாவென
　　டிகுகு டிங்குகு டிங்கு பேரிகை
　　தகுதி திக்கிகு திக்க தோவென 　　　　உந்து தாளந்
தமர சஞ்சலி சஞ்ச லாவென
　　முழவு டுண்டுடு டுண்டு டூவென
　　தருண கிண்கிணி கிண்கி ணாரமு 　　　　முந்த வோதும்
பணிப தங்கய வெண்டி சாமுக
　　கரிய டங்கலு மண்ட கோளகை
　　பதறி நின்றிட நின்று தோதக 　　　　வென்ற தோகை
பவுரி கொண்டிட மண்டி யேவரு
　　நிசிச ரன்கிளை கொன்ற வேலவ!
　　பழநி யங்கிரி யின்கண் மேவிய 　　　　தம்பிரானே!

(இ-ள்) தனன தந்தன தந்தனாவென டிகுகு டிங்குகு டிங்கு பேரிகை - தனன தந்தன........டிங்கு என்று முழங்கு தலைச் செய்கின்ற பேரிகையும், தகுதி திக்கிகு திக்கதோ என உந்து தாளம் - தகுதி.........திக்கதோ என்ற இசையைச் செய்யுமாறு அடிக்கப்படுந் தாளமும், தமர சஞ்சலி சஞ்சலா என - துவாரத்தைக் கொண்ட சஞ்சலி சஞ்சலா எனக் கீதத்தைச் செய்ய, முழவு - மத்தளம், டுண்டுடு டுண்டுடூ என - டுண்டுடு டுண்டுடூ என்ன இந்தத் தாள ஓசையைச் செய்யவும், தருணம் கிண்கிணி - சிறிய தூய கிண்கிணி, கிண் கிண் ஆரமும் - கிண் கிண் என்னும் ஓசையையுடைய மணி வடங்களும், முந்த ஓதும் - முன்னாலே

யினால், நைந்து - வருந்தி, பாயல் அவசம் கொளும் - படுக்கையிலே படுத்துப் பரவசம் அடையும், இன்பம் சாகரம் முழுகும் - காம இன்பமாகிய கடலில் மூழ்கும். வஞ்சகம் நெஞ்சை ஒழிதரு - வஞ்சகம் நிறைந்த மனத்தை அகற்றுகின்ற, பதம் கதி - மேலான பதவியாகிய கதியை, எம்பிரான் - எமது ஆண்டவனே!, அருள் தந்திடாயோ - அடியேனுக்கு அருள் செய்து தரமாட்டாயோ, எ - று.

(வி - ரை.) குரும்பை - தென்னங் குரும்பை.

"குரும்பை மென் முலையார்"

என்றார் அதிவீரராம பாண்டியனார்.

'மாமணி கதிர் நிறைந்து வடக்குலாவி' என்றது முத்துமாலை யணிந்து என்றவாறாம். பெண்கள் பண்டைக் காலத்தே முத்தார மணிவது தமிழ் நாட்டு வழக்கு. ஏனைய மணிகளில் முத்துச் சிறந்தது; ஆதலினால் 'மாமணி' என்றும், 'கதிர் நிறைந்து' என்றுங் கூறினார். ஏனைய மணிகளைச் சான்றோர்கள் மதிக்கும்படி வரைசாணை வட்டத்து வைத்து அம்பினைஞர் கடைந்து பிடித்து ஒளி செய்விக்க வேண்டும். முத்துக்கு இது வேண்டுவதின்று. இயல்பிலேயே ஒளியுடையது.

தமிழ் பாண்டிநாட்டில் விளைவது, இதனானே,

"பூழியர்கோன்
தென்னாடு முத்துடைத்து தெண்ணீர் வயற்றொண்டை
நன்னாடு சான்றோ ருடைத்து."

என்று ஔவைப் பிராட்டியுங் கூறினார்.

"பெருங்கடலுள் பல்லிலைய முத்தம் பிறக்கும்"

எனப் பிறருங் கூறினர்.

'கோமள கொங்கை' என்றது முற்று முலையை, முற்றின் தளர்ந்து சாயும் ஆதலின், இதனாலன்றோ சரச சல்லாபத்தில்,

"முற்றுமென் முலைபாரை மோகனஞ்செப் புக்கலவி
கற்றாய்நீ என்றதல்லாற் கற்றாய்நீ என்றிலனே"

என்றார்.

"ஆயன் பதியில் அரன்பதிவந் துற்றளகம்
ஆயனூ துங்கருவி ஆனாலும்—தூயமணிக்
குன்றுபோல் வீறு குவிமுலையா டன்னுடனீ
இன்றுபோல் என்றும் இரு."

என மணமகளை ஔவைப்பிராட்டி வாழ்த்தியதா லறியலாம்.

ஆயன் பதி - திருமால் துயிலும் ஆலிலைபோன்ற வயிறு. அரன் பதி - சிவபெருமான் திருப்பதியாகிய கைலைமலை போன்ற முலை, சோதகம் - வஞ்சகம், மடந்தையர் - இளம்பருவப் பெண்கள், அவசமாதல் - தன்வசங் கெடல், வஞ்சக நெஞ்சு - கேலி செய்யும் நெஞ்சு. இதனாலன்றோ,

"துடிகெடுக்கு நெஞ்சிற்றுக் குற்றேவல் செய்யின்
பிடிபடுக்கப் பட்ட களிறு."

என்றார் பதினெண் கீழ்க்கணக்கில். மாதர் ஆசை நீக்கி இறைவன் தாளில் அவ் ஆசையை வைப்பின் கதி கிடைக்கும். இதனாலன்றோ,

"மங்கையர்கள் யோனியிலே வைத்திருக்கும் ஆசையினைப்
பங்குசெய்து ஆற்றிலொரு பங்கெடுத்து—கங்கையணி
வேணியரன் பாதார விந்தத்தில் வைத்தக்கால்
காணலாங் காணாக் கதி."

என்றார் பெரியோர்.

சோதக ஒன்ற தோகை - 'முன் வஞ்சனை அசுரனாக இருந்த தோகை' எனவும் பொருளுரைப்பர். தம்பிரான் - தனக்கு மேல் ஒரு பெரியவன் இல்லாது பெரியவனாக விளங்குபவன்' என்பது பொருள்.

"மாதர் ஆசையில் மூழ்கும் என் வஞ்சக நெஞ்சை ஒழித்து நின் பதமலர்க் கதி தந்தருள்" என வேண்டினர்.

---

## திருவேங்கடம்

31. தனதாந்தன தானன தானன
தனதாந்தன தானன தானன
தனதாந்தன தானன தானன தனதான.

வரிசேர்ந்திடு சேல்கய லோவிணை
முனைவார்ந்திடு வேலைபு நீலமும்
வடுவாங்கிடு வாள்விழி மாதர்கள் வலையாலே
வளர்கோங்கிள மாமுகை யாகிய
தனவாஞ்சையி லேமுக மாயையில்
வளமாந்தளிர் போனிற மாகிய வடிவாலே
இருள்போன்றிடு வார்குழ லீழலில்
மயல்சேர்ந்திடு பாயலின் மீதுற
வினிதாங்கனி வாயமு தூறல்கள் பருகாமே
எனதாந்தன தானவை போயற
மலமாங்கடு மோக விகாரமும்
இவைநீங்கிட வேயிரு தாண்மல ரருள்வாயே;
கரிவாய்பரி தேர்திரள் சேனையு
முடனூந்துரி யோதன னாதிகள்
களமாண்டிட வேயொரு பாரத மதிலேகிக்
கனபாண்டவர் தேர்தனி லேயெழு
பரிதூண்டிய சாரதி யாகிய
கதிரோங்கிய நேமிய னாரி ரகுராமன்

மீனே என்று சொல்லப்படும், உழை - மானையும், வார்த்திடு வேலையும் - வடித்து எடுத்துச் செய்யப்பட்ட வேலாயுதத்தையும், நீலமும் - நீலோற்பல மலரையும், வடு - மாம் பிஞ்சினையும், வாங்கிடு வாள் - பகைவர்களின் உயிரை வாங்கும் வாளாயுதத்தையும் ஒத்த, விழி மாதர்கள் - கண்களையுடைய பெண்கள், வலையால் - காமுகராகிய கலையரைப் பிடிக்கும்படி வீசும் வலையினாலும், வளர் கோங்கு - வளர்கின்ற கோங்கினுடைய, இள மாமுகை ஆகிய தனம் வாஞ்சையில் - இளமையான சிறப்பான அரும்பை நிகர்த்த தனங்களின் மேல் வைத்த ஆசையினாலும், மூகம் மாயையில் - முகத்தினது மயக்கத்தாலும், வளம்மாந்தளிர் போல் - செழுமையான மாமரத்தினது தளிரைப் போன்ற, நிறம ஆகிய வடிவால் - நிறம் பொருந்திய உருவத்தினாலும், இருள் போன்றிடு - இருளை நிகர்த்த, வார் குழல் நிழலில் - நீண்ட கூந்தலின் நிழலிலே, மயல் சேர்த்திடு பாயலின் மீது உற - காம மயக்கங் கொண்ட படுக்கையின் மேலே பொருந்த, இனிது ஆம் - இனிமையைக் கொண்ட, கனி வாய் அமுது ஊறல்கள் - கோவைக்கனி போன்ற இதழின் அமுதாகிய ஊறல்கள், பருகாமே - உண்ணுதபடி, எனது ஆம் தனது ஆனவை - எனது ஆன தான தனதானவைகள், மலம் ஆம் கரு மோக விகாரமும் - மலத்தினாலே உண்டாகிய மிகுந்த காம மோக விகாரமும், இவை நீங்கிட - ஆகிய இக் குற்றங்கள் அகன்றிட, இரு தாள் மலர் அருள்வாய் - இரண்டு திருப் பாதங்களாகிய மலர்களை அடியேனுக்குத் தந்தருள்வீராக, எ - று.

(வி - ரை) வரி சேர்த்திடு சேல் கயலோ எனும் - 'செவ்வரி பரந்த சேலையும் கயலையும் ஒத்த' என்று பொருள். 'சேல்கணையோ' என்றும் பாடம் ஓதுவர். 'வரி சேர்ந்த சேலையும், வரி சேர்ந்த கயலையும் ஒத்த கண்' என்றும் பொருள் கூறுவர். அவ்வாறு கூறின் இல்பொருளுவமை அணி.

களை நீராக்குவது, எல்லாச் செல்வங்களையும் தருவது, நற்பண ஆதிப் பல் நல் பொருள் குறித்த சொல்.

"பாண்டவர் சகாயனும், சக்கராயுதனும், வருணனை - வாலியை - மாமரத்தை - ராவணனைச் சினந்து வில்லை வளைத்தருளியவரும் ஆகிய திருநாரணனுக்கு மருமகனே! மாதர் மயக்கில் விழுந்து கெடும் என் கொடிய மோகவிகாரம் நீங்க உனது இருதாண் மலர் அருள்வாய்" என்றது கருத்து.

---

32. தான தத்தன தத்தன தத்தன
தான தத்தன தத்தன தத்தன
தான தத்தன தத்தன தத்தன தனதான.

ஆலம் வைத்தவி ழிச்சிகள் சித்தச
ஞக மக்கலை கற்றச மர்த்திக
ளார்ம னத்தையு மெத்திவ ளைப்பவர் தெருவூடே

யார வட்டமு லைக்குவி லைப்பண
மாயி ரக்கலம் கொட்டிய ளப்பினு
மாசை யப்பொரு ளொக்கக டிப்பவ ருடன்மாலாய்

மேவி ளைப்புமு சிப்பும வத்தையு
மாயெ டுத்தத லைப்பொடு பித்தமு
மேல்கொ ளத்தலை பிட்டவி திப்ப யதனாலே

மேதி னிக்குள பத்த னெனப்பல
பாடு பட்டுபு ழுக்கொள்ம லக்குகை
வீடு கட்டிபி ருக்குமெ னக்குநி னருடாராய்;

பீலி மிக்கம யிற்றுர கத்தினி
லேறி முட்டவ ளைத்துவ குத்துடல்
பீற லுற்றவு யுத்தக ளத்திடை மடியாத
பேர ரக்கரெ திர்த்தவ ரத்தனை
பேரை யுக்ரக ளப்பலி யிட்டுயர்
பேய்கை கொட்டிந டிப்பம ணிக்கழு குடனாட
ஏலம் வைத்தபு யத்தில ணைத்தருள்
வேலெ டுத்தச மர்த்தையு ரைப்பவர்
ஏவ ருக்கும னத்தினி னைப்பவை யருள்வோனே!
ஏழி சைத்தமி ழிற்பய னுற்றறி
ஞாவ லுற்றடி யிற்பயி லுத்தம
னீசன் முக்கணி ருத்தன ளித்தருள் பெருமாளே!

(இ - ள்.) பீலி மிக்க - தோகைகள் மிகுந்த, மயில் துரகத்தினில் - மயிலாகிய பரியின் மேலே, ஏறி - இவர்ந்து, முட்ட வளைத்து - முற்றிலுஞ் சுற்றி, வகுத்து - வியூகங்களை அணிவகுத்து, உடல் பீறல் உற்ற - உடம்பு சிதைவு பட்ட, யுத்த களத்திடை - யுத்த பூமியில், மடியாத - சாவாத. பேர் அரக்கர் - பெருமை பெற்ற அரக்கர்களுள், எதிர்த்தவர் அத்தனை பேரை - எதிர்த்தவர்கள் அத்தனை பேரையும், உக்ரம் களம் பலி இட்டு - கோபம் மிகுந்த யுத்த களத்தில் பலி ஆக இட்டு, உயர் பேய் கைகொட்டி நடிப்ப - உயர்ந்த பேய்கள் கைகளைக் கொட்டிக் கூத்தாடவும், மணி கழுகு உடன் ஆட - மணி நிறம் பொருந்திய கழுகுகள் கூடி விளையாடவும், ஏலம் வைத்த புயத்தில் - ஏலவைச் சாந்து பூசிய தோளில், அணைத்தருள் - சேர்த்திவைத் தருளுகின்ற, வேல் எடுத்த சமர்த்தை - வேலாயுதத்தை எடுத்தருளிய சாமர்த்தியத்தை, உரைப்

பவர் எவருக்கும் - புகழ்ந்து கூறுவோர்கள் எல்லோருக்கும், மனத்தில் நினைப்பவை அருள்வோனே - அவரவர்கள் மனத்திலே எண்ணுகின்றவைகள் எல்லாவற்றையும் அருள் செய்பவனே!, ஏழ் இசை தமிழில் பயன் உற்ற - ஏழ்வகை இசை பேதங்களோடு கூடிய தமிழ்ப் பாட்டுக்களால் பிரயோசனத்தைக் கொண்டு, வெண் நாவல் உற்ற அடியில் பயில் - வெண்ணாவல் மரத்தை விரும்பி அதனடியில் கோயில் கொண்டிருக்கும், உத்தமன் ஈசன் - நன்மை மிகுந்த ஈச்சரனும், முக்கண் நிருத்தன் - மூன்று கண்களை உடையவரும் நடனம் புரிவோருமாகிய சிவபெருமான், அளித்தருள் பெருமாளே - பெற்றருளிய பெருமானே!, ஆலம் வைத்த விழிச்சிகள் - விஷத்தைப் பொருந்திய கண்களை உடையவரும்; சித்தசன் ஆகமம் - மன்மதாகமத்தின், கலைகள் கற்ற சமர்த்திகள் - கலைகளை எல்லாங் கற்றறிந்த சாமர்த்தியத்தை உடையவர்களும், ஆர் மனத்தையும் - எப்படிப்பட்டோர் நெஞ்சத்தையும், எத்தி வளைப்பவர் - ஏமாற்றித் தங்கள் வசப்படுத்திக் கொள்வோரும், தெரு ஊடு - தெரு நடுவில், ஆரம் வட்டம் முலைக்கு - முத்துமாலை தரித்த வட்டமான தனங்களுக்கு, விலை பணம் ஆயிரம் கலம் - விலையாகப் பணத்தை ஆயிரம் கலங்களாக, கொட்டி அளப்பினும் - கொட்டிக் கொட்டி அளந்தாலும், ஆசை அப்பொருள் ஒக்க - ஆசை அவர்கள் தந்த அந்தப் பொருள்களுக்குத் தகுந்தபடி, நடிப்பவர் உடன் மாலாய் - கபட நாடகஞ் செய்கின்ற விலை மாதர்களிடம் காமமயக்கங் கொண்டு, மேல் இளைப்பும் - தேக இளைப்பும், முசிப்பும் - இளைப்பும், அவத்தையும் ஆய் - அவஸ்தைகளும் ஏற்பட்டு, எடுத்த குலைப்பொடு - அதற்கு மேலும் உண்டாகிய இருமலோடு, பித்தமும் மேல் கொள - பித்தமும் அதிகப்பட, தலையிட்ட விதிப்படி அதனால் - தலையின்மேல் எழுதிய விதியின்படியே, மேதினிக்குள் - இந்தப் பூமியிலே, பத்தன்

என - உனது அடியவன் என்று, பல பாடுபட்டு - பற்பல வகையான துன்பங்களையும் அனுபவித்து, புழு கொள் மலம் குகை - புழுக்கள் செறிந்த மலக்குகையாகிய, வீடு கட்டி இருக்கும் - தேகமாகிய இந்த வீட்டைக் கட்டி யிருக்கின்ற, எனக்கு - அடியவனாகிய எனக்கு, நின் அருள் தாராய் - தேவரீருடைய திரு அருளைத் தந்தருள்வீராக, எ - று.

(வி - ரை.) ஆலம் வைத்த விழிச்சிகள் - 'நஞ்சச் தோய்ந்த நயனத்தார்' என்பது பொருள். இதனான் அன்றே அம்பிகாபதியும்,

"வரியரவ,

நஞ்சிலே தோய்ந்த நளினவிழிப் பெண்பெருமாள்"

என்றார்.

சித்தசன் - மன்மதன்; 'எல்லோர் மனத்திலும் காம ஆசையை எழுப்புவோன்' என்பது பொருள். சித்தசனாகமக்களை - மதனாகம நூல்.

முலை விலையாக ஆயிரக்கலம் அளித்தாலும் அவர் கொடுத்த அந்தப் பணத்திற்குத் தகுந்தபடி வஞ்சகமாக நடிப்பவர் என்பதனை 'ஆர வட்ட முலை.........நடிப்பவர்' என்றார். இதனை,

"அங்கண் விசும்பின் அமரர் தொழப்படும்
செங்கண்மா லாயினு மாகமன்—தங்கைக்
கொடுப்பதொன் றில்லாரைக் கொய்தளி ரன்னார்
விடுப்பர்தங் கையாற் றொழுது."

என்றும்,

"ஆமாப்போல் நக்கி அவர் கைப்பொருள் கொண்டு
சேமாப்போற் குப்புறூஉம் சில்லைக்க ணன்பினை

ஏமாந் தெமதென் றிருந்தார் பெறுபவே
தாமாம் பலரா னகை."

எனவும்,

"ஆணமி னெஞ்சத் தணிநிலக் கண்ணார்க்குக்
காணமில் லாதார் கடுவனையர்"

என்றும் நாலடியிற் கூறினர்.

முன்னாளில் நல்வினை செய்யாததினால் மாமயிலோய் உன் கழலை இப்பிறப்பிற் புகழாது மாதர் தம்மைக்கூடி நோயால் வாடினேன் என்பார் 'தலையிட்ட விதிப்படி' என்றார். இதனை,

"மட்டுப் படாக்கொங்கை மாதர் கலவி மயக்கத்திலே
கட்டுப்பட் டாய்என்ன காதல்பெற் றாய்மதன் கையம்பினாற்
பட்டுப்பட் டாயினுந் தேறலை யேயென்று பார்த்திருந்தேன்
வெட்டுப்பட் டாய்மக னே!தலை நாளின் விதிப்படியே."

என்ற கம்பர் வாக்கானும் அறிக.

அடியார்களாகி ஒழுகும் புண்ணியர்பால் நமனும் கிட்ட வரான்; அவர் தலையில் பிரமனும் துன்புறும்படி விதிக்கமாட்டான். இதனை,

"பாட்டான நைவண்டு பாடுங் குழற்சண் பகவல்லிதன்
றாட்டா மரையைத் தொழுதே னினியென் றலையின்விதி
தீட்டான் கருமுகில் போலே வருமந்தச் சேட்டெருமை
மாட்டா னினிவர மாட்டான்வந் தாலும் வணங்குவனே."

என்ற ஒப்பிலாமணி வாக்கானும் உணரலாம்.

புழுக்கொள் மலக்குகை வீடுகட்டி யிருக்கும் – 'புழுமலிந்த இந்த உடம்பாகிய வீட்டைக் கட்டிக்கொண் டிருக்கும்' என்றதாம். இதனை,

"கொழுந்தசை மேய்ந்து மொழுக்குவிழுங் குடிலை
செழும்பெழு உதிரச் சிறுபுழுக் குரம்பையை
மலவுடற் குடத்தை புலவுடற் புட்டிலை
தொலைவிலாச சோற்றுத் துன்பக் குழியை."

என்ற பட்டினத்தடிகள் பாவடிகளிலுங் காண்க.

எப்படிப்பட்ட பாவிகளாயினும் வேலைப் புகழ்ந்தால் அவர்களுக்கு முருகப்பிரான் அவர் வேண்டிய வேண்டிய வெல்லாந் தந்தருள்வன் என்பதை,

"வேலெ டுத்தச மர்த்தை உரைப்பவர்
எவ ருக்கும னத்தினி னைப்பவை யருள்வோனே,'

என்றார்.

வெண்ணாவல் மரத்தடியில் உற்றது திருவானைக்கா என்னும் திருத்தலத்தில். இதற்கு ஜம்புகேச்சுரம் என்னும் பெயரும் உண்டு.

ஏழிசைத் தமிழிற் பயனுற்ற- 'ஏழ்வகை இசையைக் கொண்ட தமிழ்ப்பயன் பெற்றவர்' என்பதாம்.

சிவபெருமான் தமிழ்க்குப் பரம ஆசிரியராகவும் முத்தமிழ் மூன்று சங்கத் தலைமைப் புலவராகவும் இருந்த தன்றிச் சம்பந்தர், அப்பர், சுந்தரர், மணிவாசகர் முதலான அடியவர்கள் பாட்டை உவந்து கேட்டவரும் ஆதலின் இவ்வாறு கூறினார். இதனை,

"சிறைவான் புனற்றில்லைச் சிற்றம் பலத்துமென் சிந்தையுள்ளும்
உறைவான் உயர்மதிற் கூடலி னாய்ந்தவொண் டீந்தமிழின்
றுறைவாய் நுழைந்தனை யோவன்றி எழிசைச் சூழல்புக்கோ
இறைவா தடந்தோட் கென்கொல் லாம்புகுந் தெய்தியதே."

என்ற திருக்கோவையாரானும்,

"அரியன் கண்டாய் தமிழன் கண்டாய்
அண்ணுமலை யுறையும் அண்ணல்தானே."

என்றதனுனும்,

"வடமொழியுஞ் செந்தமிழும் ஆனான்."

என்பதனுலும் அறியலாம்.

முக்கணிருத்தன் - 'மூன்று கண்களை உடையவனும், நடனம் புரிவோனும் ஆகிய சிவபெருமான்' என்பது பொருளாம். இது ஐந்தொழிலும் நடைபெறும்படி ஆடும் ஆனந்தக் கூத்து. இதனை,

"தோற்றமொரு கைத்துடியிற் றிதியபயக் கரத்திற்
றொலைவோர் செங்கை
ஏற்றகனைக் கொழுந்தழலிற் றிரோபவமூன் றியதாளில்
எடுத்த தாளின்
மாற்றரிய அருள்வயங்க இருமுனிவர் பணிந்தேத்தி
மகிழ்ந்து பாடச்
சாற்றரிய அம்பலத்துள் நடமாடும் பெருமானைச்
சார்ந்து வாழ்வாம்.

என்ற உறந்தைப்புராணத்தானும் அறிக.

"தோற்றந் துடியதனிற் றோன்றத் திதியமைப்பில்
சாற்றியிடும் அங்கியிலே சங்காரம்—ஊற்றமாம்
ஊன்று மலர்ப்பதத்தே உற்றதிரோ தம்முத்தி
நான்ற மலர்ப்பதத்தே நாடு"

என்றார் உண்மை விளக்கத்திலும்.

இதனால், "வேலைப் புகழ்வோர்க்கு அருள் செய்பவனே! சிவகுமாரனே! உனதடியவன் ஆகியும் மாதர் மயக்கில் விழுந்து நோயுறும் அடியேன் தலைவிதி போக அருள்வாயாக" என்று வேண்டினாராயிற்று.

---

திருக்கற்குடி

33. தனத்தத் தனத்தத் தனத்தத்
தனத்தத் தனத்தத் தனதான.

குடத்தைத் தகர்த்துக் களிற்றைத் துரத்திக்
குவட்டைச் செறுத்துக் ககசாலக்
குலத்தைக் குமைத்துப் பசட்டிச் செருக்கிக்
குருத்தத் துவத்துத் தவர்சோரப்
புடைத்துப் பணைத்துப் பெருக்கக் கதித்துப்
புறப்பட் டகச்சுத தனமாதர்
புணர்ச்சிச் சமுத்ரத் திளைப்பற் றிருக்கப்
புரிந்துப் பதத்தைத் தருவாயே;
கடத்துப் புனத்துக் குறத்திக் குமைத்தக்
கருத்திச் சையுற்றுப் பரிவாகக்
கனக்கப் ப்ரியப்பட் டகப்பட் டுமைக்கட்
கடைப்பட் டுநிற்கைக் குரியோனே!
தடத்துற் பவித்துச் சுவர்க்கத் தலத்தைத்
தழைப்பித் தகொற்றத் தனிவேலா!
தமிழ்க்குக் கவிக்குப் புகழ்ச்செய்ப் பதிக்குத்
திருக்கற் குடிக்குப் பெருமாளே.

(இ - ள்) கடத்துப் புனத்துக் குறத்திக்கு - குறிஞ்சிக் காட்டி லுள்ள தினைப்புனத்துக் காவல் செய்துகொண்டிருந்த வள்ளி அம்மையாருக்கு, மெத்த கருத்து இச்சை உற்று - மிகவும் தன் மனத்தில் ஆசை கூர்ந்து, பரிவாக - பிரியத்துடனே, கனக்க

முருகர் தமிழ்த்தப் பெருமான் என்றது அகத்தியர்க்குத் தமிழ் உபதேசித்ததனாலும், சங்கத்துப் புலவராக இருந்ததனாலும் என்பர். இதனை,

"முருகன் சங்கத்திருப்பவன் எம்முக்கட்
கடவுள் நிற்பவன் வாழ்
அரசன் புயலை விலங்கிட்டோன்"

என்னும் செப்பத்தூரார் வாக்கானும் அறிக.

இன்னும் வேடனாக நின்ற பொய்யாமொழியாரிடம் தன் பெயரை "முட்டை" என்று கூறிச் சரம் போக்காகப் பாடக் கூறி அவர் பாடிய,

"பொன்போலுங் கள்ளிப் பொறிபறக்குங் கானலிலே
என்பேதை செல்லற் கிசைந்தனளே — மின்போலும்
மானவேன் முட்டைக்கு மாறாய தெவ்வர்போங்
கானமே முட்டைக்குங் காடு."

என்று பாடி பாட்டுப் பொய்த்த மொழி கூறி,

"விழுந்த துளி யந்தரத்தே வேமென்றும் வீழின்
எழுந்து சுடர்சுடுமென் றேங்கிச — செழுங்கொண்டல்
பெய்யாத கானகத்திற் பெய்வளையுஞ் சென்றனளே
பொய்யா மொழிப்பகைவர் போல்."

என்று பாடியதானும் 'கவிக்குப் பெருமானை' எனவுங் கூறினர்.

தமிழ் 'இனிமை உடையது' என்னுங் காரணம்பற்றி வந்த பெயர். (தாம் + இழ்) எனவும் பிரித்துத் 'தனக்குத் தானே ஒத்த தேன் துளி போலும் இனிமை உடைய சொற்களை உடைய மொழி' என்பாரும் உண்டு.

'கற்குடி' இது திரிசிராமலைக்குத் தென்மேற்கே மூன்று மைலில் உள்ளது. இதனை உய்யக்கொண்டான் மலை என்றுங்

கூறுவர். செய்பதி - வயலூர்; இது சிராமலைக்கு நேர்மேற்கே இரண்டு மைலில் உள்ளது.

"கற்றுடைப் பெருமானே, வள்ளியம்மையா ரிடத்து மிகுந்த காதலை உடையவனே! பெண்கள் போகத்தில் மயங்காதபடி நின் தாண்மலர் தருவாயாக" என்று வேண்டினர்.

---

திருச்செந்தூர்

34. தனன தானன தந்தன தந்தன
தனன தானன தந்தன தந்தன
தனன தானன தந்தன தந்தன தனதான.

அளக பாரம லைந்துகு லைந்திட
வதன மேர்வுது லங்கிந லங்கிட
அவச மோகமி கந்துத ளர்ந்திட அணைமீதே
அருண வாய்நகை சிந்திய சம்ப்ரம
அடர்ந காநுதி பங்கவி தஞ்செய்து
அதர பானம ருந்திம ருண்டிரு முலைமேல்வீழ்ந்
துளமும் வேறுப டும்படி யொன்றிடு
மகளிர் தோதக இன்பின்மு யங்குதல்
ஒழியு மாறுதெ ளிந்துள மன்பொடு சிவயோகத்
துருகு ஞானப ரம்பர தந்திர
அறிவி னோர்கரு தங்கொள்சி லம்பணி
உபய சீதள பங்கய மென்கழல் தருவாயே;
இளகி டாவளர் சந்தன குங்கும
களப பூரண கொங்கைந லம்புனை
பிரதி வெள்பணி தந்தைய மந்தண மறையோனும்

இனிது றாதெதி ரிந்திர னண்டரு
மரக ராசிவ சங்கர சங்கர
வெனமி சைவரு நஞ்சினை யுண்டவ ரருள்பாலா!
வளர்நி சாசரர் தங்கள்சி ரம்பொடி
படவி ரோதமி டுங்குல சம்ப்ரம
மகர வாரிக டைந்தநெ டும்புயல் மருகோனே!
வளரும் வாழைபு மிஞ்சியு மஞ்சளும்
இடைவி டாதுநெ ருங்கிய மங்கள
மகிமை மாநகர் செந்திலில் வந்துறை பெருமாளே.

(இ - ள்) இளகிடா - இளகி, வளர்-வளர்கின்ற, சந்தனம் குங்குமம் களபம் - சந்தனத்தையும் குங்குமத்தையும் கலவைச் சாந்தையும் பூசியுள்ள, புரண கொங்கை களம் பிள - நிறைவாகிய தனங்களின் தன்மையைக் கொண்ட, இரதிபதி - இரதியின் கணவனாகிய மன்மதன், பணி - வணங்கும்படியான, தந்தையும் - (மன்மதனின் தந்தையாகிய) திருமாலும், அந்தணன் மறையோனும் - அழகிய தண்ணருளை உடைய பிரமதேவனும், இனிது உறாது - இன்பமுறாது துன்பப்படவும், எதிர் - பகைவர்களை எதிர்க்கின்ற, இந்திரன் அண்டரும் - தேவேந்திரனும் தேவர்களும், அரகரா சிவசங்கர சங்கர - அரஹரா! சிவசங்கரா! சங்கரா!, என - என்று (அஞ்சி ஓலமிட்டுக்) கூறும்படி, மிசை வரு நஞ்சினை உண்டவர் - மேலே ஓங்கிப் பொங்கி வரும் ஆலகால விடத்தைத் (அத் தேவர்கள் உய்யுமாறு) அமுது செய்தருளும் சிவ பெருமான், அருள்பாலா - பெற்றருளிய திருப்புத்திரனாகிய முருகக் கடவுளே!, வளர் நிசாசரர் தங்கள் - மேன்மேலும் துன்மார்க்கத்தில் வளர்ந்து கொண்டுவரும் அசுரர்களின், சிரம் பொடிபட - தலைகள் நொறுங்கும்படி, விரோதமிடும் - பகை பாராட்டுகின்ற, குலம்

சம்பிரமன் - குலத்தின் பெருமை உடையவனும், மகராம வாரி கடைந்த - சுறவு மிகுந்த நீண்ட கடலைக் கடைந்த, நெடிய புயல் - நீண்ட உருவம் (திரிவிக்ரம அவதாரம்) கொண்ட நீர் கொண்ட மேகம்போலும் திருமாலின், மருமகோனே - மருமகனே!, வளரும் வாழையும் - கொழுமை கொண்டு சிக்கிரம் வளரும் இயல்புடைய வாழை மரங்களும், மஞ்சளும் இஞ்சியும் - மஞ்சட்கிழங்கும் இஞ்சியும், இடைவிடாது நெருங்கிய - சற்றும் இடமின்றி அடர்ந்து வளர்ந்துள்ள, மங்களம் மகிமை மா நகர் - சுபகரம் கொண்ட பெருமையையுடைய சிறந்த நகரமாகிய, செந்திலில் வந்து உறை பெருமாளே - திருச் செந்தூர் என்னும் திருப்பதியில் வந்து பொருந்தி வீற்றிருக்கும் பெருமாளே!, அளகபாரம்-கூந்தல் சுமை, அலைந்து குலைந்திட - அலைந்து சோர்தலும், வதனம் - முகத்திலே, வேர்வு துலங்கி நலங்கிட - வேர்வை விளங்கி அழகு சிந்தவும், அவசம் மோகம் விளைந்து - பரவசமாகும் மோகம் உண்டாகி, தளர்ந்திட - சட்ட, அணைமீது - படுக்கையின் மேலே, அருணம் வாய் நகை சிந்திட - சிவந்த வாயினால் முறுவலை பிதுக்கியாகச் செய்யும், சம்பிரமம் - அலங்காரமாக, அடர் நக நுதி - நெருங்கிய நகத்தின் முனையினால், பங்கம் விதம் செய்து - குறிகள் அழுந்தும்படிப் பல வித லீலைகளைச் செய்து, அதரபானம் அருந்தி - இதழின் அமிர்தமாகிய ஊறலை உண்டு, மருங்கு இற - இடை முறியும்படி, முலை மேல் விழுந்து - தனங்களின் மேல் விழுந்து, உளமும் வேறு படும்படி - மனமும் வேறாக, ஒன்றிடும் மகளிர் - கூடும் மாதர்களின், மோதகம இன்பில் முயங்குதல் - வஞ்சகத்தையுடைய இன்ப சுகத்தில் கூடுதல், ஒழியும் ஆறு - நீங்கும் வண்ணம், தெளிந்து உளம் அன்பொடு - மனந் தெளிவடைந்து உள்ளன்போடு, சிவ யோகத்து உருகும் ஞானம் - சிவராஜ யோகத்திலே மனமானது உருகும்படியான மெய்ஞ்ஞானத்தையுடைய, பரம்பரம் - மேன்மை

பொருந்திய, தந்திரம் அறிவினோர் - ஆகம சாத்திரங்களின்மேல் மிகப் பயின்ற அறிவை உடையவர்கள், கருது - சிந்திக்கின்ற, அம் கொள் - அழகைக் கொண்டுள்ள, சிலம்பு அணி - பாதச் சிலம்பைத் தரித்துள்ள, உபயம் - இரண்டாகிய, சீதளம் - குளிர்ச்சி பொருந்திய, பங்கயம் மெல் கழல் தருவாய் - செந்தாமரை மலரை நிகர்த்த மெதுவமைந்த அழகிய நின் தாள்களைத் தந்து ஆள்வாயாக, எ - று.

(வி - ரை) இன்பலீலைக் காலத்து மாதர்களுக்கு வியர்வு தோன்றும்; அதுவும் அழகுடையதாகக் காணும். பின் மெலிவால் தேகம் தளர்ந்து வாடும்; ஆதலினால் 'அளக பார மலைந்து குலைந்திட வதன வேர்வு துலங்கி நலங்கிட' என்றார். இதனாலன்றோ இன்னின்னவை அழகுடையன எனக் கூறும் ஒரு வெண்பாவில் இதனை முற் கூறினார். அக்கவி வருமாறு:—

"சூரதந் தனிலிளைத்த தோகை சுகிர்த
விரதந் தனிலிளைத்த மேனி—நிரதம்
கொடுத்திளைத்த தாதா கொடுஞ்சமரிற் பட்ட
வடுத்துளைத்த கல்லபிரா மம்."

மாதர் ஆசையில் வீழ்ந்து போகந்துய்ப்போர் அறத்தை மறந்து ஒழிவர் ஆதலின் 'முலைமேல் வீழ்ந்து உளமும் வேறு படும்படி யொன்றிடு' என்றார். ஒன்றிடல் - ஈருடலும் ஒருடல் போல் கட்டி அணைந்திருத்தல்.

அறிவினோர்க் கருதங்கொள் சிலம்பணி - 'கற்றறிந்த அறிவு உடையவர்கள் நினைக்கும்படியான முத்தி இன்பந் தரும் அழகிய சிலம்பணிந்த' என்பது பொருள். இனி 'அணு கொணாத பதந்தரு சிந்துர' எனவும் பாடம் ஓதுவார்; இதற்கு 'மந்திரங்களாலும் வழுத்தற்கு அரிய பதவியைத் தரும், அல்லது பாதத்தைத் தரும் சிந்துர'

திரு அருணை

35. தனனா தானத் தனனா தனனத்
தனனா தனனத் தனதான.

அருமா மதனைப் பொருவார் கயலுத்
தயிலார் நயனக் கொடியார்த்
மழகார் தனநற் புழுகார் சயிலத்
தணையா வலிகெட் டுடல்தாழ
இருமா கடைபுக் குறைபோ புணர்வற்
றிளையா வுளமுக் குயிர்சோர
எரிவாய் நரகிற் புகுதா தபடிக்
கிருபா கமெனக் கருள்வாயே;
ஒருமால் வரையைச் சிறுதூள் படவிட்
டுரமோ டெறிபொற் கதிர்வேலா!
உறைமா னடவிக் குறமா மகளுக்
குருகா விருபொற் புயவீரா!
திருமால் கமலப் பிரமா விழிபிற
தெரியா வரனுக் கரியோனே!
செழுநீர் வயல்சூழ் தருணை புரியிற்
றிருவீ தியினிற் பெருமாளே!

(இ-ள்) ஒரு மால் வரையை - ஒப்பற்ற மிகப் பெரிய கிரௌஞ்ச வெற்பை, சிறு தூள்பட - அணுவணுவான துகளாகும் படி, உரமோடு விட்டு அறி - எண்ணி விட்டெறிந்த, பொன் கதிர் வேலா - அழகிய ஒளிசெய்யும் வேலாயுதத்தை உடையவனே!,

மான் உறை அடவி - மான்கள் வசிக்கும் குறிஞ்சிக்காட்டில் உள்ள, குறமா மகளுக்கு - குறவருடைய சிறந்த பெண்ணாகிய வள்ளிநாயகி யாருக்கு, உருகா - காதலினால் உருகுகின்ற, இரு பொன் புயம் வீரா-பெரிய அழகிய பன்னிரு புயங்களை உடைய வீரனே!, திருமால் கமலம் பிரமா - திருமாலுக்கும் உந்தியந்தாமரையிற் பிறந்த பிரம்மாவுக்கும், விழியில் தெரியா-தங்கள் ஊனக் கண்ணால் கண்டு கொள்ள முடியாதபடி ஜோதிமயமாக நின்ற, அரனுக்கு அரியோனே-சிவபெருமானுக்கும் அரியவனே! செழும் நீர் வயல் சுற்று-செழுமையான நீர் நிறைந்த வயல்கள் சுற்றிலும் உள்ள, அருணைபுரியின் திருவீதியினில் பெருமாளே - திருவண்ணுமலை என்னும் திவ்விய தலத்தின் திருவீதிகளிலே திருவுலாம் வரும் பெருமானே!, அருமா மதனை - அருமையான சிறந்த மன்மதனோடு, பொரு - காமப் போரைச் செய்யும், வாள் கயல் குத்து - வாளாயுதத்தையும் கயல் மச்சத்தையும் தனக்கு ஒப்பின்மையால் அவைகளைக் குத்துகின்ற, அயில் ஆர்-வேலுக்கு ஒப்பான, பனம் கொடியார் தம்-கண்களை உடைய கொடிய பெண்களினுடைய, அழகு ஆர் - அழகு நிறைந்த, தனம் நல் புழுகு ஆர் சயிலத்து - தனங்களாகிய நல்ல புழுகு நிறைந்த வெற்புகளில், அணையா வலிகெட்டு உடல் தாழ - கூடிப் பலம் அழிந்து சரீரம் தாழ்வடைந்து, இருமா-இருமி, நடை புக்கு-தள்ளாட்ட நடையிலே புகுந்து, உரைபோய் - சொல்லற்று, உணர்வு அற்று - அறிவுகெட்டு, இளையா - மெலிந்து போய், உளம் உக்கு உயிர் சோர - மனமுடைந்து உயிரானது சோர்வடையும்படி, எரிவாய் நரகில் - நெருப்புப் பொருந்திய நரகத்திலே, புகுதாதபடிக்கு - நான் வீழாதபடிக்கு, இருபாதம் - உன்னுடைய இரண்டு திருவடிகளையும், எனக்கு அருள்வாய - அடியவனாகிய எனக்குத் தந்தருள்வாயாக, எ - று.

(வி - ரை) உருவில்லாதவன் ஆதலின் 'எவராலும் காணற்கரிய மன்மதன்' என்ற பொருளில் 'அருமா மதன்' என்றார் அபி

லார் - 'வேலை ஒத்த கண்; காமக் கூரமைந்த கண்' எனினும் ஆம். கொடியார் - வஞ்சிக்கொடி, பூங்கொடி, மின்னற்கொடி போல்வார்' என்பது பொருள்; கொடிபோல் வாரைக் கொடி என்றது உவமை ஆகுபெயர். கொடியார் - 'கொடியவர்' என்ற பொருளும் ஆம். ஈங்கு இருபொருள் தரச் சிலேடையாகக் கூறினார்.

பெண்கள் காதல் நரகம் தரும் என்றதனால் 'வலி கெட்டு...... ...எரிவாய் நரகிற் புகுதாதபடிக்கு' என்றார். இதனை,

"நாளத் தனத்தத்தைச் சொல்லிய நால்வரும் தாழ்மலபா
தாளத் தனத்தத்தைத் தப்பவிற் பீர்"

என்றார் திருவரங்கத்தந்தாதியிலும்.

அணையா, புகுதா - செய்யா என்னும் வாய்பாட்டு வினை யெச்சங்கள்.

"மால் பிரமர் கண்ணாற் காணற்கு அரிய சிவபெருமான் மகனே!, கிரவுஞ்சம் பிளக்க வேல்விட்ட வீரனே! நான் மாதர் போகத்தில் மூழ்கித் தேக வலி கெட்டு நகரத்திற்குப் போகாதபடி நின் இரு மலர்த்தாள் தந்தருள்க" என்று வேண்டுகின்றார்.

"மாதர்யம னாமவர்தம் மைவிழியே வன்பாசம்
பீதிதரு மல்குல் பெருநரகம்—ஓதிலிதில்
வீழ்ந்தோர்க்கு மேற விதியில்லை போரூரைத்
தாழ்ந்தோர்க்கு மில்லை தவறு."

என்ற பெரியார் வாக்கானும் அறியலாம்.

36. தனனதான தானான தனனதான தானான
தனனதான தானான தனதான

அதலசேட னாராட வகிலமேரு மீதாட
வபினகாளி தானாட வவளொடன்
றதிரவீசி வாதாடும் விடையிலேறு வாராட
வருகுபூத வேதாள மவையாட
மதுரவாணி தானாட மலரில்வேத னாராட
மருவுவானு ளோராட மதியாட
வனசமாமி யாராட நெடியமாம னாராட
மயிலுமாடி நீயாடி வரவேணும்
கதைவிடாத தோள்வீம னெதிர்கொள்வாளி யால்நீடு
கருதலார்கள் மாசேனை பொடியாகக்
கதறுகாலி போய்மீள விசையனேறு தேர்மீது
கனகவேதி கோடூதி யலைமோதும்
முததிமீதி லேசாயு முலகமூடு சீர்பாத
வுவணமூர்தி மாமாயன் மருகோனே
யுதயதாம மார்பான ப்ரபுடதேவ மாராஜ
னுளமுமாட வாழ்தேவர் பெருமாளே.

(இ-ள்.) கதை விடாத தோள் வீமன் - கதாயுதத்தை நீங்காது சார்த்தி வைக்கப்பெற்ற தோள்களையுடைய வீமனானவன், எதிர் கொள் வாளியால் - தன்னை எதிர்த்து வருகிற கணைகளைக் கொண்டே, நீடு கருதலார்கள் - வன்மை மிகுந்த சத்துருக்களின் பெருங் கூட்டம், பொடி ஆக - நீறாக அழியச்செய்யும் யுத்த களத்தில், கதறு காலி - தன் கன்றை நினைத்துக் கதறுகின்ற

பக்ஷிகள், போய் மீள - தத்தம் இடங்களிற் போய்ச் சேரவும், விஜயன் ஏற - அர்ச்சுனன் ஏறும்படியான, தேர்மீது - தேரின் மேலே இருந்து கொண்டு, கனகம் வேதகோடு ஊதி - பொன் மயமான மறை முறையே துதிக்கும் சங்கைவாய் வைத்து ஊதி, அலை மோதும் - அலைகள் மோதுகின்ற, உததி மீதிலே - கடலின் மேலே, சாயும் - படுத்துக் கிடக்கும், உலகம் மூடி - உலகத்தை அளந்து மூடிய, சீர் பாதம் - சிறந்த திருப்பாதங்களை உடைய, *உவணம் ஊர்தி மா மாயன் - கருட வாகனனாகிய திருமாலின், மருகோனே - மருமகனே!, வாழ் தேவர் - அழிவின்றி வாழ்ந்து கொண்டிருக்கின்ற தேவர்களது, பெருமானே - நாயகனே! அதலம் - பாதாள லோகத்தில் உள்ள, சேடனார் ஆட - ஆதிசேடன் ஆடவும்; அகிலம் - பூலோகமும், மேரு - மகாமேரு மலையும், மீது ஆட - மிசையும் ஆடவும்; அபினம் காளிதான் ஆட - வேறுபாடில்லாத காளிகாதேவி ஆடவும்; அவளோடு - அக்காளிகா தேவியோடு, அன்று - அக்காலத்தில், ஆடிய வீசி - கால்களைத் தூக்கி அத்திருப்படி தோள்களை வீசி, வாது ஆடும் - காளிகா தேவிக்காக வாது செய்து ஆடும், விடையில் ஏறுவார் - இடப வாகனருடையாகிய சிவபெருமான், ஆட - ஆடவும், அருகு - அவர் சமீபத்தில், பூதம் - பூதங்களும், வேதாளம் அவை - வேதாளங்களும், ஆட - ஆடவும்; மதுரம் வாணி - இனிமை வாய்ந்த கலைமகளும், தான் ஆட - தானாடவும்; மலரில் வேதனார் ஆட - உந்தியந் தாமரையிலே உள்ளவனாகிய பிர்மா ஆடவும்; மருவு வானுளோர் ஆட - பொருந்திய வானுலகத்தில் உள்ளோர்கள் எல்லாரும் ஆடவும்; மதி ஆட - சந்திரன் ஆடவும்; வனசம் மாமியார் ஆட - தாமரை மலரில் வசிக்கும் மாமியாகிய திருமகள் ஆடவும்; செய்ய மாமனார் ஆட - மாமனாராகிய சிறந்த செங்கண்மால் ஆடவும்; உதய தாமம் - சூரியோதயத்தை ஒத்துப் பிரகாசிக்கும் மாலைகளைப் பூண்டுள்ள, மார்பு ஆன - மார்பையுடைய பிரபுட

தேவமா ராஜன்-திருவண்ணுமலையை ஆண்டுவந்த **பிரபுட தேவன்** என்னும் பெரிய அரசனின் உளமும் ஆட - உள்ளமுங் களிப்படையும்படி, மயிலும் ஆடி நீயும் ஆடி - மயில் ஆடுவதோடு நீயும் ஆடிக் கொண்டு, வரவேணும் - வந்து அருள்செய்யவேண்டும், எ - று.

(வி - ரை.) அதலம் - பாதாள லோகம்; கீழுள்ள எழுலகங்களில் ஒன்று. சேடன் - 'சர்வ பிரளய காலயத்தும் மீந்திருப்பவன்' என்ற பொருளில் வந்தது. நாரணர்க்கு அணையாக அமைந்த படியால் அழிவில்லாததது வாகி மீந்திருப்பது என்றறிக. பின்னம் - பிரிவு' அபின்னம் - பிரிவின்மை; அகரம் எதிர்மறை உப சர்க்கம். 'வீசி வாதாடும்' என்றதற்குத் 'தோள்களை வீசி' என்றும்.

"எண்டோள் வீசிநின் றாடும் பிரானைத்
தலையே நீவணங்காய்."

என்ற திருவங்கமாலையை நோக்குக.

திருமாலுக்கு மருமகன் ஆதலால் லட்சுமியை 'வனசமாமியார் ஆட' என்றார். இதனை,

"வேலவுன தத்தைசெய் மேனியெலா மப்பிட்டால்
பாலனத்தை வேண்டிடுமோ பாவைதான்—சாலமலி
தாமமண வீறுபுயத் தண்பழநி மாமுருகா
மாமமலர்த் தாரருள வா."

என்ற வெண்பாவானும் அறிக.

கதையையுடைய வீமன் தன்னை எதிர்த்த சத்துருக்கள் எய்யும் அம்பைக் கொண்டே அவர்களை அழிப்பனும்; இதனை, 'கதை விடா......மா சேனை பொடியாக' என்றார். பிரபுடமா தேவன் - அருணகிரியார் காலத்து இருந்த அரசன்; அருணகிரியாரை ஆதரித்தவன்.

"உலகையே ஓரடியால் அளந்த மாயன் மருமகனே! ஆடு மயிலாட நீயாடி வந்தருள வேண்டும்" என்றார், ஆட்டத்தால் பஞ்ச கிருத்தியமும் நடைபெறுதலின், இறையவரும் முருகரும் அபேதம் ஆதலின் இவ்வாறு கூறினர். இதனை,

"ஐம்முகனே ஆறுமுகன் ஆகிவந்து அல்லலுறு
மெய்ம்முகத்த தேவரிடர் மேவாது—உய்முகத்தால்
காத்தான் கவின்புலியிற் கந்தனவன் கான்மலரோ
நாத்தான் துதிக்க நயந்து."

என்ற ஆப்தர் வாக்கானும் அறியலாம். "ஆத்மா புத்திரன்" என்ற பழய உரையும் மெய்ப்பிக்கும்.

---

யாழ்ப்பாணம்

37. தாத்தா தானந் தத்தன தனதன
தாத்தா தானந் தத்தன தனதன
தாத்தா தானந் தத்தன தனதன தனதான.

பூத்தார் சூடுங் கொத்தலர் குழலியர்
பார்த்தால் வேலுங் கட்கமு மதன்விடு
போர்க்கார் நீடுங் கட்சர மொடுநமன் விடுதூதும

போற்றாய் நாளுங் கைப்பொரு ளுடையவர்
மேற்றா ளார்தம் பற்றிடு ப்ரமையது
பூட்டா மாயங் கற்றமை விழியினர் அமுதூறல்

வாய்த்தார் பேதஞ் செப்புபொய் விரகியர்
நூற்றேய் நூலின் சிற்றிடை யிடர்பட
வாட்டாய் வீசுங் கர்ப்புர ம்ருகமதம் அகிலார

மாப்பூ ணாரங் கச்சணி முலையினர்
வேட்பூ ணாகங் கெட்டெனை யுனதுமெய்
வாக்கால் ஞானம் பெற்றினி வழிபட அருளாயோ;

ஆத்தாள் மால்தங் கச்சிக னிகையுமை
கூத்தா டாகந் தச்சிவை திரிபுரை
யாட்பேய் பூதஞ் சுற்றிய பயிரவி புவனேசை

ஆக்கா யாவும் பற்றியெ திரிபுர
நோக்கா எதுஞ் செற்றவள் திருவிளை
யாட்டா லீசன் பக்கம துறைபவள் பெறுசேயே!

எத்தா நாளுந் தர்ப்பண செபமொடு
நீத்தார் ஞானம் பற்றிய குருபர!
யாப்பா ராயுஞ் சொற்றமி ழருடரு முருகோனே

ஏற்போர் தாம்வந் திச்சையின் மகிழ்வொடு
வாய்ப்பாய் வீசும் பொற்பரவை நெடுமதில்
யாழ்ப்பா ணாயன் பட்டின மருவிய பெருமாளே.

(இ - ள்.) ஆத்தாள் - உலகங்களுக் கெல்லாம் தாயாய் இருப்பவளும், மால் தங்கச்சி - திருமாலுக்குத் தங்கையாய் இருப்பவளும், கனிகை - கன்னிகையும், உமை - உமாதேவியும், கூத்து ஆடு ஆகந் தம் சிவை - திருநடனத்தைச் செய்கின்ற, ஆகத்தையுடைய சிவையும், திரிபுரையாள் - திரிபுரையும், பேய்பூதஞ்சுற்றிய பயிரவி - பேயும் பூதமுஞ் சூழ்ந்து இருக்கப் பெற்ற பைரவியும், புவனேசை - புவனேசையும், யாவும் ஆக்கா - எல்லாவற்றையும் படைத்து, பற்றி - அவைகளைக் காப்பாற்றி, எதிரி புரம் - அசுரர்களுடைய முப்புரத்தை, எதும் நோக்கா செற்றவள் - எதனையும் கருதாது அழித்தவளும், திருவிளையாட்டால் - அழகிய விளையாட்டினால், ஈசன் பக்

கம் அது உறைபவள் - இறைவனின் இடது பக்கம் தங்குபவளும் ஆகிய உமாதேவியார், பெற மேம்ப - பெற்றருளிய புத்திரனே!, நித்தார் - துறவிகள், நாளும் - தினமும், தர்ப்பணஞ் செபமொடு - தர்ப்பணங்களுடனுஞ் செபங்களுடனும், எத்தா - துதி செய்து, ஞானம் பற்றிய - எதார்த்த அறிவைப் பெற்ற, குருபர - பரனுக்குங் குருவாக நின்றருளியவனே!, யாப்பு ஆராயும் - செய்யுள் இலக்கணத்தை ஆராய்ச்சி செய்கின்ற, சொல் தமிழ் அருள் தரு - சிறப்பித்துச் சொல்லப்படுகின்ற தமிழ் மொழியை அகத்திய முனிவருக்கு அருளிச் செய்த, முருகோனே - முருகனே!, எற்போர் தாம் வந்து - இரவலர்கள் தாம் வந்து (கேட்க), இச்சையின் மகிழ் வெறு - (அவர்களுக்கு) விருப்பத்தோடும் சந்தோஷத்தோடும், வாய்ப்பாய் - அவர்களுக்குக் கிடைக்கும்படி, வீசும் - அள்ளி வீசி எறிகின்ற, பொன் பிரபை - பொன்னினாலு ஒளி பிறந்ததும், நெடு மதில் - நீண்ட மதிலை உடையதுமாகிய, யாழ்ப்பாணயன் பட்டணம் - யாழ்ப்பாணயன் பட்டணத்தை, மருவிய - பொருந்தியமர்ந்திருக்கின்ற, பெருமாளே - பெருமானே! பூத்தார் சூடும் - பூமாலையைச் சூடிய, கொத்து அலர் குழலியர் - கொத்துக் கொத்தாக விளங்கும் மலர்களைச் சூடிய கூந்தலை உடையவர்களும், பார்த்தால் - நோக்கினால், வேலும் கட்கமும் - வேலாயுதமும் வாளாயுதமும், மதன் விடு - மன்மதன் விடுகின்ற, போர் கார் நிறம் கண் சரமொடு - சமரைப் புரிகின்ற கருத்த நிறத்த கண்ணாகிய கணையோடு, நமன் விடு தூதும் - யமன் விடுகின்ற தூதுவனும், போல் - ஒத்திருக்கின்ற, தாய் - தாவி, நாளும் - தினமும், கைப்பொருள் உடையவர் - கையிலே பொருளுடையவர்களின், மேல் தாளார் - அவர்களிடத்து அவர் கைப்பொருளைப் பறிக்கும் முயற்சி உடையவர்களின், தம் பற்றிடு பிரமை அது - தம்மைப் பற்றிக்கொள்ளும் மயக்கத்தை, புட்டா மாயம் கற்ற - பூண்பிக்கும் மாய வித்தைகளைத் தெரிந்து கொண்டிருக்கும், மை விழியினர் -

மை தீட்டப்பெற்ற கண்க ளுடையவர்களாகி, அமுது ஊறல் - அமிர்தத்தை நிகர்த்த இனிய இதழூறலை, வாய்த்தார் - பெற் றிருப் பவர்களும், பேதம் செப்பு பொய் விரகியர்-வேறுபாடு உண்டாகும் படிப் பேசும பொய்யையும் தந்திரத்தையும் உடையவர்களாய், நூல் தேய் நூலின் - நூற்கப்பட்ட தேய்ந்த நூலை ஒத்த, சிறு இடை இடர்பட - சிறியதாய் இடையானது துன்பப்பட, வாட்டாப் வீசும் - வாட்டமாகப் பரிமளத்தைச் செய்கின்ற, கர்ப்பூரம் மிருக மதம் அகில் ஆரம் - பச்சைக் கர்ப்பூரமும் கஸ்தூரியும் அகிலும் சந்தனமுந் திமிர்ந்த, மா பூண் ஆரம் - பெரிய ஆபரணமாகிய முத்துமாலையையும், கச்சு - இரவிக்கையையும், அணி முலையினர் - அணிந்த பெண்களுடைய தனங்களின்மேல், வேள் பூண் எனை - மிக்க விருப்பத்தைக் கொண்ட அடியேனை, ஆகம் கெட - என் பாவம் நீங்க, உனது மெய் வாக்கால் - முருகக் கடவுளே! உம் முடைய சத்திய வாக்கினால், ஞானம் பெற்று - மெய்ஞ்ஞானத்தை அடைந்து, இனி வழிபட - இனிமேலாயினும் உன்னைத் துதித்து வணங்க, அருளாய் - அருள் செய்வாயாக, எ - று.

(வி - ரை) கண் சமன் வீடு தூது போன்றது எனக் கூறி னார், நோக்கால் உயிர் பறிப்பவர் ஆதலின். இதனை,

"பண்டறியேன் கூற்றென் பதனை இனியறிந்தேன்
பெண்டகையாள் பேரமர்க் கட்டு."

என்றும்,

"கூற்றமோ கண்ணோ பிணையோ மடவரல்
நோக்கமிம் மூன்று முடைத்து."

என்றும் கூறிய குறள்களோடும் ஒப்பிடுக.

கைப்பொருளுடையவர் மேற்றுளார் - 'பொருள் உள்ளவர்க ளிடத்தே அவர் பொருளைப் பறிக்கும் முயற்சி உடையவர்' என்பது பொருள்.

"தாளாளன் என்பான் கடன் படா வாழ்பவன்"

எனவும்,

"தாளாண்மை இல்லாதான் வேளாண்மை பேடிகை
வாளாண்மை போலக் கெடும்."

என்றதனானும் அறியலாம். இனி இதற்குக் 'கைப்பொருளுடையார் மேல் காலை நீட்டும்' எனப் பொருளுரைப்பர். இது லீலை விநோதத்தார் போலும்.

காளையருக்குக் காமத்தை உண்டாக்கும் நோக்கத்தை உடையவர் ஆதலின் 'ப்ரமையது பூட்டா மாயங் கற்றமை விழி' என்றார். இதனாலன்றோ தொல்காப்பியனாரும்'

"நாட்டம் இரண்டும் அறிவுடம் படுத்தற்குக்
கூட்டி யுரைக்குங் குறிப்புரை யாகும்." என்றார்

'ப்ரமையது' என்றதில் அது: பகுதிப் பொருள் விகுதி. அமுது ஊறல் - 'அமிர்தத்தை ஒத்த ஊறல்' என்பது பொருள். காமத்தால் இறவாதபடி காக்கும் மருந்தாதலின் மரணமின்மையைத் தரும் மருந்து போன்றது என்பர். அமுது - அமிழ்தம்; தேவர் மருந்து. 'காமப்பசி தணித்தலின் அமுது என்றார்' என்பாரும் உண்டு. அமுது - உணவு; இதனாலன்றோ,

"பாலொடு தேன்கலந் தற்றே பணிமொழி
வாலெயி றூறிய நீர்." எனவும்,

"முற்றுலகிற்
பாவையர்போற் காமப் பசிதணிக்க மாட்டாதீர்
கோவையமு தத்தையேன் கொண்டிருப்பீர்"

எனவும் ஆன்றோர் கூறினர்.

நூற்றேய் நூலின் - 'நூற்ற தேய்ந்த நூலை ஒத்த இடை' என்பது பொருள். 'நூற்று எய் நூலின்' எனப் பிரித்து 'நூற்றமைந்த நூலை ஒத்த' என்று பொருளுரைத்தலும் ஆம்.

கன்னிகை: 'கனிகை' என நின்றது தொகுத்தல் விகாரம். கன்னிகை - 'இளமை கெடாதவள்' என்பது பொருள். கன்னி - கெடாத. 'ஆர்த்தாள் ........ துறைபவள்' என்றவரை இறைவியின் விசேடணம். இறைவர் செயல் இறைவி செயல் ஆதலின் ஒப்பக் கூறினார்.

"பார்வதி பாலா! அகத்தியர்க்கு உபதேசஞ் செய்த முருகா! யாழ்ப்பாணாயன் பட்டினத்து அமரும் பெருமானே! வேசையர் விழைவு நீங்கி உன் வாக்கால் மெய்ஞ்ஞானம் பெற்று உன்னை வழிபடுமாறு அருள் செய்வாயாக" என்றதாம்.

"கண்ணால் மருட்டுங் காரிகையார்
கடைக்கே நின்று படுவேனை
அண்ணா பழநி மலையானே!
ஆறு முகத்துக் கோமானே!
எண்ணா விரங்கி மொழிகூறி
ஏழை யடியேன் கடைத்தேற
பண்ணா ருந்து தாண்மலரைப்
பரிந்து தந்தே அருள்வாயே."

என்ற ஆப்தர் வாக்கானும் அறிக.

---

பொது

38. தனன தன தனன தன தானான தான தன
தனன தன தனன தன தானான தான தன
தனன தன தனன தன தானான தான தன
தந்ததான.

உறவின் முறை சுதரியமு ஆராரு மாசையற
மறதிதிலே முழுதுமிசை பாசசங் குமுற
மலகிருமி பலபிணிவாய்மிகுந் தேசரீர மந்தமாகில்

உனதுமுக கருணைமல ரோராறு மாறிருகை
திரள்புயமு மெழில்பணிகொள் வார்காது நீள்விழிய
முபயபத மிசைநலவு சீரோறு நூபுரமும் அங்கமார்பும்
மறையறைய யமரர்தரு பூமாரியே சொரிய
மதுவொழுகு தாவில்மணி மீதேழு நூலொளிர
மயிலின்மிசை யழகுபொலி யாளாய்மு னாடியர்
வருதாகூட
மறலிபடை யமபுரமு மீதோட வேபொருது
விருதுபல முறைமுறையி லேயூதி வாதுசெய்து
மகலையொரு நுதல்யடி நாயேனை யாளவிநின்
வந்திடாயோ;
பிறைநெயயிறு மூரணசுரர் போராது பாரில்விழ
அதிரவெழு புவியுலக மீரேழு மோலமிட
பிடிகளிறி னுடல்திறைகள் பாழாக வேதிசையி
னின்றநாகம்
பிரியநெடு மலைபிடிய மாவாரி தாளியெழ
பெரியதொரு வயிறுடைய மாகாளி கூளியொடு
பிணதிணமு முணவுசெய்து பேயோடு மாடல்செய
வென்றதீரா!
குறமறவர் கொடியடிகள் கூசாது போய்வருடக்
கரடிபுலி திரிகடிய வாரான கானின்மிகு
குளிர்கணியி னிளமரம தாகிநீடுயுயர் குன்றுலாவி
கொடியதொரு முயலகனின் மீதாடு வாருடைய
வொருபுறம துறவளரு மாதாவெ னருவருள்செய்
குமாகுரு பரவமரர் வானாடர் பேணவருள் தம்பிரானே!

(இ - ள்) பிறை எயிறு - பிறைபோலும் பற்களை உடைய, முரண் அசுரர் - போரைச் செய்யும் அசுரர்கள், பேராது - நீங்காமல், பாரில் விழ - பூமியில் விழவும், எழு புவி அதிர - எழு உலகங்களும் நடுங்கவும், உலகம் ஈர் எழும் ஓலமிட - பதினான்கு உலகமும் கதறவும், பிடி களிறின் - பெட்டையும் ஆணும் ஆகிய யானைகளின், அடல் நிரைகள் - போரிலே உள்ள சேனை வகுப்புகள், பாழாக - அழியவும், திசையில் நின்ற - திக்குகளில் நிலையாயிருக்கின்ற, நாகம் பிரிய - எட்டு யானைகளின் உடம்பு நீங்கவும்; நெடு மலை இடிய - உயர்ந்த மலைகள் இடியவும், மா வாரி - பெரிய சமுத்திரத்தில், தூளி எழ - புழுதி எழும்பவும், பெரியது ஒரு வயிறு உடைய - பெரிய வயிற்றைக் கொண்டுள்ள, மாகாளி - பெருமை பொருந்திய காளிகாதேவி, கூளியொடு - குட்டைப் பூதங்களோடு, பிணம் நிணமும் உணவு செய்து - பிணத்தையும் கொழுப்பையும் உண்டு, பேயோடும் ஆடல் செய - பேயோடு கூத்தாடவும், வென்ற - வெற்றி கொண்ட, தீரா - தீரனே!, குற மறவா கோடி - வேடர்கள் பெற்ற பூங்கொடி போன்ற வள்ளி அம்மையாரது, அடிகள் - திருவடிகளை, கூசாது - வெட்கம் இல்லாமல், போய் வருட - போய்த் தடவுதற்கு, கரடி புலி - கரடியும் புலிகளும், திரி - திரிகின்ற, கடிய - கடுமையான, வார் ஆனகானில் - நீட்சி பொருந்திய காட்டிலே, மிகு - சிறந்த, குளிர் - குளிர்ந்த, கணி இன் - வேங்கை மரத்தின், இளம் மரம் அது ஆகி - இளமை வாய்ந்த மரமாகி, நீடி - நீண்ட, உயர் குன்று உலாவி - உயர்ந்த குன்றுகள் தோறும் உலாவி, கொடியது ஒரு - கொடுமை மிகுந்த ஒரு, முயலகனின் மீது ஆடுவார் உடைய - முயலகன் என்னும் பூதத்தின் மேல் நிர்த்தனஞ் செய்கின்ற சிவபெருமானது, ஒருபுறம் அது - ஒரு பக்கத்திலே, உற வளரும் - பொருந்தி வளர்கின்ற, மாதா - உமாதேவியார், பெறு - பெற்ற, அருள் செய் - அருளைச் செய்கின்ற, குமர குருபர - புத்திரனாகிய குருபரனே!, அமரர் வான் நாடர் -

மரணமில்லாதவர்களாகிய தேவ லோகத்தவர், பேண அருள்-தொழ அருளச் செய்கின்ற, தம்பிரானே - தலைவனே!, உறவின் முறை - சுற்றத்தார், கதறி அழ - ஓலமிட்டு அழவும், ஊராரும் ஆசை அற - ஊரிலுள்ளவர்களுடைய ஆசையானது நீங்கவும், பறை திமிலை முழவின் இசை - பறை சல்லரி தம்பட்டங்களினுடைய ஓசை, ஆகாசம் மீது உற - ஆகாச மட்டுங் கேட்க, உலகில் உள பலர் - உலகத்திலுள்ள பல பேர்கள், அரிசி வாய்மீதில் சொரியும்-அரிசியை வாயிலே சொரிகின்ற, அந்த நாளில்-அந்த தினத்திலே, உனது முகம் - தேவரீரது முகங்களாகிய, கருணை - கிருபையோடு கூடிய, மலர் - செந்தாமரையை ஒத்த முகங்கள், ஓர் ஆறும் - ஒப்பற்றதாகிய ஆறும், ஆறு இரு கை - பன்னிரண்டு கைகளுடனும், திரள் புயமும் - திரண்ட தோள்களுடனும், எழில் பணி கொள் - அழகிய குண்டலத்தைப் பூண்ட, வார் காதும் - நீண்ட திருச்செவிகளுடனும், நீள் விழியும் - நீண்ட கண்களுடனும், உபயம் பதம் மிசை-இரண்டு திருவடிகளிலும், குலவு சீர் எறு நூபுரமும் - ஒளி செய்கின்ற சிறப்புப் பொருந்திய பாதச் சிலம்புகளுடனும், அந்தம் மார்பும்-அழகிய மார்புடனும், மறை அறைய-வேதங்கள் முழங்க, அமரர் தரு-தேவர்களின் கற்பகத் தருவினின்று, மது ஒழுகு-தேன் ஒழுகுகின்ற, பூமாரி சொரிய-மலர் மழையைப் பொழிய, உதாரவில்-உதார பந்தனமாகிய ஒளியைக் கொண்ட, மணி மீது - மணிமாலை மேல் முந்நூல் ஒளிர - முப்புரி நூலாகிய பூண் நூல் பிரகாசிக்க, மயிலின் மிசை - மயிலின் மேல், அழகு பொலி ஆளாய் - அழகு விளங்குகின்றவராய், முன் - முன்னே, அர் அடியார் வந்து கூட - அரிய சிவனடியார்கள் வந்து சேர, மறலி படை - யமனுடைய படைகள், எமபுரம் மீது ஓட - யமனுலகத்துக்கு ஓடும்படி, பொருது - சண்டையிட்டு, விருது பல - வெற்றிச் சங்கம் பல வற்றை, முறை முறையிலே ஊதி - முறை முறையாக ஊதி, வாது

செய்து - வாதாடி, மதலை - சிறுவனும், குதலை - குதலைச் சொல்லை உடையவனும், அடி நாயேனை - தாழ்ந்தவனாகிய என்னை, இங்ஙன்- இந்த விதமாக, ஆள - ஆட்கொள்ளுதற்கு, வந்திடாயோ - வர மாட்டாயோ?.

(வி - ரை) உறவின்முறை கதறியழ - 'சுற்றத்தார் கதறி அழவும்' என்பது பொருள்.

"மேல் விழுந்
துற்றார் அழுமுன்னே"

என்றார் பட்டினத்தடிகளும்.

'பலரிசி வாய்மீதி லேசொரியும்' என்றது வாய்க்கரிசி போடுதலை; இது சாச்சடங்கில் ஒன்று. மறலி - 'கொடுமையை உடையவன்' என்ற பொருளில் வந்தது. பிறை எயிறு - பிறைச் சந்திரனை ஒத்த வக்கிரதந்தம். புவியுலக நீரேழும் - 'பூமி முதல் பதினன்கு உலகும்' என்பது பொருள். வாரி - சமுத்திரம்; 'நீண்ட தன்மை யுடையது' என்ற பொருளில் வந்தது. தீரன் - அஞ்சா வலி படைத்தோன்; தாருகா வனத்து ரிஷிகள் செய்த அபிசார ஓமத்தில் தோன்றிய முயலகன் ஆகிய அரக்கனைச் சிவபெருமான் மிதித்தார் என்பது புராண கதை. இதனாலன்றோ,

"முயன் மிதித்தீர்."

என்றார் பிறரும்.

குளிர் கணி - குளிர்ச்சி பொருந்திய வேங்கை மரம். பெறுவருள் - பெறுது பெற்ற; பெறுது என்றது ஈறு கெட்டு நின்றது. கரடி புலி - உம்மைத் தொகை.

"உமாதேவியார் புத்திரனே! என் மரண காலத்து உன் அழகிய திருக்கோலங் காட்டியருள வேண்டும்" என்றது குறிப்பு.

மதுவொழுகு தரவில் மணி - 'மதுவொழுகு தாளமணி' என்றும் பாடம்.

"ஐயுந் தொடர்ந்து விழியுஞ் சொருகி யறிவழிந்து
மெய்யும்பொய் யாகி விடுகின்ற போதொன்று வேண்டுவன்யான்
செய்யுந் திருவொற்றி யூருடை யீர்திரு நீறுமிட்டுக்
கையுந் தொழப்பண்ணி யைந்தெழுத் தோதவுங் கற்பியுமே."

என்றார் **பட்டினத்தார்**.

"புலனைந்தும் பொறிகலங்கி நெறிமயங்கி
யறிவழிந்திட் டைம்மே லுந்தி
அலமந்த போதாக வஞ்சேலென்
றருள்செய்வான்."

என்ற தேவாரமும் கவனிக்கத் தக்கது.

---

திருப்பழநிமலை

39. தனனத் தனனத் தனனத் தனனத்
தனனத் தனனத் தனனத் தனனத்
தனனத் தனனத் தனனத் தனனத் தனதான.

கடலைச் சிறைவைத் துமலர்ப் பொழிலிற்
ப்ரமரத் தையுடம் பொறியிட் டுமடுக்
கமலத் தைமலர்த் திவிடத் தைவிரப் பவனூறுக்

கருதிச் சருவிக் கயலைக் கயமுட்
படுவித் துழையைக் கவனத் தடைசிக்
கணையைக் கடைவித் துவடுத் தனையுப் பினின்மேவி

அடலைச் செயல்சத் தியையக் கினியிற்
புகுவித் தியமப் ப்ரபுவைத் துகைவித்
தரிகட் கம்விதிர்த் துமுறித் துமதித் தசகோர

மலறப் பணிரத் நமணிக் குழையச
சிலுகிட் டுமையிட் டொளிவிட் டுமருட்
டுதலுற் றபொறிச் சியர்கட் கடையிற் படுவேனோ;
சடிலத் தவனிட் டவிசிட் டகுலத்
தொருசெட் டியிடத் தினுதித் தருள்வித்
தகருத் ரஜன்மன் பெயர்செப் பியிடப் பரிவாலே
சனகர்க் குமகஸ்த் யபுலஸ்த் யசனற்
குமரர்க் குமனுக் ரகமெய்ப் பலகைச்
சதுபத் துநவப் புலவர்க்கும் விபத் தியின்ஞான
படலத் துறுலக் கணலக்ய தமிழ்த்
த்ரயமத் திலகப் பொருள்வ்ருத் தியினைப்
பழுதற் றுணர்வித் தருள்வித் தகசற் குருநாதா!
பவளக் கொடிசுற் றியபொற் கமுகிற்
றலையிற் குலைமுத் துதிர்செய்க் கழனிப்
பழனிப் பதிவெற் பினினிற் குமியற பெருமாளே!

(இ - ள்) சடிலத்தவன் - ஜடா பாரத்தையுடைய சிவ பெருமான், இட்ட - தந்த சாபத்தால், விசிட்டம் குலத்து - சிறந்த குலத்தில், ஒருசெட்டி இடத்தின் உதித்து அருள்-ஒரு செட்டியின் வீட்டில் தோன்றியருளிய, வித்தகம் ருத்ர ஜன்மன் பெயர் செப்பியிட-ஞானத்திற் சிறந்த உருத்திரசன்மர் என்னும் பெயரைச் சொன்னால், பரிவால் - பிரியத்தோடும், சனகர்க்கும் அகஸ்திய புலஸ்திய சனத்குமரர்க்கும் - ஜனகருக்கும் அகஸ்தியருக்கும் புலஸ்தியருக்கும் சனத்குமரர்க்கும். அநுக்கிரக - அருளைச் செய்தவரும், மெய் பலகை - சங்கப் பலகையை, சது பத்து நவப்புலவர்க்கும் - சங்கப் புலவர் நாற்பத் தொன்பது பேருக்கும், விபத்தி இல் ஞானம் பட

லத்து உறு - வித்தியாசம் இல்லாதஞான படலத்திலே பொருந்திய லக்கண லக்கிய - இலக்கண இலக்கியம் மிகுந்த, தமிழ் திரயம் அத்தில் - இயல் இசை நாடகம் என்னும் மூவகைப் பாகு பாட்டை உடைய தமிழில், அகப்பொருள் விருத்தியினை - இறையனார் தந்த அகப்பொருளின் விருத்தி உரையை, பழுது அற்று - குற்றம் இல்லாதபடி, உணர்வித்தருள் - புலப்படுத்தியருளும், வித்தக சற்குரு நாதா - ஞானத்தை யுடைய உண்மைக் குருநாதனே!, பவளம் கொடி சுற்றிய - பவளக் கொடியால் சூழப்பட்ட, பொன் கமுகின் தலையில் குலையில் - அழகிய பூகமரத்தின் உச்சியின் குலைகளிலே, பல முத்து உதிர் - பல முத்துக்கள் உதிர்கின்ற, செய் பழநி பதி - வயல்களோடு கூடிய பழநி என்னும் திருப்பதியிலுள்ள, வெற்பினில் - பழநி மலையின் மேலே வீற்றிருக்கும், நல் குமரன் பெருமானே - நல்ல குமரக்கடவுளாகிய பெருமானே!, கடலை சிறை வைத்து - கடலைச் சிறையில் இட்டு, மலர் பொழிலில் - பூக்கள் நிறைந்த காவினிடத்து, பிரமரத்தை உடல் பொறி கிட்டு - தேன் வண்டுகளை உடலில் முத்திரை யிட்டு, மடு கமலத்தை மலர்த்தி - மடுவிலே யுள்ள கமலமலரை மலரும்படியாகச் செய்து, விடத்தை இரப்பவன் ஊணு கருதி - ஆலகால விடத்தைப் பிரம கபாலத்தில் ஐயம் ஏற்றுத் திரியும் சிவபெருமானின் உணவாகும்படி நினைத்து, சருவி கயலை - கயல் மீனைப் பிறழும்படிச் செய்து, கயம் உறபடுவித்து - குளத்தில் புகுமாறு செய்து, உழையை கவனத்து அடைசி - கலைமானை விரைந்து ஓடும்படி செய்து, கணையை கடைவித்து - பாணத்தைக் கடைபடும்படி செய்து, வடுதனை உப்பினில் மேவி - மாம்பிஞ்சை உப்பிலே ஊறும்படிச் செய்து, அடலை செயல் சத்தியை - யுத்தத்தைச் செய்யும் சத்தி வேலை, அக்கினியில் புகுவித்து - நெருப்பில் புகும்படியாகச் செய்து, யமன் பிரபுவை துகைத்து - யமனாகிய பிரபுவை உதைபடும்படிச் செய்து, அரி கட்கம் - வெட்டும் இயல்புடைய வாளாயு

தத்தை, விதிர்த்து முறித்து - சிதறுமாறு முறியச் செய்து, மதித்த சகோரம் - சிறந்ததாக எண்ணப்படும் சகோரப் பட்சியை, அலற - அலறும்படி, பணி ரத்நமணி குழையை - ஆபரணமாகிய ரத்தின மணிகள் பதித்துச் செய்த குண்டலத்தை, சிலுகிட்டு - துன்பஞ் செய்து, மை இட்டு - மை தீட்டப்பெற்று, ஒளி விட்டு மருட்டுதல் உற்ற - ஒளியை வீசி மயக்கஞ் செய்தலையுடைய, பொறிச்சியர் கண் கடையில் - காமப் பொறிகளையுடைய மாதர்களின் கடைக் கண்ணில், படுவேனே - அடியேன் அகப்படுவேனோ என - று.

(வி - ரை.) கடல், வண்டு, தாமரை, விஷம், கயல், உழை, கணை, மாவடு, சத்திவேல், யமன், வாள், சகோரம் ஆகிய இவை கண்ணுக்கு ஒப்பாகக் கூறும் உவமைப்பொருள்கள். அவைகளைத் தோற்கடித்துத் தண்டித்து என்ற நயம்படக் கூறுவார். 'கடலை..........சகோரம் அலற' என்றார். சிறைவைத்தல் - பூமிக்கு ஒரு புறமாக வைத்தல். பொறி - புள்ளி. யமப்பிரபுவைத் துகைவித்து - 'யமனைச் சிவபெருமானால் உதைபடும்படி செய்து' என்பது பொருள். இதனாலன்றோ சிவபெருமானுக்குக் காலகாலன், கூற்றுதைத்தான், கூற்றை யுதைத்தோன் என்பன வாதிப் பெயர்கள் ஏய்ந்தன.

மை கண்ணுக்கு இடுதல் மரபு. இதனாலேதான் 'மையிட்டு மருட்டிகள்' என்று இவரே முன்னர்க் கூறினார்.

> "கண்களில் வெண் ளை காப்பக் கருமையிட்ட
> பெண்கள் மயறப்பிப் பிழைக்குநா ளெந்நாளோ?"

என்றார் தாயுமானவரும்.

சிவபெருமான் சாபத்தால் முருகர் செட்டி மனையில் உருத்திர சன்மராக அவதரித்ததாகவும், இறையனாரகப்பொருள் உரை

கேட்டதாகவும் கதை. இதனால் 'சடிலத்......பெயர் செப்பியிட'' என்றார்.

மெய்ப்பலகை - உண்மையையே விளக்கும் சங்கப் பலகை. 'முத்து பூகத்துப் பிறக்கும்' என்று கூறுவர் ஆதலின் 'பல முத்துதிர் செய்' என்றார். சதபத்து நவம் - நாற்பத்தொன்பது கடைச் சங்கப் புலவரை.

"தமிழ்ப் பரமாசிரியராகிய முருகா!

பெண்களின் கடைக்கண் மயக்கிற்பட்டு அழிவேனை, நீக்கிக் காத்தருள்'' என்றதாம். இதனை,

"பஞ்சாய வடி மடவார் கடைக்கண்ணு லிடர்ப்பட்டு
நெஞ்சாய துயர்கூற நிற்பேனுன் னருள்பெற்றே''

என்னும் மணிவாசகத்தாலும் அறியலாம்.

---

40. தத்தத்தத் தத்தத் தத்தன
தத்தத்தத் தத்தத் தத்தன
தத்தத்தத் தத்தத் தத்தன தனதான.

முத்துக்குச் சிட்டுக் குப்பிமு
டித்துச்சுக் கைப்பிற் சுற்றியு
முற்பக்கத் திற்பொற் புற்றிட றுதன்மீதே
முக்யப்பச சைப்பொட் டிட்டணி
ரத்நச்சுட் டிப்பொற் புற்றிட
முச்சட்டைச் சித்ரக் கட்டழ கெழிலாடத்
தித்திக்கச் சொற்சொற் றுப்பிதழ்
நச்சுக்கட் கற்புச் சொக்கியர்
செப்புக்கொக் கக்கச் சுப்பெறு தனமேரு

திட்டத்தைப் பற்றிப் பற்பல
    லச்சைக்குட் பட்டுத் தொட்டுயிர்
    சிக்கிச்சொக் கிக்கெட் டிப்படி உழல்வேனோ;

மெத்தநத்துக் கத்தைத் திக்தியி
    னிச்சித்தந் திற்பத் தத்தொடு
    மெச்சிச்சொர்க் கத்திற் சிற்பரம் அருள்வாயே

வித்தைக்குக் கர்த்ருத் தற்பர
    முக்கட்சித் தர்க்குப் புத்திர!
    விச்சித்ரச் செச்சைக் கத்திகை புனைவோனே!

நித்யக்கற் பத்திற் சித்தர்க
    ளெட்டுத்திக் குக்குட் பட்டவர்
    நிட்டைக்கற் புற்றப் பத்தர்கள் அமரோரும்

நெட்டுக்குப் புட்பத் தைக்கொடு
    முற்றத்துற் றர்ச்சிக் கப்பழ
    நிக்குப்பட் டத்துக் குற்றுறை பெருமாளே.

(இ - ள்.) வித்தைக்கு கர்த்ரு-சகலவித கலைஞானங் கட்கும் முதல்வனும், தற்பரம் முக்கண் சித்தர்க்கு புத்திர - தனக்குத் தானே தலைவனாகி வேறொரு தலைவனில்லாத திரிநேத்திரங்களை யுடைய சித்தராகிய சிவபெருமானுக்கு, புத்திரனே!, விசித்திரம் செச்சை கத்திகை புனைவோனே - மிக அழகிய வெட்சிமலர் மாலையை அணிந்து கொள்பவனே!, நித்தியம் கற்பத்தில் சித்தர் கள் - நித்திய கற்பத்திலுள்ள சித்தப் புருஷர்களும், எட்டு திக்குக் குள் பட்டவர் - எட்டுத் திக்கிலும் வசிப்பவர்களும் ஆகிய, நிட்டைக்கு அற்பு உற்ற பத்தர்கள் - தவ நிட்டானுபூதியைப் பெற்றுள்ள பக்தர்களும், அமரோரும் - தேவர்களும், நெட்டுக்கு - நீள, புட்

பத்தை கொடு-புஷ்பங்களைக் கொண்டு, முற்றத்து உற்று-கோயில்
முற்றத்துச் சென்று, அர்ச்சிக்க - பூஜை செய்ய, பழநிக்குள் - பழநி
மலைக்குள், பட்டத்துக்கு உற்று உறை பெருமாளே - பட்டத்துக்
குப் பொருந்தி வசிக்கின்ற பெருமானே!, முத்து குச்சு இட்டு-முத்
துக் குச்சாகிய ஆபரணத்தை அணிந்தும், குப்பி முடித்து - குப்பி
முடித்தும், சுக்கை - மாலையை, பின் சுற்றியும் - பின்னலே சூழும்
படி அணிந்தும், முன் பக்கத்தில் - முற் பக்கத்திலே, பொற்ப உற்
றிட - அழகு பொருந்தும்படி, நுதல் மீது - நெற்றியின் மேலே,
முக்கிய பச்சை பொட்டு இட்டு - முக்கியமாகிய மரகத திலகம்
அணிந்தும், அணி - அலங்காரமான, ரத்நம் சுட்டி - ரத்நம் பதித்த
சுட்டி என்னும் ஆபரணமும், பொற்பு உற்றிட - அழகோடு விளங்க,
முச்சட்டை-ஒழுங்கோடுங் கூடிய, சித்ரம் கட்டு அழகு எழில் ஆடை-
சித்திர வேலைகள் செய்துள்ள உடையில் அழகும் விளக்கமும்
தோன்ற, தித்திக்க - மதுரமாக இருக்கும்படி, சொல் சொல் -
சொல்லுகின்ற சொற்களையும், துப்பு இதழ் - பவளம்போன்ற
அதரத்தையும், நஞ்சு கண் - விஷம் பொருந்திய விழிகளையும்
உடைய, கற்ப சொக்கியர் - கற்பனைகளைக் கற்று ஆடவர்களை
மயக்குகின்றவர்களாகிய பெண்களின், செப்புக்கு ஒக்க - கலசத்
துக்கு ஒப்பென்று சொல்லும்படி வட்டமாகத் திரண்டு உருண்ட,
கச்சு பெறு தனம் மேரு-இரவிக்கையை அணிந்த தனமாகிய மேரு
மலைகளின், திட்டத்தை பற்றி தொட்டு - மேட்டிடத்தைத் தொட்
டுப் பிடித்து, பல பல லச்சைக்கு உட்பட்டு - பற்பல விதமான
நாணம் தரும் செயல்களுக்கும் வசமாகி, உயிர் சிக்கி சொக்கி-உயிர்
சிக்குண்டு மயக்கங் கொண்டு, கெட்டு இப்படி உழல்வேனோ-அறிவு
கெட்டு இந்த விதமாக நான் வருந்தலாமோ!, மெத்த துக்கத்தை-
மிகுந்த துயரத்தை, தித்தி - அழித்து, இனி சித்தத்தில்-இனிமேல்
மனத்தில், பதத்தொடு - முயற்சியுடன், மெச்சி சொர்க்கத்தில் -
பாராட்டிச் சொர்க்க லோகத்தில், சிற்பரம் அருள்வாய் - ஞானத்

தின் மேம்பாட்டை அடியேனாகிய எனக்குத் தந்தருள்வாயாக; எ - று.

(வி-ரை.) குச்ச - குஞ்சம் போல் முடித்திறுச் செய்தது. துப்பிதழ் - பவளம்போன்ற இதழ்; இது ஒரு உவமம். முக்கட் சித்திர - திரிநேத்திர முடைய சித்தராகிய சிவபெருமான். எல்லாம் வல்ல சித்தராகி மதுரையில் விளையாட்டுச் செய்தா ராதலின் 'சித்தர்' என்றார். இதனை,

"முன்னானை கூப்பிட வோடி வந்தானை முளரிமலர்ப்
பொன்னானை யேறி யிருப்பானைப் பூழியன் கைக்கரும்பைத்
தின்னானை யென்ற கல்லானைக் கிட்டானைத் திருமதுரை
மன்னானை வீதியி லேறியவர் தானே வணங்குதுமே."

என்ற பாட்டாலும் அறியலாம்.

"பழனப் பெருமானே! மாதர் மயக்கிற்பட்டு அழியாதபடி ஞானந் தந்தருள்" என்று வேண்டுகின்றார்.

---

41. தனதன தனதன தனதன தனதன
தனதன தனதன தனதான.

கடலைபொ ரியவரை பலகனி கழைநுகர்
கடினகு டவுதர விபரீத
கரடத டமுமத நளினசி றுநயன
கரிமுக வரதுணை வோனே!
வடவரை யின்முகடு அதிரவொ ருநொடியில்
வலம்வரு மரகத மயில்வீரா!
மகபதி தருசுதை குறமினொ டிருவரு
மருவுச ரசவித மணவாளா!

அடலசு ரர்கள்குல முழுதும டியவுய
ரமரர்சி றையைவிட
வெழின்மீறு

மருணகி ரணமிவாளி யொளிரும யிலைவிடு
மாகர சரவண
பவநேலாலா!

படலவு டுபதியை யிதழிய ணிசடில
பசுபதி வரநதி
யழகான

பழநிம லையருள்செய் மழலைமொ ழிமதலை
பழநிம லையில்வரு
பெருமாளே.

(இ - ள்) கடலை பொரி அவரை - கடலையையும் பொரியையும் அவரையையும், பல கனி - பலவகையான பழங்களையும், கழை - கரும்பையும், நுகர் - உண்கின்ற, கடினம் குட உதரம் - விபலமான குடம் போன்ற வயிற்றையுடைய, விபரீத கடாம் - விபரீதமான கடாத்தையும், தடம் மும்மதம் - மிகுந்து பெருகும் மூன்று மதங்களையும், நளினம் சிறு நயன - தாமரை மலரை நிகர்த்த சிறிய கண்களையும் உடைய, கரிணி முகவரது - யானை முகத்தை யுடைய விநாயகக் கடவுளினது, துணைவோனே - சகோதரனே!, வட வரையின் - வடக்கேயுள்ள மகாமேரு மலையின், முகடு அதிர - சிகரமானது நடுங்கும்படி, ஒரு நொடியில் - ஒரு நொடிப்பொழுதில், வலம் வரு - உலகத்தைச் சுற்றி வந்த, மரகதம் மயில் வீரா - மரகத நிறத்தையுடைய மயிலையுடைய வீரனே!, மக பதி தரு - இந்திரன் பெற்ற, சுதை - புத்திரியாகிய தெய்வயானையாரை, குறமின்னொடு - குறவர் மகளாகிய வள்ளிநாயகியாரோடு, இருவரும் - இரண்டு பேரையும், மருவு - சேர்கின்ற, சரசவித - லீலைவகை புரியும், மணவாளா - நாயகனே!, அடல் அசுரர்கள் - பலம் மிகுந்த அசுரர்களுடைய, குலம் முழுதும் மடிய - கூட்டம் முழுவதும் அழியவும், உயர் அமரர் சிறையை விட - உயர்ந்த

தேவர்களின் சிறையை நீக்கவும், எழில் மீறும் - அழகு மிகுந்த, அருண கிரணம் ஒளி ஒளிரும் - சூரியனின் கிரணங்களைப் போலப் பிரகாசிக்கும், அயிலை விடு - வேலாயுதத்தை விடுகின்ற, சரவண பவ - சரவணப் பொய்கையில் உற்பவித்து, அரகர லோலா - அடியார் வினையை அரிக்கும் ஆசையை மிகவும் உடையவரே!, படல உடுபதியை - கூட்டமான நக்ஷத்திரங்களுக்கெல்லாம் தலைவனான சந்திரனையும், இதழி அணி சடிலம் - கொன்றை மாலையையும் அணிந்த சடாபாரத்தை உடைய, பசுபதி - சிவபெருமானும், வாநதி - கங்கா நதியும், அழகான பழநிமலை - அழகு மிகுந்த பழமையான உமாதேவியாரும், அருள் செய் - பெற்றருளிய, மழலை மொழி மதலை - மழலைச் சொற்களைப் பேசுங் குழந்தையே!' பழநி மலையில் வரு பெருமாளே - பழநி மலையில் எழுந்தருளி யிருக்கும் பெருமானே, எ - று.

(வி - ரை.) 'கனி' இளக்க முடையது என்ற காரணம் பற்றி வந்த பெயர். கரிணி - பெண் யானை; ஈண்டு பொதுவாக யானையைக் குறித்தது. மரகத மயில் - பச்சை நிறம் பொருந்திய மயில், படலம் - கூட்டம். பழம் பொருளாகிய ஆதிக்குச் சத்தியாக அவன் என்றே அன்றி இவளும் உள்ளவளாதலின் உமையை 'பழம் நிமலை' என்றார். 'களங்கமற்ற ஞானத்தை உடையவள்' என்ற பொருளில் 'நிமலை' எனுஞ் சொல் வந்தது. நிமலம் - அகச் சுத்தம். அமலம் - புறச் சுத்தம் தந்தைக்குப் பின் குடியைத் தூண்போல் நின்று காப்பவன் ஆதலின் புத்திரனுக்கு 'மதலை' எனும் பெயர் வந்தது. பசுபதி - 'ஆன்மாக்களுக்கு எல்லாம் இறைவனாக இருப்பவன்' என்பது பொருள்.

இந்தப் பாட்டு முருகர் பெருமை கூறி அழைத்த தலம், வந்தருளைச் செய்ய என்பது தொக்கது.

---

42. தனனத் தனதன தனதன தந்தத்
தனனத் தனதன தனதன தந்தத்
தனனத் தனதன தனதன தந்தத் தனதான.

புடவிக் கணிதுகி லெனவள ரந்தக்
கடலெட் டையுமற குடிமுநி யெண்கட்
புனிதச் சததள நிலைகொள் சயம்புச் சதுர்வேதன்

புரமட் டெரியெழ விழிகனல் சிந்திக்
கடினத் தொடுசில சிறுநகை கொண்டற்
புதகர்த் தரகர பரசிவ னிந்தத் தனிமூவர்

இடசித் தமுநிறை தெளிவுற வும்பொற்
செவியுட் பிரணவ ரகசிய மன்புற்
றிடவற் பனமொழி யுரைசெய்து முந்தைக் குருநாதா!

எதிருற் றசுரர்கள் படைகொடு சண்டைக்
கிடமைத் திடவவர் குலமுழு துப்பட்
டிடவுக் கிரமொடு வெகுளிகள் பொங்கக் கிரியாவும்

பொடிபட் டுதிரவும் விரிவுறு மண்டச்
சுவர்விட் டதிரவு முகடுகி ழிந்தப்
புறமப் பரவெளி கிடுகிட னுஞ்சத் தமுமாக

பொருதுக் கையிலுள வயினினை முண்கக்
குருதிப் புனலொடு கடலினு மிஞ்சப்
புரவிக் கணமயி னடவிடும் விந்தைக் குமரேசா!

படியிற் பெருமித தகவுயர் செம்பொற்
கிரியைத் தனிவலம் வரவல னந்தப்
பலனைக் கரிமுகன் வசமரு ளும்பொற் பதனேல

பரன்வெட் கிடவுள மிகவும்வெ குண்டக்
கனியைத் தரனிலே யெனவருள் செந்திற்
பழநிச சிவகிரி தனிலுறை கந்தப் பெருமாளே!

(இ - ள்.) புடவிக்கு - பூமிக்கு, அணி துகில் என - அணி யும்படியான ஆடை யென்று சொல்லுமாறு, வளர் - வளர்கின்ற, அந்த கடல் எட்டையும் - எட்டுத் திக்குகளிலும் உள்ள அந்தக் கடல் எழையும், அற - தண்ணீர் வற்றுமாறு, குடி முனி - குடித்த அகத்திய முனிவரும், எண் கண் - எட்டுக் கண்களை யுடைய, புனித பரிசுத்தமான, சத தள நிலை கொள் - நூறு இதழ்களை யுடைய தாமரை மலரிலே வசிக்கும், சயம்பு சதுர் வேதன் - தானே தோன்றிய வேதங்கள் நான்கிற்கும் தலைவ னுகிய பிரமனும், விழி கனல் சிந்தி - கண்களிலே நெருப்பைச் சிந்தி, கடினத்தோடு - கடினத்துடனே, எரி எழ - நெருப்பு உண்டாகும்படி, சில சிறு நகை கொண்டு - மிகவுஞ் சிறிய புன் னகை புரிந்து, புரம் அட்டு - திரிபுரத்தையும் நெருக்கி யழித்த, அற் புத கர்த்தா - அதிசயிக்கும்படியான தொழிலை உடைய தலைவரும்- அகரம் பரசிவன் - பிரணவப் பொருளாக இருக்கும் மேலான சிவ பெருமானும் ஆகிய, இந்த தனி மூவர் இட-இந்த ஒப்பற்ற மூவர்க ளுடைய, சித்தமும் நிறை தெளிவு உற - மனங்களும் நிறைந்த தெளிவை அடையும்படி, பொன் செவியள் - அழகிய காதில், பிர ணவ ரகசியம் - பிரணவத்தினுடைய உண்மையை, அன்பு உற்றிட, அன்பு பொருந்த; உற்பன மொழி-உபதேச வார்த்தையால், உரை செய்-உரைத்தருளும், குழந்தை குருநாதா-குழந்தை வடிவத்தோடு கூடியபரமாசாரியனே!, எதிர் உற்ற அசுரர்கள்-எதிர்த்து வந்த அசு ரர்கள், படைகொடு - தம்முடைய சயினியங்களைக் கொண்டு, சண் டைக்கு இடம் வைத்திட - சண்டைக்கு வழி செய்ய, அவர் குலம் முழுதும் பட்டிட - அவர் கூட்டமெல்லாம் அழியவும், உக்கிரமொடு

வெருளிகள் பொங்க - கொடுமையோடு கோபம் அதிகரிக்கவும், கிரியாவும் - மலைகள் எல்லாம், பொடிபட்டு உதிரவும் - தூளாகிச் சிந்தவும், விரிவு உறும் அண்டம் சுவர் - பரந்த அண்டத்தின் சுவர், விட்டு அதிரவும் - பிளவுகொண்டு அதிர்ச்சியை அடையவும், முகடு கிழிந்து - மலைச் சிகரங்கள் தகர்ந்து, அப்புறம்-ஆகாயத்துக்கு அப் பக்கத்து, அபரம் வெளி - அந்த மேலானவெளி, கிடுகிடு எனும் சத்தமுமாக - கிடு கிடு எனும் ஒலி யுடையதாகவும், பொருது-யுத்தம் செய்து, கையில் உள - திருக்கரத்தே தரித்துள்ள, அயில் - வேலாயுதம், நிணம் உண்க - கொழுப்பை உண்ணவும், குருதி புனல் - இரத்தமாகிய நீர், எழு கடலினும் மிஞ்ச - எழு கடல்களைக் காட்டிலும் அதிகமாகப் பெருக, பரவி கனம் மயில் நடவிடும் - குதிரையாகிய சிறந்த மயிலை நடாத்தும், விந்தை குமரேசா - வேடிக்கை மிகுந்த குமாரக்கடவுளே!, படியில் - உலகத்தில், பெருமித - மேன்மையை யுடைய, தக - தக்க, செம்பொன் கிரியை - உயர்ந்த செவ்விய பொன் மலையை, தனி வலம் வர - விரைவாகச் சுற்றி வர, அரன் - சிவபெருமான், அந்த பலனை-அந்தப் பழத்தை, கரிமுகன வசம் அருளும் - விநாயகக் கடவுளிடத்தே கொடுத்த, பொற்பு அதனால் - தன்மையினாலே, பரன் வெட்கிட - சிவபெருமான் நாண மடையுமாறு, மிகவும் வெகுண்டு-அதிகமாகச் சினந்து, அ கனியை தர இலை என - அந்தப் பழத்தைத் தனக்குத் தரவில்லையே என்று, அருள் செந்தில் பழநி சிவகிரி தனில் - அருள் மிகுந்த செந்தூரிலும் பழநியில் உள்ள சிவகிரியிலும், உறை கந்தப் பெருமாளே - எழுந்தருளி யிருக்கும் கந்தப் பெருமானே!, எ - று.

(வி - ரை) பூமி பெண்ணாகவும் கடல் அவளுக்கு ஆடையாகவுங் கூறுவது மரபு.

"கடலாடைப் புவிமகள்"

என்றது காண்க. எட்டுத் திக்குகளையும் சூழ்ந்துள்ள எழு கடல் என்பார், 'புடவிக்கிணி.........கடலெட்டையும்' என்றார். எண்

கண்ணன் - பிரமனுக்கு நான்கு தலை யுண்டாதலின் எட்டுக் கண் ஆயின.

திரிபுரத்தார் புரமூன்றையும் சிவபெருமான் சிரித்து எரித்தார் என்பது புராண கதை.

"நன்றாக நால்வர்க்கு நான்மறையி னுட்பொருளை
யன்றாலின் கீழிருந்தங் கறமுறைத்தான் காணேடீ
யன்றாலின் கீழிருந்தங் கறமுரைத்தா னாயிடினும்
கொன்றான்காண் புரமூன்றுங் கூட்டோடே சாழலோ"

என்ற திருச்சாழலாலும் அறியலாம்

குலம் - கூட்டம். சிவபெருமானைக் காணவந்த நாரதர் ஒரு மாதுளங்கனியைத் தந்தார். பக்கத்து இருந்த விநாயகரும், முருகரும் "எனக்கு எனக்கு" எனக் கையை நீட்டினர். "சர்வாண்டங்களையும் சுற்றி முன்னால் வருவோனுக்குத் தருவேன்" என்றார். முருகர் மயிலின்மீதேறிப் பூமி முதலிய அண்டங்களை வலம் வரப் புறப்பட்டார். விநாயகரோ தாயையும்தந்தையையும் வலம்வந்து வணங்கி நின்றார். "சர்வாண்டங்களும் தேவரீரும் தாயும் ஆதலின் உங்களை வலம் வந்தது சர்வாண்டங்களையும் வலம் வந்ததாகும்" என்று கனியைப் பெற்றார். முருகர் சர்வாண்டங்களையும் வலம்வந்து பார்க்கக் கனி அண்ணன் கையிலிருக்கச் சினங்கொண்டு பழநி மலையில் ஆண்டியாக அடைந்தார் என்பது புராண கதை.

"அக்கனிதந ரச்சொலிமு னப்பனைவ லம்வருங்
கைக்கஜமு கக்கடவுள் காப்பு."

என்றதால் விநாயகர் ஜகப்பனை வலம் வந்து கனி பெற்றார் என்பது பெற்றும்.

இந்தப் பாட்டு பெருமைகாட்டி விளித்ததாம். வந்தருள் என்றது தொக்கு நின்றது.

43. தனதன தந்தத் தனத்த தானன
தனதன தந்தத் தனத்த தானன
தனதன தந்தத் தனத்த தானன தனதான.

மலரளி கொண்டைச் சொருக்கி லேயவள்
சொலுமொழி யின்பச் செருக்கி லேகொடு
மையுமடர் நெஞ்சத் திருக்கி லேமுக மதியாலே
மருவுநி தம்பத் தடத்தி லேநிறை
பரிமள கொங்கைக் குடத்தி லேமிக
வலியவும் வந்தொத் திடத்தி லேவிழி வலையாலே
நிலைவெறி யங்கக் குலுக்கி லேயெழில்
வளைபுனை செங்கைக் குலுக்கி லேகன
நிதிபறி யந்தப் பிலுக்கி லேசெயு மொயிலாலே
நிதமிய லுந்தூர்க் குணத்தி லேபர
வசமுட னன்புற் றிணக்கி லேயொரு
நிமிடமி ணங்கிக் கணத்தி லேவெகு மதிகேடாய்
அலையநி னைந்துற் பனத்தி லேயனு
தினமிகு மென்சொற் பனத்தி லேவர
வறிவும ழிந்தற் பனத்தி லேநித முலைவேனோ;
அசடனை வஞ்சச் சமர்த்த னாகிய
கசடனை யுன்சிற் கடைக்க ணாடியு
மலர்கொடு நின்பொற் பதத்தை யேதொழ வருடாராய்;
பலபல பைம்பொற் பதக்க மாரமு
மடிமைசொ லுஞ்சொற் றமிழ்ப்ப னீரொடு
பரிமள மிஞ்சக் கடப்பமாலையு மணிவோனே!

பதியினில் மங்கைக் கதிக்க மாமலை
யொடுசில குன்றிற் றரித்து வாழ்வுயர்
பழநியி லன்புற் றிருக்கும் வானவர் பெருமாளே!

(இ-ள்) பலபல பைம்பொன் பதக்கமும் - பலபல வகையினதாகிய பசிய பொன்னாற் செய்த பதக்கங்களையும், ஆரமும் - முத்து மாலையையும், அழகை சொலும் சொல் தமிழ் - தங்கள் அழகைத் தன்மையைக் கூறும் புலவர்களின் பாமாலையையும், பனிநீரொடு பரிமளம் மிஞ்ச கடப்பமாலையும் அணிவோனே - பன்னீருடன் வாசனை அதிகரிக்கும்படி கடப்பமலர் மாலையையும் அணிந்து கொண்டிருப்பவனே!, பதியினில் - தலங்களிலும், மங்கை கதிக்க மாமலையொடு - வள்ளி மலையோடு, சில குன்றில் தரித்து - சில மலைகளில் தங்கி, வாழ்வு உயர் பழநியில் - செல்வம் மிகுந்த பழநித் தலத்தில், அன்பு உற்று இருக்கும் - விருப்பங் கொண்டு மேவி வீற்றிருக்கும், வானவர் பெருமாளே - தேவர்களுக்குப் பெருமானே!, மலர் அளி கொண்டை சொருக்கில் - மலர் அணிந்த வண்டுகள் மொய்க்கும் கொண்டையினது சொருக்கிலும், அவள் சொலும் மொழி இன்பம் செருக்கில் - அவள் சொல்லுகின்ற சொல்லினுடைய இன்ப மிகுதியிலும், கொடுமையும் அடர் நெஞ்சம் திருக்கில் - கொடுமை மிகுந்த மனத்தின் மாறுபாட்டிலும், முகம் மதியால் - சந்திரனை நிகர்த்த முகத்தாலும், மருவும் நிதம்பம் தடத்தில் - சேருகின்ற நிதம்பத் தடத்திலும், நிறை பரிமளம் கொங்கை குடத்தில் - வாசனை நிறைந்த தனங்களாகிய குடத்திலும், மிக வலியவும் வந்து ஒத்து இடத்தில் - மிகவும் வலிய வந்து உடம்பைப் பொருந்தும் இடத்தாலும், விழி வலையால் - கண்களாகிய வலையினாலும், நிலவு எறி அங்கம் குலுக்கில் - ஒளி வீசும் தேகக் குலுக்காலும், எழில் வளை புனை - அழகிய வளையல்கள் தரித்த, செம் கை குலுக்கில் - செவந்த கை பலசைவு ஒலி

யாலும், கனம் திரி பறி அந்த பிலுக்கில் - பெருந் திரவியத்தை அபகரிக்கும் அந்தப் பிலுக்காலும், செயும் ஒயிலால் - செய்யும் ஒயிலினாலும், தம் இயலும் துர்க்குணத்தில் - தினந்தினம் பழகுகின்ற கெட்ட குணத்தாலும், பரவசமுடன் அன்பு உற்று இணக்கில் - பரவசத்துடன் அன்பு பொருந்தும் கலவியினாலும், ஒரு நிமிடம் இணங்கி - ஒரு நிமிஷங் கூடி, கணத்தில் வெகுமதி கேடாய் - க்ஷண நேரத்தில் மிக்க அறிவு கெட்டு, அலைய நினைந்து - அலைய எண்ணி. உற்பனத்தில் - தோற்றத்தில், அனுதினம் - தினந்தோறும், மிகும் என் சொப்பனத்தில் வர - மிக்க எனது கனவில் வர, அறிவும் அழிந்து - அறிவுங் கெட்டு, அற்பன் அத்தில்-கீழ்மையுடையேனாகிய நான் அந்தக் கலவியில், சதம் உலைவேனோ - எப்பொழுதும் உலைந்து கொண்டிருப்பேனோ, கசடனை - குற்றமுடையவனை, வஞ்சம் சமர்த்தன் ஆகிய கசடனை - வஞ்சகச் செயலில் கெட்டிக்காரன் ஆகிய கீழ்மகனை, உன் சித் கடைக்கண் நாடி - தேவரீரது ஞானம் பொருந்துள்ள கடைக்கண்ணினால் நோக்கி, அலர் கொடு - பூக்களைக் கொண்டு, நின் பொன் பதத்தையே - நினது அழகு பொருந்திய திருவடிகளையே, தொழ - வணங்குமாறு, அருள் தாராய் - கருணையைத் தருவாயாக, எ - று.

(வி - ரை) பல துர்க்குணங்களோடு கொடுமையும் நிறைந்தது என்பது தோன்ற 'கொடுமையும் அடர் நெஞ்சம்' என்றார்.

திருக்கு - மாறுபாடான செய்கை. குலுக்கிலே - வளையல் அணிந்த கையசைப்பினால் உண்டாகும் ஓசை. 'பிலுக்கு - பகட்டு நடக்கை. ஒயில் - 'உல்லாச நடை' எனவும், 'ஒழுங்கான நடை' எனவுங் கூறுவர்.

அடிமை சொலுஞ் சொற்றமிழ் - 'அடிமையாகிய நான் சொல்லு நின் புகழ்ச்சொல் அடங்கிய பாமாலை' எனவும் பொருளுரைப்பர்.

யும் கையையும் மார்போடு, மின் சந்தும் - பிரகாசம் பொருந்திய சந்தன மரங்களையும், சிந்தி - அழித்து, நிசாசரர் வகை சேரவும் - அரக்கர் கூட்டமானது ஒன்று கூடி வரவும், சண்டன் - இயமனுடைய, தென் திசை நாடி - தெற்குத் திக்கைநோக்கி, விழுந்து அங்கும் சென்று - மாண்டுவிழுந்து அங்குச் சென்றும், எமதூதர்கள் - எமராஜனுடைய தூதுவர்கள், உந்து உந்து என்றிட - தள்ளு தள்ளு என்று கூற, தசை நிணம் மூளை - மாமிசத்தையும் கொழுப்பையும் மூளையையும், உண்டும் கண்டும் - உண்டும் கண்டும், சில கூளிகள் - சில பேய்களானவை, டிண் டிண்டு என்று - டிண் டிண்டென்று, குதிபோட - கூத்தாட, உயர்ந்து - சிறந்துள்ள, அம்பும் கொண்டு - அம்பையுங் கையிற் கொண்டு, வெல் மாதவன் - வெற்றியைப் பெற்ற மகா விஷ்ணுவின், மருகோனே - மருகனே!, சங்கம் கஞ்சம் கயல் - சங்குகளும் தாமரை மலர்களும் கயல் மச்சங்களும், சூழ் தடம் - சூழ்கின்ற குளங்கள், எங்கு எங்கும் பொங்க - எவ்வெவ் இடங்களிலும் மிகுந்து விளங்கா நிற்க, மகா புனிதம் தங்கும் - மிக்க பரிசுத்தம் பொருந்தியுள்ள, செந்திலில் வாழ்வு உயர் பெருமாளே - திருச் செந்தூர் என்னும் திவ்விய தலத்தில் உயர்ந்து வாழ்ந்துகொண் டிருக்கும் பெருமானே!, துரையே - மேலானவனே!, சிறியேன் - அற்பனாகிய அடியேன், தஞ்சம் தஞ்சம் - தேவரீருக்கு அடைக்கலம் அடைக்கலம்; மதி கொஞ்சம் கொஞ்சம் - எனக்கோ அறிவு மிக அற்பம் அற்பம்; அருள் தந்து - ஆதலால் எனக்குக் கருணையைச் செய்து, இன்பம் தருவீடு அது - அழியாத பேரின்பத்தைக் கொடுக்கக் கூடியதாகிய முத்தி வீட்டை, என்று தருவாய் - என்றைக்குக் கொடுத் தருள்வாய்? எ - று.

(வி - ரை) இராவணன் ஆதியிலிருந்து முடிவுவரை மாயைப் போரே செய்தவன், திருட்டுத்தனமே செய்தவன் ஆதலின் 'வஞ்சங்கொண் டுந்திட' என்றார். சம்பிரதாயம் கூறல் - தன்வீர பராக்கிரமங்களை எடுத்துக் கூறல்; இதனைப் பாயிரங்கூறல் என்பர்.

"—சேறு மனத்தார்
பாயிரங் கூறிப் படைதொக்கா லென்செய்ப
ஆயிரங் காக்கைக் கோர்கல்."

என்ற பழமொழிச் செய்யுளானும் அறியலாம்.

வம்புந் தும்பும் - சண்டை மூட்டும் வீண் வார்த்தைகள். நிசாசரர் - அரக்கர்கள்; 'இரவிற் சஞ்சரிப்போர்' என்பது பொருள். இரவில் இவர்களுக்குப் பலமும் அதிகம் என்பர். 'தஞ்சம் தஞ்சம்' அவலத்தால் அடுக்கியது. 'கொஞ்சம் கொஞ்சம்' இழிவால் அடுக்கியது.

அறிவு கொஞ்சத்தால் பிழையே செய்வேன் என்னைத் திருத்தி முத்தித்தா என்பது கொண்டு 'மதி கொஞ்சங் கொஞ்சம்' என்றார்.

"திருச்செந்தூர் முருகப் பெருமானே! அடியேன் உனது அடைக்கலம்; அடியேனுக்கு அறிவு அற்பம்; ஆதலால், எனக்கு முத்திவீடு தந்தருள்" என்று வேண்டுகின்றார்.

---

போது

45. தனன தனதன தனதன தனதன
தனன தனதன தனதன தனதன
தனன தனதன தனதன தனதன தனதான.

நெடிய வடகுவ டிடியவு மெழுகிரி
நெறுநெ றெனநெரி யவுமுது பணிபதி
நிபிட முடிகிழி யவுநில மதிரவும் விளையாடும்
நிகரில் கலபியும் ரவியுமிழ் துவசமும்
நினது கருணையு முறைதரு பெருமையும்
நிறமு மிளமையும் வளமையு மிருசர ணமுநீப

முடியு மபிநவ வனசரர் கொடியிடை
தளர வளர்வன மிர்கமத பரிமள
முகுள புளகித தனகிரி தழுவிய திரடோளும்
மொகுமொ கெனமது கரமுரல் குரவணி
முருக னறுமுக னெனவரு வனபெயர்
முழுது மியல்கொடு பழுதற மொழிவது மொருநாளே;
கொடிய படுகொலை நிசிசர ருரமொடு
குமுகு மெனவிசை யுடனிசை பெறமிகு
குருதி நதிவித சதியொடு குதிகொள விதியோடக்
குமுறு கடல்குடல் கிழிபட வடுமர
மொளமொ ளெனவடி யொடலறி விழவுயர்
குருகு பெயரிய வரைதுளை படவிடு சுடர்வேலா!
இடியு முழுமலி குலிசமு மிலகிடு
கவள தவளவி கடதட கனகட
விபமு மிரணிய தரணியு முடையதொர் தனியானைக்
கிறைவ! குருபர! சரவண! வெகுமுக
ககன புனிதையும் வனிதைய ரறுவரு
மெமது மகவென வுமைதரு மிமையவர் பெருமாளே!

(இ - ள்.) கொடிய படு கொலை - கொடுமையாகிய மிக்க கொலைத் தொழிலைக் கொண்ட, நிசிசரர் உரமொடு - அவுணர்களின் மார்போடு, குமு குமு என விசையுடன் இசை பெற - குமு குமுவென்று விரைவுடனே சத்தம் உண்டாகும்படி, மிகு குருதி நதி - மிக்க இரத்தமாகிய ஆறு, வித சதியொடு குதிகொள - பல் வகைத் தாள பேதங்களோடு கூடியதாகிக் குதித்து எழுந்து, விதி

ஓட - ஒழுங்காக ஓடவும், குமுறு கடல் குடல் கிழிபட - கோஷிக்கும் கடலினுடைய குடலானது கிழியவும், வடு மரம் மொளு மொளு என அடியோடு அலறி விழ - மாமரம் மொளு மொளென்ற சப்தத்தோடு வேருடன் அற்று வீழவும், உயர் குருகு பெயரிய வரை துளை பட - உயர்ந்த பரவையின் பெயரைக் கொண்ட கிரௌஞ்சமலை துவாரம் படவும், விடு சுடர் வேலா - விடப்படுகின்ற ஒளியோடுங் கூடிய வேலாயுதத்தை யுடையவனே!, இடியும் முனை மலி குலிசமும் - பேரிடியையும் தாக்கும் மிக்க வஜ்ஜிராயுதத்தையும், இலகிடு கவள - விளங்காநின்ற கவளத்தைக் கொண்ட, தவள விகட தட - வெண்மை பொருந்திய அழகிய அகன்றுள்ள, கன கட - மிகுந்த மத ஒழுக்கமுடைய, இபமும் இரணிய தரணியும் உடையது - மரக் கொம்போடு பொன்மயமாயுள்ள மலையையும் உடையதாகிய, ஓர் தனி யானைக்கு இறைவ - ஓர் ஒப்பற்ற யானைக்குத் தலைவனே!' குருபர - குருபரனே!, சரவண - சரவண மடுவிற் றோன்றியவனே!, வெகு முக ககனம் புனிதையும் - ஆயிரம் முகங்களோடுங் கூடிய ஆகாய கங்கையும், வனிதையர் அறுவரும் - கார்த்திகை முதலிய ஆறு நட்சத்திரப் பெண்களும், எமது மகவு என - எமது குழந்தை என்று சொல்லும்படி, உமை தரு இமையவர் பெருமானே - உமையம்மையார் பெற்றருளிய தேவர்களின் பெருமானே!, நெடிய வட குவடு இடியவும் - நீண்ட வடக்கேயுள்ள மகா மேருமலையானது இடியவும், எழு கிரி நெறு நெறு என நெரியவும் - ஏழு மலைகளும் நெறு நெறு என நெறியவும், முது பணி பதி விகடம் முடி கிழியவும் - பெரிய படத்தோடுங் கூடிய ஆதிசேடனுடைய இரத்தின கிரீடமானது சிதறவும், நிலம் அதிரவும் விளையாடும் - பூமியானது அதிருமாறும் விளையாடாநின்ற, நிகர் இல் கலபியும் - சமானம் அற்ற மயிலையும், ரவி உமிழ் துவசமும் - கதிரைக் கக்குகின்ற துவஜமும் கொண்டுள்ள, நினது கருணையும் - தேவரீரது

திருக்கருணையையும், முறை தரு பெருமையும் - முறை முறையாக வருகின்ற மேம்பாட்டையும், நிறமும் இளமையும் - சிவந்த நிறத்தையும் இளமையையும், வளமையும் - குணச் செழுமைகளையும், இரு சரணமும் - இரண்டு மலர்ப் பாதங்களையும். நீபம் முடியும் - கடம்ப மாலை தரித்த மகுடமும், அபிரவவனசரர் கொடி இடை - மிகப் புதிய வேடர்களுடைய மின்னற் கொடியை ஒத்த இடையோடுங் கூடிய மகளாகிய வள்ளி அம்மையாரின், தளர வளர் - தளருமாறு ஓங்கி வளராநின்ற, வளம் மிருக மதம் பரிமளம் - அழகிய கத்தூரி அணியப்பெற்ற மிக்க வாசனை பொருந்திய, முகுளம் புளகிதம் தனகிரி - தாமரை அரும்பை ஒத்துள்ள குமிழ்ப்பையுடைய தனங்களாகிய மலைகளை, தழுவிய திரள் தோளும் - அணையும்படியான திரண்ட தோள்களையும் உடைய, மொகு மொகு என மதுகரம் முரல் - மொகு மொகு என்று வண்டுகள் ஒலிக்காநின்ற, குரவு அணி முருகன் - குராமலர் மாலையைத் தரித்த முருகனென்றும், அறுமுகன் என - ஆறு திருமுகங்களை உடையவன் என்றும், வருவன பெயர் முழுதும் - வருவனவாகிய பெயர்கள் முழுவதையும், இயல் கொடு பழுது அற - குற்றம் நீங்கி அழகு அமையவும், மொழிவதும் ஒரு நாள் - எடுத்துக் கூறும் நாளும் உண்டாமோ, எ - று.

(வி - ரை.) குவடு - மலை; குவிந்தோங்கி வளரும் காரணம் பற்றி வந்தது. 'குமுகுமு' ஒலிக்குறிப்பு. குருகு பெயரியவரை கிரவுஞ்சமலை. இதனை,

> "குருகு பெயரின் குன்றம் பிளப்ப
> உருவ வடிவேல் ஓச்சிய குமரன்"

என்ற அடிகளாலும் அறியலாம்.

'இடியு முனைமலி' என்பதனை 'இடையில் முனைமலி' எனப் பாடம் ஓதுவாரும் உண்டு. வெகுமுக ககன புனிதை - ஆகாய

கங்கை. 'வனிதைய ரறுவர்': தொகைக் குறிப்பு; ஆறு நட்சத்திரப் பெண்களைக் குறித்தது. 'மகவு': இளமைப் பெயர். கார்த்திகை முதலிய அறுவர் முலை யுண்டதைக் கல்லாடர்,

"இமயம் பூத்த சுனைமாண் டொட்டில்
அறிவிற் றங்கி அறுதாய் முலையுண்டு"

என்ற அடிகளிற் குறிப்பித்தமை காண்க. உமை யருளாற் பிறந்தவர் முருகர் ஆகையால் 'உமைதரும்' என்றார்.

வடுமர மொரா மொளென-வடுக்களைத் தரும் மாமரம்; ஈண்டு கடல் நடுவில் மாமர உருவாக நின்ற சூரனைக் குறித்தது.

"பாய்திரை யுடுத்த ஞாலமுடி வென்ன
முடங்குளை முகத்த பசியே றவுணனொடு
மிடையுடு வதிரச் செங்களம் பொருது
ஞாட்பினுள் மறைந்து நடுவுறு வரத்தால்
வடவைநெடு நாக்கின் கிளைகள் விரிந்தென்ன
செந்துகிர் படருந் திரைக்கடற் புக்குக்
கிடந்தெதிர் வடவையிற் றளிர்முக மீன்று
திரையெறி மலைகளிற் கவடுபல போக்கிக்
கற்செறி பாசியிற் சினைக்குழை பொதுளி
அகறிரைப் பரப்பிற் சடையலைந் தலையாது
கீழிணர் நின்ற மேற்பகை மாவின்
ஒருட லிரண்டு கூறுபட விடுத்த
அழியாப் பேரொளி யுமைக்கண் ணின்று
தற்பெயர் புணர்த்திக் கற்பினொடு கொடுத்த
அமையா வென்றி அரத்தநெடு வேலோய்."

என்ற கல்லாடத்தாலும் அறியலாம்.

"உமைதரு பாலா! அமைதரு வேலா! உன் நாமங்கள் பலவற்றையும் துதித்து, உன் அடி பணியும்படி எனக்கு அருள் செய்" என்று வேண்டுகின்றார்.

---

திருத்தணிகை

46. தனன தந்த னத்த தனன தந்த னத்த
தனன தந்த னத்த தனதான.

எனைய டைந்த குட்ட வினைமி குந்த பித்த
மெரிவ ழங்கு வெப்பு வலிபேசா

திகலி நின்ற லைக்கு முயல கன்கு லைப்பொ
டிரும னின்றி ரைக்கு மிவையோடே

மனைகள் பெண்டிர் மக்கள் தமைநி னைந்து சுத்த
மதிம யங்கி விட்டு மடியாதே

மருவி யின்றெ னக்கு மாக தஞ்சி றக்கு
மயிலில் வந்து முத்தி தரவேணும்;

நினைவ ணங்கு பத்த ரனைவ ருந்த ழைக்க
நெறியில் நின்ற வெற்றி முனைவேலா!

நிலைபெ றுந்தி ருத்த ணியில்வி ளங்கு சித்ர
நெடிய குன்றி னிற்கு முருகோனே!

தினைவி ளங்க லுற்ற புனமி ளங்கு றத்தி
செயல றிந்த ணைக்கு மணிமார்பா!

திசைமு கன்றி கைக்க வசுர ரன்ற டைத்த
சிறைதி றந்து விட்ட பெருமாளே!

(இ - ள்) நினை வணங்கு பத்தர்-முருகக் கடவுளே! உன்னை வணங்குகின்ற தொண்டர்கள், அனைவரும்-எல்லோரும், தழைக்க-செழிப்படையும்படி, நெறியில் நின்ற - அவர்கள் பக்தி மார்க்கத்துக்கு எளிதாக வந்த, வெற்றி முனை வேலா - வெற்றி பொருந்திய கூரிய வேலாயுதத்தை உடையவனே!, நிலைபெறும் திருத்தணியில்-எக்காலத்திலும் அழியாமல் நிலைபெற்றிருக்கும்படியான, திருத்தணிகை என்னும் திவ்விய தலத்தில், விளங்கு சித்திரம் நெடிய குன்றில் - விளக்க முடைய அழகிய நெடிய மலையில், நிற்கும் முருகோனே - எழுந்தருளி யுள்ள முருகப் பெருமானே!, தினை விளங்கல் உற்ற - தினைகள் மிகுந்து வளர்கின்ற, புனம் இளம் குறத்தி - புனத்தின் கண்ணே ஆயலோட்டிக்கொண் டிருக்கின்ற இளமை பொருந்திய குறப்பெண்ணாகிய வள்ளி நாயகியாரது, செயல் அறிந்து - பக்தி ஒழுக்கத்தினைத் தெரிந்து, அணைக்கும் மணி மார்பா - அணைத்துக்கொண் டருளிய அழகு பொருந்திய மார்பையுடையவனே!, திசைமுகன் - பிரமதேவன், திகைக்க - திகைக்குமாறு, அசுரர் - அசுரர்கள், அன்று - அக்காலத்தில், அடைத்த சிறை - தேவர்களை அடைத்து வைத்திருந்த சிறைச்சாலையை, திறந்து விட்ட பெருமாளே - திறந்து தேவர்களை எல்லாம் வெளி ஆக்கிய பெருமானே!, எனை அடைந்த - என்னை வந்து கூடிய, குட்டம் - குட்ட நோயும், வினை மிகுந்த - தீவினை மிகுதியாலாகிய, பித்தம் - பித்த நோயும், எரி வழங்கு வெப்பு - எரிச்சலை உண்டாக்கக் கூடிய ஜுர நோயும், வலி பேசா - தங்கள் தங்கள் வல்லமைகளை எல்லாம் சொல்லிக் காட்டி, இகலி நின்று அலைக்கும - பகை பாராட்டி நிலையாக இருந்துகொண்டு வேதனைப் படுத்தும், முயலகன் - முயலக நோயும், குலைப்பொடு - நடுக்கத்துடன், இருமல் என்று உரைக்கும் - இருமல் என்று சொல்லப்படுகின்ற, இவையோடு - இவைகளோடு, மனைகள் - வீடுகள், பெண்டிர் - மனைவிமார், மக்கள் - பெற்ற புதல்வர்கள், தமை நினைந்து - இவர்களைப்

படுமாறு, திண் திறல் - மிகுந்த வல்லமையைக் கொண்ட, கொண்டல் ஆகண்டலற்கு - மேகவாகனனாகிய இந்திரனுக்கு அண்டர் லோகம் - தெய்வலோகத்தை, கொடுத்து அருள்வோனே - (அசுரர்களைக் கொன்று) தந்தருளிச் செய்தவனே!, திங்கள் - (இளஞ்) சந்திரனையும், ஆர் - ஆத்திமலர் மாலையையும், கொன்றை - கொன்றை மலர் மாலையையும், மத்தம் - ஊமத்த மலரையும், துழாய் - துளவத்தையும், துன்று பொருந்தும்படியான, செம்சடா பஞ்சரத்தில் - சிவந்த ஜடையாகிய கூட்டில், உறு தோகை - வாழ்கின்ற தோகை மயில்போலுஞ் சாயலையுடைய கங்கா தேவியாரின் சிந்தையே - கருத்தில் இருப்பவனே!, தென் திசை - தெற்குத் திசையிலே உள்ள, தென்றல் வீசும் - தென்றற் காற்று வீசப் பெறும், பொழில் - சோலையை யுடைய, செந்தில் வாழ் - திருச்செந்தூர் என்னும் திவ்விய தலத்தில் வாழ்கின்ற, செந்தமிழ் பெருமாளே - செந்தமிழ்க்குப் பரமாசிரியனாகிய பெருமானே!, பங்கம் மேவும் - குற்றம் பொருந்திய, பிறப்பு அந்தகாரந்தனில் - பிறவி என்னும் இருளிலே, பந்தபாசம் தனில்-கட்டுப் படுத்தும் பாசத்தில், தடுமாறி - தடுமாற்றம் அடைந்து, பஞ்ச பாணம் பட - (அதனால்) மன்மதனின் ஐந்து மலர் வாளிகள் தைக்க, புண் படா - மனம் புண்பட்டு, வஞ்சகம் - வஞ்சகத்தோடுங் கூடிய, பண்பு இல் - நல்ல குணம் அமையப் பெறாத, ஆடம்பரம் பொது மாதர் தங்கள் - பகட்டையுடைய விலை மாதர்களின், ஆலிங்கனம் கொங்கை - தழுவுதற்குரிய தனங்கள், அகம் பட - மார்பிலே பொருந்த, சங்கைமால் கொண்டு இளைத்து - சந்தேகமும் மயக்கமும் கொண்டு தேகம் வாட்டமுற்று, அயராது - துன்பப்படாதபடிக்கு, தண்டை - தண்டையும், கிண்கிணி - கிண்கிணியும், சூழ் - சூழப்பெற்றுள்ள, புண்டரீகம் தனை - தாமரை மலரை நிகர்த்த திருத்தாள்களை, தந்து - கொடுத்து, நீ அன்பு வைத்து அருள்வாய் - தேவரீர் அடியேனிடம் கருணை காட்டி அருள் செய்வீராக, எ - று.

(வி - ரை.) பிறப்பானது ஆன்மாவாகிய தன்னையும் தலைவனையும் அறிய முடியாதபடி மலம் மூடி வழியலா வழியிற் செலுத்தித் துன்பப்படுத்தி, நரகுக்கும் பிறப்புக்கும் மீண்டும் மீண்டும் ஆளாக்குதலால் 'பங்கமேவும் பிறப்பந்த காரம்' என்றார். இதனாலன்றோ தாயுமானவரும்,

"உந்து பிறப்பிறப்பை யுற்றுவிடா தெந்தையருள்
வந்து பிறக்க மனமிறப்ப தெந்நாளோ?"

என்றார்.

அங்கை - அகம் + கை; 'அகம்' என்றதன் மத்தியில் நின்ற 'க' கரம் கெட்டது.

"அகமுனர்ச் செவிகை வரினிடை யனகெடும்."

என்றது விதி.

பிரதாபம் - கீர்த்தி; வடசொல் என்பர். வேதண்டம் - திக்குகள். அண்டர் - தேவர், பஞ்சரம் - பட்சிகள் வளரும் கூடு, கங்கையைத் தோகை என்றதற்கேற்ப ஜடையைப் 'பஞ்சரம்' என்றார். தென்றற் காற்று சந்தன வாசனையோடு வந்து குளிர்ச்சியும் பித்த சாந்தமும் தேக ஆரோக்கியமும் தந்து அறிவைத் தெளிவுபடுத்திக் களைப்பைப் போக்குதலால் தென்றற் காற்று விசேட முடையது. இதனாலேதான் 'தென்றிசைத் தென்றல் வீசும் பொழிற் செந்தில்' என்றார்.

"கடுக்க வின்பெறு கண்டனுந் தென்றிசை
யடுக்க வந்தவந் தாடிவா னுடலி னிளைப்பு
விடுக்க வாரமென் கால்திரு முகத்திடை வீசி
மடுக்க வுந்தமிழ் திருச்செவி மாந்தவு மன்றே."

என்ற பரஞ்சோதியார் வாக்கும் கருதற்பாலது.

"சூரனைக் கொன்று தேவர்க்கு அருள் செய்த செந்திற்பதி முருகா! பிறவித் துன்பத்திற்பட் டுழலாது, மாதர் மயக்கில் இணங்கி அறிவு கெட்டு அழியாதபடி நின் திருவடித் தாமரையைத் தந்து அன்பு வைத்துக் காக்க வேண்டும்" என்று வேண்டுகின்றார்.

---

குமரகோட்டம்

48. தனனதாத் தத்ததந்த
தனனதாத் தத்ததந்த
தனனதாத் தத்ததந்த தனதான.

அறிவிலாப் பித்தருன்ற
னடிதொழாக் கெட்டவஞ்ச
ரசடர்பேய்க் கத்தர்நன்றி யறியாத

வவலர்மேற் சொற்கள்கொண்டு
கவிகளாக் கிப்புகழ்ந்து
அவலைவாழ்த் தித்திரிந்து பொருள்தேடிச்

சிறிதுகூட் டிக்கொணர்ந்து
தெருவுலா வித்திரிந்து
தெரிவைமார்க் குச்சொரிந் தவமேயான்

திரியுமாற் கத்துநிந்தை
யதனைமாற் றிப்பரிந்து
தெளியமோட் சத்தையென்று அருள்வாயே;

இறைவர்மாற் றற்ற செம்பொன்
வடிவம்வேற் றுப்பிரிந்து
இடபமேற் கச்சிவந்த வுமையாட்கன்

இருளைநீக் கத்தவஞ்செய்
  தருகுநோக் கிகுழைந்த
  இறைவர்கேட் கத்தருஞ்சொ லுடையோனே!
குறவர்கூட் டத்தில்வந்து
  கிழவனாய்ப் புக்குநின்று
  குருவியோட் டித்திரிந்த தவமானைக்
குணமதாக் கிச்சிறந்த
  வடிவுகாட் டிப்புணர்ந்த
  குமரகோட்டத் தமர்ந்த பெருமாளே!

(இ - ள்.) இறைவர் - சிவபெருமான், மாற்று அற்ற செம்பொன - மாற்றுக் கண்டறிய முடியாத சிறந்த செம்பொன்போன்ற, வடிவம் வேறு பிரிந்து - திருவுருவத்தினின்றும் வேறுபட்டுப் பிரிந்து, இடபம் மேல் - இடப வாகனத்தின் மேல், கச்சி வந்த உமையாள் தன் - காஞ்சிமா நகரத்திற்கு வந்த உமாதேவியாருடைய, இருளை நீக்க - மாயையை நீக்க, தவம் செய்து அருள - தவத்தைச் செய்து முடிக்கும்படி, நோக்கி குழைந்த - அவள் தவச்செயலைக் கண்டு உருகிய, இறைவர் கேட்க தரும் - சிவபெருமான் கேட்கத் தக்கதாகிய, சொல் உடையோனே - உபதேசச் சொற்களை உடையவனே!, குறவர் கூட்டத்தில் வந்து - குறவர்களுடைய கூட்டத்திற் போய், கிழவனாய்ப் புக்கு நின்று - கிழ ரூபத்துடன் போய் நின்று, குருவி ஓட்டி திரிந்த - பறவைகளைக் கவணால் ஓட்டித் தினைப்புன மெல்லாந் திரிந்து கொண்டிருந்த, தவம் மானை - நல்ல தவங்களைச் செய்தவளாகிய மான்போலும் வள்ளி நாயகியாரை, குணம் அது ஆக்கி - தன் கருத்துக்கு ஒத்தபடி குணத்தை மாற்றி, சிறந்த வடிவு காட்டி - அழகிய தன் திருக்கோலத்தைக் காட்டி, புணர்ந்த - தழுவிய, குமரகோட்டத்து அமர்ந்த பெருமாளே -

குமரகோட்டம் என்னும் தலத்தில் எழுந்தருளி யிருக்கும் பெரு மானே!, அறிவு இலா பித்தர் - அறிவு இல்லாத பைத்தியக்காரர் கள், உன் தன் அடி தொழா-உனது திருவடி மலர்களைத் தொழாத, கெட்ட வஞ்சர் - தீய குணமுடைய வஞ்சகர்கள், அசடர் - குற்ற முடையவர்கள், பேய் கத்தர் - பேய்போல் இனிமை யிலாதபடிக் கத்துகின்றவர்கள், நன்றி அறியா அவலர் மேல - நன்றி யறிதல் இல்லாத வீணர்களாகிய இவர்களின்மேல், சொற்கள் கொண்டு - அரிய சொற்களை ஆராய்ந்து எடுத்து, கவிகள் ஆக்கி - பாக்களைப் புனைந்து, புகழ்ந்து - புகழ்ச்சி செய்து, அவரை வாழ்த்தி திரிந்து - அவர்களை வாழ்த்திக்கொண்டு திரிந்து, பொருள் தேடி - பொரு ளைச் சம்பாதித்து, சிறிது கூட்டி கொணர்ந்து - கொஞ்சம் பணத் தைச் சேர்த்துக் கொண்டுவந்து, தெரு உலாவி திரிந்து - வீதி களிலே உலாவிக்கொண்டு திரிந்து, தெரிவை மார்க்கு சொரிந்து - விலைப் பெண்களுக்கு அப்படியே கொட்டி, அவமே யான்-வீணாக நான், திரியும் மார்க்கத்து - கெட்டலைகின்ற தீய வழியின், சிந்தை அதனை மாற்றி - பதிப்பை நீக்கி, பரிந்து - ஆதரங் கொண்டு, தெளிய - தெளிவு பெறுமாறு, மோக்ஷத்தை - முத்தி வீட்டை, என்று அருள்வாய் - எந்தக் காலத்தில் அருள் செய்வாய்! எ - று.

(வி - ரை.) பாட்டுக்குப் பாத்திரரல்லாத அற்பர்களைப்பாடி என்பதனை 'அறிவிலாப பித்தருன்ற..............பொருள் தேடி' என்றார்.

"தருக்காவ லாவென்று புல்லரைப் பாடித் தனவிலைமா
தருக்காவ லாய்மயி லேகுயி லேஎன்று தாமதராய்
தருக்காவ லாநெறிக் கேதிரி வீர்."

என்ற பெரியார் வாக்கும் இங்குக் கவனிக்கத்தக்கது.

அவம் வீண் பேய்க்கத்தர் - பேய்போன்றவர்களும், பொய்யர் களும் ஆயவர்' எனவும் பொருளாம். சொரிதல் - கொட்டுதல்; இது மிகுதியாகக் கொடுத்தலை உணர்த்திற்று.

சிவபெருமான் செவந்த மேனியர் ஆதலின், 'செம்பொன் வடிவம்' என்றார். இதனைப் பெரியவர்,

"பொன்வண்ணம் எவ்வண்ணம் அவ்வண்ணம்
மேனி பொலிந்திலங்கும்"

என்றதாலும்,

"பொன்போலு மேனிப் பிரான் தனக்கே"

என்றதாலும் அறியலாம்.

'இருளை நீக்கத் தவஞ்செய்' என்றது இறைவர் திருக்கண்களைப் பொத்தியதால் உலகெலாம் இருண்டு துன்புற்ற அறியாச் செயலால் விளைந்த பாவ இருள் நீங்க இறைவர் கட்டளைப்படி காஞ்சியிற் கம்பா நதிக்கரையில் தவஞ் செய்தாள் என்ற புராண கதையை.

உமையார் பிரிவு ஆற்றாது கம்பை நதியில் வெள்ளம் வருவித்து வலிந்து தழுவச்செய்து முலைச்சுவடும் வளைச்சுவடும் பெற்றனர். இதனை 'அருகுநோக்கிக் குழைந்த' என்றார்.

"தணந்தபெருந் துயர்கடன்மீக் கூர்தலினென்
மலைபயந்த தாளமூரற்
கணங்குழையாள் புரிபூசை முடிவளவுந்
தரியாம லிடையே கம்பை
அணங்கினைத்தூ தெனவிடுத்து வலிந்திருகத்
தழீஇக் கொள்ள அமையாக் காதல்
மணந்தருளிக் குறிபூண்ட ஒருமாவிற்
பெருமானை வணக்கஞ் செய்வாய்."

என்ற காஞ்சிப்புராணத்தா லறியலாம்.

மன்மதனையுங் குச்சிதப்படுத்தும் அழகிய வடிவுடையவர் ஆதலின் 'வடிவு காட்டி' என்றார். இதனை, குமரன், குமாரன்,

முருகன், செவ்வேள் என்னும் பெருமானின் திருநாமங்கள் என்று விளக்கும்.

மால் மகளாய், மான் மகளாய்த் தவத்தால் சிறந்தும் பின் குற்றத்தால் குறக்குலத்து வளர்ந்தும் முருகப் பெருமான் வலிந்து வந்து மணக்கும் பேறு பெற்றதனால் 'தவமானே' என்றார். மான்: உவமை ஆகுபெயர்; மான்போன்ற செயலுடையாள் என்பது. மானின் செயல் - மருளுஞ் செயல்.

“சிவபெருமானுக்கு உபதேசஞ் செய்தவனே! வள்ளி கணவா! அற்பனைப் பாடிப் பொருள் ஈட்டி வேசைக்களித்து வீணன் ஆகாதபடி முத்தியை என்று தருவாய்?” என்று வேண்டுகின்றார். இதனை,

“புல்லரைப் பாடிநனி பூரியவே சைக்கீந்து
அல்லலுறாம் யாப்புடையீர் ஆறுமுகன்—மல்லலம்பொற்
தாள்பாடிப் போற்றிசெயின் தாரணியில் வாழ்வுறும்
நீள்வீட்டின் பம்பெருகு நேர்.”

என்றதும் காண்க.

---

## சோலைமலை

49. தனன தனந்த தத்தான தனன தனந்த தத்தான
தனன தனந்த தத்தான — தனதான.

கலைநெகிழ்ந்து கைக்கோதி னைஅவிழ்ந்து கர்ப்பூர
களப துங்க விக்கார — முலைமீதே

கலவியின்பம் விற்பார்க ளவயங்க ளைப்பாவி
கனிவி தரிந்து கற்பார்கள் — சிலர்தாமே

உளநெகிழ்ந்த சத்தான வுரைமறந்து சத்தான
உனைப்புணர்ந்து கத்தூரி — மணநாளும்

உபயபங்க யத்தாளி லபயமென் றுனைப்பாடி
யுருகிநெஞ்சு சற்றேனு தில் இழிவாமோ;
அளவில்வன்க விச்சேசனை பரவவந்த சுக்ரீவ
அரசுடன்க டற்றூளி எழுவேபோய்
அடலிலங்கை சுட்டாடி நிசிசரன்த சக்ரீவ
மறவொராம்பு தொட்டார்தம் மருகோனே
வளருமந்த ரச்சோலை மலையுகந்த முற்பாலை
வனசர்கொம்பி னைத்தேடி ஒருவேட
வடிவுகொண்டு பித்தாகி யுருகிவந்த முற்காளில்
மறவர்குன் றினிற்போன பெருமாளே!

(இ - ள்) அளவு இல் வன் கவி சேனை - அளவற்ற பலம் பொருந்திய குரங்குச் சைனியங்கள், பரவ - துதிக்கும்படி, வந்த சுக்ரீவ அரசுடன் - தன்னை வந்து சேர்ந்த சுக்ரீவனாகிய வானர அரசுடன், கடல் தூளி எழ போய் - கடலில் தூளி பறக்கும்படி கடலைக் கடந்து சென்று, அடல் இலங்கை சுட்டு ஆடி - எல்லாக் காவல் பலமுங் கொண்ட இராவணனின் இலங்கையைச் சுட்டுத் திருவிளையாட்டைச் செய்து, நிசிசரன் - அரக்கனாகிய இராவணனின், தசம் கிரீவம் அற - பத்துத் தலைகளும் அறும்படி, ஓர் அம்பு - ஒரே கணையை, தொட்டார்தம் மருகோனே - எவியவராகிய ராமபிரானின் மருமகனே!, வளரும் மந்தரம் சோலைமலை - ஆகாயத்தைத் தொடும்படி வளர்கின்ற மந்தர மலையையும் சோலை மலையினையும், உகந்த-விரும்பி எழுந்தருளி இருக்கும், முன் பாலை - முன்றுளொன்றில் பாலை நிலத்தில், வனசர் கொம்பினை தேடி - வேடர்கள் புத்திரியாகிய பூங்கொம்பை ஒத்த வள்ளியம்மையாரைத் தேடிக்கொண்டு, ஒரு வேடன் வடிவுகொண்டு - ஒப்பற்ற

வேடனுடைய உருவத்தைத் தாங்கி, பித்து ஆகி உருகி - காமங் கொண்டு மனம் உருகி, வெம் தழல்கானில் - வெப்பம் பொருந்திய கொதிக்கின்ற காட்டில், மறவர் குன்றினில் போன பெருமானே - மறவர்கள் வாழ்கின்ற மலைச் சாரலிடம் சென்றருளிய பெருமானே!, களவு கொண்டு - திருட்டுத்தனத்தைக் கைக்கொண்டு, கை காசின் அளவு - கையிலேயுள்ள பொருள்களின் அளவு தெரிந்து, கர்ப்பூரம் களபம் துங்கம் - பச்சைக் கர்ப்பூரம் கலந்த கலவைச் சாந்தைத் திமிர்ந் துயர்ந்த, வித்தார முலைமீது - பெரிய தனங்களின் மேலே, கலவி இன்பம் விற்பார்கள் - புணர்ச்சி இன்பத்தை விற்கின்ற விலை மகளிரின், அவயவங்களை - உறுப்புக்களை, பாடு கவி தெரிந்து கற்பார்கள் - பாடுகின்ற பாட்டுக்களையே தேடித் தெரிந்து படித்துக்கொள்ளுவார்கள், சிலர் தாம் - சிலர், உளம் நெகிழ்ந்து - மனம் உருகி, அசத்தான உரை மறந்து - பயனில்லாத வீண் சொற்களை மறந்து, சத்தான உனை உணர்ந்து - மெய்ப்பொருளாகிய முருகப்பிரானே உன்னை மெய்ஞ்ஞானத்தினல் அறிந்து, கத்தூரி மணம் நாறும் - கத்தூரியின் வாசனை வீசுகின்ற, உபயம் பங்கயம் தாளில் - இரண்டாகிய தாமரை மலரை நிகர்த்த திருத் தாள்களில், அபயம் என்று உனை பாடி - அபயம் என்று தேவரீரைக் குறித்துப் போற்றி பாடி, நெஞ்சு உருகி - உள்ளம் இளகி, சற்று ஓதில் - சிறியதாயினும் துதிப்பார்களானல், இழிவு ஆமோ - அவர்களுக்கு இகழ்ச்சி உண்டாகுமோ? எ - று.

(வி - ரை) காளையர் தரும் பொருளுக் கேற்பப் போகம் தருபவர் ஆதலின் 'களவு கொண்டு ........கலவி இன்பம் விற்பார்கள்' என்றார்.

"கண்களவு கொள்ளுஞ் சிறுநோக்கங் காமத்திற்
செம்பாக மன்று பெரிது."

என்றதும்,

"உள்ள மொருவ னுடையதா ஒண்ணுதலார்
கள்ளத்தாற் செய்யுங் கருத்தெல்லாம்—தெள்ளி
யறிந்த விடத்து மறியாராம் பாவஞ்
செறிந்த உடம்பி னவர்."

என்றதும் கருதத்தக்கன.

சாரத்தை ஒழுகவிட்டு அசத்தைப் பற்றிக்கொள்ளும் பன்னாடைபோல, சாரமாகிய இறைவர் புகழ் தோத்திரம் ஞானநூல் கல்லாது அசத்தாகிய சாரமற்ற மாதர் அவயவ வருணனையையே பாடிப் படித்து மகிழ்வார் உண்டாதலின் 'அவயவங்களைப் பாடு கவி தெரிந்து' என்றார். மாதர் இன்பம் சிற்றளவு உள்ள இன்பம் "அருந்தினைப்போதே அவர் இன்பம்" என்றார் பெரியாரும். இது ஒருவன் விரும்பத்தக்கதன்று. முத்திப் பேறு தரும் இறை தாளை வேண்டத் தக்கது என்பார், 'உள நெகிழ்ந்து..........இழிவாமோ' என்றார். இதனைலன்றோ பட்டினத்தடிகளும்,

"காதள வோடிய கலகப் பாதகக்
கண்ணியர் மருங்கிற் புண்ணுடை நெடுங்
காதலுங் கருத்துமல் லானின் இருதாட்
பங்கயஞ் சூடப் பாக்கியஞ் செய்யார்
சங்கடங் கூர்ந்த தமியேன்."

என்றார்.

சுக்கிரீவன் - 'கழுத்திற் பிறந்தவன்' என்பது பொருள். கிரீவம் - கருத்து. வனசா - வேடர்.

மாதர்மேல் ஆசைவைத்து அவர் அவயவத்தைப் புகழும் தமது புத்தியை நீக்கி நின் திருவடி பாட அருள் என்று வேண்டினாராயிற்று.

பொது

50. தத்த தனதனன தான தானதன
தத்த தனதனன தான தானதன
தத்த தனதனன தான தானதன — தனதான.

எத்தி இருகுழையை மோதி மீனமதின்
முட்டி இடறியம தூதர் போலமுகில்
எட்டி வயலர்சர வாளை வேல்முனையை — எதிரேறி

எத்தி நையவிறுமாறு காம ராஜன்மிக
வெற்றி அரசுதனை ஆள விசியடல்
எற்றி இளைஞருயிர் கோது கலவிதி — மடமாதர்

விக்கை தனிலுருகி ஆசை ஆகியவர்
கைக்குள் மருவுபொரு ளான ஆதும்வரை
மெத்தை தனிலுருகி மோக மாகிவிட — அதன்மேலே

வெட்க மிலைநடவு மேகு மேதுமினி
மற்ற வரைஅழையு மாத ரெனமுன்
விட்ட படிநிகடம் நேசஆசைகெட — அருள்வாயே

ஒத்த வரிகமுகு வாளை தாவுபுனல்
அத்தி நகரமர சான வாள்கிருபன்
ஒக்க கிளைவுமுனி லாமல் வாதுபெல — நிலைகூற

உற்ற தருமனடல் வீமன் வேல்விசயன்
வெற்றி நகுலசக தேவர் தேர்தனிலும்
ஒத்து முடுகிவிடு பாகன் வாளமரில் — அசுரேசன்

மேல் ஆரோகணித்து வரும் வீரனே!, வேல் முருக - வேல் ஆயுதத்தையுடைய முருகனே!, துட்டநிருதர் குலகால - தீயவர்களாகிய அரக்கர் கூட்டத்துக்கு எமனைப் போன்றவனே!, வானவர்கள் பத்தியுடன் அடியில் வீழ - தேவர்கள் பக்தியோடு திருவடித் தாமரைகளிலே நமஸ்கரிக்க, வாழ்வு உதவு பெருமானே!, பேரின்பப் பெருவாழ்வைத் தந்தருளும் பெருமாளே!, இருகுழையை எத்தி மோதி - இரண்டு குண்டலங்களையும் எத்தித் தாக்கி, மீனம் அதில் முட்டி இடறி - சேல் மீனின்மீது வீழ்ந்து முட்டி அதனைத் தள்ளி, யமதூதர் போல முகில் எட்டி - எம தூதர்களைப் போலச் சினம் மிகுந்து மேகத்தை நிகர்த்த குழலின் சமீபஞ் சென்று, வயவர் கரம் வாளை - வெற்றிவீரர் கைகளிலுள்ள வாளாயுதத்தையும், வேல் முனையை - வேலின் நுனியையும், எதிர் சீறி - எதிர் நின்று கோபித்து, எத்திசையிலும் - எல்லாத் திக்குகளிலும், ஒரு காமராஜன் மிகவெற்றி அரசுதனை ஆள - ஒப்பற்ற மன்மத ராஜன் வெற்றி பொருந்திய தனது அரசாட்சியைச் செலுத்துமாறு, வீசி அடல் எற்றி - வீசிச் சண்டையிலே கொன்று, இளைஞர் உயிர் கோலும் - காளையவர்களுடைய உயிரை வளைத்துப் பிடிக்கும் நீலம் விழி மடம் மாதர் - நீலோற்பல மலரை ஒத்த கண்களை யுடைய மடப்பம் பொருந்திய பெண்களின், வித்தைதனில் உருகி - மாய வித்தைகளிலே மனம் இளகி, ஆசை ஆகி - ஆசை கொண்டு, அவர் கைக்கு உள் - அவர்களுடைய கையில், மருவுபொருள் ஆன ஆகும் வரை - தம்மிடத்திருந்த பணம் அவர்கையில் சேரும்மட்டும், மெத்தைதனில் உருகிமோகம் ஆகிவிட அதன் மேல் - அமளியின் மேல் மனம் இலகி மோகம அதிகப்பட்டு இருந்து பொருள் எல்லாம் தீர்ந்த பிற்பாடு, வெட்கம் இலை நடவும் எகும்எகும் - பொருள் இல்லாதிருக்கும் பொழுது வெட்கம் இன்றி இங்கே இருக்கின்றீரே நடவுங்கள்! போங்கள்! போங்கள்!, இனி மற்றவரை அழையும் மாதரே என - இனிமேல் கையில் பொருளுள்ள மற்றவர்களை

அழையுங்கள் பெண்களே என்று சொல்லி, முன்விட்ட படிறிகள் தம் - முன்னேவீதியிலே விட்ட வஞ்சகிகளினிடத்தில் பொருந்திய நேசம் ஆசை கெட அருள்வாய் - சிநேகமும் காதலும் ஒழிய அடியேனுக்கு நினது திருவருளைச் செய்தருள்க, எ - று.

(வி - ரை) முகில் - மேக; கண்டு மேகத்தை ஒத்த கூந்தலைக் காட்டிற்று. மடமாதர் - இளம்பருவப் பெண்கள். காசுள்ளவரை அவரோடு கூடி அவர் கைப்பொருளைப் பறித்துக் கொண்டு காசற்றதும் நடுத்தெருவில் விட்டுவிடும் வஞ்சகிகள் ஆசை ஒழிய அருள் செய் என்றதை 'எத்தி........ஆசை கெட அருள்வாயே' என்றார். இதனாலன்றோ முனிவர்களும்,

"விளக்கொளியும் வேசையர் நட்பு மிரண்டும்
துளக்கற நாடின் வேறல்ல—விளக்கொளியு
நெய்யற்ற கண்ணே யறுமே யவரன்புங்
கையற்ற கண்ணே யறும்."

என்றார்.

'ஒத்தவரிசமுகு வாளை தாவு புனல்' என்றது பாக்கு மரத்தில் வாளை தாவ நீரையுடைய நாடு என்றது நீர் வளப்பங் காட்டிதற்கு. இதனை,

"ஆளை யானைக் கமைந்தன மாருத மறைந்த
பூளை யாயின வின்றுபோய்ப் போர்க்கு
நாளைவா என்றனன் நாகிளங் கமுகின்
வாளை தாவுறு கோசல நாடுடை வள்ளல்."

என்ற இராமாயணச் செய்யுளாலும் அறியலாம் 'ஒரு கணை - ஒப்பற்ற கணை' என்பாரும் உண்டு.

"திருமால் மருகா! வேசையர் ஆசை கெட அருள் செய்"
என்றார்.

———

பெரிய தனங்களுக்கும், அனம் நடைக்கும் - அன்னம்போன்ற நடைக்கும், மினின் இடைக்கும் - மின்னலை ஒத்த இடைக்கும், மலர் அடிக்கும் - தாமரை மலரை நேர்த்த பாதங்களுக்கும், இளமை நகைக்கும் - புன்னகைக்கும், உளம் அயராது - மனஞ் சோர்வு அடையாதபடி, அகத்தியனொடு உரைத்த பொருள் அளித்தருளி - அகத்திய முனிவருக்கு உபதேசித்த பிரணவப் பொருளை உபதேசித்தருளி, அரி பிரமர் அளப்பு அரிய பதம் கமலம் அருள்வாய் - திருமாலுக்கும் பிரமாவுக்கும் அளவிட முடியாத பெருமையையுடைய திருவடித் தாமரைகளை அடியேனுக்கு அருளிச் செய்வீராக, எ - று.

(வி - ரை.) 'குறிப்பரிய குழற்கு' என்பதற்கு 'குறிப்பறிய குழற்கு' எனப் பாடம் உரைப்பாரும் உண்டு, 'மதி' இங்குப் பிறைச் சந்திரனைக் குறித்தது, 'மதி நுதல்' உரு உவமத்தொகை. வில்லுக்கு என்பது 'விலுக்கு' என்றானது சந்தம்பற்றி வந்த தொகுத்தல் விகாரம். குமிழாலும் - குமிழ மலரை ஒத்த நாசியாலும். 'குமிழ்' என்றது உவமை ஆகுபெயர். அனநடை - அன்ன நடை என்றதின் தொகுத்தல் விகாரம். மினினிடை - 'தோன்றி மறையும் இடை' என்பது பொருள், இதனை,

"—எல்விற்
கருங்கொண்மூ வாய்திறந்த மின்னுப்போற் றோன்றி
மருங்கறக் கெட்டு விடும்."

என்ற நாலடியாராலும் அறிக.

அரிசினம் - 'மிகுந்த கோபம்.'

"அரிசினத்தால் ஈன்றதாய் அகற்றிடினும்"

என்றார் பெரியாரும்.

"தேவர் பயம் தீர்த்தவனே! வள்ளி மணவாளா! பெண்ணாசையில் வீழ்ந்து அடியேன் அயர்ந்து போகாதபடி உன் திருவடி மலரைத் தந்தாள்" என்று வேண்டுகின்றார். இதனாலன்றோ பட்டினத்தாரும்,

"காதென்று மூக்கென்று கண்ணென்று காட்டியென்
 கண்ணெதிரே
மாதென்று சொல்லி வருமாயை தன்னை
 மறலிவிட்ட
தூதென்றெண் ணாமற் சுகமென்று நாடுமித்
 துற்புத்தியை
ஏதென் றெடுத்துரைப் பேனிறை வாகச்சி
 ஏகம்பனே!"

என்றார்.

---

## வயலூர் ஆனைக்கா

52. தனந்த தத்தன தானன தானன
 தனந்த தத்தன தானன தானன
 தனந்த தத்தன தானன தானன தந்ததான.

நிறைந்த துப்பிதழ் தேனூறல் நேரென
மறந்த ரித்தக ணாலால நேரென
நெடுஞ்சு ருட்குழல் கார்முகி நேரென நெஞ்சின்மேலே

நெருங்கு பொற்றனம் மாமேரு நேரென
மருங்கு நிட்கள ஆகாச நேரென
நிதம்ப முக்கணர் பூணார நேரென நைந்துசீவன்

குறைந்தி தம்பட வாய்பாடி யாதர
வழிந்த ழைத்தனை மேல்விழு மாலைபூடி
குமண்டை யிட்டிடை சோராவி டாவிவ மைந்தராமே

துடைத்தி ளைப்புற மாமாய வாழ்வருள்
மடந்தை யர்க்கொரு சோமாள மாகிய
குரங்கை யொத்துழல் வேனேனு மேலைய மென்றுசேர் வேன்

மறைந்த சுக்ரிபர் போராட வேவொளி
யிருந்து நற்றய வாய்மீள வேயவன்
மனங்க ளித்திட மாமேரு நேரெனு நெஞ்சவாலி

மதஞ்செ குத்திட வீறான தோர்கணை
வளைந்த விற்சர மீதேவ வானரம்
வளைந்து சுற்றிலு மேமோது யாடவ வந்திமேவ

அறந்த ழைத்தநு மாறேடு மாகடல்
வரம்ப டைத்ததின் மேலேறி ராவண
னரண்டு லைத்தெதிர் போராடி நாரணன் மைந்தனுனா

அநங்கன் மைந்தனை வேளே! தலாபிபின்
விளங்கு செய்ப்பதி வேலாயு தாவிய
னலங்க யப்பதி வாழ்வான தேவர்கள் தம்பிரானே!

(இ - ள்.) மறைந்த சுக்ரீபர் போராட—முன் வாலிக்கு பயந்து மறைந்திருந்த சுக்ரீபன் சண்டை செய்யவும், ஒளி இருந்து நல் தய வாய் மீள - ஒளித்திருந்து சிறந்த இராமபிரான் கிருபை உண்டாகி மீளவும், அவன் மனம் களித்திட - அவனுடைய மனம் மகிழ்ச்சி அடையவும், மா மேரு நேர் எனும் நெஞ்சம் வாலி - பெரிய மகா மேரு மலையை ஒத்த நிலை கலங்காத நெஞ்சத்தைப் புடைய வாலியின், மதம் செகுத்திட - செருக்கை அழிக்க, வீறு ஆனது ஓர்

கலை - மேன்மை பொருந்திய ஒப்பற்ற கலைகளை, வளைந்த வில் சர
பித்து எவ - வளைவான வில்லினாது போக்கிலே விட, வானரம்
வளைந்து சுற்றிநின்று ஓட அடி வணங்கி மேவ - குரங்குகள் வளைந்து
சுற்றிக்கொண்டும் ஓடியும் அடியும் வணங்கிக்கொண்டிருப்ப, அறம்
தழைத்து - தருமஞ் செழித்து வர, அம்பரமேறு மா கடல் வரம்பு
அடைத்து - அம்பரமுடன் பெரிய கடலின் எல்லையை அணை
போட்டு அடைத்து, அதின்மேல் ஏறி - அதன்மேல் ஏறி அக்கரை
யைச் சேர்ந்து, இராவணன் அரண் குலைத்து, எதிர் போராடு நார
ணன் - எதிர்த்து யுத்தத்தைச் செய்த நாராயணனின், மைந்தன்
ஆன அனங்கன் மைத்துனன் வேளே - மன்மதனுக்கு மைத்துன
னான முருகவேளே! மயிலின் விளங்கு செய்ப்பதி வேலாயுதா -
மயிலின் மேல் விளங்குகின்ற வயலூரில் வாழும் வேலாயுதக் கட
வுளே!, வியன் நலம் நயம் பதி வாழ்வு ஆன தேவர்கள் தம்பி
ரானே - மிக்க நன்மை நிறைந்த திருவாவினன்குடி என்னும் திவ்விய
தலத்தின் வீற்றிருக்கின்றதும் தேவர்கட்குத் தலைவனே!, நிறைந்த
துப்பு இதழ் மடநல் - செம்மை முற்றப்பெற்ற பவளத்தை நிகர்த்த
உதட்டையுடைய மாதரல், தேன் நேர் என - தேனுக்கு ஒப்பாகுமென்
றும், மறம் தரித்த கணை - கொலையைத் தம்மிடத்தே பெற்றுள்ள
கண்கள், ஆலம் நேர் என - ஆலகால விஷத்திற்கு ஒப்பாகும் என்
றும், நெடும் கரு குழல் - நீண்ட கருமையான கூந்தல், மேகம் நேர்
என - கொண்டலை ஒக்கும் என்றும், நெஞ்சின் மேல் - மார்பின்
மேலே, நெருங்கு பொன் தனம் - ஒன்றோடொன்று நெருக்கமாக
வளர்ந்துகொண்டுள்ள பொன்னிறம் பொருந்திய தனங்கள், மா
மேரு நேர் என - பெரிய மகா மேரு மலையை ஒத்திருக்கும் என்
றும், மருங்கு இடைகளாம் ஆகாசம் நேர் என - இடை உருவமில்லாத
தாகிய ஆகாயத்தை நிகர்க்கும் என்றும், நிதம்பம் முக்கணர் பூண்
ஆரம் நேர் என - நிதம்பம் மூன்று திருக் கண்களைக் கொண்டுள்ள

சிவபெருமான் சூடியுள்ள ஆபரணமாகிய பாம்பை நிகர்க்கும் என்றும் புகழ்ந்து கூறி, சேவளை நைந்து-உயிர் வருந்தி, குறைந்து இதம்பட - ஊக்கம் குறைந்து இன்பம் உண்டாகும்படி, வாய் பாடி - வாயாற் பாடி, ஆதரவு அழிந்து - ஆசை கெட்டு, அழைத்து அணைமேல் வீழும் மாலொடு - அழைத்து மலரணைமேல் வீழும் காதலோடு, குமண்டை யிட்டு - மண்டிபோட்டு, உடை சோரா - ஆடை சோர்ந்து, விடாயில் அமைந்து - காமவிடாயிற் பொருந்தி, நாபி குடைந்து இளைப்பு உறும் மாமாயம் வாழ்வு அருள் - உந்திச் சுழி என்னும் மடுவில் திளைத்து இளைக்கின்ற பெரிய மயக்கமான வாழ்வைத் தருகின்ற, மடந்தையர்க்கு - மாதர்களுக்கு, ஒரு கோமாளம் ஆகிய குரங்கை ஒத்து - ஒரு பரிகாசத்துக்கு இடமாகிய குரங்கைப் போல, உழல்வேனோ - வருந்த மடைவேனோ? மனோலயம் என்று சேர்வேன் - மனோலயத்தை அடியேன் என்று அடைவேனோ?

(வி - ரை) நிறைந்த துப்பிதழ் - செம்பவளம் பூரணமாக அமைந்த பவளத்தை ஒத்த இதழ். 'இதழ் தேனூறல் நேர்' என்றார். இதனை,

"பாலொடு தேன்கலந் தற்றே பணிமொழியாள்
வாலெயி றூறிய நீர்."

என்ற பேராசிரியர் வாக்கானும் அறியலாம்.

மருங்கே இல்லை தெரியவில்லை என்பார். 'மருங்கு நிட்கள ஆகாச நேரென' என்றார். இதனை,

"மூலையு மந்திரமே இடையு மந்திரமே"

என்ற பெரியார் வாக்கானும் அறியலாம்.

பெண்களுக்கு உருகி ஒரு ஏமாளிக் கோமாளிக் குரங்காயக் கெட்டலைவேனோ என்பார், 'மடந்தை யர்க்கொரு கோமாளமாகிய குரங்கை யொத்துழல்வேனோ' என்றார். 'கூத்திக்கிட்டு குரங்கா யலைந்து' என்றார். 'மனதைக் குரங்குக்கு ஒப்புச் சொல்வர்.'

"பொன்போல இலங்கு மனஞ் சஞ்சலத்தால் குரங்காம்" என்றதாலும் அறிக.

அநங்கன் - தேக மில்லாதவனாகிய மன்மதன். கலாபி - தோகையை யுடைய மயில், என்பது பொருள். விளங்கு செயப் பதி - வயலூர். கயப்பதி - திருவானைக்கா. 'விளங்கு செய்ப்பதி வேலாயு தாவழு கணிந்த பொற்பெரு வேளூரின் மேவிய தம்பி ரானே' எனவும் பாட முண்டு.

"தேவர்கள் பெருமானே! பெண்கள் மாயையில் பட்டொழி யாது மனோலயத்தை அடியேனுக்குத் தந்தருள்வாயாக!" என்று வேண்டுகின்றார்.

---

## திருவருணை

53. தான தத்த தந்த தான தத்த தந்த
தான தத்த தந்த தனதான.

சோத கப்பி ணப்ப யோத ரக்கதி பந்த
தோகை பர்க்கு நெஞ்சம் அழியாதே
சூலை வெப்ப டர்க்க வாத பித்த மென்று
சூழ்பி ணிக்க ணங்கள் அணுகாதே
பாத கச்ச மன்தன் மேதி யிற்பு குந்து
பாகம் விட்டெ றிந்து பிடியாதே
பாவ லர்க்கி ரங்கி நாவ லர்க்கி சைந்த
பாடல் மிக்க செஞ்சொல் தரவேணும்;
வேத மிக்க விந்து நாத! மெய்க்க டம்ப!
வீர பத்ர! கந்த முருகோனே!

மதனைக் காய எரித்து - 'மன்மதனைச் சாம்பராக எரித்து' என்பது பொருள். பிறப்புக்குக் காரணம் காமம்; காமனை எரித்தவன் சிவன் என்றதால் பிறப்பறுக்கும் பெருமான் என்பதும், 'காலனை உதைத்த' என்றதால் இறப்பும் அறுப்பவன் என்பதும் பெறப்படும். விதியிற் றலையூடே காசினியிற் காண இரப்போன் - பிரம்ம கபாலத்தில் காசினியோர் காண ஐயம் ஏற்போன். விதி தலையைத் தன் கையில் உடையவன் என்றதனால் விதிக்கும் விதியாக இருப்பவன் என்பது பெறப்படும்.

"காலனையுங் காமனையும் காட்டிச் சிறுத் தொண்டர்தரு
பாலனையுங் கொன்ற பழிபோமோ."

என்று பிறர் கூற்றால் சிவபெருமான் காலகாலன், காமதகனன் என்பது பெறப்படும். 'சமைதற்றுடை - ஒழிவொட்டா வாழ்வோன்; சர்வ சங்ஹார காலத்தில் உலகம் எல்லாம் அழிந்துபோம்; தான் ஒருவனே நின்று அடி ஐந்தொழிலை நடத்துவன்.

"சிவபெருமான் புத்திரனே! சோலைமலைப் பெருமானே! அடியேன் மாதராசையை விட்டு உன் திருவடித் தாளில் ஆசை வைத்திட அருள் என்பதாம்.

---

## பொது

55. தனதன தானத் தனந்த தனதன தானத் தனந்த
தனதன தானத் தனந்த தனதான.

பழுதற ஓதிக் கடந்து பகைவினை தீரத் துறந்து
பலபல யோகத்திருந்து மதராசன்
பரிமள பாணத் தயர்ந்து பனிமட லூர்தற் கிசைந்து
பரிதவி யாமெத் தநொந்து மயல்கூர

அழுதழு தாசைப் படுங்க ணபிநய மாதர்க் கிரங்கி
அவர்விழி பாணத் துநெஞ்சம் அறைபோய்நின்
றழிவது யான்முற பயந்த விதிவச மோமற் றையுன்ற
னருள்வச மோஇப் பமந்த றிகிலேனே;
எழுதரு வேதத் துமன்றி முழுதினு மாய்நிற் குமெந்தை
எனவொரு ஞானக் குருந்தர் உளமேவும்
இருவுரு வாகித் துலங்கி ஒருகன தூணிற் பிறந்து
இரணியின் மார்பைப் பிளந்த தனியாண்மை
பொழுதிசை யாவிக் ரமன்றன் மருக! புராரிக் குமைந்த
புளகப டீரக் குரும்பை உடன்மேவும்
புயல்வரி வாழ்ச் சிலம்பின் வனசய மானுக் குகந்து
புனமிசை யோடிப் புகுந்த பெருமாளே!

(இ - ள்.) எழுதரு வேதத்தும் - எழுதுவதற்கு அருமையான வேதங்களாலும், அன்றி முழுதினுமாய் நிற்கும் எந்தை என - அல்லது எல்லாப் பொருள்களிலும் அப் பொருள்களே தான் என்று கூறும்படி இருப்பான் என் தந்தையாயுள்ள பரம்பொருளென்று சொல்லிய, ஒரு ஞானக் குருந்தர் - ஒப்பில்லாத ஞானத்தின் கொழுந்தை ஒத்த பிரகலாதாழ்வாருடைய, உளம் மேவும் - உள்ளத்திற் பொருந்தி வசிக்கும், இரு உருவ ஆகி துலங்கி - நரன் சிங்கம் என்னும் இரண்டு உருவங்களோடாகி விளங்கி, ஒரு கன தூணில் பிறந்து - ஒரு பருத்த தூணிலே தோன்றி, இரணியன் மார்பை பிளந்த - இரணியனின் மார்பைப் பிளக்க, தனி ஆண்மை - ஒப்பற்ற ஆண் தன்மையையுடைய, பொழுது இசையா - நாள் செய்வோனாகிய சூரியனும் நிகராகாத, விக்ரமன் தன் மருகோனே - வீரனாகிய திருமாலின் மருமகனே!, புராரிக்கு மைந்த - திரிபுரத்

லைத் தரித்த சிவபெருமானுக்குப் புத்திரனே!, புளகம் படாம் குரும்பை உடன் மேவும் - புளகிக்கும் சந்தனம் பூசப்பெற்ற தென்னங் குரும்பையை ஒத்த தனங்களோடு அமைந்த, புயல்கரி வாழ - தேவயானையார் வாழ்ந்திருக்கவும். சிலம்பின் - மலையின். வனசர மானுக்கு உகந்து - வேடர்கள் பெண்ணை விரும்பி. புனம் மிசை ஓடி புகுந்த பெருமானே - தினைப்புன நிலத்தில் விரைந்து புகுந்த பெருமானே!, பழுது அற - முக்குற்றங்களும் நீங்கும்படி. ஓதி கடந்து - கற்று அறியாமையினின்றும் நீங்கியும். பகைவினை சோர்ந்து - பகைத்தொழிலை முற்றும் விட்டும், பலபல யோகத்து இருந்து - பலவிதமாகிய முயற்சிகளிலே இருந்தும், மதராசன் பரிமளம் பாணத்து அயர்ந்து - மன்மத ராஜனின் மலர்க்கணைகளால் இளைப்படைந்தும், பனி மடல் ஊர்தற்கு இசைந்து - பனி மடலின் வியற்றிய மாவைச் செலுத்துவதற்குச் சம்மதித்தும், பரிதவியா மெத்த சோர்ந்து - பரிதவித்தும் மிகவும் வருந்தியும், மயல் கூர - ஆசையானது அதிகரிக்குமாறு, அழுது அழுது ஆசைப் படும் கண் - அழுது அழுது ஆசைப்படுகின்ற கண்களையுடைய. அபிநயம் மாதர்க்கு - அபிநயத்தையுடைய பெண்களுக்கு. இரங்கி அவர் விழி பாணத்து - மனமிரங்கி அவர்கள் கண்களாகிய கணையி னால், நெஞ்சம் அறைபோய் நின்று - மனம் கீழற்றுப் போய் நின்று, அழிவது - பிரமைபாறுனயின்றி அழிந்து போவது, யான் முன் பயந்த விதிப்பயமோ - நான் முற்பிறப்பில் செய்த விதியின் பயனோ? மற்றை உன்தன் அருள் வசமோ - அல்லது தேவரீருடைய கருணையின் செயலோ? இ பிரமம் தெரிகிலேன் - இந்த மயக்கம் இன்னவிதமெனத் தெரிதற்கு இல்லை, எ - று.

(வி - ரை) பழுது - குற்றம்; அவை மூன்று: ஐயம், திரிபு, விபரீதம், கற்போர் முக்குற்றம் அறக்கற்றல் வேண்டும். இதனா னன்றோ,

"கற்கக் கசடறக் கற்பவை"

என்றார் ஆசிரியர். பகைவினை - அறத்துக்குப் பகையாகிய வினைகள். மடலூர்தல் - ஆசையுற்ற பெண்ணைச் சித்திரத் தெழுதி, பனைமடலினாலாகிய குதிரையின்மேல் ஏறிச் செல்லுங்கால், பனைமடல் கிழித்த இடங்களில் இரத்தம் வாராது இந்திரியம் வந்திருந்தால் அவன் குறித்த பெண்ணை அவன் பெற அரசன் ஏற்பாடு செய்வான். இது அக்கால நியதி போலும். நெஞ்சம் அறைபோதல் - அறிவு நடுவில் அறுபட்டுக் கெடுதல். இருவுருவம் - மிருகவுருவமும் மனித உருவமும். இரணியன் வரம் வேண்டும்போது தனக்கு அழிவு தேவர்களாலும், இயக்கர்களாலும், மனிதர்களாலும், மிருகங்களாலும் உண்டாகப்படாது என்றதனால் அக்காலவரை தோன்றாப் புது ஒருருவம் எடுத்தார். தாய் வயிற்றிற் பிறவாது தூண் வயிற்றிற் பிறந்தார். இதனாலன்றோ,

"தூணம் பயந்த மாணமர் குழவியாய்"

என்றார் கல்லாடர்.

"குமரேசா! குற்றமறக் கற்றும், போகநிலை பெற்றும், கற்றைக் குழன்மாதர் பற்றை வைப்பது எதனாலோ? என் பாவச் செயலோ? அல்லது அதுவும் உன் அருட் செயல் தானோ" என முறையிடுகின்றார். "வேதத்தின் அரும் எல்லாப் பொருளுமாய் நிற்குஞ் சிவபெருமான் மகன். புராரி மகன். மலசம்பந்த மின்றி, மாயா சம்பந்த மின்றி, தூணிற்றோன்றி, உண்மைப் பொருளை காட்டி, அடியனாகிய பிரகலாதாழ்வானைக் காத்த நரசிங்கப் பெருமான் மருமகன். இத்தகைய அனைத்து அழகுஞ் சிறப்பும் வாய்ந்த தேவயானையார் இருப்பவும் குறமானை நாடிப் புனம் தேடிப் புகுந்தவன் போதலின் மாதர்வழி என் நெஞ்சு அறைபோயது உன் அருள் வசமோ இந்த இரகசியந் தெரியவில்லை" என்கின்றார்.

* பெரும்பற்றப்புலியூர்

56. தனந்தத் தத்தன தானன தானன
தனந்தத் தத்தன தானன தானன
தனந்தத் தத்தன தானன தானன தனதான.

விடங்கைக் கொத்தக டாவுடை யாளிடம்
மடங்கிக் கைச்சிறை யானது மேகமும்
விழுங்கப் பட்டற வேயற லோதியர் விழியாலே
விரும்பத் தக்கன போகமு மோகமும்
விளம்பத் தக்கன ஞானமு மானமும்
வெறுந்தத் தச்சல மாய்வெளி யாயுயிர் விடுநாளில்
இடங்கட் டைக்கிளை யாடி யெனுடல்
கிடந்திட் டுக்கம ராவர் கோவென
இடங்கட் டிச்சுடு காடுபு காமுன மனதாலே
இறந்திட் டுப்பெற வேகதி யாயினும்
இருந்திட் டுப்பெற வேமதி யாயினும்
இரண்டிற் றக்கதொ ருதியம் போத இசைவாயே;
கொடுங்கைப் பட்டம ராமர மேழுடன்
நடுங்கச் சுக்ரிவ னோடம ராடிய
குரங்கைச் செற்றும கோதகி தாளெழு திருநேசன்
குலங்கட் பட்டநி சாசரர் கோவென
இலங்கைக் குட்டழ லோனெழ நீடிய
குமண்டைக் குத்திர ராவண னார்முடி அடியோடே

* சிதம்பரம்.

பிடுங்கத் தொட்டசா ரதிப னாதி
ப்ரியங்கொட் டக்கநன் மாமரு காவியல்
ப்ரபஞ்சத் துக்கொரு பாவல னாமென விருதூதும்
ப்ரசண்டச் சொற்சிவ வேதசி காமணி!
ப்ரபந்தத் துக்கொரு நாத! சதாசிவ!
பெரும்பற் றப்புலி யூர்தனில் மேவிய பெருமாளே!

(இ - ள்.) கொடுங்கை பட்ட மராமரம் ஏழுடன் - நீண்டகிளைகளைக் கொண்ட மராமரங்கள் ஏழினுடைய உடல், நடுங்க - நடுக்கம் அடையும்படி, சுக்ரீவனோடு அமர் ஆடிய - சுக்ரீவனோடு யுத்தத்தைச் செய்த, குரங்கை செற்று - வாலியை மடித்து, மகோததி தூள் எழ - சமுத்திரத்தில் தூசி கிளம்பும்படி, நிருதேசன் - இராவணன், குலந்தன் பட்ட - குலத்திலே சேர்ந்த, நிசாசரர் - ராட்சதர்கள், கோ என - கோவென்ற சத்தத்தோடு அலறி அழ, இலங்கைக்குள் - இலங்கையிலே, தழல்மேலான் எழ - அக்கினி பகவான் தோன்றவும், நீடிய - பலத்தால் சிறந்த, குமண்டை - செல்வச் செருக்கைக் கொண்ட, குத்திர ராவணனார் - வஞ்சகம் பொருந்திய இராவணனது, முடி அடியோடு பிடுங்க - முடிகள் பத்தையும் அடியோடு பறிக்கும்படிக்கு, தொட்ட சர அதிபனார் - விட்ட கணைக்குத் தலைவராகிய ஸ்ரீராமபிரான், அதி பிரியம் கொள் தக்க - மிகுந்த ஆசை கொள்ளுதற்குத் தகுந்த, நல் மருகா - நல்ல மருமகனே!, இயல் பிரபஞ்சத்துக்கு - அழகிய இந்தப் புவிக்கு, ஒரு பாவலனார் என - ஒப்பில்லாத பாவலர் என்று, விருது ஊதும் - வெற்றிச் சின்னத்தை முழக்குகின்ற, பிரசண்ட சொல் சிவ வேத சிகாமணி - பெருமையையுடைய சொல்லைக் கொண்ட சிவ வேத சிகாமணியே!, பிரபந்தத்துக்கு ஒரு நாத - தமிழ் நூலுக்கு ஒரு தலைவனே!, சதா சிவ - என்றும் மங்களகரமானவனே!, பெரும்

பற்றப்புலியூர்தனில் மேவிய பெருமாளே - சிதம்பரத்தில் எழுந்தருளியிருக்கும் பெருமானே!, விடும்மைக்கு ஒத்த கடா உடையானிடம் - செலுத்துஞ் சாமர்த்தியத்திற்குத் தக்க எருமைக்கடாவை வாகனமாக உடைய எமனிடம், மடங்கி - அடங்கி, கைச்சிறையான அநேகரும் - அவன் கைச் சிறையில் அகப்பட்ட எல்லாரும், விழுங்கப்பட்டு அற - விழுங்கப்பட்டு, நீங்க அறல் ஓதியர்விழியால் - கருமணலை நிகர்த்த பெண்களின் கண்களால், விரும்பத்தக்கன போகமும் மோகமும் - விரும்பத்தக்கனவாகிய சுகமும் ஆசையும், விளம்பத்தக்கன மானமும் ஞானமும் - சொல்லத்தக்கனவாகிய அறிவும் ஞானமும், வெறும் சுத்த ஜலம் ஆய் - வெறும் பொய்யாகி, உயிர் வெளி ஆய் விடும் நாளில் - உடலை விட்டு உயிர் வெளிப்படு நாளில், இடுகட்டைக்கு இரையாய் - சுடுகாட்டில் அடுக்குகின்ற கட்டைக்கு இரையாய், அடியேன் உடல் கிடந்திட்டு - தொண்டனேனின் உடம்பு தரையிற் கிடந்து, தமர் ஆனவர் கோ என - சுற்றத்தார் எல்லோரும் (சுற்றியிருந்து) கோவென்று கதறி அழ, இடம் கட்டி - இடத்தைக் கட்டிக் கொண்டு, சுடுகாடு புகாமுன் - சுடுகாடு சேர்வதற்கு முன்பு, மனதாலே இறந்திட்டு - மனத்தாலே செத்து, கதியாயினும்பெற - கதி பெறுவதற்காவது இருந்திட்டு மதிபெற ஆயினும் - மனத்தோடு இருந்து நல்ல கதியைப் பெற ஆயினும், இரண்டில் - இவ்விரண்டு தன்மைகளில், தக்கது ஓர் ஊதியம் - தகுதியாகிய ஒரு பயனை, நீ தர இசைவாய் - நீ எனக்குக் கொடுப்பதற்கு மனம் பொருந்துவாயாக! எ - று.

(வி - ரை.) சிறை - இடம்; ஏழன் பொருளில் இயைந்தது. 'அறல்' தண்ணீரால் அறுக்கப்பட்டு வரிவரியாக அமைந்த கருமணலைக் கூந்தலுக்கு ஒப்புரைப்பர் ஆதலின் 'அறல் ஓதியர்' என்றார். தேகம் நெருப்புக்கு இரையாதல் தமிழ்நாட்டுப் பண்டை வழக்கு ஆதலினால் 'இடும் கட்டைக் கிரையாய்' என்றார். இன்றைக்கும்

"கட்டையிலே போவான்"

என்று திட்டும் வழக்குங் காண்க.

"வரிக்கோல வேல்விழி யார்அனு ராக மயக்கிற்சென்று
சரிக்கோறு வேன்எழுத் தஞ்சஞ்சொ லேன்தமியேனுடலம்
நரிக்கோ கழுகு பருந்தினுக் கோவெய்ப நாய்தனக்கோ
எரிக்கோ இரையெதுக் கோஇறை வாகச்சி ஏகம்பனே!"

"எரிஎனக் கென்னும் புழுவோ வெனக்கென்னும்
இந்தமண்ணுஞ்
சரிஎனக் கென்னும்

என்னும் பட்டினத்தடிகள் வாக்காலும் அறியலாம்.

பிரசண்டம் - 'பெருமை, வேகம்' என்பாரும் உண்டு. சிவ வேத சிகாமணி - 'மங்களகரமாகிய வேதத்துச்சியில் மணிபோல் விளங்குபவனே!' எனினும் ஆம். புலியூர் - சிதம்பரம். புலிக்கால் பெற்ற ஒருமுனிவர் (வியாக்ரமபாதர்) பூசித்துப் பேறுபெற்ற தலமாதலின் இப் பேர் வந்தது. 'இரு முனிவர் பணிந்து போற்ற' என்றதில் இவர் ஒருவர்; மற்றவர் 'பதஞ்சலி'.

"புலியூரானைப் பேசாத நாளெல்லாம் பிறவா நாளே"

என்ற தேவாரமுங் காண்க.

"நாரணன் மருகா ஆரணத் தலைவா!
புலியூர் அமர்ந்த பொற்பார் கடம்பா!
புரி அறம் பலவும் புரிந்து பின்னர்
இறந்து பெற்றிடும் எழிற்பதம் ஆயினும்
சிவன் முத்தனும் செம்பதம் ஆயினும்
நாயேற் கருள்க நயந்தெரிந் தினிதே."

என்று வேண்டுவது இந்தப் பாட்டே.

17

"விளம்பத் தக்கன ஞானமு மானமும்
விரும்பத் தக்கன போகமு மோகமும்
விடுஞ்சுத் தச்சவ மாவெளி யாயுயிர்—விடோளில்."

என்றும் பாடம்.

'ப்ரபஞ்சத்துக் குளவான சதாசிவம்'

என்றும் பாடம்-

---

### பொது

57. தனத்த தானன தானன தந்தன
தனத்த தானன தானன தந்தன
தனத்த தானன தானன தந்தன தந்ததான.

கறுத்து நீவிடு கூர்வேலி னுங்கடை
சிவத்து நீடிய வாய்மீன மொண்குழை
கடக்க ஓடிய ஆலால நஞ்சனை வஞ்சநீடு
கயற்க ணார்கனி வாயூற லுண்டணி
யழுத்து மாகமு மேகீப வங்கொடு
கலக்க மார்பக பாடீர குங்கும கொங்கைமீதே
உறுத்து மாரமு மோகாவ டங்களு
மறுத்து நேரிய கூர்வாள்ந கம்பட
உடுத்த ஆடையும் வேறாயு ழன்றுக ழன்றுவீழ
உருக்கு நாபியின் மூழ்காம ருங்கிடை
செருக்கு மோகன வாராத ரங்களை
ஒழிக்க ஓர்வகை காணேனு றுந்துணை ஒன்றுகாணேன்;

நிறத்த நூபுர பாதார விந்தமு
 முடுத்த பீலியும் வாரார்த னங்களும்
 நிறத்தி லேபடு வேலான கண்களும் வண்டுபாட!

நெறித்த ஓதியு மாயான்ம னம்பரி
 தவிக்க லாமோ கலந்திட [வாய்
 நினைக்க லாமென வேல்வேடர் கொம்புடன் நண்புகூர்

மறித்த வாரிதி கோகோவெ னும்படி
 வெறுத்த ராவணன் வாணாளை அம்பினில்
 வதைத்த மாமனு மேவார்புரங்கனல் மண்டமேரு

வளைத்த தாதையு மாறான குன்றமு
 மனைத்து லோகமும் வேதாக மங்களும்
 மதித்த சேவக! வானாளு மும்பர்கள் தம்பிரானே!

(இ - ள்) நிறத்த நூபுரம் பாதாரவிந்தமும் - பிரகாசத்தோடு கூடிய சிலம்புகளை அணிந்த திருவடிகளாகிய தாமரையும், உடுத்த பீலியும் - உடுத்தியுள்ள மயில் தோகையும், வார் ஆர் தனங்களும் - இரவிக்கையை அணிந்த தனங்களும், நிறத்தில் படு வேல் ஆன கண்களும் - ஒளி வீசுகின்ற வேலாயுதத்தை நிகர்த்த விழிகளும், வண்டு பாட நெறித்த ஓதியும் ஆய - தேன் வண்டுகள் இசை பாட வகிர்ந்த கூந்தலும் உடையவளாயுள்ள, வேடர் கொம்புடன் - வேடர் குலத்தில் வளர்ந்த வள்ளிநாயகியாரோடு, யான்மனம் பரிதவிக்கல் ஆமோ - நான் மனம் வருத்தப் படலாமோ, கலந்திட நினைக்கலாமோ - கலவி செய்ய எண்ணலாமோ, என நண்பு கூர்வாய் - எனக் கூறி நட்புச் செய்பவனே!, மறித்த வாரிதி-மடங்கிய அலைகளோடு கூடிய கடலை கோ கோ எனும்படி - கோவென் றலறும்படி, வெறுத்த ராவணன் வாழ்நாளை - வெறுப்புக்குப் பாத்திர

ஞகிய ராவணனின் வாழ் நாளை, அம்பினில் வதைத்த - கணையால் கொன்ற, ராமனும் - மாமனாகிய இராமனும், மேலார் புரம் கனல் மண்ட - பகைவர்களுடைய முப்புரங்களிலும் நெருப்புப் பற்றி மிகுந்து எரிய, மேரு வளைத்த தாதையும்-மகாமேரு மலையை வில்லாக வளைத்த தந்தையும், ஆறு ஆன குன்றமும் - ஆறு மலைகளும், அனைத்து லோகமும்-எல்லா உலகங்களும், வேத ஆகமங்களும், வேதம் ஆகமம் முதலிய எல்லா நூல்களும், மதித்த சேவக - மதிக்கும்படியான மேன்மையான வீரச் செயல்களை உடையவனே!, வான் ஆளும் உம்பர்கள் தம்பிரானே - தேவ லோகங்களை ஆள்கின்ற தேவர்களுக்கெல்லாம் தலைவனே!, கறுத்து-கரு நிறம் பொருந்தி, நீ விடு கூர் வேலினும் - நீ விடும்படியான வடித்தெடுத்த கூரிய வேலாயுதத்தைக் காட்டிலும், கடை சிவந்து - கடைப்பாகம் சிவந்து, நீடியவாய் - நீண்டு, மனம் ஒள் குழை கடக்க ஓடிய - மகரக் குழை கடக்கும்படி ஓடிய, ஆலாலம் ஈந்த அன்ன - ஆலகால விடத்தை நிகர்த்த, வஞ்சம் நீடும் கயல் கண்ணார் - வஞ்சக மிகுந்த கயல் மீனை ஒத்த விழிகளைக் கொண்ட மாதர்களினது, கனி வாய் ஊறல் உண்டு - கோவைக் கனியை ஒத்த இதழ் ஊறல் உட்கொண்டு, அணி கழுத்தும் ஆகமும் - அழகிய கழுத்தும் மார்பும், ஏகபவம் கொடு கலக்க - ஒரு தன்மையாகச் சேர, மார்பகம் பாடீரம் குங்குமம் கொங்கைமீது-மார்பின் கண்ணுள்ள சந்தனமும் குங்குமமும் பூசப்பெற்ற தனங்களின் மேல், உறத்தும் ஆரமும்-உறத்துகின்ற முத்துமாலையும், மோகா வடங்களும் - ஆசை தரத்தக்க பல்வகை மணி மாலைகளும், அறுத்து - அறத்தெறித்து, கூர் வாள் நகம்பட-கூரிய ஒளி பொருந்திய நகத்தின் குறிகள் தெரிய, உடுத்த ஆடையும் வேறு ஆ - அணிந்திருக்கும் ஆடையும் வேறாகி, உழன்று குழன்று விழ - தடுமாறி அவிழ்ந்து விழ, உருக்கும் ஆவியின் மூழ்கா - உருக்குகின்ற உக்கியில் மூழ்கி, மருங்கிடை நெருக்கும்-

பக்கங்களிலே யிருந்த, மோகன ஆர் ஆதரங்களை - மயக்குகின்ற நிறம்பிய ஆசையினை, ஒழிக்க ஓர் வகை காணேன் - ஒழிப்பதற்கு ஒரு வழியையும் அடியேன் காணேன்; உறும்துணை ஒன்று காணேன் மேலான உற்ற உதவியும் ஒன்றும் தோற்றவில்லை, எ - று.

(வி - ரை) நீ விடு கூர்வேல் - 'நீ அசுரர்களின் மேல்விடும் வேலாயுதத்தைக் காட்டிலும்' எனப் பொருளுரைப்பாரும் உண்டு. மீன ஒள் குழை - மீன் வடிவமாகச் செய்யப்பட்ட ஒளி பொருந்திய குழை; குழை - காதணி, 'மோகா வடம்' என்பதை 'ஓகா வடம்' எனப் பாடபேதங் கூறுவாரு முண்டு; ஓகம் - அதிசயிக்கத்தக்க.

"உம்பர் தம்பிரானே! முருகா! மாதர் மயக்கை ஒழிக்க ஒரு வழியுங் காணேன்; உற்ற துணை ஒருவரு மில்லை. நீயே வழிகாட்டித் துணை நின்று, முத்தியளித்தருள்" என்று வேண்டுகின்றார்.

---

போது

58. தனதத்த தனத்த தனத்தன
தனதத்த தனத்த தனத்தன
தனதத்த தனத்த தனத்தன தனதான.

புருவத்தை நெறித்து விழிக்கயல்
பயில்விட்டு வெருட்டி மதிக்கிரு
புதுவட்டை மினுக்கி அளிக்குலம் இசைபாடும்

புயல்சற்று விரித்து நிரைத்தொளி
வளை இட்ட கரத்தை அசைத்தகில்
புனைமெத்தை படுத்த பளிக்கறை தனிமேலறிச

சரசத்தை விளைத்து முலைக்கிரி
புளகிக்க அணைத்து நகக்குறி
தனைவைத்து முகத்தை முகத்துடன் உறமேவித்

துணிவித்தி ரதத்த தரத்துமிழ்
அழுத்தத்தை அளித்து உருக்கிகள்
கருபித்தை அகற்றி உனைதொழ முயல்வேனோ?

பாதத்தை அடக்கி நடிப்பவர்
த்ரிபுரத்தை எரிக்க நகைப்பவர்
பரவைக்குள் விடத்தை மிடற்றிடு பவர்தேர்கப்

பரையுற்ற கரத்தர் மிகப்பகி
ரதியுற்ற சிரத்தர் சிறத்துயர்
பரவத்தர் பொருப்பி லிருப்பவர் உமையாளர்

சுரர்சுத்தர் மனத்து றைவித்தகர்
பணிபத்தர் பவத்தை அறுப்பவர்
சுடலைப்பொ டியைப்ப ரிசிப்பவர் விடையேறும்

துணைபொற்ப தத்த ரெதிர்த்திடு
மதனைக்க டிமுத்தர் கருத்தமர்
தொலைவற்ற க்ருபைக்கு ருதிக்கருள் பெருமாளே!

(இ - ள்.) பாதத்தை அடக்கி நடிப்பவர் - பாத சாத்திரத்தைத் தன் திருவடியில் அடக்கித் திருநடனஞ் செய்பவரும், திரிபுரத்தை எரிக்க நகைப்பவர் - திரிபுரங்களையும் எரித்தற்காகச் சிரிப்பவரும், பரவைக்குள் விடத்தை - ஆழியிற் பிறந்த ஆலகால விடத்தை, மிடற்று இடுபவர் - கண்டத்தில் அணிபவரும், தேர் கப்பரை உற்ற கரத்தர் - பிட்சையைப் பெறுகின்ற பிரமன் தலையோடாகிய கப்பரையைக் கொண்ட கையை உடையவரும், மிக பகிரதி உற்ற சிரத்தர் - மேலான கங்காநதி மேவி இருக்கப்பெற்ற தலையை உடையவரும், சிறத்து உயர் பரவத்தர் - ஒளியாற் சிறந்த பரம்பொருளாய் இருப்பவரும், பொருப்பில் இருப்பவர் - கைலாச கிரி

யில் வீற்றிருப்பவரும், உமை ஆளர் - உமாதேவியாரைத் தமது பாகத்திலே உடையவரும், சுரர் சுத்தர் மனத்து - தேவர்கள் பரிசுத்த முடையவர்கள் ஆகிய இவர்களின் மனத்தில், உறை வித்தகர்- வசிக்கின்ற ஞானியரும், பணி பத்தர் - வணங்குகின்ற அடியார்களினதும், பவத்தை அறுப்பவர் - பாவத்தை நீக்குகின்றவரும், சுடலை பொடியை பரிசிப்பவர் - சுடலைச் சாம்பலைப் பூசிக்கொள்பவரும், விடை ஏறும் துணை ஒத்த பதத்தர் - இடபத்தின்மேல் ஏறும் ஆன்மாக்களுக்குத் துணையானதும் பிறவிக் கடலைத் தாண்டி முத்திக் கரையை ஏறுதற்கு ஒத்தது மாகிய திருத்தாள்களை யுடையவரும், எதிர்த்திடு மதனை சுட முத்தர்-எதிர்த்து நின்ற மதனைத் தண்டித்த முத்தராகிய சிவபெருமான், கருத்து அமர் - திரு உள்ளத்தில் பொருந்திய, தொலைவு அற்ற கிருபைக்குள் - அழிவில்லாத கருணையில், உதித்து அருள் பெருமானே - திரு அவதாரஞ் செய்தருளிய பெருமானே!, புருவத்தை நெறித்து - புருவத்தை நெறித்தும், விழி கயல் பயிலிட்டு - கண்களாகிய கயல் மீன்களைப் பழக்கி விட்டு, வெருட்டி - பயப்படும்படிச் செய்து, மகித்து இரு புதுவட்டை பிதுக்கி - கருதி இரண்டாகிய புதினமான சூதாடு கருவிகளை நிகர்த்த தனங்களை பிதுக்கி, அளி குலம் இசை பாடும் - வண்டின் கூட்டங்கள் ரீங்காரஞ் செய்யும், புயல் சற்று விரித்து - மேகத்தை ஒத்துள்ள கூந்தலைச் சிறிது விரியச் செய்து, நிரைத்து ஒளி வளை இட்ட கரத்தை அசைத்து - வரிசையாகிய பிரகாசத்தோடு கூடிய வளையல்களை அணிந்த கைகளை அசைத்து, அகில் புனை மெத்தை படுத்த - அகிற்புகை மணம் ஊட்டப் பெற்ற அமளி அமைத்துள்ள, பளிக்கு அறைதனில் ஏறி - பளிங்குக் கற்களால் அமைத்த பள்ளி அறைக்குட் சென்று, சரசத்தை விளைத்து - விளையாடல்களை விளைவித்து, முலைகிரி புளகிக்க அணைத்து - ஸ்தனங்களாகிய மலைகள் மயிர்க்குச் செறியுமாறு

அணைத்து, நகம் குறிதனை வைத்து-நகக்குறிகளை இட்டு, முகத்தை முகத்துடன் உற மேவி - முகத்தை முகத்தோடு பொருந்தும்படி தழுவி, தணிவித்து - காம வெப்பத்தைத் தணிவித்து; இரதத்து அதரத்து உமிழ் அமிழ்தத்தை - இனிமை பொருந்திய இதழ் உமிழ்கின்ற அமுதம் ஒத்த ஊறலை, அளித்து உருக்கிகள் - கொடுத்து மனத்தை உருகச் செய்கின்ற பெண்கள், தரு பித்தை - அளிக்கும் மயக்கத்தை, அகற்றி - நீக்கி, உனை தொழ முயல்வேனோ - உன்னை வணங்குதற்கு முயற்சி செய்வேனோ, எ - று.

(வி - ரை.) வட்டு - சூதாடு கருவி. பளிக்கறை - 'பளிங்கில் போல் வெண்மையாக அலங்கரிக்கப்பட்ட' எனினும் ஆம் அளிக்குலம் இசை பாடும் புயல் - கூந்தல். திரிபுரத்தை எரிக்க நகைப்பவர் - 'திரிபுரத்தை எரித்தற் பொருட்டு நகைத்தவர்' என்பது பொருளாம். தேவர்கள் வேண்டுகோளால் திரிபுரத்தாரை எதிர்க்கச் சென்றார். தேவர்கள் ஒவ்வொருவரும் தத்தம்முள் நம் உதவியில்லா விட்டால் இவன் திரிபுரத்தை வெல்ல முடியாதென நினைத்தனர். இதனை ஓதாதுணரும் உரவோனாகிய இறைவன் அறிந்து, 'திரிபுரமே உனை எதிர்க்க அகந்தை இன்னும் விடா இத்தேவர்கள் உதவி எனக்கு வேண்டற்பாலதோ'' என எள்ளனச் சிரிப்பாகச் சிறுநகை புரிந்தார். அதினின்றும் ஒரு பொறி சென்று திரிபுரம் எரிபுரமாகி நீறாகி வேறாகி விழச் செய்தது. இதனைக் கண்டு தேவர் திடுக்கிட்டுத் தம் அறியாமைக்காக மிகவும் வருந்தினர்.

இனி, "திரிபுரம் இந்தக் கதை குறித்ததல்ல என்பர்." அதனை,

"அப்பணி செஞ்சடை ஆதி புராதனன்
முப்புர மெரிசெய்தான் என்பர்கள் மூடர்கள்
முப்புர மாவது மும்மல காரியம்
அப்புர மெய்தமை யாரறி வாரே?"

என்ற திருமந்திரத்தாலும் அறியலாம்.

"சிவபெருமான் சித்தத்தே என்றும் நின்றிலங்கும் முருகனே! பெண்கள் மயக்கத்தை அகற்றி உன்னைத் தொழ அருள் செய்" என்று வேண்டுகின்றார்.

---

## திருப்பாகை

59. தன்ன தனதன தனன தனதன
தான தானன தனதான.

குவளை பொருதிரு குழையை முடுகிய
கோல வேல்விழி மடவார்தம்
கொடிச மிருகமத புளக தனகிரி
கூடி நாடொறு மயலாகித்
துவள உருகிய சரச விதமது
சோர வாரிதி அலையூடே
சுழலு மெனதுயிர் மவுன பரமசு
கோம கோதகி படியாதோ;
கவள கரதல கரட விகடக
போல பூதர முகமான
கடவுள் கணபதி பிறகு வருமொரு
கார ணாகதிர் வடிவேலா!
பவள மாரகத கனக வயிரக
பாட கோபுர அரிதேரின்
பரியு மிடறிய புரிசை தழுவிய
பாகை மேவிய பெருமாளே!

(இ - ள்.) கவளம் கரதலம் - கவளத்தை யுடைய தும்பிக்கையையும், கரடம் விகடம் கபோலம் பூதரம் முகம் ஆன - மதம் பொழியும் அழகு பொருந்திய கன்னத்தையும் மலைபோன்ற முகத்தையு முடைய, கடவுள் கணபதி பிறகு வரும் - கடவுளாகிய கணபதிக்குப் பின்னாலே தோன்றிவந்த (அவர் தம்பியாகிய) ஒரு காரணா - ஒப்பற்ற காரணப்பொருளே!, கதிர் வடி வேலா - ஒளி வீசுகின்ற வடித் தெடுக்கப்பெற்ற வேலாயுதத்தை யுடையவனே!, பவளம் மரகதம் கனகம் வயிரம் கபாடம் கோபுரம் - பவளமும் பச்சையும் பொன்னும் வயிரமும் முதலியவற்றால் (அழகு பெறவும் உறுதியாகவுஞ் செய்யப்பெற்ற) கதவுகள் பொருந்திய கோபுரங்களை யுடைய, அரி தேரின் பரியும் - சூரியனுடைய தேரிற் பூட்டிய குதிரையும், இடறிய புரிசை தழுவிய - உயர் மிகுதியினால் தடைபட்டுச் செல்லும் மதில்கள் பொருந்திய, பாகை மேவிய பெருமாளே - திருப்பாகை என்னும் திருப்பதியில் எழுந்தருளியிருக்கும் பெருமானே!, குவளை பொருது - கருங்குவளை மலர்களோடு போர் செய்து, இரு குழையை முடுகிய - (காதணியாகிய) இரண்டு குழைகளை விசையோடு தாக்கிய, கோலம் வேல் விழி மடவார்தம் - அழகிய வேலைப்போன்ற கண்களையுடைய பெண்களின், கொடிய மிருகமதம் புளகம் தனம் கிரி - (காளையர் மனத்தைக் கவரும்) கொடியதான கஸ்தூரி யணியப்பெற்ற புளகத்தைக் கொள்ளும், தனமாகிய மலைகளை, கூடி நாள்தொறும் மயல் ஆகி - அணைந்து நாளுளும் மிகக் காதல் பெருகி, துவள உருகிய சரசவிதம் - துவளும்படி மனம் இளகிய லீலை வகைகள், மது சோர - இன்பமாகிய தேன் பெருக, வாரிதி அலை ஊடு - போக சமுத்திரத்தின் அலை மத்தியில், சுழலும் எனது உயிர் - சுழன்று தவிக்கும் எனது உயிர், மவுனம் பரமசுகம் மகோததி படியாதோ - (அவ்வாறு அந்த அல்லற் கடலில் சுழல்கின்ற எனது உயிர்) மவுனமாகிய மேலான பேரின்ப மயமான பெருங் கடலில் படிந்திடாதோ? எ - று.

(வி - ரை.) குவளை - நீலோற்பலம். அங்கும் இங்கும் அலைவதால் திரைக்கு 'அலை' என்று பெயர் உண்டாயிற்று. இதனை,

"போவாய் வருவாய் புரண்டு விழுந்திரங்கி
நாவாய் குழற நடுங்குறுவாய்—தீவாய்
அரவகற்று மென்போல ஆர்கலியே மாதை
இரவகற்றி வந்தாய்கொ லின்று."

என்று நளன் கடலை நோக்கிக் கூறியதாகக் கூறிய தற்குறிப்பேற்ற அணியாலும் அறியக் கிடக்கும். ஒரு காரணா - 'ஒப்பற்ற காரணப் பொருளே!' என்பது பொருள். 'பரியும்' என்றதில் உள்ள உம்மை உயர்வு சிறப்பும்மை.

"காரண னான கந்தக் கடவுளே!
மோக ஆழியில் முழுகி மாளாமல்
யோக வாழியின் உயரிய மவுன
ஏக நிலையின் இன்பந் துய்க்கப்
பேரருள் புரிக பெரிதடி யேற்கே."

என வேண்டுகின்றனர்.

---

## சிதம்பரம்

60. தனனந் தனத்த தந்த தனனந் தனத்த தந்த
தனனந் தனத்த தந்த தனதான.

மதவெங் கரிக்கி ரண்டு வலுகொம் பெனத்தி ரண்டு
வளருந் தனத்த ணிந்த மணியாரம்
வளைசெங் கையிற்சி றந்த வொளிகண் டுநித்தி லந்த
வரருந் திகைத்தி ரங்க வருமானார்
விதவிங் கிதப்பி யங்கள் நகைகொஞ் சுதற்கு ணங்கள்
மிகைகண் டுறக்க லங்கி மருளாதே

விடுசங் கையற் றுணர்ந்து வலம்வந் தினைப்பு கழ்ந்து
    மிகவிஞ் சுபொற்ப தங்கள் தருவாயே;
நதியுந் திருக்க ரந்தை மதியுஞ் சடைக்க ணிந்த
    நடநம் பருற்றி ருந்த கயிலாய
நகமங் கையிற்பி டுங்கு மசுரன் சிரத்தொ டங்கம்
    நவதுங்க ரத்ந முந்து திரடோளுஞ்
சிதையும் படிக்கொ ரம்பு தனைமுன் தொடுத்த கொண்டல்
    திறல்செங் கணச்சு தன்றன் மருகோனே!
தினமுங் கருத்து ணர்ந்து சுரர்வந் துறப் பணிந்த
    திருவம் பலத் தமர்ந்த பெருமானே!

(இ - ள்.) நதியும் திரு கரந்தை மதியும் - கங்கா நதியையும் அழகிய கரந்தை மலரையும் சந்திரனையும், சடைக்கு அணிந்த - சடாபாரத்திலே சூடிய, நடம் நம்பர் - பஞ்சகிருத்திய நடனம் புரியும் சிவபெருமான், உற்று இருந்த கயிலாயம் நகம் - அமைந்து வீற்றிருந்த திருக்கைலாயம் என்னும் திருமலையை, அம் கையில் பிடுங்கும் அசுரன் - அழகிய தன் கைகளால் பிடுங்கிய அரக்கனாகிய இராவணன், சிரத்தொடு அங்கம் - தலைகளோடு உடம்பும், நவ துங்கம் ரத்நம் முந்து திரள் தோளும் - ஒன்பது வகை உயர்ந்த ரத்னங்களால் குயிற்றிச் செய்யப்பெற்ற அணிகளை அணிந்த திரண்ட முதன்மையாகிய தோள்களும், சிதையும்படிக்கு - அற்றுப் போம்படிக்கு, ஓர் அம்புதனை - ஓர் கணையை, முன் தொடுத்த கொண்டல் - முன்னொரு காலத்தில் செலுத்திய மேகநிறத்தோடுங் கூடிய, திறல் செங்கண் அச்சுதன்தன் - வல்லமையையுடைய செவந்த கண்ணோடு கூடிய திருமாலினுடைய, மருகோனே - மருமகனே!, தினமும் கருத்து உணர்ந்து - நாள்தோறும் திரு உள்ளத்தைத் தெரிந்துகொண்டு, சுரர் வந்து - தேவர்கள் வந்து, உற

பணிந்த - தங்கள் முடிகள் அடியிற் படும்படி பணிந்த, திரு அம்பலத்து - அழகிய பொன்னம்பலத்திலே, அமர்ந்த பெருமானே - எழுந்தருளியிருக்கும் குருசப்பெருமானே!. மதம் வெம் கரிக்கு - மதத்தையுடைய கொடிய யானைக்கு, இரண்டு வலு கொம்பு என - இரண்டாகிய வலிய தந்தங்களைப் போன்றதென்று சொல்லுமாறு, திரண்டு வளரும் தனத்து அணிந்த - திரண்டு வளருகின்ற தனங்களிலே அணிந்திருக்கின்ற, மணி ஆரம் - மணிமாலையிலும், செம் கையில் சிறந்த - சிவந்த கைகளிலே மிக்கு விளங்கும், வளை ஒளி கண்டு - வளையல்களிலேயும் உள்ள பிரகாசங்களைக் கண்டு, நிலத்து இலங்குவரரும் - உலகப்பற்றை நீக்கித் தவ ஒழுக்கத்தால் விளங்கும் முனி சிரேட்டர்களும், திகைத்து இரங்கவரும் மாதர் - பிரமித்து மனமயங்கும்படியான பெண்களினுடைய, வித இங்கிதம் பிரியங்கள் - விதம் விதமான ஆசையை யுண்டாக்கும் செயல்களையும், நகை கொஞ்சுதல் குணங்கள் - புன் சிரிப்பையும் கொஞ்சுதலையும் பிற குணங்களையும், மிகை கண்டு - மிகுதியாக நோக்கி, உற கலங்கி மருளாது - மெத்தவும் சித்தம் கலக்கமுற்று மயங்காது, சங்கை விடு அற்று உணர்ந்து - சந்தேகத்தை விட்டுப் பொருள்களிலுள்ள பற்றுக்களை விட்டு உண்மைப்பொருளை அறிந்து, வலம் வந்து உனை புகழ்ந்து - உன்னை வலமாகச் சுற்றி வந்து புகழ்ந்து, மிக விஞ்சு பொன் பதங்கள் தருவாய் - மிகவும் மேன்மையையுடைய அழகிய உனது திருவடி மலர்களை அளித் தருள்வாய்; எ - று.

(வி - ரை.) முற்றத் துறந்துவிட்ட முனிவர்களுங்கூட மயங்கும் எழிலுடையார் என்பது காட்ட 'நிலத்திலங்கு வரருந் திகைத்திரங்க வருமாதர்' என்றார். இதனை,

"முற்றத் துறந்த முனிவரர் தாமும்
வேல்விழி மயக்கால் வென்னிட் டனரே."

என்றதானும்,

"தலைப்படு சால்பினுக் குந்தள ரேன்சித்தம் பித்தனென்று
மலைத்தறி வாரில்லை யாரையுந் தேற்றவன் எத்துணையும்
கலைச்சிறு திங்கள் மிலைத்தசிற் றம்பல வன்கயிலை
மலைச்சிறு மான்விழி யாலழி வுற்று மயங்கினனே."

என்றதானும் அறியலாம்.

இராவணன் தனது புட்பக விமானத்து ஏறிச் செல்லுகையில், தனது செலவுக்குத் தடையாக விருந்த கைலையைப் பிடுங்கினு னென்றும், சிவபெருமான் தமது பெருவிரல் நகத்தால் அழுத்தினு ரென்றும், அவன் தோள் உடல் நொருங்கின வென்றும், அது பொறாது அழுதா னென்றும், அதனுலே அவனுக்கு இராவண னென்னும் பெயர் வந்ததென்றும், பின்னொரு முனி சொற்படி சாமவேதம் பாடிச் சிவபெருமானுர் திருவருள் பெற்று வாளாயுதம் பெற்றுனென்றும் புராண கதைகள் கூறும். கைலையை எடுத்ததை,

"வெள்ளெருக்க மலர்முடியான் வெற்பெடுத்த
திரள்தோளின் மேலுங் கீழும்
எள்ளிருக்க"

என்ற கம்பர் வாக்காலும்,

"ஆர்த்தாரைக் கன்றனை மால்வரைக்கீழ்
அடர்த்திட் டருள்செய்த வதுகருதாய்"

என்ற தேவாரத்தாலும்,

"காலிற் பொலிகூர் நகத்தாலும்
கையிற் பொலிகூர் நகத்தாலும்
சீலத் தரக்கன் உறங்கொண்டீர்
திசைமா முகனைச் சிரங்கொண்டீர்."

என்ற அருணைக்கலம்பகத்தாலும் அறியலாம்.

அச்சுதன் - திருமால்; 'அழிவில்லாதவன்' என்ற பொருளில் வந்தது.

சுரர் - தேவர்; 'அமிர்தம் உண்டோர்' என்ற பொருளில் வந்தது.

"தில்லை" திருச்சிதம்பரம் தரிசித்தோர்க் கெல்லாம்
முத்திதரும் தலம்

"தேசமர் தில்லையுட் டருநடம் கண்டும்"

என்றார்.

"மாதரைக் கண்டு மயங்காதே உன் பொற்பாதத்தை முருகா தந்தருள்" என்றது கருத்து.

---

61. தானனா தந்தனந் தானனா தந்தனந்
தானனா தந்தனந் தனதான.

காதலே மாகந் தருங்கோதைமார் கொங்கைசிங்
காரநா கஞ்செழுங் கனிவாய்கண்

காளகூ டங்கொடுங் காலரூ பம்பொருங்
காமபா ணஞ்சுரும் பிணம்வா டும்

ஓதிகார் செஞ்சொல்மென் பாகுதே னென்றயர்ந்
தோநமோ கந்தனன் றுரையாதே

ஊசலா டும்புனல் தாரியே சென்றுநின்
றேயுமா றுன்னையுங் கருதாதே

தாதகீ சண்பகம் பூகமார் கந்தரந்
தாரம்வா சந்திசந் தனநீடு

சாமவே தண்டவெங் கோபகோ தண்டசந்
  தானமா தெங்கள்பைம் புனமேவும்

தீதிலா வஞ்சியங் கீதபா தம்படுஞ்
  சேகரா தண்டையங் கழல்பேணித்

தேவிபா கம்பொருந் தாதிநா தன்தொழுந்
  தேசிகா வும்பர்தம் பெருமாளே!

(இ - ள்.) தாதகி சண்பகம் - ஆத்தி மரமும் சண்பக மரமும், பூகம் ஆர் கந்தம் மந்தாரம் - பாக்கு மரமும் மிகுந்த வாசனை பொருந்திய மந்தார மரமும், வாசந்தி சந்தனம் - குருக்கத்தியும் சந்தன மரமும், நீடு சாமம் வேதண்டம் - நீண்டு வளரும் இரவை ஒத்த மலையிலே வாழும், வெம் கோபம் கோதண்டம் சந்தானம் - வெவ்விய கோபத்தைக் கொண்டுள்ள வில் வேடர்களது சந்ததியிலே வந்து தோன்றிய, மாது எங்கள் பைம்புனம் மேவும் - பெண் ரத்தினமும் எங்கள் தினைப்புனத்து வீற்றிருக்கும், தீது இலா வஞ்சி - குற்றமற்ற வஞ்சிக்கொடி போன்ற வள்ளியம்மையாரின், அம் கீதம் பதம் படும் சேகரா - அழகிய இசையோடு கூடிய அமுத சொற்கள் பொருந்தும் குளிர்ச்சி பொருந்தியதும் ஆகிய சிரத்தை உடையவனே!, தண்டை அம் கழல் பேணி - தண்டைகளைத் தரித்த அழகிய திருவடிகளை விரும்பி, தேவி பாகம் பொருந்து - உமாதேவியார் இடப்பாகத்தில் உறைகின்ற, ஆதிநாதன் தொழும் தேசிகா - ஆதி மூர்த்தியாகிய சிவபெருமான் வணங்கும் குருவே!, உம்பர்தம் பெருமாளே - தேவர்களுடைய பெருமானே!, காதல் மோகம் தரும் கோதைமார் - ஆசையையும் மோகத்தையும் உண்டாக்கும் மாதர்களுடைய, கொங்கை சிங்காரம் நாகம் - தனங்கள் அலங்காரமுள்ள மலைகளுக்கு ஒப்பாகும் என்றும், வாய் செழும் கனி - வாய் செழுமையான கொவ்வைக் கனியை நிகர்க்கும் என்

றும், கண் காளகூடம் கொடும் காலரூபம் - விழிகள் ஆலகால விஷத்தையும் கொடிய கூற்றுவன் உருவத்தையும், பொரும் காம பாணம் - போர் செய்யும் மாரனின் மலர்ப் பாணத்தையும் நிகர்க்கும் என்றும், சுரும்பு இனம் வாழும் ஓதி கார் - தேன் வண்டுகளின் கூட்டம் வாழ்கின்ற கூந்தலானது மேகத்தை நிர்க்கும் என்றும், சொல் மென் பாகு தேன் - இனிமையான சொற்கள் மேன்மையான பாகையும் தேனையும் நிகர்க்கும் என்றும், அயர்ந்து - (சொல்லிச் சொல்லித்) தளர்ந்து, ஓம் நமோ கந்த என்று உரையாது - ஓம் நமோ கந்த என்று துதியாமல், ஊசல் ஆடும் புலன் - ஒரு வழியில்லாமல் அங்கும் இங்கும் அலைகின்ற புலன்கள், தாரியே சென்று நின்று - அவற்றின் வழியே சென்று நிலைபெற்று நின்று, ஓயும் ஆறு ஒன்றையும் கருதாதோ - ஓய்ந்து கிடக்கும் வழி ஒன்றையும் நினையாதோ, எ - று.

(வி - ரை) காதல் மா மோகம் - 'காதலாகிய மோகம்' எனப் பொருள் படும்; இது இருபெயரொட்டுப் பண்புத் தொகை. இக் காதல் கூடாதது எனப் பெரியார் கூறுவர்

"காதல் கவறாடல் கள்ளுண்டல் பொய்ம்மொழிதல்
ஈதல் மறுத்தல் இவைகண்டாய்—போதில்
நினையாமை வைகுந் திருநாடா! செம்மை
நினையாமை பூண்டார் நெறி."

என்ற புகழேந்தியார் வாக்கானும் அறியலாம்.

"ஓம் நமோ கந்த" என்றது கடவுள் மந்திரம். மனம் அங்கும் இங்கும் ஊசலாடலை 'ஊசலாடு புலன் தாரியே சென்று' என்றார். இதனை,

"உடலெனும் வாயிற் சிறைநடுவு புக்குப்
போகா துணங்குறும் வெள்ளரி வேழும்

ஆரணம் போற்றநின் காலுற வணங்குதும்
சான்முக மேற்ற துளைகொள்வாய்க் கறங்கும்
விசைத்தநடை போகும் சகடக் காலும்
நீட்டிவலி தள்ளிய நெடுங்கயிற் றூசலும்
அலமரு காலும் அலகைத் தேரும்
குறைதரு பிறவியி னிறைதரு கலக்கமும்”

என்றதனோடும் ஒப்பிட்டறிக.

“சிவகுருநாதா! தேவர் பெருமானே! மாதரைப் புகழ்ந்து மாதரையில் அழியாது உன் திருமந்திரம் ஓதாமல் ஐம்புலன் அடக்கும் வகை ஒன்றையும் அருளுவீர்” என்று வேண்டு கின்றனர்.

---

62\. தானதாத்த தனதன தானதாத்த தனதன
தானதாத்த தனதன தனதான.

ஆலமேற்ற விழியினர் சாலநீட்டி யழுதழு
தாரமாய்க்க முறைமுறை பறைமோதி
ஆடல்பார்க்க நிலையெழு பாடைகூட்டி விரையமை
யானமேற்றி யுறவின ரயலாகக்
காலமாச்சு வருகென வோலைகாட்டி யமபடர்
காவலாக்கி யுயிர்தனை கொடுபோமுன்
காமவாழ்க்கை பொடிபட ஞானம்வாய்த்த கழலிணை
காதலாற்க ருதுமுணர் கருணாகரா;
வேல! கீர்த்தி விதரண! சீலர்வாழ்த்து சரவண!
வியாழசேந்த்ர மருவிய முருகோனே!

வேடர்காட்டில் விளைபுன எனல்காத்த சிறுமியை
  வேடமாற்றி வழிபடு மிளையோனே!
ஞாலமேத்தி வழிபடு மாறுபேர்க்கு மகவென
  நாணல்பூத்த படுகையில் வருவோனே!
காத! போற்றி யெனமுது தாதைகேட்ப வநுபவ
  ஞானவார்த்தை யருளிய பெருமானே!

(இ - ள்) வேல - வேலாயுதத்தை உடையவனே!, கீர்த்திவித ரண - புகழ்மிகுந்த வள்ளல் தன்மையை உடையவனே!, சிலர் வாழ்த்து சரவண - பரிசுத்த முடையவர்கள் துதிக்கின்ற சரவண மடுவில் உதித்தவனே! விபாழ க்ஷேத்திரம் மருவிய முருகோனே - விபாழ க்ஷேத்திரத்தைப் பொருந்திய முருகக் கடவுளே!, வேடர் காட்டில் - வேடர்களுடைய காட்டில், புனம் விளை எனல் - புனத்தில் விளைகின்ற தினையை, காத்த சிறுமியை - பாதுகாத்து வந்த வள்ளி நாயகியாரை, வேடம் மாற்றி வழிபடும் இளையோனே - தனது திரு உருவத்தை மறைத்து வேறு உருவங் கொண்டு வணங்குகின்ற இளமைக் கோலத்தை உடையவனே!, ஞாலம் ஏத்தி வழிபடும் - உலகம் துதித்துத் தொழும், ஆறுபேர்க்கும் மகவு என - கார்த்திகை முதலிய ஆறு நட்சத்திரப் பெண்களுக்கும் குழந்தை என்று சொல்லும்படி, நாணல் பூத்த படுகையில் வருவோனே - நாணல்கள் மலர்ந்துள்ள படுக்கையில் அவதரித்தவனே!, காத போற்றி என - குருநாதனே போற்றி என்று, முது தாதை கேட்க - முதிர்ந்த பிதா உபதேசங் கேட்குமாறு, அநுபவ ஞானவார்த்தை அருளிய பெருமாளே - அநுபவம் உள்ளதாய உபதேச மொழியை அருள் செய்த பெருமானே!, ஆலம் எற்ற விழியினர் - விஷத்தை நிகர்த்த விழிகளுடைய வரும், சால நீட்டி - மிகுதியுங் குரலை உயர்த்தி, அழுது அழுது ஆகம் மயக்க - மேலும் மேலும் அழுது

உடம்பை மாய்க்க, முறை முறை பறை மோதி - முறை முறை பறையை அடித்து, ஆடல் பார்க்க - ஆட்டத்தைப் பலரும் பார்க்கும் பொருட்டு, சீலை எழு பாடை கட்டி - பூமியின் மேல் பிணம் கிடத்திக்கொண்டு போகும் பாடையைச் சேர்த்து, விரைய மயானம் ஏற்றி - சீக்கிரத்தில் சுடுகாட்டில் சேர்த்து, உறவினர் அயல் ஆக - சுற்றத்தார் பக்கத்திலே நின்று, காலம் ஆச்சு வருக என - உம்முடைய வாழ்நாட் காலம் பூர்த்தியாகி விட்டது வருவீராக என்று, ஓலை காட்டி - ஜீவிய நாள் முற்றுற்றதைத் தெரிவிக்கும் ஓலையைக் காட்டி, யமன் படர் - எமன் தன்னுடைய ஏவலாளர்களை, காவல் ஆக்கி - காவலாக வைத்து, உயிர் அது கொடுபோம் முன் - உயிரைக் கொண்டு போவதற்கு முன்னர், காமம் வாழ்க்கை பொடிபட - ஆசை மிகுந்த வாழ்க்கை அழியும் பொருட்டு, ஞானம் வாய்த்த கழல் இணை - ஞானம் பெருகிய இரண்டு திருவடிக் கமலங்களையும், காதலால் கருதும் உணர்வு தருவாய் - பெரு விருப்பத்தால் சிந்திக்கும் உணர்ச்சியை அடியேனுக்கு அளித்தருள்வாயாக, எ - று.

(வி - ரை) "நோவிக்குக் கண்ணீர் நிறையிலே" என்றபடி வேசைகள் அழுது ஆடவரை உருக்குவர் ஆதலின் 'சால அழுது நீட்டி' என்றார். பாடை - சவம் தூக்கும் பாடை; இக்காலத்து இதை 'ஆசந்தி' என்பர். சவத்தைப் படுக்க வைப்பதற்குப் 'பாடை' என்று பெயர் ஆயிற்று. எமனோலை - 'மண்டையோலை, தலையோலை' என்று உலகிற் கூறுவது வழக்கு. சுற்றத்தார் மயானத்துப் போட்டு விட்டு நீங்குவர் என்பதனை 'மயானமேற்றி உறவினர் அயலாக' என்றார். இதனை,

"விட்டுவிடப் போகுதுயிர் விட்டவுட னேயுடலைச்
சுட்டுவிடப் போகின்றார் சுற்றத்தார்"

என்றும்,

“மனையாளும் மக்களும் வாழ்வுந்தன் வாயின்மட்டே
இனமான சுற்ற மயானமட்டே”

என்ற பட்டினத்தார் வாக்குகளாலும் அறியலாம்.

யமபடர் - யமதூதர்கள். ‘வியாழகேந்த்ர மருவிய முருகோனே’ என்றது ‘வியாழன் கேந்திரராசி ஏறி நிற்கும் கோள்நிலை பற்றியது’ என்பர். ‘சிறப்பை வேடமாற்றி வழிபடும் இளையோன்’ என்று கூறியது வேங்கை மரமாகியும் கிழவனாகியும் வந்த கதையை. மகவு - குழந்தை; இது இளமைப் பெயர். கானல் பூத்த படுகை - சரவணப் பொய்கை.

“முருகா! யமதூதர் என்னைக் கொண்டுபோமுன் மாய வாழ்க்கையில் விழுந் தழியாதபடிக்கு நினது ஞானக் கழலிணை தந்தருள்” என்று வேண்டுகின்றார்.

---

## சோணாசலம்

63. தனதன தானதன தனதன தானதன
தனதன தானதன தனதான.

விடமத வேள்வாளியின் விசைபெறு மாலாகல
விழிகொடு வாள்போலவெ வுலாவியாடும்

விரகுடனாருயிர மனமுடை மாபாவிகள்
மருகமத கோலாகல முலைதோய

அடையவு மாசாபர வசமுறு கோமாளியை
அவனியு மகாசமும் வசைபேசும்

அசடனை சாரனை அவலனை ஆபாசனை
அடியவ ரோடாள்வது மொருநாளே

வடகுல கோபாலர்த மொருபதி னாயிரம்
வனிதையர் தோள்தோய்தரு மபிராமம்
மரகத நாராயணன் மருமக! சோணாசல
மகிப சதாகாலமும் இளையோனே!
உடுபதி சாயாபதி! சுரபதி! மாயாதுற
உலகுய வாரார்கலி வறிதாக
உயரிய மாநாகமு நிருதரு நீறாய்விழ
ஒருதனி வேலேவிய பெருமாளே.

(இ - ள்.) வடகுல கோபாலர் தம் - வடக்கிலே வாழ்வு கொண்டிருந்த யாதவர்களுடைய, ஒரு பதினாறு ஆயிரம் வனிதையர் தோள் - ஒப்பில்லாத பதினாறாயிரம் பெண்களுடைய தோள்களை, தோய்தரும் அபிராமம் மரகதம் நாராயணன் மருமக - அணைகின்ற அழகிய மரகதமணியை நிகர்த்த நாராயணனுக்கு மருமகனே!, சோணாசலம் மகிப - திருவண்ணாமலைக்குத் தலைவனே!, சதா காலமும் இளையவனே - எந்த நாளிலும் இளமைக்கோலம் கொண்டு இருப்பவனே!, உடுபதி சாயாபதி சுரபதி - சந்திரனும் சூரியனும் இந்திரனும், மாயாது உற - சாகாது வாழ்வைப் பெறவும், உலகு உய்ய - உலகம் வாழவும், வார் ஆர் கலி வறிது ஆக - நீட்சி பொருந்திய கடல் வற்றவும், உயரிய மாநாகமும் - உயர்ந்ததாகிய மாமரத்தின் வடிவு கொண்ட சூரபதுமனும், கிரௌஞ்சமலையும், நிருதரும் நீறு ஆய் விழ - அரக்கர்களும் சாம்பலாகிச் சாவ, ஒரு தனி வேல் ஏவிய பெருமாளே - ஒரு ஒப்பில்லாத வேலாயுதத்தைச் செலுத்திய பெருமானே!, மதவேள் விடு வாளியின் - மாரன் எயும் கணையினது, விசை பெறும் ஆலாகலம் விழி கொடு - கடுமையான கதியையுடைய ஆலகால விடத்தை நிகர்த்த விழிகளைக் கொண்டு, வா போ என உரையாடும் - வா போ என்று சொல்லும், விரகு

உடன் - தந்திரத்தோடு, நூறு ஆயிரம் மனம் உடைமா பாவிகள் - இலட்சம் விதமாகச் சிந்தையைப் பொருந்திய மிகுந்த பாவத் தொழிலைக் கொண்டுள்ள பெண்களின், மிருகமதம் கோலாகலம் மூலைதோய - சந்தனம் பூசிய புகழ்ந்துரைக்கப் பெறும் தனங்களிலே, அணைய அடையவும் ஆசா பரவசம் உறு கோமாளியை - முற்றிலும் ஆசையிலே பரவசம் கொள்ளும் பரிகாசத் தொழிலுடைய, அவனியும் ஆகாசமும் - பூமியும் தெய்வ லோகமும், வசை பேசும் - பழியைக் கூறும், அசட அநாசாரனை - பயனற்ற நல்லொழுக்க மில்லாதவனாகிய என்னை, அவலனை ஆபாசனை - வீணனை அருவருக்கத் தக்கவனாகிய என்னை, அடியவரோடு ஆள்வதும் ஒரு நாளே - அடியார்களோடு ஆட்கொள்வதாகிய ஒரு தினமும் உண்டோ, எ - று.

(வி - ரை) வரவும் போகவும் விழியாலே ஜாடை காட்டுபவர் ஆதலின் 'விழிகொடு வரபோவென' என்றார். பெண்கள் மனம் பல திறப்பட்டு பாவத்தொழில் செய்வதாதலின் 'நூறாயிர மனமுடை மாபாவிகள்' என்றார். கோமாளி - பிறர் நகைக்குமாறு அறிவு கெட்ட செயல்களைச் செய்பவன்.

தகுதியற்ற பல இழிவான குணங்களுடைய என்னை அடியார்களுடைய கூட்டத்திற் சேர்த்து ஆண்டருளும் நாள் உண்டோ' என்றிடுவார் 'அடையவும் ஆசா பரவசமுறு..................அடியவரோடாள்வது மொரு நாளே' என்றார். கோபாலர் - பசுவைப் புரப்போர்; இடையர், (முல்லைநிலமாக்கள்) ஸ்ரீகிருஷ்ணாவதாரத்தில் பன்னீராயிரம் கோபியர்களை மணந்து கொண்ட கதையை 'வடகுல கோபாலர்.........தோள் தோய்தரும் அபிராமம்' என்றார். சோணசல மகிப - திருவண்ணாமலைக்கு அரசே! சதாகாலம் இளையோய் - எப்போழ்தும் இளமைக் கோலம் உடையவனாக இருப்பவனே!

என்றும், "இளையாய்! அழகியாய்' என்று நக்கீரருங் கூறினர். 'இளையோன்' என்ற திருநாமமும் இதனுண்மை விளக்கும்.

"திருவண்ணமலை இளையானே! ; எல்லா இழிவும் உடைய என்னை அடியார்களோடும் சேர்த்தருள்புரி" என்று வேண்டுகின்றார்.

---

64. தனனத்தன தானன தனனத்தன தானன
தனனத்தன தானன தனதான.

இடருக்கிடை யாகிய கொடுமைக்கணை மேல்வரு
மிருதிச்சிறு கால்வரு மதனாலே
இயலைத்தரு கானக முயலைத்தரு மேனியி
லெரியைத்தரு மாமதி நிலவாலே
தொடரக்கொடு வாதையி லடையக்கரை மேலலை
தொலையத்தனி வீசிய கடலாலே
துணையற்றணி பூமல ரணையிற்றனி யேனுயிர்
துவளத்தகு மோதுயர் தொலையாதோ;
வடபொற்குல மேருவின முடுகிப்பொரு சூரனை
மடியச்சுட ஏவிய வடிவேலா!
மறவக்குல மாதொரு குறமெய்த்திரு மாமகள்
மகிழப்புன மேவிய மயில்வீரா!
அடரப்படர் கேதகை மடலிற்றழை சேர்வய
லருணைத்திரு வீதியில் உறைவோனே!
அவனித்திரு மாலொடு சிவனுக்கிமை யாவிழி
அமரர்க்கர சாகிய பெருமாளே!

(இ-ள்.) வட பொன் குலம் மேருவின் - வட திசைக் கண்ணே யுளதாகிய பொன் மயமான மேலாகிய மகாமேருமலையைப் போன்ற, மூடுகி பொரு சூரனை - மேற் சென்றுபோய் போர் புரியும் சூரனை, மடிய சுட எவிய வடிவேலா - மடியவும் படியும் சுடுவதற்கும் எவிய வடித்தெடுக்கப்பட்ட வேலாயுதத்தை உடையவனே!, மறவக் குலம் ஆம் ஒரு குறவர் மெய் திரு மாமகள் - மறவர் குலம் ஆகிய ஒப்பற்ற குறவர்களுடைய அறிவையுடைய அழகிய சிறந்த வள்ளியம்மையாரின், மகிழ புனம் மேவிய மயில் வீரா - மகிழும்படி தினைப்புனத்திலே சென்ற மயில் ஏறும் வீரனே!, அடர படர் கேதகை மடலில் - நெருக்கமாகப் படர்ந்துள்ள தாழையின் மடலில், தழை சேர் வயல் - இலைகள் சேர்கின்ற வயலையுடைய அருணை திரு வீதியில் உறைவோனே - திருவண்ணாமலையின் அழகிய தெருவில் தங்குபவனே!, அவனி திருமாலொடு - பூமியில் விஷ்ணுமூர்த்தியுடனும், சிவனுக்கு - இறைவனுக்கும், இமையா விழி அமரர்க்கு - கண் இமைத்தலில்லாத தேவர்களுக்கு அரசு ஆகிய பெருமாளே - அரசராக விளங்கிய பெருமானே!, இடருக்கு இடர் ஆகிய - துன்பத்துக்கு மேல் துன்பமாகிய, கொடுமை கணை - கொடிய பாணத்தோடும், மேல் வரும் இறுகி சிறு கால் - அதற்கு மேல் வந்து மோதும் துன்பத்துக்கு இறுதியைத் தரும் தென்றற் காற்றோடும், வரும் மதனல் - வெகுண்டு வருகின்ற மாரனாலும், இயலை தரும் கானகம் முயலை - அழகு பொருந்திய காட்டு முயலை, தரு மேனியில் - கொண்டிருக்கின்ற உடம்பிலே, எரியை தரும் மா மதி சிலவால் - நெருப்பைக் கக்குகின்ற சிறந்த சந்திரனுடைய கிரணங்களாலும், தொடர கொடு வாதையில் அடைய - துன்பந் தொடர்ந்து மிகவும் வேதனையை அடைய, கரைமேல் அலை தொலைய - கரையின் மீது அலை கெடுமாறு, தனி வீசிய கடலால் - தனியாக அலை எறிகின்ற சமுத்திரத்

தாலும், துணை அற்று - துணை இல்லாமல், அணி பூ மலர் அணையில் - அலங்கரித்துள்ள மலர்கள் விரிந்த அமளியில், தனியேன் உயிர் - தனியேனாகிய எனது உயிர், துவளத் தகுமோ - தளர்ச்சியுறுதல் தக்கதோ; துயர் தொலையாதோ - வேதனை நீங்காதோ, எ - று.

(வி - ரை.) துன்பத்துக்குத் துன்பத்தை உண்டாக்கும் தன்மையது மலர்க்கணை யாதலினால் 'இடருக்கிடராகிய கொடுமைக் கணை' என்றார். சிறுகால் - தென்றற் காற்று; எப்பொழுதும் இது மாகச் சிறிதளவாக வீசும் இயல்புடையது ஆதலால் அப் பெயர் வந்தது. 'முயலைத்தரு மேனியி லெரியைத்தருமாமதி நிலவாலே' என்றது சந்திரனை; இது காமிகளுக்கு வெப்பத்தை உண்டாக்குதல்; அதன் உள் இருக்கும் களங்கத்தை முயல் என்று கூறுவது மரபு. காமிகளுக்குக் கலைமதி இடர் செய்தது.

"கொள்ளை கொள்ளக் கொதித்தெழும் பாற்கடல்
பள்ள வெள்ள மெனப்பட ருந்நிலா
உள்ள முள்ளுற் றுயிரைத் தொடருமால்
வெள்ளை வண்ண விடமுண் டாங்கொலோ"

"கொடியை யல்லைநீ யாரையுங் கொல்கிலாய்
வடுவி லின்னமு தத்தொடும் வந்தனை
பிடியின் மென்னடைப் பெண்ணொடென் றுலெனைச்
சுடுதி யோகடல் தோன்றிய திங்களே."

என்னும் இராமாயணச் செய்யுட்களாலும் இக் கருத்தைச் செவ்விதின் அறியலாம்.

"அமரர்க்கு அரசாகிய பெருமானே! பெண் மாயையால் இவ்வாறு நான் அழியலாமோ, என் துயர் தீராதோ" என்று வேண்டுவதாம்.

சுவாமிமலை

65. தான தனதன தான தனதன
தான தனதன தனதான.

பாதி மதிநதி போது மணிசடை
நாத ரருளிய குமரேசா!
பாகு கனிமொழி மாது குறமகள்
பாதம் வருடிய மணவாளா!
காது மொருவிழி காக முறஅருள்
மாய னரிதிரு மருகோனே!
கால னெனையணு காம லுனதிரு
காலில் வழிபட அருள்வாயே
ஆதி யயனொடு தேவர் சுரருல
காளும் வகையுறு சிறைமீளா
ஆடு மயிலினி லேறி யமரர்கள்
சூழ வரவரும் இளையோனே.
சூத மிகவளர் சோலை மருவுசு
வாமி மலைதனில் உறைவோனே
சூர னுடலற வாரி சுவறிட
வேலை விடவல பெருமாளே.

(இ-ள்) ஆதி அயனொடு - உலகுக்கு மூலமாகிய பிர்மா உடன், தேவர் சுரர் உலகு ஆளும் வகை உறு - தேவர்களும் சுவர்க்க லோகத்தை அரசாளுமாறு அவர் தங்கி யிருந்த, சிறை மீளா - அவர்கள் சிறையை மீட்டும், ஆடும் மயிலினில் ஏறி - நடனம் செய்கின்ற மயிலின்மேல் ஏறிக்கொண்டு, அமரர்கள் சூழ வர

வரும் இளையோனே - தேவர்கள் சூழ்ந்து வர வரும் இளையவனே! சூதம் மிக வளர் சோலை - மாமரங்கள் அதிகமாக வளர்கின்ற சோலைகள், மருவு சுவாமி மலைதனில் உறைவோனே - சூழ்ந்துள்ள சுவாமி மலையில் வாழ்பவனே!, சூரன் உடல் அற - சூரபதுமனுடைய உடலானது அறும்படியாகவும், வாறி சுவறிட - ஆழி நீர் வற்றிப் போகவும், வேலை விட வல்ல பெருமாளே - வேலாயுதத்தைச் செலுத்துதற்கு வல்ல பெருமானே!, பாதி மதி நதி போதும் அணி சடை - பிறைச் சந்திரனையும் கங்கையையும் கொன்றை மலரையும் தரிக்கின்ற சடாபாரத்தை யுடைய, நாதர் அருளிய குமரேசா - சிவபெருமான் பெற்றருளிய குமாரக்கடவுளே!, பாகு கனி மொழி மாது குறமகள் - வெல்லப் பாகையும் முக்கனியையும் ஒத்த சொற்களைச் சொல்லும் வள்ளி யம்மையாரது, பாதம் வருடிய மணவாளா - திருப்பாதங்களை தடவிக் கொடுத்த மணவாளனே!; காதும் ஒருவிழி காகம் உற அருள் - கெடுக்கப்பட்ட ஒரு கண்ணைக் காகம் அடையுமாறு செய்த, மாயன் அரி திரு மருகோனே - மாயச் செயலை உடையவனாகிய மகா விஷ்ணுவுக்கு அழகிய மருமகனே!, காலன் எனை அணுகாமல் - கூற்றுவன் என்னை வந்தடையாதபடி, உனது இரு காலில் வழிபட அருள்வாயே - தேவரீருடைய இரண்டு திருவடிகளிலும் வணங்க அருள் செய்வாய். எ - று

(வி - ரை) பாதி மதி - இளம் பிறைச் சந்திரன்; போது - கொன்றைப் பூ. மணி சடை - மாணிக்க மணி போல் விளங்கும் சடை. 'கனி' என்றது வாழை, பலா, மா என்னும் முக்கனியை. காலன் - யமன்; ஜீவப் பிராணிகளின் காலத்தைக் கொள்ளுதலால் இப் பேர் வந்தது. வேல் - 'வெல்லுந் தன்மை யுடையது' என்றது பொருள்.

"சோலைமலை முருகா! காலன் என்னிடம் வந்தணுகாதபடி உன் கான் மலர் தந்தருள்க" என்று வேண்டுகின்றார்.

"கோண்டனிச் மேதிக் கொடுங்கூற்றின் பாசமொடு
தண்டெடுத்தே என்முன் சருவுமுனம்—அண்டர்தொழும்
அப்பா! முருகா! அணிவேலா! வந்தென்னைத்
தப்பாது காப்பாய் தயவு."

என்ற வெண்பாவும் இது குறித்ததே.

---

## திருத்தணிகை

66. தனதந் தனதந் தனதந் தனதந்
தனதந் தனதந் தனதான.

குயிலொன் றுமொழிக் குயினின் றலையக்
கொலையின் பமலர்க் கணையாலே
குளிருந் தவளக் கலசந் த்ரவொளிக்
கொடிகொங் கையின்முத் தனலாலே
புயல்வந் தெறியக் கடலின் றலறப்
பொருமங் கையருக் கலராலே
புயமொன் றமிகக் களர்கின் றதனிப்
புயம்வந் தணையக் கிடையாதோ;
சயிலங் குலையத் தடமுந் தகரச்
சமனின் றலையப் பொரும்வீரா!
தருமங் கைவனக் குறமங் கையர்மெய்த்
தனமொன் றமணித் திருமார்பா!
பயிலுங் ககனப் பிறைதண் பொழிலிற்
பணியுந் தணிகைப் பதிவாழ்வே!

பரமன் பணியப் பொருளன் றருளிய
பகர்செங் கழுநிப் பெருமாளே!

(இ - ள்) சயிலம் குலைய தடமும் தகர - கிரவுஞ்சமலை நிலை தடுமாறி அதன் விரிவு தடுமாறப் பெற்று உடைந்து அழியவும், சமன் நின்று அலைய பொரும் வீரா - எமனானவன் நிலையாக நின்று வேதனை செய்யும்படி போர் செய்யும் வீரனே!, அம் கை தரும் - அழகிய கரத்தைத் தரும், வனம் குற மங்கையர் - காட்டிலே வாழும் குறப்பெண்ணாகிய வள்ளி அம்மையின், மெய் தனம் ஒன்றும் மணி திரு மார்பா - பர அபர ஞானங்களாகிய தனங்கள் பொருந்தப் பெற்ற அழகு பொருந்திய திருமார்பினை உடையவனே! ககனம் பயிலும் பிறை - ஆகாயத்தில் சஞ்சரிக்கும் இளம்பிறை சந்திரன், தண் பொழிலில் பயிலும் தணிகை பதி வாழ்வே - குளிர்ச்சி பொருந்திய சோலையில் பயில்கின்ற திருத்தணிகை என்னும் திருப்பதியில் கோயில் கொண்டு எழுந்தருளி யிருப்பவனே!, பரமன் பணிய - சிவ பெருமான் வணங்கி வேண்ட, பொருள் அன்று அருளில் - பிரணவப் பொருளை முன்னாளில் கிருபையோடு, பகர் செங்கழுநி பெருமாளே - கூறியருளிய செங்கழுநீர்ப் பெருமாளே!, குயில் நின்று மொழி - குயிலை நிகர்த்த இனிமையாகிய சொல்லையுடைய தலைவி, குயில் நின்று அலைய - குயிலானது நின்றுகொண்டு தன் குரலோசையினால் துன்பஞ் செய்யவும், கொலை இன்பம் மலர்க்கணையால் - கொலையினைச் செய்யும் இன்பமான பூக்கணையாலும், குளிரும் - தண்ணென்றிருக்கும், தவளம் குலம் ஒளி சந்திரன் - வெண்மையான உயர்ந்த சந்திரனது பிரகாசத்தாலும், கொங்கையின் கொடு முத்து அனலால் - தனங்களில் அமைந்த ஒழுங்காக உள்ள முத்தாரத்தின் தீயாலும், புயல் வந்து எறிய - மேகம் வந்து வீசவும், கடல் நின்று அலற - கடலானது நிலை நின்று கதறவும், புயம் வந்து அணைய கிடையாதோ - தோளிலே வந்து சேரக் கிடைக்காதோ, எ - று.

(வி - ரை.) குயில் போலும் இசையை உடைய மொழியைச் சொல்லுந்தலைவி குயிலால் வருந்தினள், என்ற நயம் கருதத்தக்கது குயிலிசை காமத்தை மிகுவிப்பது.

இச் செய்யுள் இறைவனை நாயகனாகவும், ஆன்மாவை நாயகியாகவும் அமைத்துச் சொல்லியது. இவ்வாறு கூறல் மரபுண்டு. கொலை இன்ப மலர்க்கணையாலே - கொலை செய்யும் இன்ப மலர்க் கணைகளாலே. மன்மதன் பாணங்களால் தனித்து அதாவது, நாயகனை விட்டுத் தனித்து நிற்கும் நாயகியை, நாயகியை விட்டுத் தனித்துநிற்கும் நாயகனை உருவிலி மலர்க்கணைகளால் எய்வன். இதனை,

"நாயகன் இன்றி இங்கே நான் மெலிந் திருக்கும் வேளை
தூயகண் மலர்கள் எய் தொடர்ந்தனை மதன நாளை
சேயகன் றிட்ட செல்வர் திருவுரு வணைய வந்தால்
போயகன் றிடாயோ அட்டா புகலெனக் குன்றன் றோம்."

என்ற பாட்டாலும் அறியலாம்.

அலர் - பழிச் சொல்; காம ஒழுக்கம் பிறர்க்குப் புலனாகி இழித்துப் பேசும் பேச்சு.

"அம்பலம் மலருங் களவு."
என்ற இறையனாகப்பொருட் சூத்திரத்தா லறிக.

"செங்கழுநீர் முருகப் பெருமானே! என் ஆன்மா உன்னை நினைந்து தளர்கின்றது. நீ வந்து கூடி இன்பம் அருள்வாயாக" என்றது.

உயிர்க்குயிராய் இருப்பவன் இறைவன். ஆயினும், அதனை அறிவு அறியவே இன்பம்; அறியாதவழி இன்பமில் இதனால் அறித்த கூட்டமே ஞானக் கூட்டமே இன்பமயமானது.

பொது

67. தந்த தானன தந்த தானன
தந்த தானன — தனதான.

கண்டு போல்மொழி வண்டு சேர்குழல்
கண்கள் சேல்மதி — முகம்வேய்தோள்
கண்டு பாவனை கொண்டு தோள்களி
லொண்டு காதலி — விருகோடு
மண்டி மார்பினில் விண்ட தாமென
வந்த கூர்முலை — மடவார்தம்
வஞ்ச மாலதில் நெஞ்சு போய்மடி
கின்ற மாயம — தொழியாதோ;
கொண்ட லார்குழல் கெண்டை போல்விழி
கொண்டு கோகில — மொழிகூறுங்
கொங்கை யாள்குற மங்கை வாழ்கரு
குன்றில் மால்கொடு — செலும்வேலா!
வெண்டி மாமன மண்டு சூர்கடல்
வெம்ப மேதினி — தனில்மீள
வென்று யாவையு மன்றி வேளையும்
வென்று மேவிய — பெருமாளே!

(இ-ள்) கொண்டல் ஆர் குழல் - மேகத்தை நிகர்த்த கூந்தலையும், கெண்டைபோல் விழி கொண்டு - சேற் கெண்டை போலும் கண்களையும் கொண்டு, கோகிலம் மொழி கூறும் - குயிலின் இசையை நிகர மொழிகளைச் சொல்லும், கொங்கையாள் -

(அழகிய) தனங்களை உடைய, குறமங்கை - குறக் குலத்திலே வளர்ந்த வள்ளி அம்மையார், வாழ்தரு குன்றில் - வாழ்கின்ற மலையில், மால் கொடு செல்லும் வேலா - ஆசைகொண்டு செல்லும் வேலாயுதக் கடவுளே!, வெண்டி மா மனம் மண்டு சூர் கடல் - பெரிய மனம் பூண்ட சூரனாகிய கடல், வெம்ப - வேவ, மேதினி தனில் - உலகில், மீளா - மீண்டு, யாவையும் வென்று - எல்லாவற்றையும் வெற்றி கொண்டதன்றி, வேளையும் வென்று மேவிய பெருமானே - மாரனையும் வெற்றி பூண்டு மேவி இருக்கும் பெருமானே!, கண்டு போல் மொழி - கற்கண்டைப்போலொத்த சொல்லையும், வண்டு சேர் குழல் - தேனுண்ண வண்டுகள் வந்து சேரும் பூக்களை அணிந்த கூந்தலையும், கண்கள் சேல் - சேல் மச்சம் நிகர்த்த விழிகளையும், மதி முகம் - திங்களை ஒத்த வதனத்தையும், வேய் தோள் - மூங்கிலை நிகர்த்த தோள்களையும், கண்டு பாவனை கொண்டு - பார்த்து நினைவிற் கொண்டு, தோள்களில் ஒன்றி காதலில் - புயங்களிற் பொருந்திய காதலினால், இரு கோடு மண்டி - இரண்டு பெருந் தந்தங்கள் அடர்ந்து, மார்பினில் விண்டது ஆம் என - மார்பினிற் பொருந்தியன என்று கூறுமாறு வந்த, கூர் முலை மடவார்தம் - மேலெழுந்து தோன்றியுள்ள கூரிய தனங்களையுடைய மாதர்களின், வஞ்சகம் மால் அதில் - வஞ்சகம் பொருந்திய காம மயக்கத்தில், நெஞ்சு போய் - மனம் கெட்டு, மடிகின்ற மாயம் அது - அழிகின்ற பொய் ஆகிய ஒழுக்கம், ஒழியாதோ - அகலாதோ, எ - று.

(வி - ரை) தனங்கள் யானை தந்தத்தை ஒத்ததென்று கூறுதலும் உண்டு; ஆதலினால் 'இரு கோடு மண்டி மார்பினில் விண்டதாமென வந்த கூர்முலை,' - என்றார். இதனை,

"என்னைக் கெடுத்தால் இரக்கமுனக் குண்டாமோ
வன்னக கமலமுக வல்லியே!—துன்னுமதக்

காட்டானைக் கோட்டுமுலைக் காரிகைக்கே பேயர்க்குக்
கோட்டானைத் தானே கொடு."

என்ற காளமேகப் புலவர் வாக்காலும் அறியலாம். இனி, இரு கோடு - 'இரண்டுமலை' எனப் பொருள் கூறலுமாம்.

மேதினி - பூமி: "திருமால்: மது, கைடவர்கள் என்னும் அசுரர்களை அழித்தபோது அவர்களின் மேதையினால் பூமி நனைவுற்றதால் 'மேதினி' என்று ஆயிற்று," என்பர்.

"வேலாயுதக் கடவுளே! வஞ்ச மாதர் வழி செஞ்ச அழிவதை அகற்றி அருள் புரிவாயாக," என்று வேண்டுகின்றார்.

---

போது

68\. தனதன தத்தத் தத்தன தத்தத்
தனதன தத்தத் தத்தன தத்தத்
தனதன தத்தத் தத்தன தத்தத் தனதானா.

தலைமயிர் கொக்குக் கொக்க நரைத்துக்
கலகலெ னப்பற் கட்டது விட்டுத்
தளர்நடை பட்டுத் தத்தை யிட்டுத் தடுமாறித்

தடிகொடு தத்திக் கக்கல்பெ ருத்திட்
டசனமும் விக்கிச் சத்தியெ டுத்துச்
சளியுமி குத்துப் பித்தமு முற்றிப் பலகாலும்

திலதயி லத்திட் டொக்கவி ரிக்கத்
திரிபலை சுக்குத் திப்பிலி யிட்டுத்
தெளியவ டித்தும் பத்துடல் செத்திட் டுயிர்போமுன்

செந்தமிழ் சற்றுச் சொற்கள்ப யிற்றித்
திருவடி யைப்பரந் தித்தொழு துற்றுச்
செனனமெ டுக்கைக் குப்பய முதறிக் கருள்தாராய்

கலினைவி சித்துப் பக்கரை யிட்டுப்
புரவிசெ லுத்திக் கைக்கொடு வெற்பைக்
கடுகந டத்தித் திட்டென எட்டிப் பொருசூரன்

கனபடை கெட்டுத் தட்டற விட்டுத்
திரைகட லுக்குட் புக்கிட எற்றிக்
களிமயி லைச்சித் ரத்தில்ந டத்திப் பொருகோவே!

குலிசன்ம கட்குத் தப்பிய மற்றக்
குறவர்ம கட்குச் சித்தம்ம யக்கக்
குளிர்தினை மெத்தக் கொத்துபு னத்திற் பிரிவோனே!

பொய்யபொ ருப்பைக் குத்திமு றித்துச்
சமரம்வி ளைத்துத் தற்பர முற்றுக்
குலகிரி யிற்புக் குற்றுறை யுக்ரப் பெருமாளே!

(இ - ள்) கலினை விசித்து - சேணத்தை இருகக் கட்டி, பக்கரை இட்டு - அங்கவடியை அமைத்து, புரவி செலுத்தி - குதிரையை நடத்தி, கைக்கொடு வெற்பை - கையை யுடைய மலையைப் போன்ற யானையை, கடுக நடத்தி - விரைவுடன் செலுத்தி, திட்டென எட்டி பொரு சூரன் - திடுமென ஓட்டி யுத்தம் செய்யும் சூரன், கனம் படை கெட்டு - பெருஞ் சேனை அழிந்து, தட்டு அறவிட்டு - தடை செய்ய முடியாதவாறு கைவிட்டு; திரை கடலுக்குள் புக்கிட - அலை மோதும் கடலுக் குள்ளே புகுந்துகொள்ள, எற்றி களி மயிலை - தாக்கிச் செருக் குடன் கூடிய மயிலை, சித்திரத்தில் நடத்தி பொரு கோவே -

அழகு பெறச் செறுத்திப் போர் செய்யும் பெருமானே!, குலிசன் மகட்குத் தப்பியும் - குலிசன் மகளாகிய தெய்வகுஞ்சரியார்க்குத் தம்பியும், மற்ற அ குறவர் மகட்கு - மற்றும் அந்தக் குறவர் குலத்து வளர்ந்த வள்ளி அம்மையார்க்கு, சித்தமும் வைத்து - எண்ணங்கொண்டு, குளிர் தினை மெத்த தத்து - குளிர்ந்த தினை மிகுதியாக விளைகின்ற, புனத்தில் திரிவோனே - தினைப்புன நிலத்திலே அலைந்துகொண் டிருப்பவனே!, கொடிய பொருப்பை குத்தி முறித்து - கொடுமையாகிய கிரவுஞ்ச மலையைக் குத்தி அழித்து, சமரம் விளைத்து - போரை மூட்டி, தற்பரம் உற்று - தானே மேலானவனாகி நின்று, குலகிரியில் புக்கு உற்று - மேலான மலையிற் சென்று பொருந்தி, உறை உக்ரம் பெருமானே - வசிக்கின்ற உக்கிரத்தையுடைய பெருமானே!, தலை மயிர் கொக்கு ஒக்க நரைத்து - தலைமயிரானது கொக்கின் இறகைப்போல நரைத்தும், கலகலென பல் கட்டு அது விட்டு - கலகலெனப் பல்லின் கட்டுகளானவை விட்டு, தளர் நடை பட்டு - தளர்ந்த நடை உண்டாகியும், தத்து அடி இட்டு தடுமாறி - தத்துகின்ற அடிகளை மெல்ல வைத்துத் தடுமாறி நடந்தும், தடி கொடு தத்தி - தண்டு கொண்டு தத்தி நடந்தும், கக்கல் பெருத்திட்டு - இருமலானது மிகுந்தும், அசனமும விக்கி - உணவும் விக்கிக்கொண்டு, சத்தி எடுத்து சளியும் மிகுத்து - மேலும் மேலும் இருமிச் சளியும் அதிகப்பட்டு, பித்தமும் முற்றி - பித்தமும் பலப்பட்டு, பலகாலும் - பலதரமும், திலம் தயிலத்து இட்டு - எள்ளெண்ணெயில் இட்டு, ஒக்க எரிக்க - ஒன்றுபட்டு இணங்க எரிக்க, திரிபலை சுக்கு திப்பிலி இட்டு - கடு, நெல்லி, தான்றி, சுக்கு திப்பிலி ஆகிய இச் சரக்குகளை இட்டு, தெளியவடித்து உற்று - தெளிவாக வடித்தெடுத்து, உய்த்திட்டு - வாய்க்குள் ஊட்டி, உடல் செத்திட்டு - உடல் செத்து, உயிர் போம்முன் - உயிர் நீங்குவதற்கு முன்னாலே, திகழ் பதம் தற்று - விளக்கமுடைய தேவரீரது புக

யைக் கற்று, சொற்கள் பயிற்றி - அந்தப் புகழுக்கு உரிய சொற்களைப் பழகுமாறு செய்து, திருவடியை பற்றி-திருவடிகளைப் பற்றிக் கொண்டு, தொழுது உற்று - தொழுது அடைந்து, செனனம் அறுக்கைக்கு - பிறப்பை அழிக்க, பர முத்திக்கு அருள் தாராய் - மேலான மோக்ஷத்திற்குத் திருவருளைத் தருவாயாக, எ - று.

(வி - ரை.) தலைமயிர் கொக்குக் கொக்க நரைத்து - 'தலைமயிர் கொக்குப்போல நரைத்து' என்பது பொருள்; "பஞ்சுபோல் நரைத்து," பூளைப்பூப்போல் நரைத்து' என்பாரும் உண்டு. இதனை,

"கொக்கோவெண் பஞ்சோ குலவுபூளைப்பூவோ
தொக்கமயிர்க் குஞ்சியெனச் சொல்லுமுனம் — திக்கிருமி
ஐயுமுனம் ஆறுமுகா! நாடிநமன் மேவுமுனம்
செய்யுனது தாண்மலரிற் சேர்."

என்ற பாட்டானும் அறிக.

கல்கல - ஒலிக்குறிப்புச் சொல். தத்தடி இடல் - தத்தித் தத்தி நடத்தல். 'திகழ் தமிழ்' என்றும் பாடமுண்டு; ஆதிக்காலம் தொட்டு இன்றுவரை விளங்குந் தமிழ். கந்தக் கடவுளைத் தன் தவத்தால் தாங்குகின்றோம் என்று களிப்படையும் மயில் என்பார் 'களி மயில்' என்றார்.

தேவகுஞ்சரி இருக்கவும் அவளைவிட்டுக் குறமானைத் தேடிச் சென்றார் என்பது தோன்ற 'குலிசன் மகட்குத் தப்பிய மற்றைக் குறவர் மகட்குச் சித்தமும் வைத்து,' என்றார்.

"வேலாயுதக் கடவுளே! அடியேனின் உயிர் போமுன் உன் பாதம் பற்றி முத்தி அடையும்படி அருள் தருவாயாக" என்று வேண்டுகின்றார்.

பொது

69. தனன தன தனன தன தனன தன தனன தன
தனன தன தனன தன தன தான.

அளகநிரை குலையவிழி குவியவளை கலகலென
அமுதமொழி பதறியெழ அணியாரம்
அழகொழுகு புளகமுலை குழையஇடை துவளமிக
அமுதநிலை அதுபரவ அதிமோகம்
உளமுருக வருகலவி தருமகளிர் கொடுமையெனு
முறுகபட மதனில்மதி யழியாதே
உலகடைய மயிலின்மிசை நொடியளவில் வலம்வருமு
னுபயநறு மலரடியை அருள்வாயே;
வளையுமலை கடல்சுவற விடுபகழி வரதனிரு
மருதினொடு பொருதருளு மபிராமன்
வரியரவின் மிசைதுயிலும் வரதசய மகள்கொழுநன்
மருக! அமர் முடுகிவரு நிருதேசர்
தளமுறிய வரைதகர அசுரர்பதி தலைசிதற
தகனமெழ முடுகவிடு வடிவேலா!
தரளமணி வடமிலகு குறவர்திரு மகள்கணவ!
சகலகலை முழுதும்வல பெருமாளே!

(இ-ள்.) வளையும் அலை கடல் சுவற - பூமியை வளைந்து நிற்கும் அலைகளையுடைய கடலானது வற்ற, விடு பகழி வரதன் - ஒரு கணையைச் செலுத்தும் வரதனும், இரு மருதினொடு பொருது அருளும் - இரட்டை ஆகிய மருத மரத்தோடு போர் செய்தருளிய, அபி

ராமன் - அழகனும், வரி அரவின் மிசை துயிலும் - கோடுகளை உடைய ஆதிசேஷனாகிய பாம்பின்மேலே பள்ளி கொண்டருளும், வாகை சயமகள் கொழுநன் - வரங்களைத் தரும் வீரலட்சுமியின் கணவனாகிய திருமாலுக்கு, மருக - மருமகனே!, அமர் முடுகி வரு நிருதேசர் - சண்டைக்கு விரைந்து வருகின்ற அசுரருடைய, தளம் முறிய - சேனைகள் தோல்வி அடையவும், வரை தகர - கிரவுஞ்ச மலை சிதறவும், அசுரர் பதி தலை சிதற - அசுரர்க்கு அரசனாகிய சூரபதுமனின் தலை சிதறி விழவும், தகனம் எழ - நெருப்புஎழவும் முடுக விடுவடி வேலா-விரைவாகச் செலுத்துகின்ற வடித்தெடுக்கப்பட்ட வேலாயுதத்தை உடையவனே!, தரளம் மணி வடம் இலகு - முத்து மாலையும் இரத்தின மாலையும் பிரகாசிக்கின்ற, குறவர் திருமகள் கணவ - குறவர்குலத்து வளர்ந்த வள்ளி நாயகியாரின் கணவனே!, சகல கலை முழுதும் வல பெருமாளே - எல்லாவிதக் கலைகளிலும் முற்றிலும் வல்லவனாகிய பெருமாளே!, அளகம் நிறை குலைய - கூந்தலின் வரிசை அழியவும், விழி குவிய - கண்கள் மூடவும், வளை கலகலென - வளைகள் கலகலென சப்திக்கவும், அமுதம் மொழி பதறி எழ - அமிர்தத்தை நிகர்த்த சொற்கள் பதறித் தோன்றவும், அணி ஆரம் - அழகிய முத்துமாலை பணிக்க, அழுத ஒழுகு புளகம் முலை - அழுந்த ஒழுங்குபடியான புளகிக்கும் தனங்கள், குழைய - குழையவும், இடை துவள - இடை துவண்டு நொடிக்கவும், அழகம் நிலை அது புகபரவ - அழகு நிலையானது புகவும் பரவவும் அதி மோகம் - மிகுந்த ஆசையினால், உளம் உருக - மனமானது உருகவும், வரு கலவி தரு மகளிர் - இன்பம் வரும் புணர்ச்சி செய்கின்ற பெண்களின், கொடுமை எனும் - கொடுமை என்று கூறப்படும், கபடம் அதில் மதி அழியாது - வஞ்சகத்தில் அறிவு கெடாது, உலகு அடைய மயிலின் மிசை - உலகம் முற்றும் மயிலின் மேலே, நொடி அளவில் வலம் வரும் - நொடிப்பொழுதில் சுற்றி வருகின்ற,

உன் உபயம் நறுமலர் அடியை அருள்வாய் - தேவரீருடைய இரண்டாகிய நறுமணம் அமைந்த தாமரைமலரை ஒத்த திருவடித் தாமரைகளை அளித்தருள்வாயாக, எ - று.

(வி - ரை) அமுத நிலை அதி பரவ - 'அமுத நிலைகளில் அமுதம் பரவ' என்பது பொருள்;' "மாதர்களுக்குப் பதினைந்திடம் அமுத நிலையிடம். ஒவ்வோர் திதிகளில் ஒவ்வோர் இடங்களிலும் அமுதம் பெருகும்" என்பது மாரசாத்திரம்.

நளகூபரர்கள் ஓர் சாபத்தால் இரட்டை மருதமரமாக நின்றனர். ஸ்ரீ கிருஷ்ணவதாரத்தில் கண்ணபிரான் குழந்தையாக இருக்கும்போது தாய் உரலோடு சேர்த்துக் கட்டி யிருக்கையில் அதோடு தவழ்ந்து சென்று அம் மருத மரத்தை முறித்து அவர்கள் சாபத்தைப் போக்கினர் என்பது பாகவதக் கதை. முருகர் சகல கலா பண்டிதராதலின் 'சகலகலை முருக,' என்றார்.

"மாதர் மாயையில் மூழ்காதபடி அடியேனை, வடிவேலா! காத்தருள்!" என்று வேண்டுகின்றார்.

---

## திருவாரூர்

70. தனன தனதன தனதன தனதன
தனன தனதன தனதன தனதன
தனன தனதன தனதன தனதன தனதான.

காமு முளரியின் மலர்முக மதிகுழல்
கனமதெனுமொழி கனிகதிர் முலைநகை
கலக மிடுவிழி கடலென விடமென மனதாடே

கருதி யனநடை கொடியிடை யியல்மயில்
கமழு மகிலுட னிளகிய ம்ருகமத
களப புளகித கிரியினு மயல்கொடு திரிவேனும்

இரவு பகலற இகலற மலமற
இயலு மயலற விழியினி ரிழிவர
இதய முருகிய வொருகுள பதமுற — மடலூர்ட

எழுத அரியவள் குறமக ளிருதன
கிரியில் முழுகிய இளையவ னெனுமுரை
யினிமை பெறுவது மிருபத மடைவது — மொருநாளே?

சுரபி மகவினை யெழுபொருள் வினவிட
மனுவி னெறிமணி யசைவுற விசைமிகு
துயரில் செவியினி லடிபட வினவுமி — னதிதீது

துணிவி விதுபிழை பெரிதென வருமனு
வுருகி யாகர சிவசிவ பெறுமதொர்
சுரபி யலமர விழிபுனல் பெருகிட — நடுவாகப்

பரவி யதனது துயர்கொடு நடவிய
பழுதின் மதலையை புடவிரு பிளவொடு
படிய ரதமதை நடவிட மொழிபவ — னருளாளர்

படியி லறுமுக! சிவசுத! கணபதி
யிளைய! குமர! நிருபபதி! சரவண!
பரவை முறையிட அயில்கொடு நடவிய — பெருமாளே!

(இ - ள்) சுரபி - பசுவானது, மகவினை எழு பொருள் வினவிட - தன்னுடைய கன்றினது உயிர் பிழைக்கும் தன்மையைக் கேட்கும்படி, மனுவின் எறிமணி அசைவுற - மனுவேந்தனது அடிக்கப்படும் ஆராய்ச்சி மணி அசைகின்ற, இசை - அந்த சப்தமானது, மிகு துயரில் - மிகுந்த துன்பத்தோடு, செவியினில் அடிபட - காதினிற் கேட்க, அதி தீது வினவுமின் - (மந்திரிகளை நோக்கி) அதற்கு

ஏற்பட்டிருந்த தீங்கை இன்னது எனக் கேளுங்கள் என்று சொல்ல; (அவர் விஷயங்களை அறிந்து அரசனுக்கு அறிவிக்க அரசன் அறிந்து), துணிவில் இது பிழை பெரிது என வரும் - துணிவாகவே இந்தக் காரியம் பெருங் குற்றமானதே என்று நினைந்த, மநு உருகி - மநுராஜன் பசுவானது தன் சேங்கன்றை இழந்த துன்பத்தை எண்ணி மனது உருகி, பெறும் அது ஓர் சுரபி அலமற - இத் துன்பத்தை அடைந்த பசுவானது சுழலுற்று வருந்தியதை நோக்கி, விழி புனல் பெருகிட - விழிகளிலிருந்தும் நீர் பெருக, நடுவு ஆக - தனது நீதி அரசியல் தவறாது இருக்கவேண்டும் என்று; அரகர சிவசிவ பரவி - அரகர சிவசிவ என்று சொல்லிச் சிவபெருமானைத் துதித்து, அதனது துயர் கொடு - அந்தப் பசுவினது துயரத்தைத் தானுங் கொண்டவனாகி, நடவிய பழுதில் மதலையை - பசுங்கன்று சாம்படித் தேரை நடத்திய குற்றமற்ற தன் ஒரே பிள்ளையை, உடல் இரு பிளவோடு படிய - அவனுடைய சரீரம் இரண்டு கூறுபடும்படிக்கு படிய, ரதம் அதை நடவிட - மார்பிலே சக்கரம் பதியுமாறு தேரை நடத்துக என்று, மொழிபவன் - தன்னுடைய மந்திரிக்குக் கட்டளையிட்ட மநுவேந்தனது, அருள் ஆரூர் பதியில் அறுமுக - அருள் நிறைந்த திருவாரூரிலே எழுந்தருளியிருக்கும் ஆறுமுகம் உடையவனே!, சிவ சுத - சிவபெருமானுக்குத் திருப் புதல்வனே!, கணபதி இளைய - விநாயக பெருமானுக்குத் தம்பியே!, குமர - இளமைத் திருக்கோலம் உடையவனே!, நிருபபதி - இராஜாதி ராஜனே!, சரவண - சரவணப் பொய்கையில் தோன்றி அருளியவனே!, பரவை முறையிட அயில்கொடு நடவிய பெருமாளே - சமுத்திரம் முறையிடும்படி வேலாயுதத்தைக் கொண்டு செலுத்திய பெருமானே!, கரம் முளரியின் மலர் - கைகள் தாமரை மலரையும், முகம் மதி - முகமானது திங்களையும், குழல் கனம் - கூந்தலானது மேகத்தையும், எனும் மொழி கனி - இனிமை யுடைய

தென்று சொல்லப்படும் வார்த்தை பழத்தின் சுவையையும், கதிர் முலை நகை - ஒளி பொருந்திய பற்கள் முல்லை அரும்பையும் ஒக்குமென்று புகழ்ந்து கூறியும், கலகம் இடும் விழி கடல் என விடம் என-காம யுத்தத்தைச் செய்யும் கண்கள் கடலென்றும் விஷமென்றும் கூறியும், மனது ஊடு - மனத்துள், கருதி - நினைத்து, அனம் நடை - அன்னம்போன்ற நடையிலும், கொடி இடை - காமவல்லி போன்ற இடையிலும், மயில் இயல்-மயில்போன்ற சாயலிலும், சமழும் அகிலுடன் - வாசனை வீசும் அகிலோடு, இளகிய மிருக மதம் - இளக்கமாகிய கஸ்தூரிச் சாந்து, களபம் - கலவைச் சாந்து (முதலியவைகள் பூசிய), புளகித கிரியிலும் - புளகங் கொண்ட மலை போன்ற தனங்களில், மயல் கொடு - காம இச்சை கொண்டு, திரிவேனும் - திரிவோனுமாகிய நாயேன், இரவு பகல் அற-இரவு பகல் என்பன ஒழியவும், இகல் அற மலம் அற - பழகி வரும் அவாவின் மயக்கம் அகலவும், விழியின் நீர் இழிவு அற - அழுகை அகல, இதயம் உருகி - மனம் இளகி, ஒரு குளம் பதம் உற-ஒருவெல்லப் பாகு போலாகவும், மடல் ஊடு எழுத அரியவள் - மடலிலே வரைவதற்கு அருமையான வனப்பைப் பொருந்தியவளும், குற மகள் - குறவருக்குத் திருமகளார் ஆகிய வள்ளி அம்மையாரது, இருதன கிரியில் முழுகிய இளையவன் - இரண்டு தனங்களாகிய மலைகளில் பொருந்திய குமரக்கடவுளே!, எனும் உரை இனிமை பெறுவதும் - என்னுஞ் சொல்லினுடைய இனிமையைப் பெறுவதும், இரு பதம் அடைவதும் - இரண்டு திருவடித் தாமரைகளைச் சேர்வதும், ஒரு நாள்-ஒரு நாளில் வாய்க்குமோ? எ - று.

(வி - ரை.) இரவு பகலற - இரவும் பகலும் நீங்க; இது யோக நூலோர் கண்ட உயர்ந்த இடம்; இரவு பகலற்ற ஏகாந்த இடம். இது யோக உச்ச பூமி.

மடலூடே எழுத அரியவள் - மிகுந்த அழகை உடையவள்.

"நல்லா ரிணக்கிலை ராமநா ராயணன் நாடுமுயர்
வில்லார் சிராமலை நாதன் வரைநிகர் வீறுபுய
கல்லார் குழைவு நடுத்தோற்று மேய கனியமுது
மெல்லா மெழுதமெலங் கன்மட லேறுதற் கிங்குனக்கே."

என்ற **திரிசிராமலைக் கோவை**யாலும் அறியலாம்.

மனுவினெறி மணி அசைவுற - 'மனுநீதிச் சோழன் ஆராய்ச்சி மணி இதுவரை அசையாதது, இன்று அசைவுபட' என்பது பொருள். 'என்ன குறை நேர்ந்ததோ,' என அரசன் செவியிற் புகலும் அஞ்சினன். இதனை,

"பழிப்பறை முழக்கோ வார்க்கும்
பாவத்தி னொலியோ வேந்தன்
வழித்திரு மைந்த னாவி
கொளவரு மறலி யூர்தி
கழுத்தணி மணியி னார்ப்போ
வென்தன் கடைமுன் கேளாத்
தெழித்தெழு மோசை மன்னன்
செவிப்புலம் புக்க போது."

"ஆங்கது கேட்ட வேந்தன்
அரியணை யிழிந்து போந்து
பூங்கொடி வாயி னண்ணக்
காவல ரெதிரே போற்றி
ஈங்கிதோர் பசுவந் தெய்தி
யிறைவநின் கொற்ற வாயிற்
றூங்கிய மணியைக் கோட்டாற்
றுளக்கிய தென்று சொன்னார்."

என்னும் பெரிய புராணச் செய்யுட்களால் அறியலாம்.

ஊழால் பசுங் கன்று தேர்க்காலிற் பட்டு இறந்தாலும் அரச குமாரனுக்குத் தெரியாதபடி நேர்ந்ததால் குற்ற மற்ற குமாரனை என்றார் 'பழுதின் மதலையை' என்ற சொற்களைக் காண்க. திருவாரூர் ஆண்ட அரசன் சீர் கூறப்பெற்றது.

சிவபெருமான் மகன் விநாயகர் தம்பி என்பது தோன்ற 'சிவ சுத கணபதி இளைய,' என்றார். இதனை,

"முருகனே! செந்தில் முதல்வனே! மாயோன்
மருகனே! ஈசன் மகனே!—ஒருகைமுகன்
தம்பியே! நின்னுடைய தண்டைக்கால் எப்பொழுதும்
நம்பியே கைதொழுவேன் நான்."

என்றதிலுங் காண்க.

"ஈசன் மகனே! விநாயகன் தம்பியே! ஆரூர் அமர்ந்த வேலாயுதக் கடவுளே! பெண் மயக்கில் திரிகின்ற அடியேன் உளம் உருகி உன்னைத் துதிக்கவும், உன்னடி அடையவும் அருள்" என்றதாம்.

---

## பழநிமலை

71. தனத்தனனத் தனத்தனனத்
தனத்தனனத் தனத்தனனத்
தனத்தனனத் தனத்தனனத் தனதான.

குறித்தமணிப் பணித்துகிலைத்
திருத்தியுடுத் திருட்குழலைக்
குலைத்துமுடித் திலைச்சுருளைப் பிளவோடே
குதட்டியதுப் புதட்டைமடித்
தயிற்பயிலிட் டழைத்துமருட்
கொடுத்துணர்வைக் கெடுத்துநகைக் குறியாலே

பொறித்ததனத் தணைத்துமனச்
செருக்கினர்கைப் பொருட்கவரப்
புணர்ச்சிதனிற் பிணிப்படுவித் திடுமாதர்

புலத்தலையிற் செலுத்துமனப்
ப்ரமத்தையறப் ப்ரசித்தமுறப்
பரிந்தருளித் திருக்கழலைத் தருவாயே;

பறித்ததலைத் திருட்டமணக்
குருக்களசட் டுருக்களிடைப்
பழுக்களுகக் கழுக்கள்புகத் திருநீறு

பரப்பியதத் திருப்பதியுக்
கனற்புனலிற் கனத்தசொலைப்
பதித்தெழுதிப் புரட்டிநிறை கவிராசா!

செறித்தசடைச் சசித்தரியத்
தகப்பன்மதித் தகப்பனெனச்
சிறக்கவெழுத் தருட்சதனைப் பெருவாழ்வே!

திகழ்ப்படுசெய்ப் பதிக்குளெனைத்
தடுத்தடிமைப் படுத்தஅருட்
சிறப்பழகிற் சிறுக்குமரப் பெருமாளே!

(இ - ள்.) பறித்ததலை திருட்டு அமணக் குருக்கள் - மயிர் பறிக்கப்பட்ட தலையையுடைய திருட்டுத்தனம் மிகுந்த சமணர்களின் ஆசாரியர்களின், அசட்டு உருக்களிடை - குற்றம் பொருந்திய உடம்புகளினிடையில், பழுக்கள் உக கழுக்கள் புக - பழு எலும்புகள் முறியும்படி கழுவிலேற, திருநீறு பரப்பிய - திருநீற்றின் உண்மையை விளக்கிய, அத் திரு பதி புக்கு - அந்தத் தல

மாகிய மதுரைக்கண்ணே சென்று, அனல் புனலில் - நெருப்பினும் நீரிலும், கனத்த சொலை பதித்து எழுதி புகட்ட - பெருமை மிக்க திருப்பதிகப் பாவை ஓலையில் நன்றாக வரைந்து விட்ட, திறல் கவி ராசா - வல்லமையையுடைய கவி அரசே!, செறித்த சடை - நெருங்கிய சடாபாரத்தில், சசி தரி அத் தகப்பன் - பிறையைச் சூடிய பெருமை மிக்க பிதாவாகிய சிவபெருமான், மதித்து உகப்பன் என - பெரிதாக எண்ணிக் களிப்புக் கொள்வன் என்று, சிறக்க எழுத்து அருள் கருணை பெருமை வாழ்வே - மேன்மையுறப் பிரணவ எழுத்தைத் திருச் செவியில் அருளிச் செய்த கருணையை யுடைய பெரிய வாழ்வே!, திகழ் படு செய் பதிக்குள் - விளங்குகின்ற வயலூர்ப் பதியில், எனைத் தடுத்து அடிமைப் படுத்த அருள் - என்னைத் தடுத்து அடிமை கொள்ளுமாறு கருணை புரிந்த, திரு பழநி கிரி குமரன் பெருமானே - அழகு பொருந்திய பழநிமலையில் வீற்றிருக்குங் குமாரனாகிய பெருமானே!, குறித்த மணி பணி துகிலை திருத்தி உடுத்து - ஆராய்ச்சி செய்து நன்றென எடுத்த மணிகள் குயிற்றிய ஆபரணங்களையும் ஆடையையும் திருத்தமாய், அணிந்துகொண்டும் - உடுத்திக் கொண்டும், இருள் குழலை குலைத்து முடித்து - இருள் போன்றுள்ள கேசத்தை அவிழ்த்து முடித்தும், இலை சுருளை பிளவோடு - வெற்றிலைச் சுருளைப் பாக்குப் பிளவையுடன், குதட்டிய துப்பு உதட்டை மடித்து - குதட்டும்படியான பவளத்தை ஒத்த இதழை மடித்தும், அயில் பயில் இட்டு அழைத்தும் - வேல் போலும் கண்களினுடைய பயிற்சியினால் அழைத்தும், மருள் கொடுத்து உணர்வை கெடுத்து - காம மயக்கத்தைத் தந்து அறிவைக் கெடுத்தும், நகம் குறியால் பொறித்த தனத்து அணைத்து - நகக்குறியால் அழுத்தப்பெற்ற தனங்களில் அணைத்தும், மனம் செருக்கினர் கைப்பொருள் கவர - மனம் விருப்பத்தால் அதிகரிக்கப்பட்டவர்களின் கையினிடத்தே உள்ள பொருளைக் கவருவதற்கு, புணர்ச்சிதனில் பிணிப்படுவித்திடும் மாதர் - போகத்திலே

கட்டுப்படுத்தி விடும்படியான பெண்களின், புலம் தலையில் செலுத்தும் - விவேகத்தைத் தலையில் செலுத்துகின்ற, மனம் பிரமத்தை அற - மனத்திற் பொருந்திய மயக்கம் நீங்கவும், பிரசித்தம் உற - பெருமை உண்டாகவும், பரிந்து அருளி - விரும்பி அருள் செய்து, திரு கழலை தருவாய் - திருத்தாள்களை அருள் செய்வாய், எ-று.

(வி - ரை.) குறித்தமணிப் பணித்துகிலைத் திருத்தி உடுத்தி - 'குறித்த மணி பணி திருத்தித் துகிலை உடுத்தி' எனப் பொருள் கொள்க; இனி, 'மணி பணி துகிலைத் திருத்தி உடுத்தி' எனப் பொருள் கொள்வாரும் உண்டு. முன்னதற்கு, 'மணி குயிற்றிய பணிகளைப்பூண்டு துகிலைஉடுத்து' என்பது பொருள்; பின்னதற்கு 'மணி பதித்த ஆபரணங்களால் அலங்கரிக்கப் பெற்ற துகிலைத் திருத்தமாக உடுத்தி' என்பது பொருளாம்.

குதட்டுதல் - வாயால் மென்று குதப்புதல்; சமணர்கள் 'தலையை க்ஷவரஞ் செய்து கொண்டால் பேன் முதலிய இருந்து இறந்து போம்,' என்று மயிரைப் பிடுங்கிக் கொள்வர். ஆதலால், அவர்களுக்குப் 'பறி தலையர்' என்றாயிற்று.

"பழநிப் பெருமானே! மாதரிடம் செல்லும் மனத்தைப் பறித்து உன் திருவடியிற் பதிப்பித் தருள்வாயாக" என்று வேண்டுகின்றார்.

---

## திருவாவினன்குடி

72. தனதான தந்தனத் தனதான.

அபசார நிந்தைபட் டுழலாதே
அறியாத வஞ்சரைக் குறியாதே
உபதேச மந்திரப் பொருளாலே
உனைநானி னைந்தருட் பெறுவேனோ;

இபமாமு கன்றனைக் கிளையோனே!
　　இமவான்ம டந்தையுத் தமிபாலா!
ஜெபமாலை தந்தசற் குருநாதா!
　　திருவாவி னன்குடிப் பெருமாளே!

(இ - ள்.) இபமாமுகன் தனக்கு இளையோனே - யானை முகக் கடவுளுக்கு இளையவனாகிய தம்பியே!, இமவான் மடந்தை உத்தமி பாலா - பார்வதி தேவியாகிய உத்தமியின் புத்திரனே!, ஜெபமாலை தந்த சற்குரு நாதா - சிவநாம மந்திரத்தை ஜபிக்கும் பொருட்டு ருத்திராக்ஷ மாலையை அடியார்களுக்குத் தந்தருளிய உண்மைக் குருநாதனே!, திருவாவினன்குடிப் பெருமானே - திருவாவினன் குடி என்ற திருத்தலத்தில் எழுந்தருளி யிருக்கும் பெருமானே!, அபகார நிந்தை பட்டு உழலாதே - தீய ஒழுக்கம் உடையவன் என்னும் இழிவான வார்த்தைக்கு உட்பட்டு அலைந்து திரியாதபடியும், அறியாத வஞ்சரைக் குறியாதே - அறிவற்ற வஞ்சகரை நினைக்காமலும், உபதேச மந்திரப் பொருளாலே - தேவரீர் அடியேனுக்கு உபதேசித்தருளிய மந்திரத்தைக் கொண்டு, உனை நான் நினைந்து அருள் பெறுவேனோ - தேவரீரை அடியேன் தியானஞ் செய்து திருவருளைப் பெறுவேனோ? எ - று.

(வி - ரை.) அபகார நிந்தை - ஒழுக்கமற்ற தீய காரியங்களால் உண்டாகும் இகழ்ச்சி. உபதேச மந்திரம் - ஷடாட்சர மந்திரம். இபம் - யானை.

“பழநிப் பெருமானே! அடியேன் உன்னையே நினைந்து அருளைப் பெறுவேனோ,” என்பது செய்யுட் குறிப்புப் பொருள்.

---

மன் புரந்தரன் ஆதியர் தம்பிரானே - திருமால் சிவபெருமான் பிரமன் இந்திரன் முதலான தேவர்களுக்குத் தலைவனே!, கனை கடல் வயிறு குழம்பி வாய்விட - ஒலிக்கின்ற கடலின் வயிறு சேறாகி வாய் விடவும், வட தமனிய கிரி கம்பம் ஆய் - வடக்கின் கண்ணே யுள்ள பொன் மலையாகிய மேரு பர்வதமானது அசையவும், கட கண பண விபரித கந்த காள புயங்க ராசன் - கடனத்தோடு கூடிய வட்ட வடிவமான படத்தையுடைய வேறுபாடுகளோடு கூடிய மிக்க விஷம் பொருந்திய வாசுகியை, கயிறு என அமரர் அனந்த கோடியர் - கயிறு என்று தேவர்கள் பலரும், முறை முறை அமுது கடைந்த நாள் - முறை முறையாகத் தேவர் ஒரு புறமும் அசுரர் ஒரு புறமும் இருந்து தேவாமிர்தத்திற்காகக் கடைந்த நாளில், ஒரு கலி அற உலகை விழுங்கும் மேகம் ஒழுங்கு போல-ஒரு கலி நீங்க உலகத்தை விழுங்கும் மேகத்தின் ஒழுங்கைப் போன்று, வினை மதம் கரிகளும்-கொலைத் தொழிலையும் மத பிருதியுமுடைய யானைகளும், எண் திசாமுகம் கிரிகளும் உருகிட - எட்டுத் திக்கிலுமுள்ள மலைகளும் உருகவும், அண்டம் கோளகை வெடிபட - ஆகாயமானது வெடி படவும், எவரையும் விஞ்சி - யாவருக்கும் மேற்பட்டு, மேல் இடு நஞ்சு போல - மேலே தோன்றிய விஷத்தை ஒத்து, இடு குழை அளவும் அளர்ந்து - அணிந்துள்ள குண்டலம் வரையினும் நீட்சி பெற்றுச் சென்று, காமுகர் உயிர் பலி கவர்வுறு - காமிகளாயுள்ளவர்களுடைய உயிரைப் பலியாகக் கொள்ளும், பஞ்ச பாதக விழி வலை மகளிரொடு - பஞ்ச மகா பாதகங்களில் செலுத்தும் கண்ணுகிய வலையைக் கொண்டுள்ள மாதர்களிடத்தில், அன்பு கூர்வது ஒழிந்திடாதோ - மிகுந்த ஆசை கொள்வது நீங்காதோ, எ - று.

(வி - ரை) கனைகடல் - சப்திக்குங் கடல். கண பண - 'கூட்டமாகிய படங்களையுடைய' என்றும் பொருளாம். கந்த காள - 'சேர்ந்த விஷ' அல்லது, 'விஷம் சேர்ந்த' எனவும் பொருள் ஆம்.

புயங்கம் - பாம்பு. அநந்த கோடி - கணக்கற்ற. உயிர் பலி - பலியாகிய உயிர். உரும் - இடி. தரங்கம் - கடல்; 'அலையை உடையது' எனப் பொருள்.

"வேலாயுதனே! மாதர் மால் சிக்குதலகற்றி அருள்," என வேண்டுகின்றார்.

---

பொது

74. தையதன தானத் தனதான.

துள்ளுமத வேள்கைக் கணையாலே
தொல்லைநெடு நீலக் கடலாலே
மெள்ளவரு சோலைக் குயிலாலே
மெய்யுருகு மானைத் தழுவாயே;
தெள்ளுதமிழ் பாடத் தெளிவோனே!
செய்யகும ரேசத் திறலோனே!
வள்ளல்தொழு ஞானக் கழலோனே!
வள்ளிமண வாளப் பெருமாளே!

(இ - ள்.) தெள்ளு தமிழ் - தெளிவாகிய தமிழின் பாடல்களை, பாட தெளிவோன் - அடியவர்கள் பாட அவைகளின் உண்மைப் பொருளைத் தெளிவோனே!, செய்ய குமரேசன் திறலோனே - செவந்த திருவடிவத்தையுடைய குமரேசன் என்னும் வன்மை உடையவனே!, வள்ளல் தொழு ஞானம் கழலோனே - வரையாது கொடுத்தருளும் சிவபெருமானும் வணங்கும் திருவடியை உடையவனே!, வள்ளி மணவாளன் பெருமாளே - வள்ளி அம்மையார்க்கு நாயகனாகிய பெருமானே!. துள்ளும் மதவேள் - துள்ளுகின்ற மாரனுடைய, கை கணையால் - கையினின்றும் விடப்

பெறும் பாணத்தாலும், தொல்லை செயும் வெம் கடலால் - துன்பத்தைத் தரும் நீட்சியுள்ள நீல நிறம் வாய்ந்த கடலாலும், மென்னவரு சோலை குயிலால் - மெதுவாக வருகின்ற சோலையிலே வாழுகின்ற குயிலாலும், மெய் உருகும் மானை தழுவாய் - சரீரமானது உருகுகின்ற மான்போன்ற என் பெண்மணியைத் தழுவுவாயாக!; என - று.

(வி - ரை.) துன்று மதவேள் - 'தனித்து இருப்போரோடு போர் செய்யத் துன்னிச் செல்லுகின்றான்', என்ற பொருள். இப் பாடல் தாயாய்த் தன் மகள் பொருட்டாத் தலைவனை வேண்டும் பாவனை. ஆன்மாவைப் பெண்ணாகவும், இறைவனைத் தலைவனாகவும் கொண்டனர். இது ஆன்றோர் ஆழ்வாராதியர்களும், சைவசமயாசாரியரும், பிற சான்றோருங் கொண்ட மரபு.

மன்று தமிழ் - 'மூச்சங்கத்தின்றும் தெள்ளி எடுக்கப்பட்ட தமிழ்' என்க. வள்ளல் - குறையாது கொடுப்போன், ஈண்டு சிவ பெருமானைக் குறித்தது.

“வேலாயுதனே! என் ஆன்மாவைக் கூட இன்பந் தா,” என்றது குறி.

---

நிம்பபுரம்

75. தந்தன தான தந்ததன தான
தந்ததன தான தனதான.

அஞ்சுவித பூத முங்கரண நாலு
மந்திபகல் யாதும் அறியாத

அந்தநடு வாதி யொன்றுமில தான
அந்தவொரு வீடு பெறுமாறு

மஞ்சுதவழ் சார லஞ்சயில வேடர்
    மங்கைதனை நாடி வனமீது
வந்தசர ணார விந்தமது பாட
    வண்டமிழ்வி நோதம் அருள்வாயே;
குஞ்சரக லாப வஞ்சியபி ராம
    குங்குமப டீர வதிசேசக்
கும்பதன மீது சென்றணையு மார்ப
    குன்றுதடு மாற இகல்கோப!
வெஞ்சமர சூர னெஞ்சுபக வீர
    வென்றிவடி வேலை விடுவோனே!
விம்பமதில் சூழு நிம்பபுர வாண!
    விண்டலம கீபர் பெருமாளே!

(இ - ள்.) குஞ்சர கலாப வஞ்சி - தேவயானை என்னும் மயில் போலுஞ் சாயலையுடைய வஞ்சி, அபிராமம் குங்குமம் படீரம் அதி சேசம் - அழகிய குங்குமமும் சந்தனமும் பூசப்பெற்ற மேன்மை வாய்ந்த, கும்பம் தனம் மீது சென்று அணையும் மார்ப - குடத்தைப் போன்ற தனங்களைச் சார்ந்து பொருந்தப் பெறும் மார்பையுடையவனே!, குன்று தடுமாற இகல் கோப - கிரவுஞ்சகிரி தடுமாறுமாறு போர் செய்கின்ற கோபத்தை உடையவனே!, வெம் சமரம் சூரன் - கொடிய யுத்தத்தைச் செய்கின்ற சூரபதுமனது, நெஞ்சு பக - மார்பு பிளக்குமாறு, வீரம் வென்றி வடிவேலை விடுவோனே - வீரமும் வெற்றியும் வாய்க்கப்பெற்ற வடித்த வேலாயுதத்தைச் செலுத்துபவனே! விம்பம் மதில் சூழும் - பிரகாசச் சாயலையுடைய மதில்களாற் சூழப்பெற்ற, நிம்பபுரம் வாண - வேப்பூரில் வாழ்பவனே!, விண்டல மகீபர் பெருமாளே - தேவலோகத்

தத் தேவர்களுக்குப் பெருமானே!, அஞ்சுவித பூதமும் நாலு கரணமும் - ஐந்து வகைப்பட்ட மண், நீர், காற்று, நெருப்பு, வெளி என்னும் ஐம் பூதங்களும்; மனம், புத்தி, சித்தம், அகங்காரம் என்னும் நான்கு அந்தக்கரணங்களும், அந்தி பகல் யாதும் அறியாத - அந்தியும் பகலும் மற்றைப் பொழுதுகளும் தெரியாத, அந்தம் நடுவு ஆதி ஒன்றும் இலது ஆன - ஈறும் நடுவும் முதலும் என்னும் ஒன்றும் இன்மையான, அந்த ஒரு வீடு பெறுமாறு - அவ்வித மாட்சிமைப் பட்ட சிறந்த முத்தி இன்ப வீட்டை அடையுமாறு, மஞ்ச தவழ் சாரல் - மேகங்கள் சஞ்சரிக்கப்பெற்ற சாரலையுடைய, அம் சயிலம் வேடர் மங்கைதனை - அழகு பொருந்திய மலைகளில் வாழ்கின்ற வேடர்களின் பெண்ணாகிய வள்ளி அம்மையாரை, நாடி வனம் மீது வந்த - விரும்பித் தினைப்புனக் காட்டிற்கு வந்தருளிய, சரணாரவிந்தம் பாட - திருவடித் தாமரைகளைப் பாட, வள் தமிழ் விநோதம் அருள்வாய் - வளப்பம் வாய்ந்த தமிழ்ப் புலமையை அடியேனுக்கு அருள் செய்வாயாக, எ - று.

(வி - ரை.) அந்த ஒரு வீடு - அழகிய ஒப்பற்ற முத்தி வீடு; 'முடிவிடமாகிய ஒப்பற்ற முத்தி வீடு' எனினும் ஆம். வீடானது தத்துவங் கடந்து, சிந்தையும் வாக்குஞ் செல்லாச் சீரிய தாதலின் 'அஞ்சுவித.........வீடு பெறுமாறு,' என்றார்.

"வீடு பேற்றிற்கு வேலவனே! நின் சரணாரவிந்தம் வேண்டும். ஆதலின், அது பாட எனக்கு அருள் செய்" என்கின்றார்.

---

76. தனனத னத்தத் தனந்த னந்தன
தனனத னத்தத் தனந்த னந்தன
தனனத னத்தத் தனந்த னந்தன தனதான.

முகமுமி னுக்கிப் பெருங்கருங்குழல்
முகிலைய விழ்த்துச் செருந்தி சண்பக
முடியநி றைத்துத் ததும்பி வந்தடி முன்பினுக
முலையைய சைத்துத் திருந்த முன்தரி
கலையைநெ கிழ்த்துப் புனைந்து வஞ்சக
முறுவல்வி ளைத்துத் துணிந்து தந்தெரு முன்றிலூ டே
மகளிர்வ ரப்பிற் சிறந்த பங்கியின்
மதனனு நிற்கக் கொழுந்து வெண்பிறை
வடவையெ றிக்கத் திரண்டு பண்டனை வண்டுபாட
மலயநி லத்துப் பிறந்த தென்றலுங்
நிலைகுலை யத்தொட் டுடம்பு புண்செய
மயலைய ளிக்கக் குழைந்து சிந்தைம யங்கலாமோ;
பகலவன் மட்கப் புகுந்து கந்தர
ககனமு கட்டைப் பிளந்து மந்தர
பருவரை யொக்கச் சுழன்று பின்புப றந்துபோகப்
பணையளி பட்சத் துரங்க முன்தனி
முடுகிந டத்தக் கிழிந்து விந்தெழு
பறவைய ரற்றப் ப்ரபஞ்ச நின்றுப யந்துவாடக்
குகனென முக்கட் சயம்பு வுய்ச்சிய
மிகஅசு ரர்க்குக் குரம்பை வந்தரு
குறஅமர் குத்திப் பொருங்கொ டும்படை வென்றவேளே!

குழைசயை யொப்பற் றிருந்த சங்கரி
கவுரியெ டுத்துப் பரிந்து கொங்கையில்
குணவமு துய்க்கத் தெளிந்து கொண்டருள் தம்பிரானே!

(இ - ள்.) பகலவன் மட்க புகுந்து - சூரியனது பிரகாசமும் மங்குமாறு சென்று, கந்தரம் ககனம் முகட்டை பிளந்து - மேகங்கள் தவழப்பெற்ற ஆகாய உச்சியைப் பிளந்து, மந்தரம் பருவரை ஒக்க சுழன்று - மந்தரமாகிய பெரிய மலைக்குச் சமமாகச் சுழன்று, பிறகு பறந்துபோக - பிற்பாடு பறந்துபோக, பணம் அளி - சர்ப்பத்தின் படத்தைக் கவ்விக்கொண்டிருந்தும், பட்சம் துரங்கம் - பிரியமுள்ள மயிலை, முன் தனி முடுகி நடத்தி - முன்பு தனியாக விரைவுடன் செலுத்தி, விழித்த விட்ட எழுபரவை அற்ற - உடல் அறும் புனல் நிரைதனி எழுகின்ற சமுத்திரம் வறளவும், பிரபஞ்சம் நின்று பயந்து வாட - உலகம் அசைவற்றுப் பயந்து வாட்டம் கொள்ளவும், முக்கண் சயம்புவும் - திரிநேத்திரதாரியாகிய சிவபெருமானும், குகன் என பிரியம் மிக - குகனென்று கூறிப் பிரியம் மிகவும், அசுரர்க்கு தும்பை வந்து அருக உற - அசுரர்களுக்கு இறுதிக்காலம் வந்து கிட்டவும், அமர் நடத்தி - போர் புரிந்து, பொரும் கொடுமை படைவென்ற வேளே - எதிரே வந்து யுத்தம் செய்யும் கொடிய அசுரச் சேனைகளை வென்ற முருகனே!, குழை - குண்டலங்களைப் பூண்ட, சயை - வெற்றியைப் பொருந்தியவளும், ஒப்பு அற்று இருந்த சங்கரி - தனக்கு ஓர் நிகர் இல்லாது விளங்குகின்ற சங்கரியும், கவுரி - கவுரியுமாகிய அம்மையார், எடுத்து பரிந்து கொங்கையில் - கையில் எடுத்து உள்ளம் விருப்புற்றுத் தனங்களில், குணம் அமுது உய்க்க - சிறந்த பாலை ஊட்ட, தெளிந்து கொண்டு அருள் தம்பிரானே - எல்லாப் பொருள்களையும் அறிந்துகொண்ட பெரியோனே!, முகம் மினுக்கி - முகத்தை மினுக்கியும், பெரு கரு குழல் முகிலை அவிழ்த்து - பெரிய கரிய மேகத்தைப்போன்ற கூந்

திருவருணை

77. தனதனத் தானனத் தனனதத் தானனத்
தனதனத் தானனத் தனதான.

கயல்விழித் தேனைச் செயலொழித் தாயெனக்
கணவரொட் டேனெனப் பெறுமாது
கருதுபுத் ராவெனப் புதல்வரப் பாவெனக்
கதறிடப் பாடையிற் றலைமீதே
பயில்குலத் தாரழப் பழையநட் பாரழப்
பறைகள்கொட் டாவரச் சமனாரும்
பரியகைப் பாசம்விட் டெறியுமப் போதெனைப்
பரிகரித் தாவியைத் தரவேணும்;
அயிலறச் சேவல்கைக் கினிதராத் தோகையுற்
றருணையிற் கோபுரத் துறைவோனே!
அமரரத் தா!சிறுக் குமரிமுத் தா!சிவத்
தரியசொற் பாவலர்க் கெளியோனே!
புயலிளைப் பாறுபொற் சயிலமொய்ச் சாரலிற்
புனமறப் பாவையைப் புணர்வோனே!
பொடிபடப் பூதரத் தொடுகடற் சூரனைப்
பொருமுழுச் சேவகப் பெருமாளே!

(இ - ள்) அயில் அறச் சேவல் - வேலாயுதத்தையும் தரும வடிவினதாகிய சேவலையும், கைக்கு இனிதா - அழகிய திருக் கரங் களில் இனிமையாகக் கொண்டு, தோகை உற்று அருணையில் கோபுரத்து உறைவோனே - மயிலின்மேல் மேவி திருவருணைக்

கோபுரத்துள் வாழ்கின்றவனே!, அமரர் அத்தா - தேவர்கட்குத் தலைவனே!, சிறு குமரி முத்தா - இளைய வள்ளி அம்மையாருக்கு முத்தை யொத்தவனே!, சிவந்து அரிய சொல் - மங்களகரமான அரிதாகிய சொற்களையுடைய, பாவலர்க்கு எளியோனே - புலவர்களுக்கு எளிமை பொருந்தியவனே!, புயல் - மேகங்கள், இளைப்பாற - இளைப்பாறுகின்ற, பொன் சயிலம் மொய் சாரலில் - அழகிய அடர்ந்த சாரலில், புனம் மறம் பாவையை புணர்வோனே - தினைப்புனத்தைக் காவல் செய்த மறவர் குலத்து வளர்ந்த வள்ளி நாயகியாரைக் கூடியவனே!, பொடிபட - தூளாகும்படி, பூதரத் தொடு - வெற்புடனும், கடல் சூரனை பொரு - கடலில் ஒளித்த சூரபதுமனோடு யுத்தம் புரிகின்ற, முழு சேவகம் பெருமாளே - மிக்க வீரத்தொழிலை யுடைய பெருமானே!, கயல் - கயல் மச்சத்தை நிகர்த்த, விழி தேன்-விழிகளையுடைய தேனை நிகர்த்த பெண்ணே, எனை செயல் ஒழித்தாய் என - என்ன செய்யலாம் இழந்தாய் என்று கூற, கணவ கெட்டேன் எனப் பெறும் - கணவனே! கெட்டேன் என்று சொல்லி அழும், மாது - மனைவியும், கருது புத்ரா என - எண்ணக்கூடிய புத்திரனே! என்று அழைக்க, புதல்வர் அப்பா என கதறிட - புத்திரர்கள் அப்பாவோ! என்று கதறிட, பாடையின் தலைமீது - பாடைபின்மேல், பயில் குலத்தார் அழ - பழகிய சுற்றத்தினர் புலம்பவும், பழைய நட்பார் அழ-பழமையான நட்பினர்கள் வருந்தவும், பறைகள் கொட்டிவர - பறைகளை முழக்கிக் கொண்டு வரவும் சமனும் பரிய கை பாசம் விட்டு எறியும் போது - யமனும் பெரிய கைப்பாசக் கயிற்றை என்மேல் விட்டு எறியும்போது, எனைப் பரிகரித்து, ஆவியைத் தரவேணும் - எனது மரண துன்பத்தை நீக்கி உயிரைக் கொடுத்தல்வேண்டும், எ - று.

(வி - ரை) தேன் - மனைவி; ஆகுபெயராய் மனைவியைக் குறித்தது. கருது புத்ரா - 'தந்தையையே கருதும் புத்திரனே'

என்றும் பொருள் கூறலாம்; 'பெண்ணொடு கூடலால் உண்டாகும் புத் என்னும் நரகத்தை நீக்கி அதினின்றும் எடுப்பவன்' என்ற காரணப் பொருளில் வந்த பெயர். புதல்வர் - பிள்ளைகள் அக்காலத்துச் சாப்பறை கொட்டுதல் வழக்காதலின் 'பறைகள் கொட்ட' என்றார். இதனாலன்றோ,

"தழீஇந் தழீஇந் தண்ணம்படும்"

என்றும்,

"டொண் டொண் டொண் டென்னும் பறை"

என்றும் பெரியார் கூறினர்.

சாவ வருங்காலத்துப் பாசத்தால் வரும் வாதனையாலும், நோயால் வரும் வேதனையாலும், யமதூதரைக் கண்டபோது உண்டாகும் மன பயத்தாலும் துன்பமயமாக இருக்கும். அத லின் 'சமனும் பரியனைப் பாசம் விட்டெறியுமப்போ தெனைப் பரிகரித் தாவியைத் தாவெனும்' என்றார். சாந்துயர் கடுமையான தென்பதனை,

"சாதலின் இன்னாத தில்லை இனிததூஉம்
ஈத லியையாக் கடை."

என்ற திருக்குறளா லறிக. மரண காலத்துப் பெண்டு மக்கள் சுற்றா சுற்றியிருந்து அழுது மயக்கி மனத்தைப் பேதப்படுத்தி மன வேதனை ஆக்குவர் என்பதனை,

"சங்கையி லாவகை யமபட ராலுயிர்
போம்பொழு தத்தருகே
மங்கையர் சூழவி ருந்தழுதுள்ளம
யக்கினும் யான்மறவேன்
கங்கையு நான்மறை யுந்துள வுங்கமழ்
கழலிணை யுந்திருமால்

அங்கையின் மீதொளிர் சங்கமு நேமியு
மஞ்சன மேனியுமே.”

என்ற வில்லிபுத்தூரார் வாக்கானும் அறிக. ஆவியைத் தருதல் - ஆன்மபோதம் தருதல்.

“எமன் வருமுன் வேலாயுதனே! எனக்கு ஆன்ம போதந் தா என வேண்டுகின்றார். ஆன்மபோதம் பெற்றார் சிவபோதம் பெறுதல் உறுதி.

---

போது

78. தானதன தானத்த தானதன தானத்த
தானதன தானத்த தனதான.

ஆலுமயில் போலுற்ற கோதையர்கள் மேனிமேதந்து
ஆரவட மேலிட்ட முலைமீதே
ஆனதுகி லேவிட்டு வீதிதனி லேநிற்க
ஆமவரை யேசற்று முறையாதே
வேலுமழு கார்கொற்ற நீலமயில் மேலுற்று
வீறுமுன தார்பத்ம முகமாறும்
மேனியிரு பாகத்தும் வாழுமனை மார்தக்க
மேதகவு நானித்த முறையேனோ;
கானுமுக வேகற்கு மாவிலையில் மாலுக்கு
நாடவரி யார்பெற்ற ஒருபாலா!
கார்ணமுடை யாள்வெற்றி வேடர்குல மீதொக்க
நாடுகுயில் பார்மிக்க எழில்மாது

வேலைவிழி வேடச்சி யார்க்கணவ னே!மத்த
வேழமுக வோனுக்கும் இளையோனே!
வீரமுட னேயுற்ற சூரனணி மார்பத்து
வேலைமிக வேவிட்ட பெருமானே!

(இ - ள்.) நாலுமுக வேதற்கும் - நான்கு முகங்கள் பொருந்திய வேதனுக்கும், ஆல் இலையில் மாலுக்கும் - ஆலிலையின்மீது அறிதுயில் கொள்ளும் திருநாரணனுக்கும், நாட அரியார் பெற்ற ஒரு பாலா - தேடி யறிவதற்கு அரிய சிவபெருமானார் பெற்றருளிய ஒப்பற்ற புத்திரனே!, நாணம் உடையாள் - நாணத்தை உடையவளும், வெற்றி வேடர் குலம்மீது - ஜயத்தையுடைய வேடர்களின் குலத்திலே, ஒக்க நாடு குயில் - யாவரும் ஒருமிக்க விரும்பித் தேடும்படியாகிய குயிலைப் போன்ற குரலையுடையவளும், பார் மிக்க எழில் மாது - பூமியில் மிகுந்த அழகு பொருந்திய பெண்ணாய் விளங்குபவளும், வேலை விழி வேடச்சியர் கணவனே - கடல் போன்ற பரந்துள்ள கண்களையுடைய வள்ளி நாயகியாருக்கு நாயகனே!, மத்தம் வேழம் முகவோனுக்கு இளையோனே - மதம் பொருந்திய யானைமுகக் கடவுளுக்குப்பின் பிறந்த தம்பியே!, வீரமுடன் உற்ற சூரன் அணிமார் பத்து - வீரத்துடன் எதிர்த்து வந்த சூரபதுமனுடைய ஆபரணந் தரித்த மார்பில், வேலை மிக விட்ட பெருமானே - வேலை மிகப் பதியவிட்ட பெருமானே!, ஆலும் மயில் போல் - ஆடுகின்ற மயிலைப்போன்ற, உற்ற தோகையர்கள் - சாயலைக் கொண்ட பெண்கள், மெத்த ஆர வடம் மேல் இட்ட முலை மீது - மிகவும் முத்தமாலை அணிந்த தனங்களின் மீது, ஆன துகில் இட்டு வீதிதனில் நிற்க - மென்மையான ஆடையைத் தரித்துத் தெருவில் நிற்க, ஆம் அவரை சற்றும் உரையாது - வீணரான அவர்களைக் கொஞ்சமும் புகழாமல், வேலும் - வேற்படையையும், அழகு ஆர் கொற்றம் நீல மயில் மேல் - அழகு பொருந்திய வெற்

றிமை யுடைய நீல நிறம் வாய்ந்த மயிலின்மீது, உற்று வீறும் உனது ஆர் பத்மம் முகம் ஆறும் - ஆரோகணித்து மேன்மையுறும் உம் முடைய அழகும் மேன்மையும் நிறைந்த தாமரை மலரை ஒத்த திரு முகங்கள் ஆறும், மேவி இரு பாகத்தும் வாழும் - அமைந்து இரு புடைகளிலும் வாழ்ந்திருக்கும், அனைமார் தக்க மேதகவும் - தாய் மார்களுடைய தகுதியான மேம்பாட்டையும், நான் நித்தம் உரை யேனோ - நான் தினமும் புகழ மாட்டேனோ, எ - று.

(வி - ரை) ஆரவடம் - முத்துமாலை, ஆரம் - முத்து, வடம், மாலை. ஆன துகில் - சித்திர வேலை யமைந்து பொருத்தமான துகில். அனைமார் - உனது பத்தினிகளாகிய எனது தாய்மார், ஆலிலையில் மாலுக்கு - வட ஆலிலையில் துயில் கூரும் திருமாலுக்கு. நாண முடையாள் - நாணத்தை உடையவள். குறவர் குலத்து வளர்ந்தும் நாண முதலியன உடையவள் என்பது குறித்ததாம். நாணம் உடையவள் எனவே ஏனைய மடம், அச்சம், பயிர்ப்பும் உடையவள் என்பதும் தானே அமையும். இதற்கு,

"ஒரு மொழி யொழிதன் இனங்கொளற் குறித்தே."

என்பது இலக்கணமாம். மத்த வேழம் - 'பெருந்தலை வேழம்' என் பாரும், மதம் பெருகும் தலை வேழம் எனவும் பொருளுரைப்பர்.

"வேலாயுதனே! வேசையரைப் புகழாது அம்மையார் இரு வருடன் அம் மயிலின் மேல் வீற்றிருக்கும் செம்மையே புகழும்படி எனக்கு அருளைச் செய்" என்று வேண்டுகின்றார்.

---

## திருவருணை

79. தானதன தானத் தானதன தானத்
தானதன தானத் தந்ததானா.

ஆலவிழி நீலத் தாலதர பானக்
காலளக பாரக் கொண்டலாலே
ஆரவகை யால்விற் போர்நுதலி னால்வித்
தார நடையால்நற் கொங்கையாலே
சாலமய லாகிக் காலதிரி சூலத்
தாலிறுகு பாசத் துன்பழுந்தித்
தாழ்விலுயிர் வீழ்பட் டூழ்வினைவி டாமற்
சாவதன்மு னேவற் கொண்டிலாயோ;
சோலைதரு கானிற் கோலமற மானைத்
தோளி லுறவாகக் கொண்டவாழ்வே!
சோதிமுரு கா!நித் தா!பழைய ஞானச்
சோணகிரி வீதிக் கந்தவேளே!
பாலகக லாபக் கோமளம யூரப்
பாகவுமை பாகத் தன்குமாரா
பாதமலர் மீதிற் போதமலர் தூவிப்
பாடுமவர் தோழத் தம்பிரானே!

(இ - ள்.) சோலை தரு கானில் - சோலைகள் மிக வளரும் காட்டில், கோலம் மற மானை - அழகிய வேடர் பெண்ணை தோளில் உறவு ஆக கொண்ட வாழ்வே - தோள்களிற் கலக்கும்படி உறவாகக்கொண்ட செல்வனே!, சோதி முருகா - ஒளிமயமான

முருகக் கடவுளே!, நித்தா - என்றும் அழிவின்றி இருப்பவனே!, பழைய ஞானம் சேரணிகிரி கந்தவேளே! - பழமையான ஞானச் செல்வத்தையுடைய, திருவண்ணாமலையில் கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கும் கந்தக் கடவுளே!, பாலக - குழந்தையே!, கலாப கோமளம் மயூரம் பாக - தோகைகளையுடைய இளைய மயிலை வாகனமாக உடையவனே!, உமை பாகத்தன் குமார - உமாதேவியாரை இடது பாகத்தே யுடைய சிவபெருமானின் புத்திரனே!, பாதம் மலர் மீதில் - திருவடிகளாகிய தாமரை மலர்களின் மீது, போது மலர் தூவி - மிகுதியாக மலர்களைச் சொரிந்து. பாடுமவர் தோழன் தம்பிரானே - துதிக்கின்றவர்களுடைய நண்பனாகிய தம்பிரானே!, ஆலம் விழி நீலத்தால் - விடத்தை யொத்த விழிகளின் நீல நிறத்தாலும், அதர பானத்தால் - உதட்டில் பொருந்தியுள்ள ஊறலைப் பருகுவதாலும், அளகம் பாரம் கொண்டலதால் - கூந்தலாகிய பாரம அதிகரித்த மேகத்தாலும், ஆரம் நகையால் - முத்தை நிகர்த்த நகையாலும், வில் போர் நுதலினால் - வில்லைப்போன்ற நெற்றியினாலும், வித்தாரம் நடையால் - மேன்மையான நடையாலும், நன்மை கொங்கையால் - நன்மையையுடைய தனங்களாலும், சால மயல் ஆகி - மிகவும் ஆசை பூண்டு, காலன் கிரி சூலத்தால் - யமனுடைய முத்தலையையுடைய சூலப்படையாலும், இறுகு பாசம் - நெருங்கக் கட்டுகின்ற கயிற்றாலும், துன்பம் முழுகி - துன்பத்தில் அழுந்தி, தாழ்வில் உயிர் வீழ்பட்டு - தாழ்வினால் உயிரானது விழப் பெற்று, ஊழ்வினை விடாமல் - முறைமையாக வரும் பழவினை நீங்காது, சாவதன் முன் ஏவல் கொண்டிடாய் - இறப்பதற்கு முன் என்னைப் பணி கொள்வாயாக, எ - று.

(வி - ரை.) அளகபாரகொண்டலாலே - 'கூந்தற் பாரமாகிய மேகத்தாலே' எனப் பொருள் பெறும். ஆரம் - முத்து, வித்தார நடை - மேன்மையான நடை; ஈங்கு 'டாம்பீக நடை'

எனப் பொருள் படும். ஊழ்வினை தப்பாது வந்து துய்ப்பிக்குமாதலின் 'ஊழ்வினை விடாமற் சாவதன்முன்' என்றார். இதனாலன்றோ திருவள்ளுவரும்,

"ஊழிற் பெருவலி யாவுள மற்றொன்று
சூழினுந்தான் முந்துறும்."

என்றார்.

தோளி னுறவாக - 'தோள்களில் கலக்கும்படி உறவாக' என்றார். ஔவையும்,

"மெல்லி நல்லாள் தோள்சேர்."

என்றார். போத - மிகுதியாக.

"கந்தக் கடவுளே! பெண்கள் மயல்கொண்டு தாழ்வு பட்டு ஊழ்வினைப்படி சாவதன் முன் அடியேனை ஏவல் கொண்டருள்" என்று வேண்டுகின்றார்.

இதில், நின் ஏவல் முன் ஊழ்வினை வலி செலாது என்ற கருத்தடங்குதலுங் காண்க.

---

போத

80. தானந் தனதன தானந் தனதன
தானந் தனதன தனதான.

தீயும் பவனமும் நீருந் தரணியும்
வானுஞ் செறிதரு பசுபாசத்
தேகந் தனைநிலை யெனவியன் றிருவினை
சேருந் திறல்வினை அறியாதே
ஓயும்படியறு நூறும் பதினறு
நூறும் பதினிரு பதுநூறும்

ஓடுஞ் சிறுவுயிர் மீளும் படிநல
யோகம் புரிவது கிடையாதோ;
வேயுங் கணியும்வி ளாவும் படுபுன
மேவுஞ் சிறுமிதன் மணவாளா!
மீனம் படுகட லேழுந் தழல்பட
வேதங் கதறிய ஒருநாலு
வாயுங் குலகிரி யாலுந் தளைபட
மாகந் தரமதில் மறைசூரன்
மார்புந் துணையுறு தோளுந் துணிபட
வாள்கொண் டமர்செய்த பெருமானே.

(இ - ள்.) வேயும் கணியும் விளாவும் படு புனம் - மூங்கிலும் வேங்கை மரமும் விளாமரமும் வளர்கின்ற தினைப்புனத்தை, மேவுஞ் சிறுமி தன் மணவாளா - பொருந்தி இருக்கின்ற இளைய வள்ளியம்மையாரின் மணவாளனே!, மீனம் படு கடல் எழும் - மீன்கள் வசிக்கின்ற எழு சமுத்திரங்களிலும், தழல் பட - நெருப்பு உண்டாகவும், வேதம் கதறிய ஒரு நாலு வாயும் - வேதங்களை அலறிச் செய்த ஒப்பற்ற நான்கு திரு வாய்களையுடைய பிரமனும், குலகிரியாலும் - மேன்மை பொருந்திய கிரவுஞ்ச மலையாலும், தளை பட - சிறை படவும், மாகம் தரமதில் மறை சூரன் - ஆகாயத்தை அளாவியுள்ள மதிலிலே மறைகின்ற சூரனுடைய, மார்பும் துணையுறும் தோளும் துணிபட - மார்பும் இரு தோள்களும் வெட்டுண்ணவும், வாள் கொண்டு அமர் செய்த பெருமானே - வாளாயுதத்தைக் கொண்டு யுத்தத்தைச் செய்த பெருமானே!, தீயும் பவனமும் நீரும் தாரணியும் - நெருப்பும் காற்றும் நீரும் பூமியும், வானும் செறிதரு பசு பாசம் தேகம்தனை - ஆகாயமும் என்னும் ஐம்பெரும் பூதங்

அறக்கவினை வைத்தார்க்கங் கழிவில்லை
ஆநந்தர் அமுதே துய்ப்பார்."

"வேலாயுதக் கடவுளே! அழியா நிலைபெற யோக நிலை தந்தருள்." என வேண்டுகின்றார்.

---

## பொது

81. தனன தாத்தன தனன தாத்தன
தனன தாத்தன — தந்ததான.

பொதுவதாய்த் தனி முதலதாய்ப் பகர்
விரவு போய்ப்புகல் — இன்றவேதப்
பொருளதாய்ப் பொருள் முடிவதாய்ப் பெரு
வெளியதாய்ப் புதை — வின்றிஈறில்
கதியதாய்க் கரு தரியதாய்ப் பரு
கமுத மாய்ப்புலன் — ஐந்துமாயக்
கரணமாய்த் தெளி மரண மாற்றிய
கருணை வார்த்தையி — ருந்தவாறென்;
உததி கூப்பிட நிருத ரார்ப்பெழ
உலகு போற்றிட — வெங்களாப
ஒருப ராக்ரம துரக மோட்டிய
உரவ கோக்கிரி — நண்பவானோர்
முதல்வ! பார்ப்பதி புதல்வ! கார்த்திகை
முலைகள் தேக்கிட — உண்டவாழ்வே!
முளரி பாற்கடல் சயில மேற்பயில்
முதிய மூர்த்திகள் — தம்பிரானே!

(இ-ள்.) உததி கூப்பிட நிருதர் ஆர்ப்பு எழ - ஆழி அலறவும் அசரருடைய ஆரவாரம் எழவும், உலகு போற்றிட - உலகத்தார் துதிக்கவும். வெம் கலாப ஒரு பராக்கிரமம் துரகம் ஓட்டிய உரவ - வெவ்விய கலாபத்தை யுடைய ஒப்பில்லாத வீரமிக்குடைய மயிலைச் செலுத்தா நின்ற வல்லமையை யுடையவனே!, சேர கிரி நம்ப - சிறந்த மலைகளுக்கு நண்பனே!, வானோர் முதல்வ - தேவர்களுக்குத் தலைமை ஆனவனே!, பார்ப்பதி புதல்வ - பார்வதி தேவியாருக்குப் பாலனே!, கார்த்திகை முலைகள் தேக்கிட உண்ட வாழ்வே - கார்த்திகை முதலிய ஆறு நட்சத்திரப் பெண்களின் தனங்களிலுள்ள பாலைத் தெவிட்டும்படி உண்ட வாழ்வானவனே;, முளரி பால் கடல் சயிலம் மேல் பயில் - தாமரைமலர் திருப்பாற் கடல் கைலாயமலை ஆகிய இவைகளின் மேல் முறையே வாழ்கின்ற, முதிய மூர்த்திகள் தம்பிரானே - பழமையாகிய மும்மூர்த்திகளுக்குந் தலைவனே!, பொதுவதாய் - எல்லாச் சமயத்தவருக்கும் பொதுவான பொருளாகியும், தனி முதலதாய் - ஒப்பில்லாத காரணப் பொருளாகியும், பகல் இரவு போய் - பகலும் இரவும் நீங்கி, புகல்கின்ற வேதம் பொருளதாய் - சிறப்பித்துச் சொல்லப்படுகின்ற வேதப் பொருளாகியும், பொருள் முடிவதாய் - எல்லாப் பொருள்களின் முடிவாகியும், பெரு வெளியதாய் - பெரிய வெளியாகியும் புதைவு இன்றி ஈறு இல் கதியதாய் - மறைதலும் அழிதலுமில்லாத நிலைமையினை யுடையதாகியும், அரியதாய் - எண்ணுதற்கு அருமையினை யுடையதாகியும், பருகு அமுதமாய் - உண்ணுந் தேவாமிர்தமாயும், புலன் ஐந்தும் மாய கரணம் மாய்த்து - ஐந்து புலன்களும் அழியவும் நான்கு கரணங்களையும் ஒழித்து, என்னை மரணம் மாற்றிய - என்னை மரணத்தினின்றும் மாற்றியருளிய, கருணை வார்த்தை இருந்த ஆறு என் - அருள் மொழிகள் இருந்தபடி என்ன? எ - று.

(வி - ரை.) உததி - சமுத்திரம். துரகம் - குதிரை; 'கண்டு மயிலாகிய குதிரை' என்க. கோக்கிரி நண்ப - 'மலைகளுக்கு நண்புள்ள தெய்வமே' என்க; ஏனெனில், முருகன் குறிஞ்சி நிலக்கடவுள் ஆதலின் என்க. 'பார்வதி' என்றது பார்ப்பதி என மருவிற்றென்பர்.

பிரமன் விண்டு சிவன் எனு முத்தேவர்க்கும் பெரியான் என்பதை உணர்த்த "முளரி பாற்கடல்.........தம்பிரானே' என்றார்.

மரண மாற்றிய கருணை வார்த்தை - அருணகிரியாருக்குக் கந்தக் கடவுள் காதுறப் புகன்ற திருமொழி. ஒரு சாரார்,

"சும்மா விருசொல் லறவென்றலுமே
அம்மா பொருளே துமறிந் திலனே."

என்ற கந்தரனுபூதி கொண்டு "சும்மாவிரு" என்ற உபதேசம் கந்தக் கடவுள் அருணகிரியாருக்கு உபதேசித்ததென்பர். அதனை ஆறுமுகப் பிரானும் அருணகிரியாருமே அறிவர்; யாம் அறியோம். "அருமைத் திருவாய் மலர்ந்த ஆருயிர் அன்ன மந்திரத்தைச் சும்மா கூறிடுவாரோ? அதனால் எய்ந்த இன்பும் அதன் பெருமையுங் கூறினார்.

"மும்மூர்த்திக்கும் மேலானவனே! அடியேற்கு அருளிய திருவுபதேசம் எல்லாமாகி இன்பமாகி மரணந் தவிர்த்தது" என்கின்றார்.

## திருப்பரங்குன்றம்

82. தனத்தத தத்தனத் தனத்தத் தத்தனத்
தனத்தத் தத்தனத் தனதான,

தடக்கைப் பங்கயங் கொடைக்குக் கொண்டல்தண்
டமிழ்க்குத் தஞ்சமென் றுலகோரைத்
தவித்துச் சென்றிரந் துளத்திற் புண்படுந்
தளர்ச்சிப் பம்பரந் தனையூசற்
கடத்தைத் துன்பமண் சடத்தைத் துஞ்சிடுங்
கலத்தைப் பஞ்சஇந் த்ரியவாழ்வைக்
கணத்திற் சென்றிடத் திருத்தித் தண்டையங்
கழற்குத் தொண்டுகொண் டருள்வாயே!
படைக்கப் பங்கயன் துடைக்கச் சங்கரன்
புரக்கக் கஞ்சைமன் பணியாகப்
பணித்துத் தம்பயந் தணித்துச் சந்ததம்
பரத்தைக் கொண்டிடுந் தனிவேலா!
குடக்குத் தென்பரம் பொருப்பிற் றங்குமங்
குலத்திற் கங்கைதன் சிறியோனே!
குறப்பொற் கொம்பைமுன் புனத்திற் செங்கரங்
குவித்துக் கும்பிடும் பெருமாளே!

(இ-ள்) படைக்கப் பங்கயன் துடைக்கச் சங்கரன் புரக்கக் கஞ்சைமன் - உண்டாக்குதற்குப் பிரமனையும்: அழிப்பதற்குச் சிவ பெருமானையும்: காப்பதற்கு லட்சுமி நாயகனாகிய திருமாலையும், பணியாக பணித்து - அவரவர் செய்யும் தொழிலாகச் செய்யுமாறு

ஏற்படுத்தி, தம் பயம் தணித்து-அவ்வப்போது அவர்களுக்குப் பல காரணங்களால் உண்டாகும் பயங்களை யெல்லாம் நீக்கி, சந்ததம் பரத்தைக் கொண்டிடும் தனிவேலா - எப்போதும் எல்லோருக்கும் மேலான தன்மையைப் பொருந்தி விளங்கும்படியான ஒப்பற்ற வேலாயுதக் கடவுளே!, குடக்கு தென்பரம் பொருப்பில் தங்கும் - மதுரைக்கு மேல் திசையிலேயுள்ள அழகிய திருப்பரங்குன்றம் என்னும் திருப்பதியில் வாழும், அந்தலத்தில் கங்கைதன் சிறியோனே- அழகிய தலத்தில் தோன்றிய கங்கா தேவியின் புத்திரனே!, குறப் பெண் கொம்பை-குறக்குலத்தில் வளர்ந்த பெண்ணாகிய பூங்கொம்பு போன்றவளாகிய வள்ளி நாயகியாரை, முன் புனத்தில் செம்கரம் குவித்து கும்பிடும் பெருமானே - முன் ஒரு காலத்திலே தினைப் புனத்தின் கண்ணே செவ்விய கைகளைக் குவித்து வணங்கும் பெருமானே!, தடம் கை பங்கயம் - அகலமான கைகள் தாமரை மலரை நிகர்க்கும் என்றும், கொடைக்கு கொண்டல் - ஈகைத் தன்மையில் நீர் கொண்ட மேகத்துக்கு ஒப்பாயீர்கள் என்றும், தமிழ்க்கு தஞ்சம் என்று - தமிழுக்கு அடைக்கலப் பொருள் நீங்களே என்றும் சொல்லி, உலகோரைத் தவித்து சென்று இரந்து உளத்தில்புண் படும் - உலகத்தோரைக் கஷ்டப்பட்டுச் சென்று யாசித்து (அவர் ஈயாமையாலே) மனதில் வேதனைப்படும், தளர்ச்சி பம்பரம் தனை - தளர்கின்ற பம்பரத்தை, ஊசல் கடத்தை - ஊசலாடுகின்ற கயிற்றினை, துன்பம் மண் சடத்தை - துன்பத்தையே தரும் மண்ணாற் செய்த இந்தத் தேகத்தை, அஞ்சிடுங் கலத்தை - அழிந்து போம் பாத்திரத்தை, பஞ்ச இந்திரியம் வாழ்வை - ஐந்து புலன்களுடன் பொருந்தி வாழ்கின்ற வாழ்வை, கணத்தில்சென்று இடம் திருத்தி- ஒரு நொடிப்போதில் போய் இடத்தைத் திருத்தி, தண்டை அம் கழற்கு - தண்டைகள் தரித்த அழகிய திருவடிகளுக்கு, தொண்டு கொண்டு அருள்வாய் - தொண்டாகும்படிச்செய்து அருள் புரிவாயாக, எ - று.

(வி - ரை) தடக்கை - விசாலமாகிய கை. பங்கயம் தாமரை 'பங்கஜம் என்ற வடசொல்லின் திரிபு' என்பர்; 'சேற்றில் முளைப்பது' என்பது பொருள். சேற்றில் பல முளைப்பினும் சிறப்புப்பற்றி தாமரையையே குறித்தது. பங்கம் - சேறு. ஜம் - தோன்றுவது. 'சேறு இழிவிடம்,' தாமரை உயர் விடம்.

'சேற்றில் முளைத்த செந்தாமரை போல'

என்பது உலகமூதுமொழி. இனிமையையும் மென்மையும் உடைமை பற்றித் 'தண்டமிழ்' என்றார். துடைத்தல் - அழித்தல். கஞ்சைமல் - திருமால், கஞ்சை-லட்சுமி, தாமரையில் இருப்பதால் லட்சுமிக்குக் 'கஞ்சை' என்ற பெயர் எய்தியது.

"ஐம்பொறி வாழ்வை வெறுத்து உன் கழற்குப்
பற்று வைக்க முருகா! நீ அருள்செய்"

என்று வேண்டுகின்றார்.

---

83. தனன தன தான தத்த தனன தன தான தத்த
தனன தன தான தனதான.

முறுகிவட வாமுகத்தி னெழுகனலி லேபிறக்கு
முழுமதிநி லாவினுக்கும் வசையாலும
மொழியுமட மாதருக்கு மினியதனி வேயிசைக்கு
முதியமத ராஜனுக்கும் அழியாதே
புழுகுதிகழ் நீபமத்தி லழகியது ராநிரைத்த
புதுமையினி லாரமிட்ட புயமீதே
புணரும்வகை தானினைத்த துணரும்வகை நீலசித்ர
பொருமயிலி லேறிநித்தம் வரவேணும்;

எழுமகர வாவிசுற்று பொழிலருணை மாநகர்க்கு
   ளெழுதரிய கோபுரத்தில் உறைவோனே!
இடைதுவள வேடுவச்சி படமசைய வேகனத்த
   இளமுலைவி டாதசித்ர மணிமார்பா!
செழுமகுட நாகமொய்த்த ஒழுகுபுனல் வேணிவைத்த
   சிவனைமுத லோதுவித்த குருநாதா!
திசைமுகன்மு ராரிமற்று மரியபல தேவருற்ற
   சிறையடைய மீளவிட்ட பெருமாளே.

(இ - ள்.) எழும் மகரம் வாவி சுற்றும் பொழில் அருணைமா நகர்க்குள் - மேலே கிளம்புகின்ற சுறா மீன்கள் வாழப்பெற்ற பொய்கைகள் சூழ்ந்த சோலைகளை யுடைய திருவண்ணாமலை என்னும் சிறந்த பதியில், எழுது அரிய கோபுரத்தில் உறைவோனே - சித்திரத்திலும் எழுதுதற்கும் அருமையான கோபுரத்திலே தங்கு பவனே!, வேடுவச்சி - வள்ளியம்மையாரது, இடை துவள - இடை சோர்வடையும்படியும், படம் அசைய - ஆடை அசையும்படியும், கனத்த இள முலை - பருத்த இளைய தனங்கள், விடாத சித்திரம் மணி மார்ப - நீங்காத சந்தனக் கோலமிட்ட அழகிய மார்பை யுடையவனே!, செழும் மகுடம் நாகம் மொய்த்த - செழுமையான படங்களோடுங் கூடிய பாம்புகள் அடர்ந்துள்ள, ஒழுகு புனல் வேணி வைத்த சிவனை - ஒழுகுகின்ற கங்கையைத் தமது சடா பாரத்தில் வைத்தருளிய சிவபெருமானுக்கு, முதல் ஓதுவித்த குரு நாதா - முதற்காரணமாகிய பிரணவத்தை உபதேசித்த குரு நாதனே! திசைமுகன் முராரி மற்றும் அரிய பல தேவர் - பிரமனும் திருமாலும் மற்றுமுள்ள அருமையான தேவர்கள் பலரும், உற்ற சிறை அடைய மீளவிட்ட பெருமாளே - தாங்கள் அடைக்கப்பட்ட சிறையினின்று முற்றும் மீளுமாறு செய்த பெருமானே!,

வடவாமுகத்தின் முழுகி - வடவாமுகாக்கினியில் முழுகி, எழு கனலிலே பிறக்கும் - எழாநின்ற அக்கினியிலே பிறக்கும், முழு மதி நிலாவினுக்கும் - பூரணச் சந்திரனுடைய கிரணங்களுக்கும், வசையாலும் - வசையாலும், மொழியும் மடம் மாதருக்கும் - இனிமையாகப் பேசும் இளமை வாய்ந்த பெண்களுக்கும், இனிய தனி வேய் இசைக்கும் - இனிமையான ஒப்பற்ற புல்லாங்குழலின் ஓசைக்கும், மத ராஜனுக்கும் - மன்மத ராஜனுக்கும், அழியாது - மனம் அழிவுறாமல், புழுகு நிகழ் நீபம் அத்தில் - புனுகு பரிமளித்து விளங்கும் கடப்பமலர் மாலை யணிந்துள்ளதால், அழகிய குரா நிரைத்த - அழகு பொருந்திய குராமலர்களை வரிசையாகச் சூட்டிய, புதுமையினில் ஆறு இரட்டி புயம் மீதே - புதிது புதிதாகத் தோன்றும் பன்னிரு திருத்தோள்களின் மீதும், பணரும் வகை தான் நினைத்து உணரும் வகை - சேரும் வகையைக் கருதி அவற்றை உள்ளவாறு அறியும்பொருட்டு, நீலம் சித்ரம் - நீல நிறம் வாய்ந்த அழகிய, பொரு மயிலில் - போர் புரியும் மயிலின்மீது, ஏறி நித்தம் வரவேணும் - ஏறியருளி தினந்தோறும் அடியேன் முன்னமே வந்தருளவேண்டும், எ - று.

(வி - ரை.) மதி, காமிகளுக்குத் துன்பத்தைச் செய்வதாலும், அவர்களுக்கு வெப்பத்தை மிகுத்தலாலும், 'முழுகி வடவா முகத்தி னெழுகனலிலே பிறக்கு முழுமதி நிலாவினுக்கு' என்றார். "வடவாமுகாக்கினி - 'இது குதிரை வடிவமாகக் கடலின் நடுவில் இருந்துகொண்டு தண்ணீர் அதிகமாகாதபடி நீரைப் பருகிக்கொண் டிருக்கும் ஒருவகைப் பெருந்தீ' என்பர். முராரி-முரன் என்னும் அசுரனைத் திருமால் அழித்ததால் முராரி என்னுந் திருநாமம் திருமாலுக்கு வந்தது.

"நான் மோகத்தால் அழிந்து கெடாதபடி முருகா! நீ தினமும் சித்திர மயிலில் ஏறி வந்து அருள் செய்யவேண்டும்" என்று வேண்டுகின்றார்.

---

## உத்தர மேரூர்

84. *தானதத் தனதான தானதத் தனதான*
*தானதத் தனதான தனதான.*

நீள்புயற் குழல்மாதர் பேரினிற் க்ருபையாகி
நேசமுற் றடியேனு நெறிகேடாய்
நேமியிற் பொருள்தேடி யோடியெய்த் துளம்வாடி
நீதியிற் சிவவாழ்வை நினையாதே
பாழினுக் கிரையாய நாமம்வைத் தொருகோடி
பாடலுற் றிடவேசெய் திடுமோச
பாவியெப் படிவாழ்வ னேயர்கட் குளதான
பார்வைசற் றருளோடு பணியாயோ;
ஆழியிற் றுயில்வோனு மாமலர்ப் பிரமாவு
மாகமப் பொருளோரும் அனைவோரும்
ஆனைமத் தகவோனும் ஞானமுற் றியல்வோரு
மாயிரத் திருநூறு மறையோரும்
வாழுமுத் தரமேரூர் மேவியற் புதமாக
வாகுசித் திரதோகை மயிலேறி
மாறெணப் பொருசூர னீறெழப் பொரும்வேல!
மான்மகட் குளனை பெருமாளே!

(இ - ள்) ஆழியில் துயில்வோனும் - திருப்பாற்கடலின் கண் அறிதுயில் செய்யுந் திருமாலும், மாமலர்ப் பிரமாவும் - சிறந்த உந்தியந் தாமரையிற் றோன்றிய பிரமனும், ஆகமம் பொருளோரும் - சிவாகமங்களைக் கற்றுத் தேர்ந்தவர்களும், அனைவோரும் - மற்ற

முன்னோர் யாவரும், ஆனை மத்தகவோரும் - ஆனை முகத்தோடுங் கூடிய விநாயகக்கடவுளும், ஞானம் உற்ற இயல்போரும் - ஞான பாகத்தை ஆராய்ந்து கொண்டு அதன்படி நடப்பவர்களும், ஆயிரத்து இருநூறு மறையோரும் - ஆயிரத்து இருநூறு அந்தணர்களும், வாழும் உத்தர மேரூர் - வாழ்கின்ற உத்தரமேரூர் என்னும் ஸ்தலத்தில், மேவி - அமைந்து, அற்புதமாக - ஆச்சரியமாக, வாகு சித்திரம் தோகைமயில் ஏறி - அழகிய தோகையோடுங் கூடிய மயின்மீது ஏறிக்கொண்டு, மாறு என பொரு சூரன் - பகை என்று வந்து யுத்தஞ் செய்யும்படியான சூரன், நீறு எழ பொரும் வேல - நீறுகி அழியுமாறு போர்புரியும் வேலாயுதத்தை யுடையவனே!, மான் மகட்கு உளன் ஆன பெருமானே - மான் ஈன்ற மகளாகிய வள்ளி நாயகியாருக்கு மணவாளனாயுள்ள பெருமானே!, நீள் புயல் குழல் மாதர்மேனியில் கிருபை ஆகி - நீண்ட மேகத்தை நிகர்த்த கூந்தலோடுங் கூடிய பெண்களின் மேல் கிருபை கொண்டு, நேசம் உற்று அடியேனும் நெறி கேடாய் - ஆசை பூண்டு அடியேன் நன்னெறி விட்டுத் தீ நெறி சேர்ந்து, மேதியில் பொருள் தேடி - பூமியில் பொருளைச் சம்பாதித்து, ஓட எய்த்து உளம் வாடி - ஓடிச் சென்று இளைத்து மனம் வாட்டமடைந்து, நீதியில் சிவ வாழ்வை நினையாது - நன்னெறியினுல் மங்களகரமாயுள்ள சிவசம்பந்தமாயுள்ள வாழ்க்கையைக் கருதாமல், பாழினுக்கு இரை ஆய ஈமம் வைத்து - பாழாகிய வயிற்றுக்கு ஆகாரமாகக்கூடிய ஒரு பெயரை இட்டு, ஒரு கோடி பாடல் உற்றிட செய்திடும் மோசம் பாவி - ஒரு கோடிக் கணக்கான செய்யுட்கள் வெளி வரும்படிப் பாடும் வஞ்சகச் செயலையுடைய பாவியாகிய அடியேன், எப்படி வாழ்வேன் - எவ்வாறு பரிசுத்தமான ஞான வாழ்வை அடைவேன்?, நேயர்கட்கு உளது ஆன பார்வை - அன்பர்களுக்கென்று உரிமையாகவுள்ள அருட்பார்வை,

சற்று அருளோடு பணியாய் - அடியேனுக்கும் கிடைக்குமாறு சிறிது கருணை கூர்ந்து பணித்து அருள்வாய், எ - று.

(வி - ரை) நேமி - பூமி; 'பூமி வட்டமாக இருத்தலின் 'நேமி' என்ற பேர் வந்தது; 'குவலயம்' என்றதும் இப்பொருளதே; வலயம் - வட்டம். சிவ வாழ்வு - சைவ வாழ்வு. எனெனின், முத்தி தருவதாதலின் ஒரு கோடி - மிகுதிப் பொருளில் வந்தது; கணக்கற்ற பாடல்களைப் பாடி என்பதாம். நேயர்களுக்கு உளதாய பார்வை - அருட்பார்வை; தீமை துடைத்துப் பேரின்பப் பேறு அருளும் பார்வை ஆகமப் பொருளோர் - சிவபெருமான். மான் மகட்குளனை - 'வள்ளி யம்மையாரிடம் காதல் கொண்ட; ஆசை வைத்த' என்றது பொருள்.

"பெண்கள் மீது ஆசை வைத்துப் பாழும் வயிற்றுக்குப் பஞ்சாய்ப் பாடுபட்டு வீணே அற்பர்மேல் கோடிக் கணக்காகப் பாடல் பாடும் அடியேன்மேல் அன்பர்கள் மேல் வைக்கும் நின்னுடைய அருட் பார்வையை வைத்துக் காத்தருள்க" என வேண்டுகின்றார்.

---

## திருவேரகம்

85. தனதனன தான தத்த தனதனன தான தத்த
தனதனன தான தத்த தனதான.

சரணகம லாலயத்தை அரைநிமிஷ நேரமட்டில்
தவமுறைதி யானம் வைக்க அறியாத
சடகசட மூடமட்டி பவவினையி லேசனித்த
தமியன்மிடி யால்ம யக்கம் உறுவேனோ;
கருணைபுரி யாதிருப்ப தெனகுறையி வேளை செப்பு
கயிலைமலை நாதர் பெற்ற குமரோனே!

கடகபுய மீதிரத்ந மணியணிபொன் மாலைசெச்சை
கமழுமண மார்கடப்பம் அணிவோனே!

கருணைமிகை யாமிகுத்த கனமதுர நீள்சவுக்ய
சகலசெல்வ யோகமிக்க பெருவாழ்வு

தகைமைசிவ ஞானமுக்தி பரகதியு நீகொடுத்து
தவிபுரிய வேணும் நெய்த்த வடிவேலா!

அருணதள பாதபத்ம மதுநிதமு மேதுதிக்க
அரியதமிழ் தானளித்த மயில்வீரா!

அதிசயம நேகமுற்ற பழநிமலை மீதுதித்த
அழக! திரு வேரகத்தின் முருகோனே!

(இ - ள்) கயிலைமலை நாதர் - திருக் கயிலாய மலைக்குத் தலைவராகிய சிவபெருமான், பெற்ற குமரோனே - பெற்றருளிய திருக்குமாரனே!, கடகபுயம் மீது - கங்கணம் அணியப் பெற்ற தோளின் மேல், இரத்ந மணி அணி - இரத்தினம் பதித்துள்ள ஆபரணங்களையும், பொன் மாலை செச்சை - பொன் மாலையையும் வெட்சிப்பூவையும், கமழும் மணம் ஆர் கடப்பம் - பரிமளிக்கின்ற வாசனை பொருந்திய கடப்பமலர் மாலையையும், அணிவோனே - தரித்துக்கொண் டிருப்பவனே!, நெய்த்த வடி வேலா - நெய் பூசிய வடித்தெடுக்கப் பெற்ற வேலாயுதத்தை யுடையவனே!, அருண தளம் பாதம் பத்மம் அது - செவ்விய இதழ்களோடு கூடிய தாமரைமலரை நிகர்த்த திருவடிகளை, நிதமுமே துதிக்க - தினந்தினம் துதிக்கும்படி, அரிய தமிழ்தான் அளித்த - அருமை மிக்க தமிழ்க் கல்வியைத் தந்தருளிய, மயில் வீரா - மயில் வாகனத்தையுடைய வீரனே!, அநேகம் அதிசயம் - பல அற்புதங்கள், உற்ற பழநிமலை மீது - மேவிய பழநி மலையின்

மேல், உதித்த அழக - தோன்றிய அழகனே!, திருவேரகத்தின் முருகோனே - திருவேரகம் என்னும் திவ்விய திருத்தலத்தில் எழுந்தருளியிருக்கும் முருகோனே!, சரண கமல ஆலயத்தை - திருவடித் தாமரையாகிய கோயிலை, அரை நிமிஷநேர மட்டில் - அரைக்ஷண நேரவளவில் ஆயினும், தவம் முறை தியானம் - தவத்தின் முறையாகிய தியானத்தை, வைக்க அறியாத - வைத்தற்குத் தெரிந்து கொள்ளாத, சட கசட மூட மட்டி - வஞ்சகத்தையும் குற்றத்தையும் அறியாமையையும் உடைய மட்டியும், பவம் வினையிலே- பிறவிக்குக் காரணமாகிய வினையிலே, சனித்த - தோன்றிய, தமியன் - தனியானவனும் ஆகிய அடியேன், மிடியால் - தரித்திரத்தால், மயக்கம் உறுவேனோ - மயக்கத்தைப் பொருந்துவேனோ; கருணை புரியாது இருப்பது - (அடியேனுக்குக்) கிருபை புரியாமல் இருப்பதற்கு ஏற்றதாக, என குறை - என்ன குறையைச் செய்தேன்?, இவ்வேளை செப்பு - இப்பொழுது கூறி அருள்வீராக!, ஐயா - ஐயாவே!, தருணம் இது - இதுவே தகுதியான காலம்; மிகுத்த கனம் அது உற - மிகப் பெருமை பொருந்திய, நீள் சவுக்கியம் - மிகுந்த சவுக்கியத்தையும், சகல செல்வம் யோகம் - எல்லாச செல்வங்களும் பொருந்திய, மிக்க பெருவாழ்வு - மிகுந்த பெருவாழ்வையும், தகைமை சிவஞானம் - பெருமை வாய்ந்த சிவஞானத்தையும், முத்தி பரகதியும் - மோக்ஷமாகிய மேலான நிலைமையினையும், நீ கொடுத்து - தேவரீர் எனக்குத் தந்து, உதவி புரியவேணும் - உதவி செய்தருள வேண்டும், எ - று.

(வி - ரை.) சரண கமலாலயம் - 'ஆன்மாக்கள் சரண் அடைதற்குரிய பாததாமரை ஆகிய கோயிலை' என்றாலும் இழுக்காது. நிமிஷம் - 'நிமி' என்ற அசுரன் பெயரிலிருந்து வந்தது. "இவன் இமையில் இருந்துகொண்டு எல்லோரையும் இமைக்கும்படிச் செய்கின்றான்" என்றொரு புராண கதை கூறுவர். செப்பு - திசைச

சொல்; தெலுங்குச் சொல், 'சொல்' என்று பொருள். செச்சை - சந்தனக் குழம்பும் ஆம். தரித்திரம் வாட்ட மயங்குகின்றேன் என்பார் 'தமியன் மிடியால் மயக்கம் உறுவேனே' என்றார். குசேலரும்,

"தரித்திர மிக்க வனப்பினை ஒடுக்கிச்
சரீரத்தை உலர்தர வாட்டும்
தரித்திர மளவாச் சோம்பலை எழுப்பும்
சாற்றரு முலோபத்தை மிகுக்கும்
தரித்திரந் தலைவன் தலைவியர்க் கிடையே
தடுப்பருங் கலாம்பல விளைக்கும்
தரித்திர மவமா னம்பொய்பே ராசை
தருமிதிற் கொடியதொன் றிலையே."

என்றதால் அறியலாம்.

"திருவேரக முருகா! வினையினேன் தரித்திரப்பட்டு மயங்குகின்றேன்; கருணை புரிவாயாக" என வேண்டுகின்றார்.

---

## கதிர்காமம்

86. தனத்தா தனத்தா தனத்தா தனத்தா
தனத்தா தனத்தா தனதான.

சரத்தே யுதித்தா யுரத்தே குதித்தே
சமர்த்தா யெதிர்த்தே வருசூரைச்
சரிப்போ னமட்டே விடுத்தா யடுத்தாய்
தகர்த்தா யுடற்றான் இருகூறாச்
சிரத்தோ டுரத்தோ டறுத்தே குவித்தாய்
செருக்காய் பலத்தார் விருதாகச்

சிறைச்சேவல் பெற்றாய் வலக்கார முற்றாய்
திருத்தா மரைத்தாள் அருள்வாயே;
புரத்தார் வரத்தார் சரச்சே கரத்தார்
பொரத்தா னெதிர்த்தே வரும்போது
பொறுத்தார் பரித்தார் சிரித்தார் எரித்தார்
பொரித்தார் நுதற்பார் வையிலேபின்
கரித்தோ லுரித்தார் விரித்தார் தரித்தார்
கருத்தார் மருத்தூர் மதனைக்
கரிக்கோ லமிட்டார் கணுக்கா னமுத்தே
கதிர்க்கா மமுற்றார் பெருமானே.

(இ - ள்) புரத்தார் - திரிபுராதியர்கள், வரத்தார் - தாங்கள் அடைந்த சிறந்த வரங்களின் வல்லமையினால், சரம் சேகரத்தார் - அம்புகளைச் சேகரித்துக் கொண்டவராய், பொர எதிர்த்து வரும் போது - சண்டை செய்யும்படி எதிர்த்த காலத்தில், பொறுத்தார் பரித்தார் - பொறுத்துக்கொண்டும் தாங்கிக் கொண்டும் இருந்து, சிரித்தார் எரித்தார் - சிரித்து அந்த முப்புரங்களையும் எரிமடுத்து, பொரித்தார் - பொரி ஆகுமாறு செய்தவரும், நுதல் பார்வையில் - நெற்றிக் கண்ணின் திறப்பினால், பின் கருத்து ஆர் மருத்து ஊர் மதனை கரிகோலம் இட்டார் - பின்பு ஒரு காலத்தில் உலகத்தாருடைய எண்ணத்தில் பொருந்திய தென்றற் காற்றைத் தேராக ஊரும் மாரனை அழித்தவரும், கரித்தோல் உரித்தார் விரித்தார் தரித்தார் - யானையினது தோலை உரித்து விரித்து ஆடையாகத் தரித்துக் கொண்டவரும் ஆகிய சிவபெருமானுடைய, கண்ணுக்கு ஆன முத்தே - விழிகளுக்கு விருப்பந் தரும் முத்துப் போன்றவனே!, கதிர்காமம் உற்று ஆர் - கதிர்காமம் என்னுந் தலத்தில்

மட்டுப் பொற்கம லத்திற் சக்கிர
துத்திப் பைக்கொரு மித்துப் பட்டுடை
மருவு துடையிணை கதலி பரடுகொள்
கணையு முழவென சமட மெழுதிய
வட்டப் புக்கக மொத்துப் பொற்சர
ணைக்கிற் பிற்புற மெத்துக் கத்தைகள்
மயில்போலத்

தெருவில் முலைவிலை புரைசெய் தவரவர்
மயல்கொ டணைவர அருள்செய் தொழில்கொடு
கெட்டிப் பற்பல சொக்கிட் டிப்பொருள்
பற்றிக் கட்டில ணைக்கொப் பிப்புணர்
திலத மழிபட விழிகள் சுழலிட
மலர்க ளிணைகுழ லிடைகொள் துகில்பட
திக்கித் தப்பிதழ் வைத்துக் கைக்கொடு
கட்டிக் குத்துமு லைக்குட் கைப்பட
திரையி லமுதென கழையில் ரசமென
பலவின் சுளையென வுருக வயர்மயல்
சிக்குப் பட்டுடல் செட்டுச் சித்தமு
வெட்கித் துக்கமு முற்றுக் கொக்கென
நரைமேவிச்

செவிகொ டொளிர்விழி மறைய மலசல
மொழுக பலவுரை குழற கடிகொடு
தெக்கிப் பிக்கமு முற்றிக் கற்செய
லற்றுச் சிச்சியெ னத்துக் கைப்பட

சிலர்கள் முதுவுடல் இனவு பொழுதினி
லுவரி திறமுடை நமனு முயிர்கொளச்
செப்பற் றுப்பிணை — மொப்பித் துப்பெய
ரிட்டுப் பொற்பறை — கொட்டச் செப்பிடு
சென்ன மிதுவே அழுது முகமிசை
அறைய அணைபவ ரொடென சுடலையில்
சிற்றிக் குக்கிரை — யிட்டிட் டிப்படி
நித்தத் துக்கமெ — டுக்கிட் டுச்சட

முழல்வேனோ;

குருவி னுருவென அருள்செய் துறையினில்
குதிரை கொளவரு நிறைத வசிதலை
சொற்றப் பொற்பதம் — வைத்திட் டற்புத
மெற்றிப் பொற்பொரு — ளிட்டுக் கைக்கொரு
முதல்வ னிளகலை மதிய மடைசடை
அருணை யுறைமழு மருவு திருபுயர்
கொட்டத் துப்பார் — கெட்டுப் பொட்டெழ
விட்டத் திக்கனை — நக்கார்க் கற்புத
குமர னெனவிரு தொனியு முரசொடு
வளையு மெழுகட லதிர முழவொடு
கொட்டத் தட்டரை — வெட்டித் தடகட
ளொப்பத் திக்கும — டுத்துத் தக்கிட

அமர்மேவிக்

குருகு கொடிசிலை குடைகள் மிடைபட
மலைகள் பொடிபட வடுக ளுதிரிட

கொத்திச் சக்கிரி பற்றப் பொற்பரி
எட்டுத் திக்குமெ டுத்திட் டுக்ரால்
குமர குருபர குமர குருபர
குமர குருபர எனவொ தமரர்கள்
கொட்பப் புட்பமி றைத்துப் பொற்சர
ணைத்திற் கைச்சிரம் வைத்துக் கும்பிட
குலவு நரிசிறை கழுகு கொடிபல
கருட னடமிட குருதி பருகிட
கொற்றப் பத்திர மிட்டுப் பொற்கக
னத்தைச சித்தமி ரட்சித் துக்கொளு
மயில்வீரா!

சிரமொ டரணிய னுடல்கி ழியவொரு
பொழுதி னுகிர்கொடு அரிசெய நடமிடு
சிற்பத் திப்பதம் வைத்துச் சக்கர
வர்த்திக் குச்சிறை யிட்டுச சக்கிர
னறிய விழிகெட இருபத முமுல
கடைய நெடியவர் திருவு மழகியர்
தெற்குத் திக்கில ரக்கற் குச்சின
முற்றுப் பொற்றசர் தற்குப் புத்திரன்
செயமு மனவலி சிலைகை கொடுகர
மிருப தடைகிரி சிரமொர் பதுப்விழ
திக்கெட் டைக்கக னத்தார்க் குக்கொடு
பச்சைப் பொற்புய னுக்குச் சித்திர
மருகோனே!

திலத மதிமுக வழகி மரகத
வடிவி பரிபுர நடனி மலர்பதம்
சித்தர்க் குக்குறி    வைத்திட் டுத்தன
முத்துப் பொற்கிரி    யொத்துச் சித்திர
சிவங்கொள் திருசர சுவதி வெகுவித
சொருபி முதுவிய கிழவி யியல்கொடு
செட்டிக் குச்சுக    முற்றுத் தத்துவை
சிதறிற் சிற்பதகம்    வைத்துக் கற்புறு
திரையி லமுதென மொழிசெய் சவுரியி
னரிய மகளென புகழ்ப்பு விதகரில்
செப்புப் பொற்றன    முற்றப் பொற்குற
தத்தைக் குப்புள    மித்திட் டொப்பிய

பெருமாளே!

(இ - ள்.) குருவின் உரு என - குருவின் திரு உருவம் என்று சொல்லுமாறு, அருள் செய் - கிருபை புரிந்த, துறையினில் - திருப்பெருந்துறையில். குதிரை கொள வரும் - குதிரைகளைப் பெறுவதற்கு வந்த, நிறை தவசி - நிறைந்த தவத்தை யுடைய மணி வாசகப் பிரபுவினது, தலை - தலையின்மேல், கொற்றம் பொன் பதம் வைத்திட்டு - வெற்றி பொருந்திய பொன்போலும் திருத்தாள் களைத் தரித்து, அற்புதம் எற்றி - ஆச்சரியமான செயல்களைப் புரிந்து, பொன் பொருள் இட்டு - பொன்னினாகிய பொருளைத் திருப்பணியிலே செலவிட்டு, கைக்கொளும் - கைக்கொண்டருளிய, முதல்வர் - முதற் பொருளும், இளமை கலை மதியம் - இளமையையுடைய மூன்றாங்கலைச் சந்திரனை, அடை சடை - அடையும் சடையைப் பொருந்தியவரும், அருணை உழை மழு மருவு திருபுயர் - சிவந்தமானும் மழுவாயுதமும் மேவிய அழகிய திருக்கரங்

களை உடையவரும், கொட்டத்துப் புரர் - செருக்குக் கொண்ட திரிபுராதிகள், கெட்டு பொட்டு எழ விட்ட - அழிந்து பொடியாகுமாறு செலுத்திய, தீக்கணை - நெருப்பை ஒத்த பாணத்தையுடைய, நக்கர்க்கு - சிவபெருமானுக்கு, அற்புத குமரன் என - ஆச்சர்யமான திருப்புதல்வன் என்று சொல்லும், விருது ஒலியும் முரசொடு - வெற்றி முழக்கும் முரச வாத்தியத்துடன், வளையும் எழு கடல் முழவொடு அதிர - சங்கும் மத்தளமும் எழு கடல்களின் ஒலியைப் போன்று முழங்கா நிற்க, கொட்டத் துட்டரை வெட்டி - செருக்கமைந்த கொடிய அசுரர்களைக் கொன்று, தடம் கடல் ஒப்ப - அகன்ற ஆழியை நிகர்க்கும்படி, திக்கு மடுத்து தத்திட - எட்டுத் திசைகளிலும் நிறைந்து ததும்பும்படி, அமர் மேவி - யுத்தத்தைச் செய்து, குருகு கொடி - சேவற்கொடியும், சிலை குடைகள் மிடைபட - விற்களும் குடைகளும் நெருங்கவும், மலைகள் பொடிபட - மலைகள் எல்லாம் தூளாகவும், உடுகள் உதிரிட - நட்சத்திரங்கள் உதிர்ந்து விழவும், கொத்தி சக்கிரிபற்ற - கொத்திச் சர்ப்பத்தைப் பற்றிக்கொள்ள, பொன் பரி எட்டுத் திக்கும் எடுத்திட்டுக்கூவ - அழகிய மயூரமானது எட்டுத்திசைகளிலும் எடுத்துக்கொண்டு கூவ, குமர குருபர குமர குருபர குமர குருபர என ஓது அமரர்கள் - குமர! குருபர! குமர! குருபர! குமர! குருபர! என்று வாழ்த்தும் தேவர்கள், புட்பம் இறைத்து - பூக்களைத் தூவி, பொன் சரணத்தில் - அழகிய திருவடிகளில், கை சிரம் வைத்து கும்பிட - கரங்களைச் சிரசின்மீது வைத்துக்கொண்டு கும்பிட, நரி சிறை கழுகு கொடி பல கருடன் நடம் இட - நரிகளும் சிறகு அமைந்த கழுகுகளும் காக்கைகளும் பலவகைப்பட்ட பருந்துகளும் கூத்தாடவும், குருதி பருகிட - இரத்தத்தை அருந்தவும், கொற்றம் பத்திரம் இட்டு - வெற்றி வேலைச் செலுத்தி, பொன் ககனத்தை - அழகிய தேவலோகத்தை, நித்தம் இரட்சித்துக்கொள்ளும் - ஆசை வைத்துக்

காத்தருளிட, மயில்வீரா - மயிலின்மேல் ஏறும் வீரனே!, சிரமொடு இரணியன் உடல் கிழிய - இரணியனது சிரசுடன் உடல் கிழிவுண்டாம்படி, ஒரு பொழுதின் உகிர் கொடு - ஒரு நாளில் நகங்களைக் கொண்டு, அரி என நடம் இடு - சிங்கம் ஆக வந்து தோன்றி நடனம் புரிந்த, சிற்பத் திண் பதம் வைத்து - அழகிய வலிய திருவடிகளை வைத்தும், சக்கரவர்த்திக்கு சிறை இட்டு - மகாபலிச சக்கரவர்த்தியைச் சிறையில் வைத்தும், சுக்கிரன் அரிய விழி கெட - சுக்கிரபகவானுடைய அருமையான கண்கள் அழியவும், இரு பதமும் உலகு அடைய - இரண்டு திருவடிகளும் இரண்டு உலகங்களையும் அடையவும், நெடியவர் - திரிவிக்ரம வடிவத்தைக் கொண்டருளியவரும், திருவும் அழகியர் - திருமகளது அழகால் சிறந்தவரும், தெற்குத் திக்கில் - தென் திசையில், அரக்கர்க்கு சினம் உற்று - அரக்கர்கள் மீது சினங் கொண்டு, பொன் தசரதற்கு - அழகிய தசரத சக்கரவர்த்திக்கு, புத்திரன் - திருப்புதல்வன் ஆனவரும், செயமும் மனவலி கை சிலை கொடு - வெற்றியையும் மன வன்மையையும் கரத்தில் வில்லையும் கொண்டு, கரம் இருபது உடை - இருபது கரங்களை யுடைய, கிரி சிரம் ஓர் பதும் விழ - மலையை நிகர்த்த பத்துச் சிரங்களும் அறுபட்டு விழ, திக்கு எட்டைச் சகலத்தர்க்கு கொடு - திசைகள் எட்டையும் தேவர்களுக்குக் கொடுத்தருளியவரும் ஆகிய, பச்சைப் பொன் புயலுக்கு - பசுமைநிறம் அமைந்த அழகிய மேகவண்ணனாகிய திருமாலுக்கு, சித்திர மருகோனே - அழகு மேவிய மருமகனே!, திலக மதிமுக அழகி - திலகம் இட்ட திங்களை ஒத்த முகத்தையுடைய அழகியவளும், மரகத வடிவி - மரகதமணியை நிகர்த்த திரு உருவத்தை யுடையவளும்; பரிபுர நடனி - பரிபுரம் என்னும் காலணியை அணிந்துகொண்டு நடனம் புரிகின்றவளும், மலர்பதம் - தாமரைமலர் போன்ற திருவடிகளை யுடையவளும், சித்தர்க்கு குறி வைத்திட்டு - சிவபெருமானுக்குக் குறிப்பு வைத்து, முத்து - முத்து வடத்தைத் தரித்த,

பச்சை மூங்கிலோடு ஒப்பிட்டுப்பார்த்து, கமலக் கை பொன் துகிர் அனைய - பதும மலர்போன்ற கரங்களிலுள்ள அழகிய பவளத்தை ஒத்த, விரலொடு - விரலோடு, கிளிகள் முக நகம் எனவும் - கிளிகளின் முகத்தைப்போன்றுள்ள நகம் எனவும், இகலிய குவடும் இணை என - பகைத்த மலைகளும் ஒப்பென்று சொல்லுமாறு, வட்டத் துத்தி முகிழ்ப்ப - வட்டமாகிய தேமல்கள் பூப்ப, சக்கரம் வைத்து - சக்கரவாகப் பறவையை நிகர்த்து, பொன் குடம் ஒத்திட்டு-பொற் குடத்தையும் ஒப்பாகி, திகழ் முலை மேவும்-விளங்குகின்ற ஸ்தனங்களின்மீது பொருந்திய, வடமும் நிரை நிரை தாள பவளமொடு அசைய - வரிசையாகிய முத்துமாலையும் பவளமாலையும் ஆகிய இவைகள் அசையவும், பழு மர இலை வயிறு - பெரிய ஆலமரத்திலுள்ள இலையைப்போன்ற வயிறும், மயிர் அற்பத்துக் கிணை - சிற்றெறும்புக்கு ஒத்த மயிரொழுங்கும், பொற்பு தெப்பமும் அப்புக்குள் சுழி ஒத்து - அழகிய நாபியும் நீர்க்குள் எழும் சுழியை ஒத்தும், பொன் கொடி - பொற்கொடியையும், மதனன் உரு துடி மின்னல் எனும் இடையும் - மன்மதன் உருவையும் உடுக்கையையும் மின்னலையும் ஒத்த இடையையும், அரிய கடிதடம் - சொல்வதற்கரிய நிதம்பமும், அமிர்தம் - அமிர்தத்தையும், கழை ரசம் - கரும்புச் சாற்றையும், மட்டு - தேனையும், (ஒத்த சுவை பொருந்தி) பொன் கமலத்தில் - அழகமைந்த தாமரை மலரைக் காட்டிலும், சக்கிரி துத்தி பைக்கு ஒருமித்து - சர்ப்பத்தினுடைய பொறியோடுங் கூடிய படத்தினை நிகர்த்து, பட்டு உடை - பட்டாடையை, மருவு தொடை இணை கதலி - பொருந்திய வாழையைப் போன்ற இரு தொடைகளையும், பரடு கொள் கணையும் முழவு என - பரடு என்று கூறப்படும் முழங்காலும் மத்தளம் என்று கூற, கமடம் - ஆமையையும், வட்ட புத்தகம் ஒத்து - வட்டமாகிய புத்தகத்தை ஒத்து, பொன் சரணத்தின் - பொன்போன்ற பாதங்களின், பின் புறம் - பின் புறத்தில், எத்து-ஏமாற்றுகின்ற, தத்தை

கள் - கிளிகளைப் போன்றும், மயில்போல - மயில்களைப்போன்றும், தெருவில் - தெருவீதியில், முலை விலை உரை செய்து - ஸ்தனங்களின் விலையைக் கூறி, அவரவர் - அவரவர்கள். மயல் கொடு - மையலைக் கொண்டு, அணைவர அருள் செய் தொழில் கொடு - அணைந்து கருணை புரிகின்ற தொழிலைக்கொண்டு, தெட்டி - ஏமாற்றுதலைச்செய்து, பற்பல சொக்கு இட்டு - பற்பல விதமாகச் சொக்குப் பொடியினைத் தூவி, பொருள பற்றி - பொருளைக் கவர்ந்துகொண்டு, கட்டில் அணைக்கு ஒப்பி - கட்டிலில் அமளியில் அணைதற்கு ஒத்துக்கொண்டு, புணர - சேர்கின்ற, திலகம் அழிபட - நெற்றியிலிட்ட பொட்டு அழியவும், விழிகள் சுழலிட - கண்கள் சுழலாநிற்கவும், மலர்கள் இணை குழல் இடை கொள் - மலர்கள் சூடிய கூந்தலை இடையிலே கொண்ட, துகில்பட - ஆடை நழுவவும், தித்தி துப்பு இதழ் வைத்து - இனிக்கும் பவளம்போன்றுள்ள இதழ் வைத்து, கை கொடு - கையைக்கொண்டு, கட்டி குத்து முலைக்குள் கைப்பட - அணைத்துக் குத்துகின்ற தனங்களில் கரங்கள் அமைய, திரையில் அமுது என - ஆழியில் அமுதம்போலவும், கழையில் இரசம் என - கரும்பில் இரசம்போலவும், பலவின் சுளை என - பலாக்கனியின் சுளையைப்போலவும், உருக - மனம் உருகுமாறு. உயர்மயல் புக்குப் பட்டு - சிறந்த காமமயலில் சிக்கிக்கொண்டு, உடல் கெட்டு - உடம்பு கெட்டு, சித்தமும் வெட்கி - மனமும் வெட்கமடைந்து, துக்கமும் உற்று - விசனமும் உண்டாகி, கொக்கு என நரை மேவி - கொக்கின் சிறகைப்போன்ற மயிர் நரைத்து, செவியொடு ஒளிர் விழி மறைய - செவி கேளாமலும் ஒளியமைந்த கண்கள் தெரியாமலும், மலசலம் ஒழுக - மல மூத்திராதிகள் ஒழுகவும், பல உரை குழற - பலவிதமான சொற்களைக் குழறவும், தடி கொடு தத்தி - தடியைக் கரத்தில் பற்றித் தத்தி நடந்து, பித்தமும் முற்றி - பித்தமும் முதிர்ந்து, தன் செயல் அற்று - தன் இயல்பான செய்கைகள் நீங்கி, சிச்சி என திக்கப்பட - சிச்சி என்று எல்

லாருங் கூறித் துக்கப்பட, சிலர்கள் - சில பேர்கள், முது உடல் இளைவு பொழுதினில் - பழைய உடம்பைச் சூழ்கின்றபோது, உவர் நிறம் உடை - கரிய நிறம் பொருந்திய, சமனும் உயிர் கொள - யமனும் உயிரைக் கவர, செப்பு அற்று - வார்த்தை கூறாமல் ஒழிந்து, பிணம் ஒப்பித்து பெயர் இட்டு - பிரேதம் என்னும் பெயரை யிட்டு, பொன் பறை கொட்ட - அழகிய சாப்பறையை அடிக்க, செப்பிடு செனனம் இது என அழுது - நாம் சொல்லும் பிறப்பின் லக்ஷணம் இதுவென்று புலம்பி, முகம் மிசை அறைய - முகத்தின் மீது அறைந்துகொண்டு, அணைபவர் எடு என - வந்தவர்கள் எடுங்கள் என்று கூற, சுடலையில் - சுடுகாட்டில், சிற்றிக்கு இரை இட்டிட்டு - சிறிய தீக்கு இரையாக்கி, இப்படி - இவ்விதம், நித்தம் - தினமும், துக்கம் எடுத்திட்டு - துக்கம் கொண்டாட, சடம் உழல்வேனோ - உடம்பால் துன்பம் உறுவேனோ? எ - று.

(வி - ரை) மருவு கடல் முகில் - கடலிற் பொருந்தி நீருண்ட மேகம்; இது கூந்தலுக்கு உவமம். கத்தரி-மயிர் குறை கருவி; இது காதுக்கு உரு உவமம். கிளிகள் முக நகம் - கிளி மூக்கை ஒத்த நகம். துத்தி - இது ஒருவகைச் செடிக்கு ஆய், பின் அது அதன் பூவுக்கு ஆய், அதன் பின் அதுபோன்ற தேமலுக்கு ஆயிற்று; இது ஆகு பெயர். தேமல் பூத்த முலை என்க. மதனனுருவு - இல்லாமை; அதாவது, உண்டோ இன்றோ என்னும் இடை; இந்திர ஜாலம் போன்ற இடை. துடி - இது ஒரு வாத்தியக் கருவி; இதனை உடுக்கை என்பர்.

"படிக நிறமும் பவளச்செவ் வாயும்
கடிகமழ்பூண் தாமரைபோற் கையும்—துடியிடையும்
அல்லும் பகலும் அனவரத முஞ்சொன்னாற்
கல்லுஞ்சொல் லாதோ கவி."

என்ற கம்பர் வாணி வணக்கத்தாலும் அறியலாம்.

துறை - திருப்பெருந்துறை. இதனை,

"எந்தை இருந்த பெருந்துறையே"

என்றதாலும் அறிக.

குறிமை கொளவரு சிறை தவிர் - மணிவாசகர். 'சுக்கிரன் அரிய விழியிடை' என்றது திருமால் வாமனராக வந்து மாவலிச் சக்கரவர்த்தியிடம் மூன்றடி மண் யாசித்தபோது அவன் குருவாகிய சுக்கிரன் வேண்டாமெனத் தடுத்தான். தடுத்தும் கேளாது வாக்குக் கொடுத்தான். 'அது கூடாது' தாரை வார்த்துக் கொடுக்கவேண்டும்,' என்று வாமனமூர்த்தி கேட்க, தன் கையிலுள்ள கெண்டிகைச் செம்பிலுள்ள நீரால் தாரை வார்த்தான். உடனே சுக்கிரன் வண்டாகக் கெண்டிகையில் தூம்பை அடைத்துக் கொண்டார். இது அறிந்த நாரணர் தன் கையிலிருந்த தருப்பையால் கெண்டிகைச் செம்பின் மூக்கிலுள்ள தூம்பைக் குத்தினர். உடனே உள்ளே வண்டாக அடைந்திருந்த சுக்கிரன் விழியிற் பட்டு ஒரு கண் பொட்டையாயிற்று; பின் தண்ணீர் வடிந்தது. தண்ணீர் தன் கையில் வந்ததும் வாமனராயிருந்த நாரணர் திரிவிக்ரம சொரூபராகி, ஓரடியில், புவியையும், மற்றோரடியால் விண்ணையும் அளந்துகொண்டு, மூன்றாவதடிக்கு இடமின்மையால் மாவலி தலையிற் கால் வைத்து அவனைப் பாதாளஞ் சேர்த்தார் என்பது புராண கதை.

"சிவபெருமான் புத்திரனே! நாரணன் மருகனே! உமைபாலா! வள்ளியார் மணவாளா! முருகா! அடியேன் பிறந்து மாதர் மயக்கில் சொக்கி அழிந்துபோகாதபடி நின்பதம் துதித்து முத்தியடைய அருள்செய்" என வேண்டுகின்றார்.

போது

88. தத்தனா தான தத்தனா தான
தத்தனா தான தன தான.

சுட்டதுபோ லாசை விட்டுலகா சார
துக்கமிலா ஞான சுகமேவிச்
சொற்கரணா தீத நிற்குணமூடாடு
சுத்தநிரா தார வெளிகாண
மொட்டலர்வா ரீச சக்கரசடா தார
முட்டவுமீ தேறி மதிமீதாய்
முப்பதுமா றாறு முப்பதும் வே றான
முத்தியவா யா மோனம் அடைவேனோ;
எட்டவொணா வேத னத்தொடுகோ கோவெ
னப்பிரமா ஓட வரைசாய
எற்றியவே ழாழி வற்றிடமா றாய
எத்தனையோ கோடி அசுரேசர்
பட்டொருசூர் மாள விக்ரமவே லேவு
பத்திருதோள் வீர! தினைகாவல்
பத்தினிதோய் முத்தமாறாத
பத்திசெய்வா ரோடு பெருமாளே.

(இ - ள்.) எட்ட ஒணா - சுகம் கிட்டுதற்கு முடியாத, வேதனத்தொடு - வருத்தத்தோடு, பிரமா - பிரமன், கோ கோ என ஓட - கோ கோ என்று அலறி ஓடவும், வரை - மலைகள், சாய - சாய்ந்து விழவும், எற்றிய ஏழ் ஆழி - அலை மோதுகின்ற ஏழு கடல்கள், வற்

றிட - வறண்டுபோகவும், மாறு ஆய - தன்னோடு பகைத்த, எத்தனையோ கோடி அசுரர் - எத்தனையோ கோடிக் கணக்கான அசுரத் தலைவர்கள், பட்டு - அழிந்து, ஒரு சூர் மாள - ஒப்பற்ற சூரபத்மன் மடியவும், விக்கிரம வேல் - மிகுந்த வீரம் அமைந்த வேலாயுதத்தை, விடு - செலுத்தும்படியான, பத்து இரு தோள் வீர - பன்னிரண்டு தோள்களையுடைய வீரனே!, தினைகாவல் - தினைப் புனத்தைக் காவல் செய்துகொண் டிருந்த பத்தினி தோள் - பத்தினியாகிய வள்ளி அம்மையாரது தோள்களை, தோயும் - அணைகின்ற, உத்தம உத்தமனே!, மாறாது - எப்பொழுதும் மாறுபடாமல், பத்தி செய் - அன்பு செய்கின்ற, வான் நாடர் பெருமானே - வான லோகத்தவர்களுக்குப் பெருமானே!, சுட்டதுபோல் - சுட்ட பொருள் கைவிடப்படுதல்போல, ஆசையை விட்டு - ஆசையை நீக்கி, உலக ஆசாரம் - உலக ஆசாரத்தையும், துக்கம் இலா - துக்கமும் இல்லாத, ஞானசுகம் மேவி - ஞானத்தால் கிடைக்கும் சுகத்தைப் பொருந்தி, சொல் கரண அதீத - வாக்குக்கும் மனத்திற்கும் எட்டாத, நிர்க்குணம் ஊடாடும் - நிர்க்குணம் அமைந்த, சுத்த நிராதார வெளி - சுத்தமான ஆதாரமற்ற வெளியாகிய துவாத சாந்தத்தை, காண - காண்பதற்கு, மொட்டு அலர் வாரிசம் - அரும்பு விரிந்த கமலங்களையும், சக்ர சட் ஆதாரம் - சக்கரங்களையுடைய ஆறு ஆதாரங்களையும், முட்டவும் - முழுதும், மீது ஏறி - அதன்மேற் சென்று, மதி மீது ஆய் - சந்திர மண்டலத்தில் சேர்ந்து, முப்பதும் ஆறு ஆறும் முப்பதும் - தொண்ணூற்றாறு தத்துவங்களுக்கும், வேறு ஆன - மாறாயுள்ள, முத்திரையாம் மோனம் - சின்முத்திரையாகிய மௌனநிலையை, அடைவேனோ - அடியேன் பெறுவேனோ! எ - று.

(வி - ரை) உலக ஆசாரம் - உலக சம்பந்தமான ஒழுக்கம்; இதனை 'லௌகிகம்' என்பர். மற்றொன்று வேத சம்பந்தமாகிய ஆசாரம்; அதுதான் ஞான ஆசாரம்; இதுவே 'வைதிகம்' எனப்

படும். இவ்விரண்டிற்கும் மேம்பட்டு நிற்பது தவம். ஞானசுக மேவி – 'ஞானமாகிய சுகத்தைப் பெற்று' என்பது பொருள். ஞானம் பெறுதலே சுகம்; ஞானம் இன்மையே துக்கம். இதனாலன்றே பெரியாரும்,

"ஞானிக்கில்லை இன்பமுந் துன்பமும்." என்றார்.

சொற்கரணாதீதம் – 'வாக்கு மனங்களுக்கு எட்டா' என்பது பொருள்; 'சொல்லப்படும் மனம் வாக்கு முதலிய முக்கரணங்களுக்கும் அப்பாற்பட்ட' என்பது பொருள்; இதுவே பொருளின் இலக்கணம். இதனாலன்றே செம்பொருளுக்கு – ஞானப் பொருளுக்கு, மெய்ப் பொருளுக்குக் 'கடவுள்' என்ற பெயர் ஏற்பட்டது. (கட + உள்) 'உள்ளுதலைக் கடந்தவன்' என்பது பொருள்; 'மனத்துக்கு எட்டாதவன், தட்டாதவன்' என்பதாம். மனத்திற்கே தட்டாதபோது வாக்கு முதலியவற்றிற்குத் தட்டாமை தானே அமைதரும்.

(1) மூலாதாரம், (2) சுவாதிஷ்டானம், (3) மணிபூரகம், (4) அநாகதம் (5) விசுத்தி, (6) ஆஞ்ஞை என்பன ஆறாதாரங்கள்.

"வள்ளி நாயகனே! புள்ளி மயிற் சேவகனே! ஒள்ளிய யோகத்திலே எள்ளிவிடா தடியேற்கு அள்ளிக்கொளும் அழகா! அருள் செய்வாயே" என வேண்டுகின்றார்.

---

## திருக்குறட்டி

89. தானதன தத்ததான தானதன தத்ததான
தானதன தத்ததான தனதான.

நீரிழிவு குட்டமீளை வாதமொடு பித்தமூலை
நீள்குளிர் வெதுப்புவேறு முளநோய்கள்

சான்ற கலைஞானத்தை உணர்ந்தவளும், நாக வாள் நுதல்-இமோற் பருவதராஜன் மகளாகிய ஒளி வாய்ந்த நெற்றியை உடையவளும் ஆன உமாதேவியார், அளித்த - பெற்றருளிய, வீர - வீரனே,! மயிலோனே - மயில் வாகனத்தை உடையவனே!, மாடம் மதில் - மாடங்களையும் மதில்களையும், முத்து மேடை - தரள மேடைகளையும், கோபுரம் - நகர வாயில்களையும் உடைய, மணத்த சோலை - நறுமலர் கமழும் சோலைகள் சூழப்பெற்ற, வாகு உள குறட்டி-அழகிய குறட்டி என்னும் திவ்விய தலத்தில் மேவும் பெருமாளே - வீற்றிருக்கும் பெருமானே!, நீரிழிவு - நீரிழிவும், குட்டம் - குட்டரோகமும், ஈளை - இருமலும், வாதமொடு பித்தம் - வாதத்தோடு பித்தமும், நீள் குளிர் வெதுப்பு - நீண்ட குளிர் மிகுந்த ஜுரமும், வேறும் உள நோய்கள் - இவைகள் அல்லாமல் மற்றும் உள்ள நோய்களும், சேர் உற - சேர அமைந்த, புழுக்கள் கூடு - புழுக்கள் வசிக்கின்ற கூண்டும், நான்முகன் - வேதன், எடுத்த வீடு - கட்டிய வீடும், நீடிய இரத்தம் மூளை - அதிகமாகிய இரத்தமும் மூளையும், தசை தோல் சீ - மாம்சமும் தோலுஞ் சீயுமாகிய, பாரிய நவத்துவாரம் நாறும் - பெரிதாகிய ஒன்பது வாயில்களும் நாறுகின்ற, மும்மலத்தில் - மூன்று மலங்களாலாகிய, ஆறு பாய் - நதி பெருக, பிணி இயற்று - நோயை உண்டு பண்ணுகிற, பாவை - பொம்மையும், நரி நாய் பேய் - நரியும் நாயும் பேயும், பாறொடு கழுக்கள் - பருந்துகளோடு கழுகுகளும், கூகை நாம் - கோட்டான்களும், (ஆகிய) இவை புசிப்பது ஆன - இவைகளால் உண்ணப்படுவதான, பாழ் உடல் எடுத்து - பயன்படாத உடலை அடைந்து, வீணில் உழல்வேனோ. பயனின்றித் (திருமுருகா!,) தேவரீரது திருவருளுக்குப் பாத்திரனாகாமல் வருந்துவேனோ? என-று.

(வி - ரை.) குட்டம் - குஷ்டரோகம்; இது ‘வடமொழிச் சிதைவு’ என்பர். ‘நோய் - துன்பத்தை உண்டாக்குவன’ என்பது

## பொது

90. தனதன தானத் தானன தனதன தானத் தானன
தனதன தானத் தானன தனதான.

முருக!ம யூரச் சேவக! சரவண! எனற் பூதரி
முருகுளப டீரக் கோமள முலைமீதே
முழுகிய காதற் காமுக! பதிபசு பாசத் தீர்வினை
முதியபு ராரிக் கோதிய குருவே!என்
றுருகியு மாடிப் பாடியு மிருகழல் நாடிச் சூடியு
முணர்வினொ டூடிக் கூடியும் வழிபாடுற்
றுலகின ராசைப் பாடற நிலைபெறு ஞானத் தாலினி
உனதடி யாரைச் சேர்வது மொருநாளே;
மருகனெ னாமற் சூழ்கொலை கருதிய மாமப் பாதகன்
வரவிடு மாயப் பேய்முலை பருகாமேல்
வருமத யானைக் கோடவை திருகிவி ளாவிற் காய்கனி
மதுரையில் வீழச் சாடிய சதமாபுட்
பொருதிரு கோரப் பாரிமருதிடை போயப் போதொரு
விளையாடிச் சகடுதை யாமற் போர்செய்து
பொதுவியர் சேரிக் கேவளர் புயல்மருகா! வஜ்ராயுத
புரமதில் மாபுத் தேளிர்கள் பெருமாளே!

(இ-ள்.) மருகன் எனாமல் சூழ் கொலை கருதிய - தன்னுடைய மருமகன் என்பதும் கவனியாமல் தந்திரத்தால் செய்யப்படும் கொலையை நினைந்த, மாமன் பாதகன் வரவிடும் - மாமனாகிய பாவி கஞ்சன் என்பான் செலுத்திய, மாயம் பேய் முலை பருகா -

மாயையாகிய பேயின் வடிவங்கொண்ட பூதகியின் முலையை அருந்தி, மேல் வரும் மதயானை கோடு அவை திருகி - மேலே (பகைத்து) வரும் (குவலயாபீடம் என்னும்) மதங்கொண்ட (பட்டத்து) யானையின் கொம்புகளை உடைத்து, விளாவில் காய் கனி மதுகையில் வீழச் சாடிய - (வஞ்சனையால் ஓர் அசுரன் விளாமரமாக நிற்க அங்கு) விளாமரத்தில் உள்ள காய்கனிகளை வன்மையினால் (கன்று கொண்டு) விழும்படி வீசிய, சகடா புள் பொருது - ஊற்றக் கனைக்கான வண்டிக்கோலமும் பறவைக்கோலமும் யுத்த மியற்றியும், இரு கோரம் பாரிய மருது இடை போய் - இரண்டு பயங்கரமான பெரிய மருதமரத்தின் மத்தியிற் போய், அப்போது ஒரு சகடு உதைத்த - அந்தச் சமயத்தில் ஒரு சக்கர வடிவு பொருந்தி வந்த அசுரனை உதைத்து, மல் போர் செய்து விளையாடி - மல் யுத்தத்தைச் செய்து விளையாடிக்கொண்டும், பொதுவியர் சேரிக்கு வளர் புயல் மருகா - இடையர் சேரியில் வளர்ந்துவந்த மேகம்போன்ற நிறத்தோடுங் கூடிய திருமாலுக்கு மருமகனே!, வஜ்ராயுத புயம் அளி - வஜ்ராயுத கரத்தில் வாழ்கின்ற, மா புத்தேளிர்கள் பெருமானே - சிறந்த தேவர்களுக்குத் தலைவனே!, முருக - முருகனே!, மயூரம் சேவக - மயிலின்மேல் ஏறும் வீரத்தொழில் உடையவனே!, சரவண - சரவண மடுவில் உற்பவித்தவனே! எனல் பூதரி - தினை வளரும் மலை நாட்டில் வளர்ந்த வள்ளி அம்மையாரது, முகுளம் படீரம் கோமளம் முலையீது - தாமரை அரும்பை ஒத்த சந்தனம் பூசப்பெற்ற இளைய தனங்களின்மேல், முழுகிய காதல் காமுக - முழுகியுள்ள காதல் மிகுந்த காமுகனே!, பதி பசு பாசம் தெரிவினை - பதி பசு பாசங்களின் உண்மைப் பொருளை, முதிய பராபரர்க்கு ஓதிய குருவே - பழமையான சிவபெருமானுக்கு உபதேசஞ் செய்த குருவே!, என்று உருகியும் ஆடிப் பாடியும் - என்று கூறிக் களித்து ஆடியும் பாடியும், இரு கழல் நாடி சூடியும் - இரண்டு திருவடிகளையும் விரும்பிச் சூடியும், உணர்வினோடு ஊடி

கூடியும் - ஞான உணர்ச்சியினோடு கூடியுங் கூடியும், வழிபாடு உற்று - வழிபடுதலைப் பொருந்தி, உலகினர் ஆசைப்பாடு அற-உலகத்தார் ஆசைப்படுதல் ஒழிய, நிலைபெறு ஞானத்தால் - நிலைபெற்றுள்ள பெரிய ஞான உணர்வினால், இனி - இனிமேல், உனது அடியாரைச் சேர்வதும் ஒருநாளே - தேவரீருடைய அடியவர்களைச் சேர்வதாகிய ஒரு நாளும் உண்டோ? எ - று.

(வி - ரை) பூதரி - மலையில் வளர்பவள்; பூதரம் - மலை. முகுளம் - அரும்பு; ஈண்டு தாமரை அரும்பைக் குறித்தது; 'கோங்கரும்பு' எனினும் ஒக்கும்.

சிவபெருமானுக்கு உபதேசித்தருளிய பிரணவம் பதி பசு பாசம் என்னும் முப்பொருள் உண்மை ஆதலின் 'பதி பசு பாசத் தெரிவினை முதிய புராரிக்கோதிய குருவே' என்றார். பதி - கடவுள், பசு - ஆன்மா, பாசம் - பசுவானது பதியை அறியாதபடி இடை நின்று மறைக்கும் மறைப்பு. உன் அடியாரைச் சேரின் அறியாமையும் துன்பமும் நீங்கி உன்னை பெற்று வீடுபேறு அடைவேன் என்பார். 'நிலைபெறு ஞானத்தால் இது உனது அடியாரைச் சேர்வதும் ஒரு நாளே' என்றார். குருலிங்க சங்கம பத்திகளில், 'சங்கம பத்தி' என்பர். இதனாலன்றோ தாயுமானவரும்,

"கண்ணுவார் தேறுமுனைக் கைகுவியா ராயினந்த
மண்ணுவார் நட்பை மதியேன் பராபரமே."

"அன்பர்பணி செய்யவென்னை ஆளாக்கி விட்டுவிட்டால்
இன்பநிலை தானேவந் தெய்தும் பராபரமே."

என்றார்.

'மெய்ம்முலை பருகா' என்றது, கண்ணன் பூதகி முலையை உண்டு அவளைக் கொன்ற கதையைக் குறித்தது. 'வருமத யானைக் கோட்டை திருகி,' என்றது கம்சனின் குவலயாபீடம் என்னும்

பட்டத்து யானையைக் கண்ணபிரான் கொன்ற கதையைக் குறித்தது.

'விளாவிற் காய்கனி யுதிர்கையில் வீழச் சாடிய' என்றது, ஒரு அசுரன் விளாமரமாகவும், மற்றும் ஒரு அசுரன் கன்றாகவும் நின்ற போது, கன்றின் காலை வாரி விளாமரத்தில் அடிக்க இரு அசுரரும் மடிந்தனர். இவையும் கஞ்சன் வஞ்சனையால் நிகழ்ந்தனவே.

'மருதிடை போய்' என்றது நளகூபர்களின் சாபத்தைக் கண்ணன் நீக்கிய கதையை.

'சகடுதையாமற் போர் செய்து' என்றது, கம்சன் ஏவிய சகடாசுரனை மாய்த்த கதையை.

"முருகக் கடவுளே! அடியேனை நின் அடியார் கூட்டத்திற் சேர அருள்" என வேண்டுகின்றார்.

---

## திருவாலங்காடு

91. தனதன தானந் தாத்த தனதன தானந் தாத்த
தனதன தானந் தாத்த . தனதான.

வடிவது நீலங் காட்டி முடிவுள காலன் கூட்டி
வரவிடு தூதன் கோட்டி விடுபாசம்
மகளொடு மாமன் பாட்டி முதலுற வோருங் கேட்டு
மதிகெட மாயந் தீட்டி யுயிர்போமுன்
படிமிசை தாளுங் காட்டி யுடலுறு நோய்பண் டேற்ற
பழவினை பாவந் தீர்த்துன் அடியேனைப்
பரிவொடு நாளுங் காத்து விரிதமி ழாலங் கூர்த்த
பரபுகழ் பாடென் றாட்கொ டருள்வாயே;

முடிமிசை சோமன் சூட்டி வடிவுள ஆலங் காட்டில்
முதிர்நட மாடுங் கூத்தர் புதல்வோனே!
முருகவிழ் தாருஞ் சூட்டி யொருதனி வேழங் கூட்டி
முதல்மற மானின் சேர்க்கை மயல்கூர்வாய்!
இடியென வேகங் காட்டி நெடிதரு சூலந் தீட்டி
யெதிர்பொரு சூரன் தாக்க வரஎகி
இலகிய வேல்கொண் டார்த்து உடலிரு கூறன் றாக்கி
யிமையவ ரேதந் தீர்த்த பெருமாளே!

(இ - ள்) முடிமிசை சோமன் சூட்டி - திரு முடியின்மீது சந்திரனைச் சூடிக்கொண்டு, வடிவு உள ஆலங்காட்டில் - அழகு மிக்குள்ள திருவாலங்காடு என்னும் திவ்விய தலத்தில், முதிர் நடம் ஆடும் கூத்தர் புதல்வோனே - ஆநந்தம் மிகும் ஞான நடனத்தைச் செய்தருளும் சிவபெருமானுக்குப் புத்திரனே!, முருகு அவிழ் தாரும் சூட்டி - வாசனையை வீசுகின்ற மலர் மாலையையும் தரித்தும், ஒரு தனி வேழம் கூட்டி - ஒரு ஒப்பற்ற யானையைக் காணுமாறு தருவித்தும், முதல் மறம் மானின் சேர்க்கை மயல் கூர்வாய் - முதன்மையான வேடர் குலத்து வளர்ந்த மான்போன்றவள் ஆகிய வள்ளி அம்மையாரின் மணத்துக்குக் காம மயக்கங் கொண்டவனே!, இடி என வேகம் காட்டி - இடி ஒப்பு என்று கூறும்படி வேகத்தைக் காட்டியும், நெடிதரு சூலம் தீட்டி - நீண்டதாகிய சூலாயுதத்தைத் தீட்டிக்கொண்டும், எதிர் பொரு சூரன் தாக்க வர, எகி இலகிய வேல் கொண்டு ஆர்த்து - எதிரே போரைச் செய்யும் சூரன் தாக்குதற்கு வர, எதிரே சென்று விளங்கிக்கொண்டிருக்கும் வேலாயுதத்தை எடுத்துக்கொண்டு ஆரவாரித்து, உடல் இரு கூறு அன்று ஆக்கி - உடலை இரண்டு கூறாக்கி அவன் இல்லை என்றாகும்படியும் செய்து, இமையவர் ஏதம் தீர்த்த பெருமாளே -

தேவர்களது துன்பத்தைத் தீர்த்தருளிய பெருமானே!, வடிவது நீலம் காட்டி - நீல நிறம் வாய்ந்த உருவத்தைக் காட்டி, முடிவு உள காலன் - ஆயுள் முடியுங் காலத்து உள்ளவனாகிய எமன், கூட்டி வரவிடு தூதன் - என் உயிரைக் கட்டிக்கொண்டு வரும்படி அனுப்பப்பட்ட தூதன், கோட்டி விடு பாசம் - வளைத்துப் பற்று மாறு வீசும் பாசக்கயிற்றை, மகனொடு மாமன் பாட்டி முதல் உறவோடும் - புத்திரனொடு மாதுலன் பாட்டி முதலான சுற்றத்தாரும், கேட்டு மதி கெட மாயம் தீட்டி உயிர் போம் முன் - கேட்டு அறிவானது கெட்டுப் போம்படி மாயத்தை இயற்றிப் பிராணனானது போவதற்கு முன்னால், படியிசை தாளும் காட்டி - இத் தரையில் நாயேனுக்குத் திருப்பாத மலரையும் காட்டியருளி, உடல் உறு நோய் - தேகத்திலே சார்ந்த நோயையும், பண்டு எற்ற பழவினை பாவம் - முன்னமே செய்து கொண்ட பழைய வினைகளினால் வரும் பாவத்தையும், தீர்த்து உன் அடியேனை - நீக்கி உனது அடியேனாகிய என்னை, பரிவொடு நாளும் காத்து - விருப்பத்தோடு என்றுங் காத்தருளிச் செய்து, விரி தமிழால் - பல துறைகளாக விரிந்திருக்கும் தமிழினால், அம் கூர்த்த பரம் புகழ்பாடு என்று - அழகு மிகுந்த மேலான புகழைப் பாடு என்று, ஆட்கொண்டு அருள்வாய் - அடியேனை ஆட்கொண்டு அருள் செய்வாய், எ - று.

(வி - ரை) 'வடிவது' என்பதன் கண் நின்ற 'அது' பகுதிப்பொருள் விகுதி. 'முடிவுள காலன் - ஜீவன்களின் முடிவுக் காலத்துக்கு உரியவனாகிய யமன்' என்பது பொருள். படி - புவி; 'படிந்திருப்பது' என்ற பொருளில் வந்தது. விரி தமிழ் - ஐவகை இலக்கணக் கடல்களால் விரிந்துள்ள தமிழ்; இது 'வினைத் தொகை' என்பர்.

முடியிசை சோமன் சூட்டி வடிவுற ஆலங்காட்டில் முதிர் நடம் ஆடுங் கூத்தர் - சிரசின்மீது சந்திரனைச் சூடிக்கொண்டு அழகாக

ஆலங்காட்டில் ஞான முற்றிய நடம் ஆடும் கூத்தர்' என்பது பொருள்; இதில் 'வஸ்திரத்தைத் தலையில் கட்டிக்கொண்டு அழகாக ஆலங்காட்டில் ஆடுகின்ற சிவபெருமான்' என்று சிலேடையாக வேடிக்கைப் பொருள் தருதலுங்காண்க. சோமன் - சந்திரன், வஸ்திரம். ஆடுபவர் மேலேயுள்ள வஸ்திரத்தை தலையிற் கட்டிக் கொண்டு ஆடுவர்.

"வேலாயுதக் கடவுளே! எமன் வந்து என்னுயிரைக் கொண்டு போதற்கு முன் நின் திருப்பாதங் காட்டி, என் பழவினைகளைத் தீர்த்து அருந் தமிழால் உன்னைப்பாட அருள் செய்வாய்" என்று வேண்டுகின்றார்.

---

## திருப்பழநிமலை

92. தனன தனன தனன தனன
தனன தனன தனதான.

தமரு மமரு மனையு மினிய
தனமு மரசும் அயலாகத்
தறுகண் மறலி முறுகு கயிறு
தலையை வளைய எறியாதே
கமல விமல மரக தமணி
கனக மருவும் இருபாதம்
கருத அருளி யெனது தனிமை
கழிய அறிவு தரவேணும்;
குமர! சமர முருக! பரம!
குலவு பழநி மலையோனே;

கொடிய பகடு முடிய முடுகு
குறவர் சிறுமி மணவாளா!
அமர ரிடரும் அவுண ருடலும்
அழிய அமர்செய் தருள்வோனே!
அறமு நிறமும் அயிலு மயிலும்
அழகு முடைய பெருமாளே!

(இ-ள்) குமர-குமரனே!, சமர முருக-போர் செய்யும் முருகனே!, பரம-மேலானவனே!, தலவ பழநிமலையோனே - மேலாக விளங்கும் பழநிமலையைத் திவ்விய தலமாகக் கொண்டவனே!, கொடிய பகடு முடிய - வெவ்விய யானைகள் அழியும்படி, முடுகு குறவர்-சேனையைச் செலுத்தும் வேடர்கள், சிறுமி மணவாளா வளர்த்த வள்ளி நாயகியாரின் மணவாளனே!, அமரர் இடரும் அவுணர் உடலும் அழிய-தேவர்களுக்கு உண்டான துன்பமும் அசுரர்களுடைய தேகமும் தீர மட்டாகக் கெடுமாறு, அமர்செய்து அருள்வோனே - சமரைச் செய்து அருளியவனே!, அறமும் நிறமும்-தருமத்தையும் பிரகாசத்தையும், அயிலும் மயிலும் - வேலாயுதத்தையும் மயில் வாகனத்தையும், அழகும் உடைய பெருமாளே - அழகையும் உடைய பெருமானே!, தமரும் அமரும் மனையும் - சுற்றத்தினரும் பொருந்தி வாழ்தற்கு உரிய வீடும், இனிய தனமும் அரசும் - இனிதாகிய செல்வமும் ஆளும் அரசாட்சியும், அயல் ஆக - வேறாகப் பிரிந்து ஏக, தறுகண் மறலி - பயமில்லாத யமன், முறுகு கயிறு - தன்னுடைய முறுக்குடைய பாசக் கயிற்றை, தலையை வளைய எறியாது - தலையைச் சுற்றி வீசாதபடி, கமலம் - செந்தாமரை மலரை ஒத்த, விமலம் மரகதம்மணி - பரிசுத்தமான மரகத ரத்தினத்தின் பிரகாசத்தையும், கனகம் மருவும் - பொன்னின் பிரகாசத்தையும் பொருந்தியுள்ள, இரு பாதம் - இரண்டு

திருப்பாதங்களையும், கருத அருளி - சிந்தை செய்வதற்கு அருளிச் செய்து, எனது தனிமை கழிய - அடியனேன் தனியனாக இருக்கும் நிலைமை ஒழிய, அறிவு தரவேணும்-மெய்ஞ் ஞானத்தைத் தரவேண்டும், எ - று.

(வி - ரை) தமர் - 'தம் என்ற பகுதி அடியாகப் பிறந்த பெயர்' என்பர். இனிய தனமும் - இன்பத்தைத் தரும் பொருள்; அறவழியில் வந்த பொருளென்பார் 'இனிய தனம்' என்றார் 'அரசும்' என்றதில் உள்ள உம்மை உயர்வு சிறப்பும்மை. தறுகண் - அஞ்சாமை;

"தறுகண் யானை தான்பெரி தாயினும்
சிறுகண் மூங்கிற் கோற்கஞ் சும்மே."

என்ற அதிவீரராமபாண்டியர் வாக்குங் காண்க.

மறலி - 'உயிரைக் கவரும் வலிமை உடையவன்' என்பது பொருள். விமலம் - பரிசுத்தம். மாகதமணி மருவு பாதம் - வள்ளி அம்மையார் பாதம். கனகம் மருவு பாதம் - தேவகுஞ்சரியார் பாதம்.

"வள்ளியம்மை மணாளனே! நினது மனைவியர் பாதங்களைக் கருதும் அருள் தந்து என் தனிமை தவிர்த்து அறிவு தரவேண்டும்" என்று வேண்டுகின்றார்.

---

## திருக்குராவடி

93. தனத்த தானன தனதன தனதானா.

மருக்கு லாவிய மலரணை கொதியாதே
வளர்த்த தாய்தமர் வசையது மொழியாதே
கருக்கு லாவிய அயலவர் பழியாதே
கடப்ப மாலையை யினிவர விடவேணும்;

தருக்கு லாவிய கொடியிடை மணவாளா!
சமர்த்த னேமணி மரகத மயில்வீரா!
திருக்கு ராவடி நிழல்தனில் உறைவோனே!
திருக்கை வேல்வடி வழகிய பெருமாளே!

(இ - ள்) தருகுலாவிய - கற்பக மரங்களைச் சுற்றிப் படர்ந்து விளங்கும், கொடி இடை மணவாளா - காமவல்லிக் கொடி போன்ற இடையையுடைய தேவகுஞ்சரியாருக்கு மண நாயகனே!, சமர்த்தனே - சாமர்த்தியம் உடையவனே!, மணி மரகதம் மயில் வீரா - நீலம் மரகதம் என்னும் ரத்ன மணிகளின் காந்தியை யுடைய மயிலின்மேல் ஏறிச் சவாரி செய்யும் வீரனே!, திரு குரா அடி நிழல்தனில் உறைவோனே - அழகு பொருந்திய குராமரத்தின் அடிநிழலிற் கோயில்கொண்டு வீற்றிருப்பவனே!, திரு கை வேல் அழகிய வடிவு பெருமாளே - அழகிய திருக் கரத்தினிடத்தே வேலாயுதத்தைத் தாங்கியருளும் அழகிய திரு உருவத்தை யுடைய பெருமாளே!, மரு குலாவிய மலர் அணை கொதியாது - நறுமணங் கமழும் மலர்களாற் பரப்பியுள்ள அமளி யானது வெப்பமடையா திருக்கும்படிக்கும், வளர்த்த தாய் தமர் - வளர்த்த தாயும் சுற்றத்தாரும், வசை மொழியாது - பழிச் சொற்களைக் கூறாமலும், கரு குலாவிய - கொடுமைக் குணங்க ளுடனே விளங்கும், அயலவர் பழியாது - எதிலார் பழி தூற்றாத படிக்கும், கடப்ப மாலையை இனி வர விடவேணும் - கடப்ப மாலையை இப்பொழுதே எனக்குச் சேரும்படி அனுப்ப வேண்டும் எ - று.

(வி - ரை) காம விரகத்தால் மலரணை கொதிக்கின்றது தலைவிக்கு ஆதலின் 'மருக்குலாவிய மலரணை கொதியாதே' என்றார். மாலை வந்தால் கொதியாது என்றபடி. 'இது தலைவியைத் தோழி மாலை வேண்டல்' என்னுந் துறை.

(இ-ள்.) அழகிய மெல் குறத்தி - அழகை யுடைய மெதுவத் தன்மை பொருந்திய வள்ளிநாயகியினது, புளகித சந்தனத்தின் அமுத தனம் - புளகத்தையுடைய சந்தனம் பூசிய தேவாமிர்தத்தை நிகர்த்த இனிமை மிகுந்த தனங்களால், படைத்த திருமார்பா - தழுவப்பெறும் அழகு வாய்ந்த திருமார்பை உடையவனே!, அமரர் புரம் தனக்கும் - பொன்னுலகத்திற்கும், அழகிய செந்திலுக்கும் - அழகிய திருச்செந்தூர் என்னும் தலத்திற்கும், அருணை வளம்பதிக்கும் இறையோனே - திருவண்ணாமலை என்னும் நீர் வளப்பம் பொருந்திய தலத்திற்கும் தலைவனே!, எழு புவனம் பிழைக்க - எழு உலகங்களும் உஜ்ஜீவிப்பதற்கும், அசுரர் சிரம் தெறிக்க - அசுரர்களுடைய சிரங்கள் யாவும் சிதறி விழவும்; எழு சயிலம் துளைத்த சுடர் வேலா - எழு மலைகளையும் துளைத்த பிரகாசம் பொருந்திய வேலாயுதத்தை யுடையவனே! இரவிகள் - சூரியர்கள், அந்தரத்தர் - தேவர்கள், அரி அரன் பங்கயத்தன் - திருமால் சிவன் பிரமன் என்னும், இவர்கள் - இவர்களுடைய, பயம் தவிர்த்த பெருமாளே - பயத்தை நீக்கி யருளிய பெருமானே!, மொழிய நிறம் கறுத்து - சொல்லும்படியான அந்த நிறமானது கறுத்து, மகரம் இனம் கலக்கி - மகர மீன்களின் கூட்டங்களினால் கலக்கப்பட்டு, முடிய வளைந்து - தரை முற்றிலுஞ் சுற்றிக்கொண்டு, அரற்று கடலாலும் - முழங்குகின்ற கடலினாலும், முதிர விடம் பரப்பி - முதிரும்படி விஷத்தைப் பரப்பி, வடவை முகந்து - வடவாமுகாக்கினியை மொண்டுகொண்டு, அழற்குள் முழுகி எழுந்திருக்கும் நிலவாலும் - அக்கினிக்குள் முழுகிக் கிளம்புகின்ற சந்திரனாலும், மழை அளகம் தரித்த - மேகம்போன்ற கூந்தலையுடைய, கொடி இடை வஞ்சி - கொடிபோலும் நுசுப்பையுடைய என்னுடைய மகளுக்கு, உற்ற மயல் தணியும்படிக்கு - தோன்றிய காமமயக்கம் தணியுமாறு, நினைவாய் - திருவுளங் கொள்வாய்!, மரகதம் துங்கம் வெற்றி - பச்சைமணிபோலும் நிறத்தையும் பரிசுத்தமான வெற்றியையும் உடைய,

விகடம் நடம் கொள் சித்திர மயிலினில் - அழகிய நடனத்தைச் செய்கின்ற அலங்காரமான உருவத்தையுடைய மயிலின்மேல், வந்து முத்தி தரவேணும் - எழுந்தருளிவந்து முத்தி தந்தருள வேண்டும், எ - று.

(வி - ரை.) காமிகளுக்குக் கடலும் நிலவும் காம மிகுக்கு மாதலின் 'கடலாலும் நிலவாலும்' என்றார். உம்மைகள் எண்ணும்மைகள். விகட நடம் - 'அதிசய நடனங்கொள் அழகிய மயில்' என்பது பொருள். 'அமரர் புரந்தனக்கும் செந்திலுக்கும் அருணை வளம்பதிக்கும் இறைவன்' இதில் உள்ள உம்மைகள் எண்ணும்மைகள். எழு சயிலம் - கிரவுஞ்ச கிரி.

இதுவும் அகப்பொருட்டுறைப்பா. 'நற்றாய் தலைவனை வேண்டல்' என்னுந் துறை. "என் மகள் காம மிகுதியால் கழிபடர் உறுகின்றாள்; அதனைத் தணி" என நற்றாய் வேண்டுகின்றாள். "என் ஆன்மா உன்னைப் பெரிதும் வேண்டத் தவிக்கின்றது; அதற்கு அருள் செய்" என்பது குறிப்பு.

---

## திருவருணை

95. தனதன தனதன தனன தனதன
தனன தனதன தனதான.

இறுகு மணிமுலை மருவு தாளமு
மெரியு முமிழ்மதி நிலவாலே
இரவி யெனதுயிர் கவர வருதழ
லிசையி லுறுகடல் அலையாலே
தறுகண் ரதிபதி மதனன் விடுகொடு
சரமி லெளியனும் அழியாதே

## திருவருணை

96. தனதனத் தத்தத் தனத்தத் தனதன
தனதனத் தத்தத் தனத்தத் தனதன
தனதனத் தத்தத் தனத்தத் தனதன — தனதான

கமலமொட் டைக்கட் டழித்துத் துமிழிணை
நிலைகுலைத் துப்பொற் குடத்தைத் தமனிய
கலசவர்க் கத்தைத் தகர்த்துக் குலைபட இளநீரைக்

கறுவிவட் டைப்பிற் றரக்கிப் பொருதப
சயம்விளைத் துச்செப் படித்துக் குலவிய
கரிமருப் பைப்புக் கொடித்துத் திறல்மதன் அபிஷேகம்

அமலர்செற் றிக்கட் டழற்றுட் பொடிசெய்து
அதிகசக் கப்புட் பறக்கக் கொடுமையி
னடல்படைத் தச்சப் படுத்திச் சபதமொ டிருதாளம்

அறைதல்கற் பித்துப் பொருப்பைப் பரவிய
சிறைதறிப் பித்துக் கதிர்த்துப் புடைபடு
மயிரவச் சிக்கத் தனத்துத் திருடிகள் உறவாமோ;

தமரமிக் குத்திக் கதிர்க்கப் பலபறை
தொகுதொகுக் குக்தொக் தொகுக்குக் தொகுதொகு
திரிகிடத் தக்கத் தரிக்கத் தரிகிட எனவோதிச்

சவடுறப் பக்கப் பழுவொத்திப் புகையெழு
விழிகளுட் செக்கச் சிவத்துக் குறளிகள்
தசைகள்பட் சித்துக் களித்துக் கழுதொடு சழுகாட

பத்து ஊறி - (தாயின்) கர்ப்பத்திலே தங்கி ஊறி. பிறவாது - பிறவாமலும், கனக்க பாடு உற்று - மிகவும் துன்பப்பட்டு; உழலாது - துன்பம் உறாமலும், திரு பொன் பதத்து - அழகிய பொன் போலும் அருமையான திருவடிகளின், அநுபூதி சிறக்க - அநுபவமானது மிக, பாலித்து அருள்வாய் - தந்து காப்பாற்றி அருள்வாய், எ - று.

(வி - ரை) உழலல் - கஷ்டப்படல். அநுபூதி - தன்மை இருவகைப் பற்றுமற்றுப் பரமான்மாவோடு ஆழ்ந்து அழுந்தி யிருத்தல். பாலித்தல் - அருளல், தரல். பரம்பற்றுள் - ஒரு மனத்தை உள்ளடக்கி உம்பர்கோன் தன்னருள் நினைந்து சும்மா இருக்கும் பெரியார். பரத்தப்பாறைத் தனியோன் - பராபரமாக இருப்பவன். சேவல் - மாமரமாக நின்ற சூரனின் ஒரு கூறு.

"சேவற் கொடியைக் கொண்ட செவ்வேள் குமரா! ஆகப் பிறப்பறுத்த அநுபூதி தந்தருள்" என்று வேண்டுகின்றார்.

---

## திருவிடைமருதூர்

98\. தனன தன தனன தன தனன தன தனன தன
தான தானன தான தானன
தனன தன தனன தன தனன தன தனன தன
தான தானன தான தானன
தனன தன தனன தன தனன தன தனன தன
தான தானன தான தானன தன தன தன தான.

அறுகுநுனி பனியனைய சிறியதுளி பெரியதொரு
ஆகமாகியோர் பால ரூபமாய்
அருமதலை குதலைமொழி தனிலுருகி யவருடைய
ஆயி தாதையார் மாய மோகமாய்

உடையவர்களாயும், மாடம் கூடம் ஆய் - மாளிகைகளும் கூடங்களும் உடையவர்கள் ஆகி, அணு அளவு தவிடும் இக பிதிரவிட - அணுவளவு தவிடுதானும் இங்கே சிதறவிடுதற்கு, மனம் இறுகி - மனம் துன்புற்று, ஆசை ஆளர் ஆய் - ஆசையை உடையவர்கள் ஆகி, ஊசி வாசி ஆய் - ஊசி போன வித்தைத் தேடுகிறவர்களைப் போன்ற நுணுக்கம் உள்ளவர்களாய், அவி உறு சுடர்போல வெறு மிடியன் - அவியப் போகின்ற விளக்குப் போலக் கெட்டு வறுமையினால் மூடுண்டவனேனும், ஒரு தவசி - ஒரு துறவியாகிலும் வந்து, அமுது படை எனும் அளவில் - சோறிடுங்கள் என்று கேட்ட மாத்திரத்தில், மேலை வீடு கேள் - மேலை வீட்டிலே போய்க் கேள்!, கீழை வீடு கேள் - கீழை வீட்டிலே போய்க் கேள்!, (என்று சொல்லி) திடு திடு என நுழைவதன் முன் எதிர் முடுகி - அவர்கள் நுழைவதற்கு முன்பு விரைவாகத் திடு திடு என அவர்களுக்கு எதிரே சென்று சென்று, அவர்களோடு சீறி ஞாளிபோல் எறிவிழ்வது ஆய் - அவர்களுடன் கோபித்துக் கொண்டு நாயைப் போன்று மேலே சென்று விழுவதை உடையவராகி, விரகினொடுவரு பொருள்கள் சுவறிவிட - தம்முடைய தந்திரத்தினால் தம்மைச் சேர்ந்த பொருள்கள் எல்லாம் வற்றிப்போக, மொழியும் ஒரு வீணியார் சொலே மேலது ஆயிட - மனதுக்கு இனிமையாகப் பேசும் வீணர்களின் சொல்லே சிறப்பாக விளங்க, விதிதனை நினையாது - விதியைச் சிறிதும் எண்ணாமல், பிணுகு பிணுகு எனும் உடலம் - பிணு பிணு என்றிருக்கும் உடம்பு, மறம் முறுகி நெகிழ்வு உற - பாவ மிகுதியினாலே நெகிழ, வீணர் சேவையை புனை பாவியாய் - பயனற்றவர்களைச் சேவித்தலையே மேற்கொள்ளும் பாவியாகி, மறுமை உளது எனும் அவ்வுரை - மறுபிறவி உளது என்று கூறுகின்றவர்களை, கிழலை விடும் - அது வீண் பேச்சு விட்டுவிடும், அதனில் வருவார்கள் போகுவார் காணுமோ என - அதனை அடைந்து வருகின்றவர்களும் போகின்றவர்களும் ஆகியவர்களைப் பார்க்கின்றோமோ என்று

கூறி, விடு துறவு பெரியவரை மறையவரை-உலகப் பற்றை விட்டுத் துறந்த பெரியவர்களையும் வேதியர்களையும், வெடு வெடு என மேளமே சொல் ஆய் ஆளி வாயர் ஆய் - வெடுவெடென மேளம் போன்று முழங்கக் கூறிச் சிங்கம் போன்ற வாயை உடையவராய், மிடை உறவரும் நாளில்-கலப்புப் பொருந்த வரும் நாளில், வறுமைகளும் முடுகி வர - தரித்திர காலங்களும் சீக்கிரம் வந்து கூட, உறு பொருளும் நழுவ - கையிலே இருந்த மிக்க பொருளும் செலவாகிவிட, சில வாதம் ஊது காமாலை சோகை நோய் பெருவயிறு வயிறுவலி படுவன் வர - வாதநோய் பெருகும்படியான காமாலை சோகை நோய் பெருவயிறு வயிற்றுநோய் படுவன் முதலிய சில நோய்கள் தம்மை வந்து அணுக, இரு விழிகள் பீளை சாறிட - இரண்டு கண்களிலும் பீளை சரிய, ஈளை மேலிட - சளி மேலாக, வழவழெனு உமிழும் அது கொள கொள என ஒழுகி விழ - வழுவழு என்ற துப்பும் அது கொள கொள என்று ஒழுகி விழ, ஊண் எலாம் வாடி - மாமிசம் எல்லாம் வாட்டமுற்று, நாடி பேதம் ஆய் - நரம்புகள் எல்லாம் மாறி, மனையவள் மனம் வேறாய் மறுக - பெண்சாதியின் மனம் மாறுபட்டுச் சுழல, மனை உறும் அவர்கள் நணுகு நணுகு எனும் அளவில்-வீட்டிலுள்ளவர்கள் வருக வருக என்று கூறும் அளவில், மாதர் சீ என - பெண்கள் சீ என்று இகழ்ந்து சொல்லவும், வாலர் சீ என - வாலிபர் சீ என்று இகழ்ந்து சொல்லவும், கனவுதனில் - கனவினிடத்தே, இரதமொடு குதிரை வர - தேருடனே குதிரை வர, நெடிய சுடுகாடு வா என - நீண்ட சுடுகாடு வா என்று கூப்பிடவும், வீடு போ என - வீடு போ என்று சொல்லவும், வலது அழிய - தேகபலம் அழிந்து போகவும், விரகு அழிய - அறிவின் சமர்த்துங் கெடவும், உரை குழறி - சொற்கள் குழறு பாடு அடைந்து, விழி சொருகி - கண்கள் உள்ளே சென்று, வாயு மேலிட ஆவி போகும் நாள் - காற்று அதிகரிக்க உயிர் பிரியும் நாளில், மனிதர்கள் பல பேச - மனிதர்கள் பல விஷயங்களைக்

கூற, இறுதியதொர் அறாதி என - முடிவு காலத்தோடு எல்லா வாழ்வுகளும் போய் முடிவுபட்டதென்று, உறவின் முறை கதறி அழ - சுற்றத்தார்கள் எல்லாம் வாய்விட்டுக் கதறிப் புலம்ப, ஏழை மாதராள் மோதி மேல் விழ - அறிவில்லாத மனைவி கையால் முகத்தை மோதிக்கொண்டு மேலே விழ, எனது உடைமை எனது அடிமை எனும் அறிவு - என்னுடைய பொருள் என்னுடைய வேலை ஆட்கள் என்கிற அறிவு எல்லாம், சிறிதும் அற - சிறிதும் இல்லாது அகன்றொழிய, ஈ மொலேல் என - ஈக்கள் மொலேல் என்று சப் திக்க, வாயை ஆ என - வாயை ஆ என்று திறந்து, இடுகு பறை சிறு பறைகள் - இடை சுருங்கிய பறைகளும் சிறிய பறைகளும், திமிலை யொடு தவில் அறைய - சல்லரையோடு தவில் என்னும் வாத்தி யத்தை வாசிக்க, சுமம் தேசமே பேய்கள் சூழ்வது ஆய் - சுடுகாட் டில் பேய்கள் சுற்றி இருப்பதாகி, எரிதனில் விடும் வாழ்வை - தீயிற் போகும் வாழ்க்கையையே, இணை அடிகள் பரவும் உனது அடிய வர்கள் பெறுவதும் - இரண்டாகிய திருவடிகளை வாழ்த்தும் மேலவ ராகு தொண்டர்கள் பெறுவது, (என) ஏசிடார்களோ - சுற்றத்தார் பழிக்கமாட்டார்களோ, இருவினை மும்மலமும் அற - இரண்டு வினைகளும் மூன்று மலங்களும் நீங்கவும், இறவியொடு பிறவி அற - இறப்பொடு பிறப்பும் நீங்கவும், ஏகம் போகம் ஆய் - ஒரே அனுபவ மாய், நீயும் நானும் ஆய - நீயும் நானும் ஆகி, இறுகும் வகை - அழுந் தும் படியாக, பரமசுகம் அதனை அருள் - மேலான அந்த ஆனந்த பரமசுகத்தை அளித்தருள்வாயாக, எ - று.

(வி - ரை) அறுகு - அறுகம்புல். ஆகம் - தேகம். மொகு மொகு; ஒலிக்குறிப்பு. திருதுபடு மொழி - மேன்மையான, அல்லது பெருமிதமான சொல், 'குறும்பத்தன முடைய சொல்' என்றும் பொருள் கூறுவர். விழுசுவர் - குட்டிச்சுவர்; 'பயனற்றவர்' என்ற பொருளில் வழங்கியது. ஔவையாரும்,

"முட்டமேற் கூரை இல்லா வீடே"

எனக் கூறினுள்; 'குட்டிச்சுவர்' என்பது பொருள். மேற்கதி செலாதபடி கெடுக்கும் வீணர் சேவை பாவத்தின் பயனது ஆதலின் 'வீணர் சேவையே பூணு பாவியாய்' என்றார்.

"காடு வா வீடு போ என்கின்றது."

என்பது முதுமொழி.

"வாழ்வாவது மாயம், அது மண்ணாவது திண்ணம்"

"கூடலை சேர்வது சொற்பிர மாணமே"

என்னும் பெரியார் அடிகள் ஈண்டு கருதற்பாலன.

இதனாலன்றோ அருணகிரியாரும் 'எரிதனிலிடும் வாழ்வே' என்றார்.

இருவினை ஒப்பு மலபரிபாகம் உற்றார் அடைவது முத்தி ஆதலின் 'இருவினையொடு..........இறக்கும் வகை பரமசுக மதனை அருள்' என்றார்.

"எரிக்கு இரையாய இப்பிறவி வேண்டாம்; இனிய நினதுபதம் உறையும் முத்தி வேண்டும்" என்று வேண்டுகின்றார்.

---

திருக்கரபுரம்

99. தனதனத் தனதனத் தனதனத் தனதனத்
தனதனத் தனதனத் தனதனத் தனதனத்
தனதனத் தனதனத் தனதனத் தனதனத்
தனதான.

ஒருவரைச் சிறுமனைச் சயனமெத் தையினில் வைத்
தொருவரைத் தமதலைக் கடையினிற் சுழலவிட்
டொருவரைப் பரபரப் பொடுதெருத் திரியவிட் டதனுமேல்

திடும் - மிகவுங் கோபத்தை உண்டாக்கும், அரக்கரை - இராக்கதரை, முழு கொடிய துர்குணம் அவத்தரை - முழுதுங் கொடுமை ஆகிய கெட்ட குணம் கொண்டுள்ள வீணர்களை, முதல் துரிசு அறுத்திடும் வேலா - அடியோடே அவர்களின் குற்றத்தை அழிக்கும் வேலாயுதத்தை உடையவனே!, குயில் மொழி - குயில்போன்ற இனிய சொல்லையும், கயல் விழி - சேல் மச்சத்தை நிகர்த்த கண்ணையும், துகிர் இதழ் - பவளத்தை ஒத்த உதட்டையும், பிறை நுதல் - பிறையைப் போன்று விளங்கிருக்கின்ற நெற்றியையும், சசிமுகம் - சந்திரனைப் போன்ற முகத்தையும், இள நகை - புன் முறுவலையும், கனம் குழல் - மேகத்தை ஒத்த கூந்தலையும், கிரி தனம் - மலைகளை ஒத்த கொங்கைகளையும், கொடி இடை - மின்னற்கொடி போன்ற இடையையும், பிடி நடை - பெண் யானையை ஒத்த நடையையும் உடைய, குறமகள் திருவினை புணர்வோனே - குறக்குலத்தில் வளர்ந்த வள்ளியம்மையாரின் அழகின் நலத்தை அநுபவிப்பவனே!, கருது சட்சமயிகட்கு - எண்ணப்படும் ஆறு சமயத்தவர்களுக்கும், அமைவுற - பொருந்துதலாக, கிறி உடை பறி தலை சமணரை - வஞ்சகத்தன்மையுடைய பறித்த தலையைக் கொண்டுள்ள சமணர்களை, குலம் முதல் பொடிபட - குலத்தோடு அழியுமாறு, கலகம் இட்டு உடல் உயிர் - பகைபட்டு வருந்தும் உயிர்களை, கழுவின் உச்சியில் வைத்திடுவோனே - கழுமரத்தின் உச்சியில் ஏற்றி வைத்தவனே!, கமுகினில் குலை அற - பாக்கு மரத்தில் குலைகள் அற்று விழவும், கதலியின் கனி உக - வாழை மரத்தில் வாழைப் பழங்கள் உதிரவும், கழையில் முத்தம் உதிர - கரும்பில் முத்துக்கள் உதிரவும், கயல் குதித்து உலவும் - கயல் மீன்கள் குதித்துக் குதித்துச் சஞ்சரிக்கும், நல் கனம் வயல் திகழ் - நல்ல செழுமையையுடைய பெரிய வயல்கள் விளங்கும், திருநகரபுரத்து அறுமுகம் பெருமாளே - அழகிய திருவிரிஞ்சி புரத்தில் எழுந்

தருளியிருக்கும் ஆறு திருமுகங்களை உடைய பெருமானே!, ஒருவரை சிறு மனை சயன மெத்தையினில் வைத்து - ஒரு மனிதனைத் தன் சிறிய வீட்டில் படுக்கும்படியான மெத்தையிற் படுக்கவைத்தும், ஒருவரை நம தலைக்கடையினில் சுழலவிட்டு - ஒரு மனிதனைத் தன்னுடைய தலைக்கடையிற் சுற்றும்படிச் செய்தும், ஒருவரைப் பரபரப்பொடு தெருத்திரியவிட்டு - ஒரு மனிதனை விரைவாகத் தெருவில் திரியும்படி விட்டும், அதனால் ஒருவருக்கு ஒருவர் சக்களமையில் சருவவிட்டு - அதனாலே ஒருவருக்கு ஒருவர் சக்களத்திப் போரிலே பொருந்தும்படி விட்டு, உரு உபத்திரம் எடுத்து-அச்சமும் துன்பமும் அவர்களுக்குள் உண்டாக்கியும், அறையில் மல் புரிய விட்டு - படுக்கை அறையில் சண்டை செய்யுமாறு செய்தும், உயிர் பிழைப்பது கருத்து அளவில் - உயிர் வாழ்வதே எண்ணுங்கால், உச்சிதம் என செயும் மாதர் - மேலானது என்று எண்ணும்படியாகச் செய்துவிடும் பெண்களின், தரும் மயல் பிரமை தனில் - காதலைக் கொடுக்கும் ஆசை மயக்கத்தில், தவம் நெறிக்கு இயல் என - தவவழிக்கு அந்நியமாகிய, சரியையில் கிரியையில் தவமும் அற்று - சரியையிலும் கிரியையிலும் ஒழுக்க நிலையை விட்டு, எனது கை தனம் அவத்தினில் இறைத்து - என் கையிலிருந்த பொருளை வீணிலே செலவு செய்துவிட்டு, எவரும் உற்று இகழ்வுற - எல்லோருங் கூடி இகழும்படிக்கு, திரிவேனை - திரிகின்றவனாகிய அடியேனை சகலம் துக்கமும் அற - எல்லாத் துன்பங்களும் நீங்கவும், சகலம் சற்குணம் வர - எல்லா நற்குணங்களும் பொருந்தவும், தரணியில் புகழ் பெற - உலகத்தில் கீர்த்தியை அடையவும், தகைமை பெற்று - மேலான தன்மையைப் பெற்று, உனது பொன் சரணம் - தேவரீரது அழகிய திருவடித் தாமரைகளை, எப்பொழுதும் நட்பொடு நினைத்திட - சதாகாலமும் அன்போடு சிந்தித்துக்

கொண் டிருக்கும்படி, அருள் தருவாய் - நினது கருணையைச் செய் வாயாக, எ - று.

(வி - ரை.) சக்களமை - பகைமை; போதும் போதும் உயிர் தப்பினுற் போதும் என நினைக்கும் வம்புக்காரிகள் என்பார், 'ஒரு வரை.........உயிர் பிழைப்பது கருத்தளவி லுச்சிதமெனச் செயு மானுர்' என்ருர்.

சரியை கிரியை யோகம் ஞானம் எனப் பாதம் நான்காகும். சரியை - கோயிற்குப் போதல், மெழுக்கிடல், அலகிடல், வலம் வரல் முதலியன. கிரியை - மந்திர விதிப்படி பூஜை முறைகளைச் செய்தல். யோகம்-இறைவனை உள்ளகத்தே சிந்தித்தல். ஞானம் - பொருளை உணர்ந்து வீட்டு நெறிகூடி இன்புறல். இதனை,

"விரும்புஞ் சரியை முதல் மெய்ஞ்ஞான நான்கும்
அரும்புமலர் காய்கனிபோல் அன்ருே பராபரமே."

என்று தாயுமானவர் குறித்துச் சிறப்பித்ததும் காணத் தகும்.

முருகன் சரணம் நினைப்பவர்க்குச் சகல துக்கமும், அறும், சகல சற்குணமும் வரும்; புகழ் உண்டாகும்; தகைமை வரும் என் பார் 'சகல துக்கமுமற்ச.........அருட்டருவாயே' என்று கூறினர்.

குருமொழித் தவமுடைப் புலவர் - 'நக்கீரர்' என்றும் 'அற வும் உக்கிரம் விளைத்திடு மரக்கர்' என்றது' தொள்ளாயிரத்துத் தொண்ணூற் ருென்பதின்மரை அடைத்து ஒருவனுக்காகக் காத் திருந்த பூதத்தை என்பர். 'குரு மொழித் தவமுடைப் புலவர்' என்றது 'தேவர்களை' என்பது நேர்.

"கமுகினிற் குலையறக் கதலியிற் கனியுகக்
கழையின்முத் தமுதிரக் கயல்குதித்துலவு'

நீர்வளங் கூறியதாயிற்று. இதனை,

பகவதி பாலா! நமோநம! இபமா மூலா! நமோநம!
பசுபதி சீலா! நமோநம! அருள்தாராய்

இரவியு மாகாச பூமியும் விரவிய நாளொடு வானவ
ரெவர்களு மீடேற வேழ்கடல் முறையோவென்

றிடர்பட மாமேரு பூதர மிடிபட வேதா நிசாசர
ரிகல்கெட மாவேக நீளயில் விடுவோனே!

மரகத வாகார வாயனு மிரணிய வாகார வேதனும்
மசுவெனு மாகார வீசனு மடிபேண

மயிலுறை வாழ்வே! விநாயக மலையுறை வேலவ! மகிழ்தர!
வனசர ராதா ரமாகிய பெருமாளே!

(இ - ள்.) இரவியும் - சூரியனும், ஆகாச பூமியும் - ஆகாசமும் பூமியும், விரவிய நாள் எல - நெருங்கிக் கலந்த நாள் எல்லாம், வானவர் எவர்களும் ஈடேற - தேவர்கள் எல்லோரும் மேன்மை உறவும், ஏழ் கடல் - ஏழு கடல்களும், முறையோ என்று இடர்பட - இது முறையாகுமோ என்று துன்பப்படவும், மா மேரு பூதரம் இடிபடவே - மகா மேருவாகிய மலை இடிபட்டிடவும், நிசாசரர் - இராக்கதர்களுடைய, இகல் கெட - வல்லமை கெடவும், மா வேகம் - மிகுந்த வேகமுடைய, நீள் அயில் - சிறந்த வேலாயுதத்தை, விடுவோனே - விடுகின்றவனே!, மரகத ஆகாரம் - மரகதமணி போன்ற திருமேனியையுடைய, ஆயனும் - நாராயணனும், இரணிய ஆகாரம் - பொன்னை நிகர்த்த திருமேனியையுடைய, வேதனும் - பிரமாவும், அசு எனும் ஆகாரம் - நெருப்பு என்று சொல்லும்படியான வடிவத்தைக் கொண்ட, ஈசனும் - ருத்திரக் கடவுளும், அடி பேண - திருவடிகளைத் தொழ, மயில் உறை வாழ்வே - மயிலில் ஏறிச் சவாரி செய்யும் வாழ்வை உடையவரே!, விநாயகமலை - விநாயகமலை என்று

கூறப்படும் திவ்விய தலத்தில், உறை வேளா - எழுந்தருளியிருக்கின்ற வேலாயுதக் கடவுளே! மகிதா - மலைகளில் வசிப்பவனே! வனசரர் ஆதாரம் ஆகிய பெருமானே - குறிஞ்சிக் கானத்திலே வசிக்கின்ற வேடர்களைக் காக்கின்ற பெருமானே!, சரவண சாதா நமோ நம - சரவணப் பொய்கையில் தோன்றியவரே! நமஸ்காரம்! நமஸ்காரம்!, கருணை அமிர்தா நமோ நம - கிருபை மிகுந்த மேலானவரே! நமஸ்காரம்! நமஸ்காரம்!, சததள பாதா நமோ நம - நூறு இதழ்களையுடைய தாமரை மலர்போலும் பாதத்தை உடையவரே! நமஸ்காரம்! நமஸ்காரம்!, அபிராம தருணக தீரா நமோ நம - அழகு நிறைந்தவனே! இளம் பருவத்தை உடையவனே! பராக்கிரமத்தை உடையவனே! நமஸ்காரம்! நமஸ்காரம்!, நிருப மல் வீரா நமோ நம - அரசனே! மல் யுத்தத்தில் தேர்ந்த வீரனே! நமஸ்காரம்! நமஸ்காரம்!, சமதள ஊரா நமோ நம - திருப்போரூரில் எழுந்தருளி யிருப்பவனே! நமஸ்காரம்! நமஸ்காரம்!, சகதீச பரம சொரூபா நமோ நம - உலகங்களுக்கெல்லாம் தலைவனே! மேலான திவ்விய வடிவம் உடையவனே! நமஸ்காரம்! நமஸ்காரம்!, சுரர் பதி பூபா நமோ நம - தேவர்களுக்குத் தலைவனான இந்திரனுக்குத் தலைவனே! நமஸ்காரம்! நமஸ்காரம்!, பரிமள நீபா நமோ நம - மிக்க வாசனையை உடைய கடப்ப மாலையை அணிந்தவனே! நமஸ்காரம்! நமஸ்காரம்!, உமை காளி பகவதி பாலா நமோ நம - உமை காளி பகவதி என்னும் திருநாமங்களையுடைய பராசக்தியாரின் புத்திரனே! நமஸ்காரம்! நமஸ்காரம்!, இகபர மூலா நமோ நம - இக வாழ்வுக்கும் பரவாழ்வுக்கும் மூலகாரணமாக இருப்பவனே! நமஸ்காரம்! நமஸ்காரம்!, பவுருஷ சீலா நமோ நம - ஆண்மை மிகுந்த ஒழுக்கம் பொருந்தியவரே! நமஸ்காரம்! நமஸ்காரம்!... அருள் தாராய் - அடியேனுக்குத் தேவரீர் கிருபையைச் செய்வீராக.

எ - று.

(வி - ரை.) அதீதன் - மேம்பட்டவன். சதம் - நூறு, தளம்- இதழ். அபிராமம் - அழகு. சமர் தள ஊர் என்றது 'சமதள ஊர்' என்று ஆயிற்று. சமர்-போர், தளம் - இடம். நீபம் - கடப்பமலர். மூலன் - காரண வஸ்துவாக இருப்பவன். இரவி - சூரியன். 'ரவி' என்றது வடசொல் என்பர். பூதரம் - மலை. ஆகாரம் - தேகம்.

"குறிஞ்சிக் குமரா! குலவும் வேலா!
வந்தனம்! உனக்கே; வந்தனம்! உனக்கே!
என்னிழி வகல, இன்பில்
மன்னி வாழ மாணருள் செய்யே,"

என்று அருணகிரியார் வேண்டுகின்றார்.

திருப்புகழ் மூலமும், மெய்ஞ்ஞான விருத்தியுரையும்
முற்றுப்பெற்றன.

"பொங்கும் மங்களம் எங்கும் தங்குக."

---

திருமகள்விலாசம் பிரஸ், சென்னை:—1935.

# உயர்தரமான தமிழ் நூல்கள்

## ஸ்ரீமத் தாயுமான சுவாமிகள்

# திருப்பாடற்றிரட்டு

## மெய்கண்ட விருத்தியுரை

[730-பக்கம்: உயர்ந்த கிளேஸ் காகிதம். ஸ்வாமிகளின் திருவுருவப் படத்துடன் அழகிய காலிகோ பைண்டு செய்தது விலை ரூபா 4.]

திருவருட் பெருஞ் செல்வராகிய தாயுமான சுவாமிகள் தமது சுவாநுபூதியினிற் பிறந்த அற்புத சின்மய மதுரமான செம்பாடற் றிரட்டினுக்கு அநேகர் பதவுரையும் பொழிப்புரையும் எழுதியிருக்கின்றனர். அவை தாயுமானார் உண்மை கருத்தைத் தெரிவிப்பனவல்ல. தாயுமான சுவாமிகள் வேதாந்த சித்தாந்த சமர சுபாவ முடையவ ராதலால் அவருடைய உண்மைக் கருத்து ஈதென்று ஒவ்வொரு பாடல்களிலும் விளங்கும்படி, மதுரைத் தமிழ்ச் சங்கத்து மகா வித்வான் சித்தாந்த சரபம் - அஷ்டாவதானம் பூவை. கலியாணசுந்தர முதலியாரால் பதவுரையும், விசேடவுரையும், பிரமாணங்களும், உபநிடத கருத்துக்களும் எடுத்துக்காட்டி ஒவ்வொரு பாடலுக்கும் இன்றியமையாத பெரியோர்களுடைய ஞான சாத்திரங்களி லிருந்து மேற்கோட்பாக்கள் உதகரிக்கப்பட் டிருக்கின்றன.

கவனிப்பு:—இதுவரையில் தாயுமானருடைய பாடலுரையைப் படித்த அறிஞர் இந்த மெய்கண்ட விருத்தியுரையையும் படிப்பார்களானால் மற்ற வுரைகளுக்கும் இவ் வுரைக்கும் உள்ள தாரதம்மியம் இன்னதென விளங்கும்.

